# ஸ்ரீமத்
# பாகவத வினாவிடை

பன்னிரண்டு ஸ்கந்தங்களடங்கியது

மைலாப்பூர், பி. எஸ். ஹைஸ்கூல் முதல் உதவிபோதகரான

ஏ. எஸ். கஸ்தூரிரங்கய்யர், பி. ஏ., எல். டி.,

அவர்கள் செய்தது

ஸ்ரீ ராமஜயம்
வைகாசி மீ 30உ



சென்னை

வி. ராமஸ்வாமிசாஸ்த்ருலு அண்ட் ஸன்ஸ்

292, எஸ்பிளனேட்

1931



ஓம்:

# Invocation to God.

"வந்தே பகவந்."

*இந்நூற் பரிசோதராகிய மாயூரம்-கனம்-பண்டிதமணி*
S. வேலாயுதமுதலியார் *அவர்களால் இயற்றிய*

## இரட்டை யாசிரிய விருத்தம்

1. அகிலப்ர பஞ்சநிர் மாணஜீ வாதாரம்
அதுலகர்த் தவ்ய ஞானம
அனந்தகுண கல்யாணம் பூர்ணப்ர தாபஸ்ரீ
யாதிமத் யாந்த ரஹிதம்
அகிலாண்ட கோடிப்ரம் மாண்டநா யகதீன
ஆத்மஸம் ரட்ச ணங்கம்
அற்புதநி ரஞ்சனநி ரந்தரநி ராதார
அத்வைத சந்த்ர வுதயம்
அமலப்ர காசப்ர ஸன்னசுவ யஞ்சோதி
யானந்த மௌன நிலையம்
அப்பமே யப்புநித மோக்ஷகா ருணநித்ய
வனசசத் புருஷோத் தமம்
அகண்டித வலங்கிருத சுமங்கல சுலட்சண
அனுதிஜய ஸார்வ பௌமம்

அதீதநிட் களவிபவ திவ்யதே ஜோன்மய
அந்தரத் தியான பரமம், (வ)
சகலபுவ ஞகார ஸ்தூல சூக்ஷ்மமய
சதாகால சுப்ர தீபம்
சங்குசக் கரசட்க தண்டகோ தண்டகர
ஸதகோடி ரவிபாஸ் கரம்
சர்வஜெகன் மோஹனம் பத்ரேப வங்காத்ர
சச்சிதா காஸ விமலம்
சங்க்ராம ப்ரக்யாத சுகிர்தஸா ரித்ராண
சாஸ்விதம் சாஸ்த்ர சூஸ்த்ரம்
சம்மார சிருஷ்டி திதி கர்த்தமூ லாதார
சாரகரு ஞசா கரம்
ஸர்வந்த்ரி கபடநா டகசூஸ்த்ர தாரிபீ
தாம்பர விலாஸ தேகம்
சஹஸ்ரகண பணவுரக சயணநய ஞம்புஜ
தர்மவர்த் தனவி லாசம்
சதுர்வேத வேதாந்த நிஷ்டவஷ் டாக்ஷர
ஸராஸர வநேக தந்த்ரம், (ஊ)
மகரகுண் டலவஜ்ர கேயூர நவரத்ந
மகுடவசு தேவ புத்ரம்
மஹாகருட வாஹனசு ரேசநவ ரசலலித
வதனலக்ஷ் மீக ளத்ரம்
மந்தரத் திவ்யகுச சௌந்தர்ய கோபிகா
வனிதாலி சித்ர மாரம்

மச்சவா மனகூர்ம வச்சுதா னந்தவை
குந்தமா தவகே சவம்
மதுசூத னம்உனத காளிங்க மர்த்தனம்
மதுகைட ஜேனனுங் தகம்
மல்லகக் கம்ஸசிசு பாலஸம் மாரவன
மாலிகா பரண முக்யம்
மந்தரஸ் வரூபமர கதவர்ன தெய்விக
மதுராவி தர்ப்ப வாகம்
மந்தார கந்தகற் பூரபரி மளவாச
வனசதள நளின நாபம், (தே)

வெகுவித விநோதசுக ஹிகபரப் ரசாதகன
வித்தகவி சேஷ விஜயம்
விலக்ஷண வியாபகவி பாசிதத ஞதிபக
விசித்ரதர வாக்கி யார்த்தம்
விநயகரி பயபங்க சுத்தபலி தாத்மபர
விபுலவர தீப்த மூர்த்தம்
விவித்திர வயவங்க விகாசன விகோடணம்
'விமலபர துரிய வேத்யம்
விபாவகுண ரஹிதஜக தீஸ்வரவி பூஷணம்
விகிர்தவாஞ் சாஸ்ப ரீணம்
விஜயவிது ரப்பிரிய தத்ஸோரு பக்கிரண
விவிதவா னந்த போக்யம்
விமலதிரு பதபத்ம நிதமுமித யத்தோளிர
விளக்கியருள் வாழ்வு தருமின் !

விரவுபல புவனமோளி பரவுவள ரேழுமபுத
வியனுருவ மான விபுவே. (க)

---

2. ஒன்ருகி யிரண்டாகி மூன்ருகி யைந்தாகி
யோதுமா றெட்டு மாகி
யுணவுதவு பல்வடிவ மாய்சரா சரமாகி
யுலகமாய்க் கடலு மாகிக்
குன்ருகி வனமாகி மலராகி மருவாகிக்
கோள்களாய் நாள்க ளாகிக்
குருவாகி யருமறைப் பொருளாகி யதனின்வரு
குணமாகி மணம தாகி
நன்ருகித் தீதாகி யவைகளுக் கயலான
நடுநிலே சாக்ஷி யாகி
நாதாந்த போதாந்த வேதாந்த சித்தாந்த
நவில்கலா னந்த மாகிக்
கன்ருகி யாவாகிக் கருகூலத் தோளிர்கிரணக்
கதிராகி யெதிர தாகிக்
கவினும்பர துரியநிலே மருவுமொரு பெருமi நினே
கணிப்பவர்க ளேவர்க ளோயே.

(ஓம் தத் ஸத்)



Composed by

**Pandit S. Velayutha Mudaliyar,**
*Formerly Head Tamil Pandit,*
*M. H. S., Mayavaram.*



ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வேணுகானம்.

# முகவுரை



ஸ்ரீமத்பாகவதம் என்பது இராமாயண பாரதங்களைப் போன்ற சரித்திரமல்ல. அநேக திவ்ய சரித்திரங்கள். சிறந்த மதவிஷயங்களைப்பற்றிய ஆராய்ச்சிகள், பகவானது கல்யாணகுணங்கள், அவரைப் பக்திசெய்வதால் மனிதன் அவரது உண்மையான நிர்க்குண நிலையை அடைந்து தனது உண்மை நிலைக்கு வரும்வழி, உலகில் ஒருவன் படும்பாட்டிற்கு எல்லாம் பரமபதம் அடைவதே இவ்வாறு அந்தரங்க நோக்கமாக இருக்கிறது, என்ற அரிய விஷயங்களைப்பற்றி இந்தப் புராணம் அடிக்கடி வசனிக்கின்றது. இதனால்தான் இந்தப் புராணத்திற்குப் பரமஹம்ஸ ஸம்ஹிதை என்றுபெயர். இதைப் பரமஹம்ஸரான பெரியோர்களும் மிகவிரும்புவாராம். இதை வேதவ்யாஸ ரிஷி எழுதுவதற்காக ஏற்பட்ட காரணங்களையும் இதை வெளியிட்டதால் அவருக்கு உண்டான சாந்தியையும், இதை அப்யஸித்து ஆனந்தித்த சுகப்பிரம்மத்தின் பெருமையையும், மரணத்தின் வாயில் அகப்பட்டுத் தத்தளித்துக்கொண்டிருந்த பரீக்ஷித்தை இது இவ்வாறு கரையேற்றியது என்பதையும், யோசித்துப்பார்ப்பவர்களுக்கு இந்தக் கிரந்தத்தின் மேன்மை நன்குவிளங்கும். இதை ஆழ்ந்து வாசித்துப்பார்த்தால் தான், இது ஏன் மஹா ஞானிகளாலும் விரும்பப்படுகின்றது என்பது நன்றாகத் தெரியவரும்.

இப்புராணத்தில் அடங்கியிருக்கும் விஷயம் அநேகவிதமாக இருத்தலின் இதன் பாகங்களுக்கு, இராமாயண பாரதங்

களின் பாகங்களுக்குக் கொடுத்ததுபோல, தகுந்தபெயர் கொடுக்கமுடியாமல் போக, முறையே முதல், இரண்டாவது.........12-வது ஸ்கந்தங்கள் என்று பெயர் கொடுக்கப்பட்டன. ஆனால் இவ்வினா விடையை வாசிப்போர் சிறுவர்களாகையால் அவர்கள் ஒவ்வொரு ஸ்கந்தவிஷயங்களையும் எளிதில் அறியும் பொருட்டு அந்தந்த ஸ்கந்தத்தில் அடங்கியிருக்கும் முக்கிய விஷயங்களை ஸ்கந்த ஆரம்பத்திலும் ஒவ்வொரு பக்கத்திலிருக்கும் முக்கிய விஷயத்தை அந்தப் பக்கத் தலைப்பிலும் வரையப்பட்டிருக்கிறது. மேலும், முதலில் விஸ்தார அட்டவணையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பாகவதம் சுகப்பிரம்மத்தால் பரீக்ஷித்திற்குச் சொல்லப்பட்டதாக ஸூதர் சௌநகாதிகளுக்குக் கூறியபோதிலும் இதில் சிற்சில ஸ்கந்த விஷயங்கள் வெவ்வேறு குரு சிஷ்ய ஸம்வாதமாகக் கூறப்பட்டிருக்கிறது. இம்மாதிரி இடங்களில் "யாரும் யாரும் ஸம்வாதம் செய்வது" என்று ஸ்கந்த ஆரம்பத்தில் காட்டப்பட்டிருக்கிறது. உதாரணமாக 7-வது ஸ்கந்த ஆரம்பத்தில் நாரத யுதிஷ்டிர ஸம்வாதம் என்று காட்டப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஸ்கந்தத்தொடக்கத்திலும் அந்தந்த ஸ்கந்தத்திற் கூறப்படும் விஷயங்களுக்கு ஏற்றக் காப்புச் செய்யுட்கள் வில்லிபுத்தூரர் பாரதம், ஆழ்வார்கள் பாடல்கள், தாயுமான ஸ்வாமிகள் பாடல், கைவல்யநவநீதம் முதலிய நூல்களிலிருந்து எடுத்து அமைக்கப்பட்டுள்ளன. இவைகளுள் 4-வது, 7-வது ஸ்கந்தங்களின் காப்புச்செய்யுட்கள் திருமயிலை பென்னாத்தூர் ஸுப்ரஹ்மண்யம் பாடசாலைத் தமிழ் உபாத்தியாயர் இ. வை. அனந்தராமய்யர் அவர்களால் செய்யப்பட்டவை. இவ்வுதவி புரிந்த அய்யர் அவர்களுக்கு நான் மிகுந்த நன்றியறிவு உடையவனாக இருக்கின்றேன்.

பாகவதத்தில் கூறப்பட்டிருக்கும் புராண, வைதிக ஸ்ருஷ்டிகளை அவைகள் வரும் இடங்களில் ஒருவாறு சிறுவர்களுக்காகச் சுருக்கிக்கூறிவிட்டு, இவ்விஷயங்களில் அதிகமாகத் தெரியவேண்டும் என்பவர்களுக்கு ஸஹாயமாகஇருக்கும் பொருட்டே அனுபந்தத்தில் மஹாப்ரளயம், சாஸ்திரீய ஸ்ருஷ்டி, சாஸ்திரபுராண ஸ்ருஷ்டியின் பொருத்தம், யுகங்கள் முதலிய நெடுங்கால அளவைகள், என்னும் விஷயங்களைப்பற்றி யான், பென்னுத்தூர் ஸுப்ரஹ்மண்யம் பாடசாலை பத்திரிகையில் மொழிபெயர்த்த வியாஸங்களை வெளியிட்டிருக்கிறேன். இவை மேற்படி பத்திரிகையில் மேற்படி பாடசாலை பிரதம உபாத்தியாயராகிய ம-ா-ா-ஸ்ரீ பஞ்சாபகேச அய்யர், எம். ஏ. எல். டி., அவர்களால் முதலில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டவை.

பாகவதம் விஷ்ணுவையே ஏற்றமாகக் கூறுகிறது என்று வீர வைஷ்ணவர்கள் எண்ணுகிறார்கள். அவர்களுக்கு ஆதாரம் பொதுவாக இங்கு ஸ்ரீமந்நாராயண மூர்த்தியையே பரதெய்வமாகக் கொண்டிருப்பதும். ஆங்காங்கே சிவனை விட ஸ்ரீமந்நாராயணனை ஏற்றமாகக் கூறியிருப்பதும், பத்தாம் ஸ்கந்தமுடிவில் பிருகு 'விஷ்ணுவே பரதெய்வம்' என்று செய்த தீர்மானமுமே. இம்மட்டோடு அவாகள் நின்றுவிட்டால் அவர்களுக்கும் மேன்மை உண்டு. மற்றையவர்களுக்கும் பாதகம் இல்லை. ஆனால் அவர்கள் அப்படி நிற்பவர்கள் அல்லர். விஷ்ணுவை ஆராதியாதவர்களிடம் த்வேஷபுத்தியையாவது காவம் நிறைந்த கருணையையாவது உடைத்தாயிருக்கின்றனர். இம்மாதிரி இருப்பவர்கள் ஒருவாறு தெளிந்து அவர்கள் மனது நல்ல நிலைக்கு வருவதற்காக அவர்களை முக்கியமாக தக்ஷயாக பாகத்தையும், அனுபந்தத்திலிருக்கும் திரிமூர்த்திஸமரஸம் (இதுவும் மூற்

கூறிய பாடசாலைப் பத்திரிகையில் வெளிவந்தது) என்ற வியாஸத்தையும் பார்க்கும்படி மஹாவிநயத்துடன் கேட்டுக் கொள்ளப்படுகிறது. இவைகளின் நோக்கம் யாது எனில் முக்கியமாகச் சண்டையிட்டுக்கொள்ளும் சைவவைஷ்ணவர்களது மதங்களில் கூறப்பட்டிருக்கும் பரமசிவன், ஸ்ரீமந் நாராயணன் என்ற நாமங்கள் வேதங்கள் பிரதிபாதிக்கும் பரப்பிரஹ்மத்தின் இரண்டு பெயர்களே ஒழிய வேறல்ல. இவைகளை விஷ்ணு என்றும் சிவன் என்றும் பேதமாகக்கூற இடமே இல்லை என்றும், விஷ்ணு, சிவன், பிரஹ்மா ஆகிய இம்மும்மூர்த்திகள் இப்பரப்ரஹ்மத்தின் அவஸரபேதங்களே ஒழிய வேறில்லை என்றும், இம்பாதிரி 'ஸமயகோடிகளெல்லாம் தன் தெய்வம் என் தெய்வம் என்று எங்கும் தொடர்ந்து எதிர்வழக்கிடவும்' நிற்கும் பரப்ரஹ்மத்தைப் பற்றியே பாகவதம் கூறுகிறது என்றும், ஆதலால்தான் அதற்குப் பரமஹம்ஸஸம்ஹிதை என்றபெயர் நன்றாகப் பொருந்தும் என்றும், தெரிவிக்கவேண்டும் என்பதே. இந்தப் புராணத்திற்கு விஷ்ணுபுராணம் என்ற சிறப்புப் பெயரிடாது பாகவதம் என்ற பொதுப்பெயர் இட்டிருக்கிறதும் இந்த எண்ணத்திற்கு ஸஹாயமாக இருக்கிறது.

இத்தகைய சிறப்புவாய்ந்த பரமஹம்ஸ கிரந்தமாகிய பாகவதத்தை என் சிற்றறிவிற்கெட்டியவரையில் வினவிடை ரூபமாக அமைத்திருக்கிறேன். இதில் அநேகவிதப் பிழைகள் நேரிட்டிருக்கலாம். அவைகளைப் புராணத்தின் சிறப்பு, இவ்வினவிடையை வெளியிடத் தூண்டிய நோக்கம் இவைகளை முன்னிட்டுக் கொண்டு பொறுத்து, இதைப் பகவத் பக்தர்கள் அங்கீகரித்தும், அவசியமாகத் திருத்தவேண்டிய பிழைகளை எனக்குத் தெரிவித்தும் பேருதவி புரிவார்கள் என்று நம்புகிறேன்.

எல்லோருக்கும் இப்புத்தகம் ஆனந்தத்தை விளைவிக்கும் பொருட்டு ஒவ்வொரு ஸ்கந்தத்தின் தொடக்கத்திலும் அந்தந்த ஸ்கந்தத்திற் கேற்ற சித்திரபடங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஆ. சீ. கஸ்தூரிரங்கன்.

# அட்டவணை

# கதை அட்டவணை

# ஸூக்ஷ்ம விஷய அட்டவணை

# அட்டவணை



## 10-வது ஸ்கந்தம்: 157-வினைக்கள்.

முற்பாதி:—

பிற்பாதி:—

## 11-வது ஸ்கந்தம் : 76-விளுக்கள்.

## 12-வது ஸ்கந்தம் : 16-வினாக்கள்.

# அநுபந்தம்



# சித்திரப்படங்களின் அட்டவணை



# அநுபந்தம்

# சித்திரப்படங்கள் அட்டவணை



# ஸ்ரீமத்
# பாகவத விஞவிடை

ஸச்சிதானந்த பரப்பிரஹ்மணே நம:

## 1-வது ஸ்கந்தம்

### பரீக்ஷித் சரித்திரம்

### ஸூதசௌநக ஸம்வாதம்.

ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவாம் அயனுய் மாலாய்
ஆன்றவீ சனுமாய்த் தானே யநந்தமூர்த் தியுமாய் நிற்கும்
மூன்றமுத் தனுமாய் இன்பப் புணரியா தவனுய் நாளும்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே.

விஞ 1.—இந்தப் புத்தக ஆரம்பத்தில் ஸச்சிதானந்த பரப் பிரஹ்மணே நமः என்று சொல்லுவானேன்?

விடை.—ஸச்சிதானந்த ஸ்வரூபமாகிய பரம்பொருளிட மிருந்து வெளிவந்த உலகில், தர்மம் குறைந்து அதர்மம் மேலிடுங்காலத்தில், துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலநஞ்செய்து, தர்மத்தை நிலைநிறுத்த அந்தப் பரம்பொருளே எடுத்த அவதாரங்களையும், அவரது ஸ்வரூபத்தின் சிறப்பையும், இந்தப்புத்தகத்தில் எடுத் துரைக்கப்போகிறபடியால் இதன் ஆரம்பத்தில் ஸச்சி தானந்த பரபிரஹ்மணே நம: என்றோம்.

விஞ 2.—பாகவதம் என்றால் என்ன? இது யாரால் செய் யப்பட்டது? இது யாருக்கு யாரால் சொல்லப் பட்டது?

விடை.—பகவானது குணநுபவங்களை வெளியெடுத்துச் சொல்லும் நூலாம். அப் பரம்பொருள், அளவிட முடியாத ஐசுவரியம், வீர்யம், கீர்த்தி, அழகு ஞானம் வைராக்கியம் ஆகிய ஆறுகுணங்களின் நிலமாயிருத்தலால் அவருக்குப் பகவான் என்று பெயர். அவரது ஸ்வரூபத்தின் மேன்மையும், அவர் செய்த அவதாரங்களின் சரித்திரத்தையும் சொல்லுவதால், இதற்குப் பாகவதம் என்ற பெயர் வந்தது. இது வியாஸரால் அவர் செய்த புராணாதிகளின் இறுதியில் பதினெட்டாவது புராணமாகச் செய்யப்பட்டது. இது கங்கைக் கரையில் பிராயோபவேசம் (அன்ன ஆகாரம் இன்றிப் பட்டினிக்கிடத்தல்) செய்துகொண்டு ஏழாம் நாள் தனக்கு வரப்போகிற மரணத்தை எதிர்பார்த்திருந்த அர்ச்சுனனது பேரனாகிய பரீக்ஷித்துக்கு வியாஸருடைய பிள்ளையும், முற்றுந்துறந்த முழு ஞானியுமான சுகப்ராஹ்மத்தால் சொல்லப்பட்டது.

வின 3.—எந்த ஸமயத்தில் வியாஸருக்கு இதை 18-வது புராணமாக எழுதும்படி வந்தது?

விடை.—எல்லாப்புராணங்களையும் ஐந்தாம் வேதமாகிய பாரதத்தையும் செய்து முடித்தபின்பு உலகில் ஸாதாரண ஜனங்கள் பிழைத்துப்போவதற்கு வேண்டியவை எல்லாம் செய்துவிட்டதாக வியாஸர் எண்ணிக் கொண்டார். இப்படி இருக்கையில் ஒருநாள் காலையில் வியாஸர் கங்கையில் ஸ்நாநம்செய்துவிட்டு கரையில் நிஷ்டைக்கு உட்கார்ந்தார். அப்பொழுது அவர் மனதை அடக்க, அது அடங்காது கவலைபாய்ந்து ஓடியது. உடனே அவருக்கு ஏதோ இன்னும் தாம் செய்யவேண்டியது ஏதாவது பாக்கியிருக்கிறதோ

என்ற எண்ணம் உண்டாக, அவர் மனம் பதைக்கத் தொடங்கியது. இந்த ஸமயத்தில் அவரது ஆசிரமத்திற்குத் தற்செயலாய் ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்து கொண்டு வந்த நாரதரால் ஏவப்பட்டு வியாஸர் இந்த பாகவதத்தை எழுதினார்.

வினு 4.—நாரதர் எவ்வாறு வியாஸரைப் பாகவதம் எழுதும்படி தூண்டினார்?

விடை.—நாரதரைக்கண்டதும் வியாஸர் அவருக்கு வந்தனை வழிபாடுகள்செய்து, முடிவில் தமது மனச் சஞ்சலத்தை அவருக்கு வெளியிட்டார். அப்பொழுது நாரதர், 'அப்பா நீ இதுவரையிலும் செய்துள்ள புஸ்தகங்களில் எல்லாம், தருமங்களை அதிகமாக எடுத்துக் காட்டியிருக்கிறாய். அவைகளின் முடிவாகிய பரம்பொருளின் ஸ்வரூபத்தை அவ்வளவு அதிகமாக எடுத்து நீ காட்டவில்லை. ஆகையால் இதோடு உன்வேலையை நிறுத்தி விட்டால் தர்மங்களை மாத்திரம் மிகுந்த சிரத்தையோடு ஜனங்கள் அனுஷ்டித்து அவைகளின் முடிவாகிய பரம்பொருளை அறியாது தத்தளிப்பார்கள். ஆகையால் எல்லோரும் பரம்பொருளை எளிதில் அறிந்து மேன்மையை அடையும்படி அவரது ஸ்வரூபத்தையும், அவர் அவதாரம் எடுத்துச் செய்த அரிய செயல்களையும் பாகவதம் என்ற 18-வது புராணத்தின் மூலமாக வெளியிடு. அப்பொழுதுதான் உன் மனம் ஸமாதானப்பட்டு உன் வசப்படும். இந்தக் குறைவு ஒன்று இருப்பதால் தான் உன் மனம் கட்டுக்கடங்காது துள்ளி ஓடுகிறது. மேலும் பரம்பொருளது ஸ்வரூபத்தை அறிந்து, நான் முன் ஜன்மத்தில் பக்திசெய்ததால்தான் எனக்கு

இந்த ஜன்மத்தில் இந்த மேன்மை கிடைத்திருக்கிறது. ஆகையால் நீ பகவத் ஸ்வரூபத்தை எடுத்துச்சொல்லி உலகிலுள்ளவர் எல்லோரையும் மேன்மைப்படுத்து' என்று நாரதர் தமது பூர்வ ஜன்மவிருத்தாந்தத்தையும் எடுத்துரைத்து அவரைப் பாகவதம் எழுதும்படி தூண்டினார்.

**விஞ 5.**—நாரதர் பூர்வஜென்மத்தில் எந்நிலையில் இருந்தார்? அவருக்குத் தெய்வபக்தி எவ்வாறு உண்டாயிற்று?

**விடை.**—முன் ஜன்மத்தில் நாரதர், ஒரு சதுர் சாஸ்திர பண்டிதன் வீட்டு வேலைக்காரியின் பிள்ளையாக இருந்தார். அவர் வீட்டிற்கு ஒருகாலத்தில் சாதுர்மாஸ்ய விரதம் அனுஷ்டிக்க சில பாகவதர்கள் வர, அவர்களுக்குத் தொண்டு செய்யும்படி இந்த வேலைக்காரியின் பிள்ளையைப் பண்டிதர் நியமித்தார். அந்தப் பிள்ளை அவர்கள் இட்டவேலையை மிகுந்த சிரத்தையோடு செய்துகொண்டும், அவர்கள் பக்தி பூஜை முதலியவைகள் செய்வதை மிகுந்த ஆவலோடு பார்த்துக்கொண்டும், அவர்கள் உண்டு மிஞ்சிய எச்சிலை மிகுந்த பக்தியோடு புசித்துக்கொண்டும், தனது காலத்தைக் கழித்து வந்தான். அந்தப் பையனது சிரத்தையைக் கண்ணுற்ற மஹான்கள் தமது விரதம் முடிந்து புண்ய தேச ஸஞ்சாரம் செய்யப் புறப்பட்டுப் போகையில், அவனைத் தமது அருகே அழைத்தனர். மிகுந்த பக்தியோடு வந்து நின்ற பையனை நோக்கி அவர்கள் 'அப்பா ஆத்மா பிறப்பு இறப்பற்றது, அவனைக் கர்மங்களே பந்தப்படுத்துகின்றன. இதிலிருந்த ஒருவன் தப்பிப் பிழைக்க வேண்டுமாகில், அவன் அவசியம் செய்ய வேண்டிய கர்மங்களைப் பலத்தை இச்சிக்காதுசெய்து

அவைகளைப் பகவத் அர்ப்பணம் செய்வதே நல்லவழி யாகும், என்று உபதேசித்து அவனுக்குப் பரம் பொருளை ஹரியாகத் தியானிக்கும்வழியையும் எடுத்துரைத்து லோகஸஞ்சாரம் செய்யப் புறப்பட்டனர். இதனால் அந்தப் பையனுக்கு ஹரி பக்தி உண்டாயிற்று.

வினு 6.—இந்தப் பையன் பின்பு எவ்வாறு தன் வாழ்நாளைக் கழித்தான்? இவன் பக்தி எவ்வாறு பயன்பட்டது?

விடை.—இவ்வாறு உபதேசித்துப் போனபின்பு தன் தாயால் போஷிக்கப்பட்டுக் கொஞ்சநாள் பக்திசெய்து கொண்டு வளர்ந்து வந்தான் அச்சிறுவன். இப்படியிருக்கையில் ஒருநாள் அவன் தாய் இரவில் மாடு கறக்கப் போனவிடத்தில் ஒரு பாம்பு கடித்து இறந்தாள். அப்பொழுது தனக்குண்டான துக்கத்தை 'நான் ஸம்ஸார பந்தத்தினின்று விடுபட்டுப் பக்திசெய்யப் பகவான் இவ்வாறு என் தாயைக் கொண்டுபோய் விட்டார்' என்ற எண்ணத்தால் அச்சிறுவன் ஸமாதானப்படுத்திக் கொண்டு, பக்தி செய்து பரமபதம் அடைவதற்காக அவன் ஹிமாலயம் நோக்கிப் புறப்பட்டுப் போனுன். போகும் வழியில் ஒருகாட்டில் வெகுநாழிகை வழி நடந்ததால் அவனுக்குக் களைப்பு உண்டாக அருகிலிருந்த ஒரு ஏரியில் அவன் ஸ்நானம் செய்து அதன் தண்ணீரைக் குடித்துக் கொஞ்சம் களைப்பாறினுன். கொஞ்சம் களைப்புத்தீரவே அவன் அந்த ஏரிக்கரையில் பாகவதர்கள் சொல்லியபடி பகவானைத் தியானம் செய்யத் தொடங்க அவன் மனதில் பகவத்ரூபம் தோன்றி மறைந்தது. உடனே அவன் மிகுந்த துக்கத்திற்கு ஆளாய் விட்டான். அந்த ஸமயத்தில் ஆகாயத்தில், 'இந்த ஜன்மத்தில் உனக்கு இவ்வளவுதான்

பிராப்தம். நீ அதைரியப்பட்டு வீணாய் சோர்ந்துவிடக் கூடாதென்றே உனக்கு இந்த தரிசனம் ஆயிருக்கிறது. நீ விடாது இந்த ஜன்மம் முழுவதும் பக்திசெய்து கொண்டிரு. இதன் முடிவில் உனக்கு மேலானநிலை வரும். அடுத்த ஜன்மத்தில் என் பக்தர்களுள் நீ முதன்மையான பக்தனுவாய்' என்று ஒரு அசரீரிவாக்குப் பிறந்தது. இதைக் கேட்டவுடன் அந்தப்பையன் அங்கிருந்து எழுந்து மிகுந்த உல்லாஸத்துடன் ஸதா ஹரி பக்தி செய்துகொண்டும் மரணத்தை எதிர் பார்த்துக் கொண்டும் ஊர் ஊராக உலாவத் தொடங்கினுன். கொஞ்சகாலத்தில் அவனுக்கு மரணம் அனுயாஸமாக வர, அடுத்த சிருஷ்டியில் பூர்வஜன்ம ஹரிபக்தி விசேஷத்தால் அந்தப் பையன் பிரம்மாவின் மூச்சுக்காற்றிலிருந்து நாரதராகப் பிறந்தான்.

**வின 7.**—இவ்வாறு நாரதர் தமது பூர்வஜன்ம விருத்தாந்தத்தையும் எடுத்துரைத்துப் பாகவதம் எழுதும்படி தூண்டிவிட்டுப்போனவுடன் வியாஸர் என்னென்ன செய்தார்?

**விடை.**—தம்மைப்போல் ஹரிபக்தியின் மேன்மையால் யாவரும் பிழைக்கும்படி பகவான் ஸ்வரூபத்தை வெளியிட்டு அவரது மனக்கவலையை நீக்கிக்கொள்ளும்படி புத்திகூறி, நாரதர் லோக சஞ்சாரம் செய்யப் புறப்பட்டுப்போனதும், வியாஸர் பகவானது உண்மை ரூபத்தை அறிய நிஷ்டையில் உட்கார்ந்தார். அப்பொழுது அவருக்குப் பகவானது திவ்ய தரிசனமாகி நிரதிசய ஆனந்தம் உண்டாக, அவர் நிஷ்டைகலைந்து எழுந்து தமது அனுபவ விசேஷத்தையும் பகவத் ஸ்வரூபத்தையும் பலர் அறிந்து ஈடேறும்படி பாகவதம்

என்ற பதினெட்டாவது கடைசியுமாகிய புராணத்தின் மூலமாக அதை வெளியிட்டார். அதன்பின்பு அந்தப் பாகவதத்தை தமது பிள்ளையாகிய சுகப்பிரம்மத்திற்கு உபதேசம் செய்ய, அவர் அதை மிகுந்த ஆவலோடு ஏற்றுப் பரீக்ஷித்துக்கு ஏழு நாளைக்குள் சொல்லி முடித்து அவனைக் கிருதார்த்தனாக்கினார்.

வினா 8.—தாய் வயிற்றில் இருக்குங்கால் இந்தப் பரீக்ஷித்திற்கு என்ன ஆபத்து? ஏன் வந்தது? எப்படி நீங்கிற்று?

விடை.—பாரதயுத்தத்தில் பதினெட்டாம் நாள் இரவில் அசுவத்தாமன் இளம் பஞ்சபாண்டவரைக் கொடுங் கொலைபுரிந்தும், அதைத் திரௌபதி ஸஹியாது அசுவத்தாமனது உயிரை வாங்கி விடவேண்டும் என்று பாண்டவரைத் தூண்டிப் பின்பு அசுவத்தாமனைக் கைப்பிடித்துக்கொண்டுவந்து பாண்டவர்கள் திரௌபதிமுன் நிறுத்திய காலத்தில் அவளுக்குக் குரு புத்திரன் என்ற மரியாதை அவனிடம் வர, கொல்லாது விடும்படி அவள் சொன்னதும் அப்பொழுது அர்ச்சுனன் முதலியோர் அவனது சிரோரத்நத்தை மாத்திரம் வாங்கிக்கொண்டு அவனைச் சிண்டறுத்து விட்டுவிட்டதும், அதற்குமேல் அந்தப் பாபி பாண்டவப் பூண்டே உலகில் இல்லாமலிருக்கும்படி அபாண்டவாஸ்திரப் பிரயோகம் செய்ததும் பாரதம் ஸௌப்திக பர்வத்தில் சொல்லியிருக்கிறோம். இந்த அபாண்டவாஸ்திரமானது அப்பொழுது கர்ப்பமாய் இருந்த உத்தரையைப் பிடிக்க வர, அவள் அழுதுக்கொண்டு, பகவானும் பாண்டவர்களும் இருந்த இடம்வந்து பகவானிடம் சரணமடைந்து தனக்கு வந்திருக்கும்படியான குலக்ஷயமாகிய ஆபத்தைச்சொல்லி முறையிட்டாள்.

பாண்டவர்களுக்கும் இதைக்கேட்டதும் ஒன்றும் செய்யத்தோன்றவில்லை. அதற்குள் அக்கொடிய அஸ்திரம் உத்தரையின் கருப்பையுட் புகுந்து அங்கிருந்த குழந்தையை வருத்தத் தொடங்கியது. இதை அறிந்த பகவான் தமது சக்தியால் அவள் கருப்பையுள் நுழைந்து தமது கதையால் அந்த அஸ்திரவேகத்தைத் தடுத்து அதைச் சாந்தப்படுத்தி விட்டு வெளியே வரக் குழந்தை பிறந்தது. உத்தரைக்கும் வேதனை அடக்க எல்லாரும் பகவானை வாயாரத்துதிக்க அவர், அவர்களிடம் விடைபெற்று அர்ச்சுனனோடு துவாரகை சென்றனர்.

வினா 9.—இக்குழந்தை பிறந்ததும் இதற்கு என்ன பெயரிட்டழைத்தார்கள்? இதற்குப் பரீக்ஷித்து என்றபெயர் வரக்காரணம் என்ன?

விடை.—நல்ல ஸமயத்தில் பாண்டவர்குலத்தை உத்தாரணம் செய்யத் தகுந்தவராகிய ஒரு பிள்ளையைப் பெற்றாள். இந்த ஸந்தோஷ ஸமாசாரத்தைக்கேள்வியுற்றுப் பாண்டவர்களும் மற்றைய நகரவாஸிகளும் அந்த நாளைத் தமக்கு ஒரு பெருந்திருவிழாவாக எண்ணிக் கொண்டாடினார்கள். சிறந்த ப்ராமணர்கள் ஒன்றுசேர்ந்து அந்தக் குழந்தைக்கு விஷ்ணுராதன் (விஷ்ணுவால் காப்பாற்றப்பட்டவன்) என்று பெயரிட்டனர். இவருக்குப் பரீக்ஷித்து என்ற பெயர் வரக்காரணம் பின்வருமாறு. பகவான் உத்தரை கருப்பையுட் புகுந்து கட்டை விரல் பிரமாணமான உருவத்தோடு பீதாம்பரம் தரித்து, சதுர்புஜனாய் தங்கக்கிரீட முடையவராய் கையிலிருந்த கதையால் அபாண்டவாஸ்திரத்தைத் தாக்கிக்கொண்டு குழந்தையைச் சுற்றிவந்து

பாதுகாத்துக் கொண்டிருந்தார். இவர் இன்னார், என்று அறியாது குழந்தை மிகுந்த ஆச்சரியத்தை அடைந்தது. அஸ்திரம் கொஞ்சநாழிகையில் அடங்கிப்போக, பகவான் தமது திவ்யமங்களரூபத்தை மறைத்தார். குழந்தை பிறந்த பின்புங்கூட அதற்கு 'நம்மைக் கருப்பையுள் ஒரு சுந்தரன் காப்பாற்றிக் கொண்டு சுற்றிவந்தானே! அவன் யாரோ தெரியவில்லை' என்ற எண்ணம் அதற்கு மாறவில்லை. இதனால் அது தன் அருகில் வரும் ஒவ்வொருவரையும் இவர்தானோ தன்னைக் கருப்பையுட் காத்தருளியவர் என்ற எண்ணத்தோடு ரத்நபரீக்ஷை செய்பவர்போல் உற்று நோக்கிக்கொண்டு வந்தது. இதை யறிந்த சில மஹான்கள் அதற்குப் பரீக்ஷித்து என்று பெயரிட்டனர்.

வி **10.**—பாண்டவர்கள் எந்த சமயத்தில் பரீக்ஷித்திற்கு இராஜ்ய பட்டாபிஷேகம் செய்தனர்? பின்பு அவர்கள் என்ன செய்தார்கள்?

விடை.—பாரதயுத்தத்தில் ஜயம் தமக்கு வந்து இராஜ்யம் கிடைத்ததுமுதல் 'அநியாயமாக இந்த இராஜ்ய ஆசையால் நமது உறவினர்கள் எல்லோரையும் கொன்று தள்ளி நான் பாபத்திற்கு ஆளானேனே' என்ற துக்கம் தர்மபுத்திரரைப் பிடிக்க, அவரால் இராஜ்யமாள முடியாமல் போயிற்று. பகவான், யுத்தகளத்தில் அர்ச்சுனனால் அடிபட்டு விழுந்து மரணமடைய உத்தராயணத்தை எதிர்பார்த்திருந்த பீஷ்மரிடம் தருமபுத்திரர் முதலியோரை அழைத்துப்போய் தர்மவிஷயங்களை அவரிடம் கேட்டுத் தெளியும்படி செய்தார். அப்படி செய்தும் தர்மபுத்திரர் மனம்

கலங்கிக்கொண்டே இருந்தது. இப்படி இருக்க, ஒரு பக்கத்திலும் இருந்து போர் செய்யமாட்டேன் என்ற விரதம் பூண்டு தீர்த்தயாத்திரை சென்ற விதுரர் ஹஸ்தினபுரி வந்து திருதராஷ்டிரர் முதலியோர் அந்திய காலத்தில் பகவத் ஆராதனம் செய்து பிழைத்துப் போகும் பொருட்டு அவர்களுக்கு வைராக்கியம் வரும்படியான வார்த்தைகளைச்சொல்லி அவர்களை அரண்மனையிலிருந்து கங்கைக்கரை அழைத்துப்போய் ஓர் பர்ணசாலையில் வாஸம்செய்து பகவானைத் தியானம் செய்யும்படி ஏற்பாடு செய்து தாமும் கொஞ்சநாளில் பரமபதம் அடைந்தார். இவ்விரண்டு விஷயங்களும் யுதிஷ்டிரருக்குத் தெரிய அவர் மனம் பதைத்தது. இதற்குள் திருதராஷ்டிரன் முதலியோரும் பகவானது பாதாரவிந்தங்களை அடைந்தார்கள். கொஞ்சகாலைக்கு எல்லாம் துவாரகை சென்ற அர்ச்சுனன் மிகுந்த துக்கத்தோடு வந்து பகவான் வைகுண்டத்துக் கேகியதையும், யாதவர்கள் ரிஷிசாபத்தால் ஒருவரையொருவர் கோரைப்பற்களால் அடித்துக்கொண்டு இறந்ததையும் தன் சக்தியைப் பகவான் கொண்டுபோய் விட்டபடியால் தன்னோடுவந்த யாதவ ஸ்திரீகளைப் பறிகொடுத்துக் கொள்ளைகாரர்களை எதிர்க்கமுடியாது தான் அவமானப்பட்டு வந்ததையும் சொல்ல, கலியுகம் வந்துவிட்டது என்று அறிந்த யுதிஷ்டிரர் தம் பேரனாகிய பரீக்ஷித்துக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் செய்துவிட்டு மௌனவிரதத்தோடு மஹா பிரஸ்தானமாக வடக்கு திக்கைநோக்கிப் புறப்பட்டனர். வழியில் தமது தம்பிமார் திரௌபதி முதலியோரை இழந்தும் திரும்பிப்பாராது தருமபுத்திரர் ஸ்வர்க்கம் அடைந்தார்.

வினா 11.—பரீக்ஷித்து எவ்வாறு அரசு புரிந்து வந்தான்? அவன் குடும்பயோக க்ஷேமங்கள் எவ்வாறிருந்தன?

விடை.—பரீக்ஷித்து மனுநெறிவழுவாது தனது முன்னோர் இராஜ்ய மாண்டதுபோல் மிகுந்த ஸாமர்த்தியமாக ஆண்டுவந்தான். அவன் உத்தரன் பெண்ணாகிய ஐராவதியைக் கல்யாணம் செய்துகொண்டு ஜனமே ஜயன் முதலிய நான்கு பிள்ளைகளை அடைந்தான். கிரு பாசாரியரைப் புரோஹிதராகக்கொண்டு அநேக யாகங் களைச்செய்து தேவதைகளையும் தன்னாட்டு ஜனங்களை யும் திருப்தி செய்து வைத்தான். கிருஷ்ணன் தனது பாட்டனார் முதலியோருக்குச்செய்த உபகாரங்களை அவன் எண்ண எண்ண அவனுக்குக் கிருஷ்ண பக்தி அதிகரித்தது. அவன் இராஜயத்தில் அநியாயம் என் பதே இல்லாமல் போக எல்லோரும் ஸுகத்தை அடைந்தனர்.

வினா 12.—இப்படி இவன் அரசுபுரிந்துவருங்கால் அநீதி எவ்வாறு இவன் இராஜ்யத்துள் வரத்தொடங்கியது?

விடை.—பரீக்ஷித்து இவ்வாறு மனுநெறிதவறாது அரசு புரிந்து வருங்கால் தருமதேவதை ஒற்றைக்காலுடைய விருஷபத்தின் உருவத்தோடு, பசு உருக்கொண்ட பூதேவியை, அவன் ராஜ்யத்தில் ஓர் இடத்தில சந் தித்துப் பசு மிகவும் மெலிந்து அதிக துக்கத்தால் அழுதுகொண்டிருந்தது. அதைக் கண்ட தரும தேவதை பலவாறாக அதன் துக்கத்தின் காரணத்தை விசாரிக்க, பூதேவி 'ஸகல நன்மைக்கும் நிலையமாகிய பகவான் என்னை விட்டு அகன்றார். இனிமேல் இங்கு கலிபுருஷனால் அநியாயம் மேலிட்டுத் தேவதைகள், ரிஷிகள், பக்தர்கள் முதலியவர்களுக்கும் வர்ணாச்ரம

தர்மம், ஸத்யம், தபஸ் முதலியவைகளுக்கும் கேடு வரப்போகிறதே; ஆதலால் உனக்கு உள்ள நான்கு பாதங்களில் மூன்றுபாதங்களுக்குக் கேடு வந்துவிட்டதே; இதுதான் எனக்கு மிகுந்த துக்கம்' என்று தன் மனதில் இருந்த சங்கதியை வெளியிட்டாள். இப்படி இருக்கையில் ராஜகுமாரனைப்போன்ற ஒருவன் அங்குவந்து அந்த விருஷபத்தையும், பசுவையும் தன் கையிலிருந்த தடியால் கொடுமையாய் அடிக்கத் தொடங்க, கண்டவர் பரிதாபம் அடையும்படியான நிலையை அடைந்து அவ்விரண்டும் மிகுந்த கஷ்டப்பட்டன.

வி௵ **13**.—அந்த அநீதியைப் பரீக்ஷித்து எவ்வாறு தடுத்தான்?

விடை.—அந்த சமயத்தில் தற்செயலாய் பரீக்ஷித்து மஹாராஜன் அங்குவந்து, விருஷபத்திற்கும் பசுவுக்கும் தைரியம்வரும்படியான இனியசொற்கள்கூறி, விருஷபம் தருமதேவதை என்றும், அதற்கு தபஸ், சௌசம், தயை, ஸத்யம் என்ற நான்கு கால்களுள் முதல் மூன்று கர்வம், ஸங்கம், மதம் என்ற கெட்ட குணங்களால நஷ்டமாய்ப்போக மீதி இருக்கும் ஸத்யம் என்ற காலையும், இராஜகுமாரனைப்போல வேஷம் தரித்திருக்கும் அநீதியே உருவெடுத்து வந்த கலி புருஷன் வெட்ட முயலுகிறான் என்றும், பசு பூதேவி என்றும், அவள் கிருஷ்ண பரமாத்மாவின் பிரிவாற்றாமையாலும், கலிபுருஷனது தொந்திரவாலும் துக்கப்படுகிறாள் என்றும்; தனது ஸூக்ஷ்மபுத்தியால் உள்ளதை உள்ளவாறு அறிந்துகொண்டு கலி புருஷனைக் கொல்லுவதற்காகத் தன் உடைவாளை

எடுத்துவிட்டான். உடனே அவன் அரசன்காலில் விழுந்து 'சரணம் அடைபவரைக்கொல்வது பாண்டவ வம்சத்தாருக்கு நியாயம் அன்று; நானும் உங்கள் பிரஜைதான். ஏழைக்குச் சிலவிடங்கள் காட்டி விட்டால் அங்கேயே நான் இருக்கிறேன். வேறு இடங்களை நான் சென்று பிடிப்பதில்லை. என்னைக் காப்பாற்றவேண்டியதும் தங்கள் கடனே' என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். 'இந்தப் பிரம்ம வர்த்தமாகிய எமது இராஜ்யத்துள் நீ வரக்கூடாது' என்று ஓட்டத்தொடங்கிய அரசன் அப்பொழுது பெருந்தன்மையோடு கலியைநோக்கி 'அடே! பாபி! சூது, குடி, பொறாமை, பொன் ஆகிய இவைகளை உனக்கு இருப்பிடமாகக் கொடுத்தேன்; இவைகளில் திருப்தி யோடு இரு. வேறு எங்கேயாவது உன்னைக் கண்டால் இரக்கமின்றி உன்னை நான் வதம் செய்வேன்' என்று எச்சரிக்கைசெய்ய 'தலை தப்பியது தம்பிரான் தர்மம்' என்று கலிபுருஷன் ஓடிப்போய் அவனுக்குக் கொடுத்த இடங்களில் அன்றுமுதல் இடைவிடாது வசிக்க லானான். இவ்வாறு பரீக்ஷித்துக் கலிபுருஷனை அடக்கிப் புகழ்பெற்றுத் தரித்திரம், துக்கம் முதலியவைகள் அணுகாவண்ணம் அரசாண்டுவந்தான்.

வினா 14.—இந்தத் தர்மாத்மாவான பரீக்ஷித்து யாது காரணத்தால் என்ன பெருங்குற்றத்தைச் செய்தான்? அவன் பின்பு என்ன செய்தான்?

விடை.—இவ்வாறு யாவரும் மகிழும்படி பரீக்ஷித்துச் செங் கோல் செலுத்திவந்தநாளில் ஒருநாள் வேட்டையாட விரும்பி அவன் தனது பரிவாரங்களோடு ஓர் வனத் துள் புகுந்தான். அவன் வெகுதூரம் ஒருமானைத்

துரத்திக்கொண்டு போகத் தனது பரிவாரங்களை விட்டுப் பிரியும்படி நேர்ந்தது. அதிகநாழிகை வேட்டையாடியதால் அவனுக்குப் பசி தாகம் அதிகரிக்கக் களைப்பு உண்டாயிற்று. வெகுதூரம் தண்ணீருக்காகத் திரிந்து முடிவில் அவன் நீர் நிறைந்த ஒரு குட்டையையும் அதன் அருகில் ஓர் ஆசிரமத்தையும் கண்டான். உடனே அவன் உள்ளே பிரவேசிக்க அங்கு இஹலோகப் பிரஞ்ஞையே இல்லாது மெய்மறந்து கண்ணை மூடிக்கொண்டு துரிய ஸமாதியில் பரம்பொருளோடு இரண்டறக்கலந்து நிஷ்டையில் மூழ்கியிருந்த ஓர் மஹரிஷியை அவன் கண்டான். உடனே அவரை நோக்கி 'எனக்குத் தண்ணீர் வேண்டும். நான் பரீக்ஷித்து ராஜன் கிருபை கூர்ந்து தண்ணீர் தந்தருளவேண்டும்' என்று அநேகம் தரம் கூவிக் கேட்டும் ரிஷி இருந்த இடம் விட்டு அசையவேயில்லை! பதிலும் சொல்லவில்லை. களைப்பாலும், தன் சொல்லுக்குப் பதில் வராததாலும் அரசனுக்குக் கோபம் அதிகரிக்க ரிஷி சமாதியிலிருக்கிறார் என்ற எண்ணம் அவனுக்குப் படாது, அவர் ஏதோ தன்னைக் கர்வத்தால் அலக்ஷியம் செய்வதாகப்பட அவனுக்குக்கோபம் அதிகரித்து உடனே அவரைத் தண்டிக்க அருகிலிருந்த ஒரு செத்த பாம்பைத் தன் வில்லின் நுனியால் எடுத்து அவர் கழுத்தில் போட்டுவிட்டுத் தனது ஊரை நோக்கிச் சென்றான். போகும் வழியில் அவனுக்குக் கோபம் தணியவே தான் செய்தது அநியாயம் என்று பட ரிஷி சாபம் தனக்கு வந்துவிடுமே என்ற பயம் வந்தது. அப்பொழுது 'நான் செய்த அநீதிக்கு எனக்கு மரணமே தகுந்த தண்டனை. ரிஷி என்னை அவ்வாறு சபித்தால்தான் என் பாபம் நீங்கி

நான் புனிதனுவேன். இது இல்லாவிடில் எனக்கு வேறு கதி இல்லை!' என்று எண்ணிச் சாபம்வருமே என்ற பயத்தை நிவர்த்திசெய்துகொண்டு ஒருவாறு ஸமாதானத்தோடு அவன் தன் ராஜ்யம் சென்ருன்.

விஞ 15.—கோபத்தில் செய்த பெருங்குற்றத்திற்குப் பரீக்ஷித்தை யார் எவ்வாறு சபித்தது? சமாதியிலிருந்த ரிஷி எழுந்ததும் என்ன செய்தார்?

விடை.—இவ்வாறு அடாத காரியத்தைக் கோபாவேசத்தில் செய்துவிட்டு அரசன் காட்டைவிட்டுப் போன உடன் ஆசிரமத்தருகில் சில ரிஷி புத்திரர்களோடு விளையாடிக்கொண்டிருந்த சிருங்கி என்ற அந்த ரிஷியின் குமாரனுக்கு நடந்த காரியம் தெரியவந்தது. உடனே அங்கிருந்தபடியே அரசனது நற்குணங்களை அறியாத சிருங்கி 'என்' தகப்பன் கழுத்தில் பாம்பையிட்ட கொடியவன் இன்றைக்கு ஏழாம்நாள் தக்ஷகன் என்ற கொடிய ஸர்ப்பம் தீண்டி இறக்கட்டும்' கொடிய சாபத்தைக் கொடுத்துவிட்டு தன் தகப்பன் இருந்த இடம் வந்து ஸர்ப்பமாலை போட்டிருக்கும் அவரைக்கண்டு மனம்பொருது சிருங்கி கதறலுற்ருன். இவன் அழு குரலைக் கேட்டு ரிஷி கண்விழித்து நோக்கத் தன் கழுத்தில் பாம்புமாலை இருப்பதைக் கண்டு படபடப்பின்றி ஸாவதானமாக அதை எடுத்து பக்கத்தில் எறிந்துவிட்டுப் பிள்ளை அழுவதன் காரணத்தை விசாரித்தார். அப்பொழுது அவன் பரீக்ஷித்து ராஜன் செய்த அநீதியையும் அதற்காகத் தான் கொடுத்த சாபத்தையும் சொல்லித் தனக்கு அவரைக் காணப்பொறுக்காது அழுகைவரக் கதறினதாகவும் வெளியிட்டான். உடனே ரிஷிக்கு மிகுந்த துக்கம்வர

அவர் பிள்ளையைநோக்கி, 'அடே என்ன சின்னப் பிள்ளைத்தனமாக இந்த சாபத்தைக் கொடுத்து விட்டாயே! எல்லோரும் கோபவேளையில் கொடிய செயல்கள் செய்வது வழக்கம்தானே. மேலும் இந்த அரசன் மிக்க நல்லவன். கோபாவேசத்தில் ஏதோ இந்தச் சிறிய குற்றத்தைச் செய்து விட்டான். சிறி யோர் செய்த சிறுபிழை யெல்லாம் பெரியோராயிற் பொறுப்பது கடனே.' இப்படியிருக்க? இந்த அற்பகாரி யத்தில் பெரிய சாபத்தைக்கொடுத்து நல்ல அரசனைக் கொன்று பூமியை அநீதியால் வருந்தும்படி முன்பின் யோசிக்காமல் செய்துவிட்டாயே! 'அரசனில்லாத ஊர் பாழே' என்று வெகுவாகப் பிரலாபித்துவிட்டுத் தமது சிஷ்யர்கள் மூலமாகச் சாபத்தின் விபரத்தை அவர் பரீக்ஷித்திற்குத் தெரிவித்தார். இந்த ஸமாசாரம் அவன் ராஜ்யம் வந்ததும் அவனுக்கு எட்டியது.

வி 16.—இதை யறிந்ததும் அரசன் என்ன செய்தான்? மேல் என்ன நடந்தது?

விடை.—இந்த சாபம் தனது உலகப்பற்றைச் சீக்கிரத் தில் ஒழிக்க ஏற்பட்ட தெய்வீகமான உபகாரம் என்று கருதி ஸந்தோஷமாகப் பரீக்ஷித்துத் தன் பிள்ளை யாகிய ஜனமேஜயனுக்குப் பட்டாபிஷேகம் செய்து அவனிடம் அன்றே ராஜ்யத்தை ஒப்புவித்து விட்டு கங்கைக் கரையை அடைந்து பிராயோபவேசம் செய்து தன் தேகத்தை விடுவதாகத் தீர்மானித்துத் தன் கடன்களைக்கங்கையில் முடித்துக்கொண்டு [illegible]டக்கு நோக்கி உட்கார்ந்தான். அங்கு அவனது தீர[illegible] தயும் அவன் ஏழாம்நாள் மரணத்தை அங்கீகரிக்[illegible]வைப வத்தையும் பார்க்க விசுவாமித்திரர் பராசர[illegible] [illegible]கலிய

மஹறிஷிகள் வந்து கூடினர். தகுந்த மரியாதைகள் செய்தபின்பு அவர்களிடம் சிருங்கி சாபரூபமாகத் தனக்குவந்த பகவத் அனுக்கிரஹத்தை வெகுவாகப் புகழ்ந்து பேசி 'எனக்குப் பூததயை உண்டாகும்படியாக வும், கடவுளிடத்தில் பக்தி செலுத்தும் அன்பர்களிடம் எனக்கு ஸதா பக்தி இருக்கும்படியாகவும் அனுக்கிர ஹித்தருளவேண்டும்' என்று பரீக்ஷித்துப் பிரார்த்தித் தான். அதற்கு அவர்கள், 'உன் குலத்தவர்களது குணப்படி நீயும் இந்த நல்ல காரியத்தில் நல்லதருணத் தில் பிரவேசித்தாய். உனக்கு மரணம் வரும் வரையில் கடவுளது ஞாபகம் மாறுதிருக்கட்டும். அதன் பின்பு மேலான பதவியாகிய மோக்ஷம் ஸித்திக்கட்டும். நீ பரமபதம் அடையும் சிறப்பைப் பார்த்து விட்டே இவ் விடம் விட்டு நாங்கள் போகிறோம்' என்று சொல்லி மஹறிஷிகள் அவனுக்கு அனுக்கிரஹித்து அங்கேயே அமர்ந்திருந்தனர். தன்னை நல்லவழி நடந்து பிழைத் துப்போகும்படி செய்ய எண்ணித் தங்கிய ரிஷிகளை அவர்களது பரோபகாரச் சிந்தையை எடுத்துக் காட் டிப் புகழ்ந்து அவர்களை நோக்கி 'என்னைப்போன்ற மரணம் அணுகிவரப் பெற்ற ஒருவன் அக்காலத்தில் பரமபதம் அடையச் செய்யவேண்டியவை யாவை? அறியவேண்டிய சிறந்த உண்மை எது? அதனுல் அடையக் கூடிய மேன்மையை நான் இப்பொழுது எவ் வாறு அடைவது?' என்ற கேள்விகளைக் கேட்டான்.

வினு **17.**—இவ்வாறு பரீக்ஷித்துக் கேட்டுக்கொண்டிருந்த தருணத்தில் அங்கு யார் எம்மாதிரியான நிலையில் வந்தது? அப்பொழுது அங்கு என்ன நடந்தது?

விடை.—இந்தத் தருணத்தில் சிறந்த விகாஸத்தோடும் தேஜஸ்ஸோடும் கூடிய முகத்தை உடையவராய் வியாஸ குமாரரான சுகப்பிரம்மம் அந்தவிடத்தை நோக்கித் தற்செயலாக வந்தார். அவர் பதினாறுவயது யௌவனபுருஷராயும் மிகுந்த அழகிய மேனியை உடையவராயும், அவதூதராயும் இருந்தமையால் அவரை அநேக குழந்தைகளும் ஸ்திரீகளும் சூழ்ந்து பரிஹாஸம் முதலியவைகளைச் செய்துகொண்டும், கல், மண் முதலியவைகளை அவர்மேல் எறிந்துகொண்டும் அவரது சிறப்பை அறியாது வந்தனர். அவரோ அதி வர்ணாசிரமியாயும் பிறவி ஞானியாயும் இருந்தபடியால் இவைகளையறியாது மனதைப் பிரம்மத்திலேயே வைத்துக்கொண்டு வந்தார். இவர் அருகே வந்ததும், அரசன் முதலியோர் எழுந்து மரியாதை செய்ய அவரைச் சூழ்ந்துவந்த குழந்தைகளும் ஸ்திரீகளும் வெட்கி ஓடிப்போயினர். பரீக்ஷித்து அவருக்குத் தகுந்த மரியாதை செய்து ஓர் ஆஸனத்தில் வீற்றிருக்கச்செய்து தன் ஸங்கதிகளை அவருக்குச் சொல்லி ஏழுநாள்வரையில் அங்கேயே தன்னிடம் இருந்து பின்பு எங்கேயாவது போகும்படி கேட்டுக்கொண்டு, தான் அப்பொழுது ரிஷிகளிடம் கேட்ட கேள்வியைச் சுகப்பிரம்மத்தினிடம் கேட்டார்.

வினா 18.—இந்த சுகப்பிரம்மத்தின் சிறப்பு எவ்வாறு அவரது இளமைப் பருவத்திலேயே யாவருக்கும் தெரிய வந்தது?

விடை.—சுகப்பிரம்மம் பிறந்த உடன் பூர்ண ஞானத்தோடு இருந்தமையால் உலகப்பற்றுக்கள் எல்லாவற்றையும் துறந்து தாய் தகப்பனைக்கூடக் கவனியாது பரம்

பொருளைநோக்கித் தனியே சென்றது கண்டு அவரது பிரிவை ஸஹிக்கமுடியாது வியாஸர் பின்தொடர்ந்து 'சுகா! குழந்தாய்!' என்று அன்பின் மிகுதியால் அழைக்க, சுகர் எங்கும் தமது ஞானவலியால் கலந்திருந்ததால் சராசரங்களனைத்தும் 'ஏன்! ஏன்!' என்று மறுமொழிகொடுத்தன. இதனால் சுகப்பிரம்மத்தின் ஞானவிசேஷம் எல்லாருக்குந் தெரியவந்தது. மேலும் அவர் போய்க்கொண்டிருக்கையில் வழியில் ஒருகுளத்தில் சில தேவமாதர்கள் நிர்வாணமாய் ஜலக்ரீடை செய்துகொண்டிருந்தனர். சுகரைக் கண்டதும் அவர்கள் மனம் கூசாது நிர்வாணமாகவே யிருந்தனர். பின்னை, 'ஏ சுகா! குழந்தாய்!' என்று கதறிக்கொண்டு வரும் கிழவரான வியாஸரைக் கண்ணுற்ற மாத்திரத்தில் அவர்கள் எழுந்து துணிகளால் தம்மை மறைத்துக் கொண்டார்கள். 'ஏன் என்னைப்பார்த்த உடனே மாத்திரம் இவ்வாறு செய்தீர்கள்?' என்று வியாஸர் கேட்க, அவர்கள் 'தாங்கள் வயதில் பெரியவராய் இருந்தும் இன்னும் தங்களிடத்திலிருந்து புத்திர ஈஷணை (மண்ணாசை) விலகவில்லை. ஆகையால் மற்றை ஈஷணைகளாகிய தாரேஷணை தனேஷணை (பெண்ணாசை பொன்னாசை) அவசியம் தங்களிடத்திலிருக்கும். தங்கள் பிள்ளையோ அப்படியல்ல. அவர் துவந்துவார்' என்று மறுமொழி கூறினாராம். இதனால் சுகரது பற்றற்ற நிலையை யாவரும் அறிந்தனர். அதனால் அவருக்குச் சுகப்பிரம்மம் என்ற பெயர் உண்டாயிற்று.

வினா 19.—இச்சிறப்புவாய்ந்த சுகப்பிரம்மம் பரீக்ஷித்துக் கேட்ட கேள்விக்கு என்ன பதில் உரைத்தார்?

விடை.—'ஸம்ஸாரமே மனிதனுக்குப் பந்தம். அதனுள் அவனிருப்பதால் நல்ல ஸமயங்களில்கூட அவனுக்கு அது பந்தமென்று தெரிகிறதில்லை. அதன் கஷ்டங்கள் நிவர்த்தியாக வேண்டுமாஞல் ஒருவன் தன் மனதைச் சிரவண மனன நிதித்யாஸனம் (கேட்டல், சிந்தித்தல், தெளிதல்) ஆகிய இவைகளால் சர்வாந்தர்யாமியாய் உள்ள ஹரியின்மேல் செலுத்தவேண்டும். அதனுல் அவனுக்கு ஸம்ஸார பயம் போய் அழியாநிலை கைகூடி நிரதிசய ஆனந்தம் உண்டாகும். இந்த ஹரிபக்தியின் விசேஷம் பகவான் ஸ்வரூபம் முதலியவைகளை என் தகப்பஞர் வியாஸர் துவாபரயுகத்தின் முடிவில் பாகவதம் என்ற கிரந்தமூலமாக வெளியிட்டிருக்கிருர், என்று சொல்லிச் சுகப்பிரம்மம் பாகவதத்தை விஸ்தாரமாகப் பரீக்ஷித்துக்குச் சொல்லத் தொடங்கிஞர்.

விஞ 20.—சுகரைப்போன்ற மஹா ஸன்யாஸி ஏன் தமது மேலான நிஷ்டையை விட்டுப் பகவானது செயல்களை பலர் அறிய சொல்லும் கஷ்டத்தை எடுத்துக்கொண்டார்?

விடை.—வியாஸர் பாகவதத்தைச் செய்து எல்லோரும் கேட்டுப் பிழைக்கும்படி உபதேசம் செய்வதற்காக அதை முதலில் சுகப்பிரம்மத்திற்கு உபதேசித்தார். உயிரோடிருக்கும்பொழுது முத்திப்பேற்றைப் பெற்ற மஹான்களது மனதையும் கவரும் வல்லமை, கடவுளது திருவிளையாட்களுக்கு உண்டு. மேலும் ஜீவன்முக்தர்கள் ஸமாதியிலிருந்து வெளிவருங்கால் பகவானது திருவிளையாடல் முதலியவைகளிலேயே பரோபகாரார்த்தம் அவர் மனம் தம்மையறியாமலே பாயும். ஆதலால் எவ்வளவு சிறந்த மஹான்களும் ஒவ்

வொரு காலங்களில் கடவுளது அனந்த கல்யாண குணங்களையும் அவரது திருவிளையாடல்களையும் ஒரு பற்றுமின்றி நிஷ்களங்கமான மனத்தோடு ஸங்கீர்த்தனம் செய்ய விரும்புவார்கள். கடவுளது கருணையும் சக்தியும் அளவிட முடியாதன. ஆதலால் சுகப்பிரம்மம், பற்றொழிந்து தெளிந்த மஹானாய் இருந்தபோதிலும் பாகவதத்தைப் பரீக்ஷித்தின் கேள்விக்குப்பதிலாக சொல்லாமலிருக்க முடியவில்லை. பரீக்ஷித்து நல்ல பக்குவியான சிஷ்யன் என்று தெரிந்ததும் தாம் வியாஸரிடமிருந்து கற்ற பாகவதத்திற்குப் பிரயோசனம் வந்ததென்ற குதூஹலத்துடன் சுகப்பிரம்மம் பாகவதம் சொல்லத் தொடங்கினார்.

வினா 21.—இவ்வாறு சுகப்பிரம்மத்தால் சொல்லப்பட்ட பாகவதம் எத்தனை பிரிவுகளை உடையது? அவைகளின் பெயர் என்ன?

விடை.—இந்தப் பாகவதம் பன்னிரண்டு பிரிவுகளை உடையது. அவைகளுக்கு ஸ்கந்தங்கள் என்று பெயர். அவைகளுக்கு முறையே பிரதம, த்விதிய, திருதிய, சதுர்த்த, பஞ்சம, ஷஷ்ட, ஸப்தம, அஷ்டம, நவம, தசம, ஏகாதச, த்வாதச ஸ்கந்தங்கள் என்று பெயர்.

வினா 22.—பிரதம ஸ்கந்தத்தின் கதைச்சுருக்கம் என்ன?

விடை.—வியாஸர் பாகவதம் எழுதிய விவரம், நாரதர் பூர்வ ஜன்ம கதை, சுகப்பிரம்மத்தின் சிறப்பு, அவர் பாகவதத்தை அப்பியஸித்தது, பரீக்ஷித்துப் பகவான் அனுக்கிரஹத்தால் பிழைத்து இராஜ்யமாண்டு கலி புருஷனை வென்றது, பின்பு அவன் ஒரு ரிஷி கழுத்தில் ஸர்ப்ப மாலையிட்ட குற்றத்திற்காக ஏழுநாளுள்

பாம்பு கடித்திறக்கும்படியான சாபமேற்றுக் கங்கைக் கரை வந்து சுகப்பிரம்மத்தை ஸந்தித்தது, ஆகிய இவைகளே பிரதம ஸ்கந்தத்தின் கதை. இவைகளை இங்கு 20 வினாக்களில் நாம் விஸ்தாரமாகச் சொல்லியாய் விட்டது.

வினா **23**.—துவிதீய ஸ்கந்தத்தில் அடங்கிய விஷயம் என்ன?

விடை.—பகவானது குண ஸங்கீர்த்தனத்தால் மனதை நிலை நிறுத்தும்வழி, தியானவகை, அவைகளை செய்யும் விதம், சாதாரண தேவதைகளை ஆராதித்தல், பரம் பொருளை ஆராதிப்பதால் வரும் மேன்மை, பிரபஞ்ச உற்பத்தி, பகவத் குணங்கள், அவதாரமாலை, பகவானது அனந்தகல்யாணகுண ஸங்கீர்த்தனை ஆகிய இவைகளே இரண்டாம் ஸ்கந்தத்தில் அடங்கிய விஷயங்கள்.

வினா **24**.—திரிதீய ஸ்கந்தத்தில் அடங்கிய கதை என்ன?

விடை.—பிரம்மா பரம்பொருளிடமிருந்து புறப்பட்டு நாபீ கமலத்தில் தோன்றல், ஸ்ருஷ்டியான விவரங்கள், அநேகவித பிரம்மஸ்ருஷ்டிகள், வராஹாவதார கதை, ஹிரண்யாக்ஷன் கதை, கபிலவாஸுதேவர் அவதரித்து வைகுண்ட துவாரபாலர்கள் அடைந்த சாபத்தின் விவரம், தமது தாயாருக்கு ஞானோபதேசம் செய்த கதை, ஆகிய இவைகள் மூன்றாம் ஸ்கந்தத்தில் அடங்கிய கதை.

வினா **25**.—சதுர்த்த ஸ்கந்தத்தின் கதை என்ன?

விடை.—தக்ஷயாகம் அழிந்து ஒழுங்குபடுத்தப்பட்ட கதை, துருவர் தவம் செய்த அற்புத சரித்திரம், வேனன்



க்ஷீராப்திநாதர்.

என்ற கொடுங்கோன் மன்னன்கதை, பிருதுசக்ரவர்த்தியின் கதை, பிராசீனபர் ஹிஸுக்கு நாரதர் புரஞ்ஜன் உபாக்கியான மூலமாக ஞானோபதேசம் செய்தகதை பிரசேதஸ்ஸுக்கள் கதை ஆகிய இவைகளே நான்காம் ஸ்கந்தத்தில் அடங்கிய கதை.

வினு **26**.—பஞ்சம ஸ்கந்தத்தின் கதை என்ன ?

விடை.—துருவாது பெரியதகப்பனார் பிரியவ்ரதராஜனது சரித்திரம், அவன் வம்சத்தில் பிறந்த அக்னீதரன், நாபி இவர்களது கதை, பகவான் ரிஷபயோகி அவதாரம் செய்து கிருஹஸ்த ஸந்நியாஸ ஆசிரமங்களை அனுஷ்டித்துக் காட்டிய திவ்யகதை, ஜடபாதர் முதல் ஜன்மத்தில் மான்பேரில் இருந்த அன்பால் முத்தி பெறாது தடுக்கப்பட மூன்றாம் ஜன்மத்தில் ஞானியாகி முத்தியடைந்த கதை, லோகாதிகள் முதலியவற்றை வர்ணித்தல், மனுஷ்யரது கர்மபலன்கள், நரகவர்ணனை ஆகிய இவைகளே ஐந்தாம் ஸ்கந்தத்தில் அடங்கிய விஷயங்கள்.

வினு **27**.—ஷஷ்ட ஸ்கந்தத்தின் கதை என்ன?

விடை.—அஜாமிளன் பகவத்நாமத்தை ஒருதரம் உச்சரித்த மஹிமையால் மனமாறி நிஷ்டைசெய்து முத்திபெற்ற கதை, விருத்திராஸுரன் கதை, மருத்துக்கள் உண்டான கதை, ஆகிய இவைகள் ஆறும் ஸகந்தத்தில் அடங்கி இருக்கின்றன.

வினு **28**.—ஸப்தம ஸ்கந்தத்தின் கதை என்ன?

விடை.—'எங்கும் நிறைந்த பகவானே எனக்கு முக்கிய ஆதாரம்' என்றுரைத்த பக்தரத்னமாகிய பிரஹ்லாதனைக் கோபாவேசத்தால் கொல்லவந்த ஹிரண்யகசிபு

வை, அவன் கத்தியாலடித்தத் தூணிலிருந்து தோன்றி நரசிங்கமூர்த்தி கொன்றதையும் வர்ணாசிரம தர்மங்களுமே ஏழாம் ஸ்கந்தத்தின் கதை.

வின 29.—அஷ்டம ஸ்கந்தத்தின் கதை என்ன?

விடை.—முதலைவாயில் அகப்பட்டு 'ஆதிமூலமே!' என்று கதறிய கஜேந்திரனைப் பகவான் காப்பாற்றியதும், கூர்மம் முதலிய அவதாரங்கள் செய்து தேவதைகளுக்கு அமிர்தபானம் கிடைக்கும்படி பகவான் செய்ததும், மஹாபலியை வாமனராகி மூன்றடி மண் யாசித்துத் திருவிக்கிரமராகி உலகை இரண்டடியால் அளந்து அவனைப் பாதாள லோகம் போகும்படி செய்து தேவர்களுக்குப் பகவான் ஸஹாயம் செய்ததும், மத்ஸ்யாவதாரம் செய்து பகவான் ஹயக்ரீவாஸுரனைக் கொன்று அவன் திருடிச்சென்ற வேதங்களைப் பிரமாவிடம் ஒப்புவிக்குமுன் பிரளயோதகத்தில் வைவஸ்வதமனுவிற்கு ஞானோபதேசம் செய்ததுமே எட்டாம் ஸ்கந்தத்தில் அடங்கிய கதை.

வின 30.—நவமஸ்கந்தத்தில் அடங்கிய கதை என்ன?

விடை.—இக்ஷ்வாகு முதல் ஸூரிய வம்சத்தரசர்கள் சரித்திரமும், இராமாயணக் கதையும், சந்திரவம்சத்தரசரது சரித்திரமும், பரசுராமவதாரக் கதையும், பாரதக் கதையும் அடங்கியுள்ளது இந்த ஒன்பதாவது ஸ்கந்தத்தில்.

வின 31.—தசமஸ்கந்தத்தின் கதைச்சுருக்கம் என்ன?

விடை.—கிருஷ்ண பரமாத்மா பிறந்த வைபவமும், அவர் தமையன் பலராமரோடு கோகுலத்தில் செய்த திருவிளையாடல்களும் பின்பு கம்ஸவதம்செய்து குருகுல

வாசம் முதலியன முடிந்தபின்னர், கோகுலத்தை முற்றும் மறந்த ராஜ்யாதிபத்யம்செய்த விதங்களும், அப்பொழுது நேர்ந்த விபத்துக்களும், அவைகளிலிருந்து பரமாத்மா யாதவர்களைத் தப்புவித்த அழகும், பரமாத்மாவுக்கு ருக்மணி முதலிய அநேக ஸ்திரீகள் வாய்க்க அவர்களிடம் அவர் நடந்துகொண்ட விதமும் பாண்டவர்களுக்கும் பரமாத்மாவுக்கும் உண்டான ஸம்பந்தங்களும், இவைபோன்ற கிருஷ்ணபரமாத்மாவின் சிறந்த லீலைகளும் அடங்கியுள்ளது இந்தப் பத்தாவது ஸ்கந்தம்.

வினு **32**.—ஏகாதச ஸ்கந்தத்தின் சுருக்கம் என்ன ?

விடை.—யாதவ குலத்திற்கு ரிஷி சாபம் வந்த காரணத்தையும், பகவான் தாம தமது ரூபத்தை மறைக்கும் முன்னர் உத்தவருக்குச்செய்த அரிய உபதேசங்களையும், யாதவகுலம் நாசமான விதத்தையும், பகவான் தமது அவதார ரூபத்தை மறைத்துக் கொண்டதையும், அடங்கியுள்ளது இந்தப்பதினொன்றாவது ஸ்கந்தம்

வினு **33**.—துவாதச ஸ்கந்தத்தின் கதை என்ன ?

விடை.—யுகங்களின் ஸ்வரூபங்களையும், கலிகாலக் கொடுமையையும், பகவத் ஸ்வரூப நிரூபணத்தையும், பரீக்ஷித்து மஹாராஜன் பரமபதம் அடைய பின்னர் ஏற்பட்ட விபரீதங்கள் தடுக்கப்பட்ட விதத்தையும், புராணங்களின் ஸ்வரூபத்தையும், மார்க்கண்டேயர் பகவத் மாயைக்கு உள்ளாகிப் பின்னர் வெளியாகிப் பகவானைத் துதித்ததையும், பின்பு அவர் மோக்ஷத்தைக்கூட விரும்பாது விடுபட்டதையும் பாகவத ஸாரத்தையும் அடக்கியுள்ளது இப்பன்னிரண்டாவது ஸ்கந்தம்.

---

# 2-வது ஸ்கந்தம்

தியானவகை-அவதாரமாலை

சுகபரீக்ஷித் ஸம்வாதம்

*வேதமும் வேதம் விளம்புமெய்ப்பொருளுமப்பொருள்விதங்களும்பஞ்ச பூதமும் புலனும் புலன்களின் பயனுமப் பயன்பொலிவுறநுகரு ஞூதமு முலகம்படைத் தளித்தழித்து ஞானமாயகி லமுநிறைவுற் ருதியுநடுவு முடிவுமாநின்ற வாதியா னடியிணை பணிவாம்.*

**வினு 1.**—சுகப்பிரம்மம் பரீக்ஷித்தினது கேள்விக்கு எவ்வாறு பதில் சொல்லத் தொடங்கினூர் ?

**விடை.**—முதலில் சுகப்பிரம்மம் பிறப்பு இறப்பில் அகப்பட்டுக்கொண்டு அவைகளின் கஷ்டங்களை தமது அஞ்ஞானத்தால் அறியாது, எப்பொழுதும் சிற்றின்பத்தையே கருதிக்கொண்டு வீணே வாழ்நாளைக் கழிக்கும் ஜனங்களுக்கு நன்மையை விளைவித்துப் பந்த நிவர்த்தி செய்யத்தக்கது ஹரிபக்தியும், ஹரிதாரணையுமே என்பதாகவும், இந்த விஷயத்தை விஸ்தரிக்கும் பாகவதத்தைத் தாம் தமது தகப்பனூராகிய வியாஸரிடமிருந்து கேட்டிருப்பதாகவும், அதை எல்லோரும் கேட்டுப் பிழைக்கும் பொருட்டு அப்பொழுது பரீக்ஷித்திற்கு வெளியிடுவதாகவும் சொன்னூர். பின்பு பரீக்ஷித்தினது மனதில் 'இன்னும் நாம் ஏழுநாள் தானே இருக்கப்போகிறோம், இனிமேல் நம்மால் என்னமுடியும்' என்று இருந்த ஏக்கத்தை சட்வாங்க ராஜன் கதையால் தீர்த்துவைத்தார்.

வினு 2.—கட்வாங்க மஹாராஜன் கதை என்ன? அதைச் சொல்லி எவ்வாறு சுகர் பரீக்ஷித்தைத் தேற்றினார்?

விடை.—முன்னொருகாலத்தில் ராஜரிஷியாகிய கட்வாங்கன் என்ற ஓர் அரசன் தேவாஸுர யுத்தத்தில் தேவர்களுக்கு மிகுந்த ஸஹாயம் செய்து அவர்களை வெற்றி பெறும்படி செய்தான். அப்பொழுது தேவதைகள் மிகவும் மகிழ்ந்து அவனுக்குத் தேவையாகிய வரத்தைக் கேட்கும்படி அனுமதி கொடுத்தனர். அப்பொழுது கட்வாங்கன் 'எனக்கு இன்னும் இருக்கிற ஆயுள் உள்ளபடி தெரியவேண்டும்' என்று கேட்க 'மேல் ஒரு முகூர்த்தம்தான் இருக்கின்றது' என்று அறிந்து வெகு வேகமாகத் தனது ராஜ்யம் வந்தான். கூடிய சீக்கிரத்தில் தனது இராஜ்யம் ,எல்லாவற்றையும் துறந்து, ஹரியினிடம் தன் முழு மனதையும் செலுத்தித் தாரணை செய்து தான் இறக்கும்வரை உலகஞாபகம் அற்று அவ்வாறே இருந்து இறந்ததும் முக்தி பதவியை எளிதில் அடைந்தான். இந்தக்கதையைச் சொல்லி 'ஒரு முகூர்த்தத்தில் அவன் இவ்வாறு செய்திருக்க உனக்கோ ஏழு நாள் இன்னும் இருக்கிறது. இதற்குள் நீ மனது வைத்தால எவ்வளவோ சிறந்த நிலையை அடையலாம். ஆகையால பயப்படாதே கவலையை விடு' என்று சுகப்பிரம்மம் பரீக்ஷித்தைத் தேற்றினார்.

வினு 3.—இவ்வாறு சுகப்பிரம்மம் தேற்றியபின்பு சாகுங்கால் ஒருவன் செய்யவேண்டுவது என்ன என்ற கேள்விக்கு என்னபதில் கூறினார்?

விடை.—சாகுந்தருணம் அணுகுங்கால் மரணத்திற்குப் பயப்பட்டு அழுந்திப்போகாது தைரியமாய் இருந்து

கொண்டு வைராக்கியம் என்னும் கத்தியால் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை, ஆகிய ஈஷணாத்ரயங்களை அறுத்துவிடவேண்டும். சுத்தஜலத்தில் ஸ்நாநஞ்செய்து பரிசுத்தனாகி நல்ல ஆஸனத்தில் வீற்றிருந்து சுவாஸ நிரோதம் செய்து மனதைப் புத்தியால் அடக்கவேண்டும். ஒருவனுக்கு ஆஸன ஜயமும், சுவாஸ நிரோதமும் மனோநிரோதமும் வந்துவிட்டால் அதுவே அனந்த கல்யாணகுணத்தை உடைய பகவானிடம் மனதைச் செலுத்தலாகிய தாரணை செய்வதற்குத் தகுந்த காலம். ஹரியே எல்லா நிரோத தாரணைகளுக்கும் முடிவு. சிலர் பிரணவத்தையே த்யானஞ் செய்வார்கள். வேறு சிலர் வெவ்வேறான தெய்வங்களைத் தியானம் செய்வார்கள். இம்மாதிரியான ஆராதனைகள் எந்த மேலான பொருளை நோக்கிப் போன போதிலும் பரம்பொருளாகிய ஹரியையே சென்றடைகின்றன. ஆகையால் சாங்காலத்து ஹரி விஷயமாகவே தாரணை செய்யவேண்டும். அப்படி ஒருவன் செய்தால் அவன் மோக்ஷம் அடைவான் என்பதற்கு ஐயமில்லை.

வின 4.—தாரணை செய்யும் க்ரமத்தால் எத்தனைவிதமாகக் காணப்படும்? அவைகளின் ஸ்வரூபம் என்ன?

விடை.—தாரணை செய்யும் விதம் இரண்டு உண்டு. அவையாவன: பகவானது திவ்யமங்கள விக்ரஹத்தில் ஈடுபட்டு தியானம் செய்வதும், ஒருவன் தானே சுவாஸ நிரோத மனோநிரோத மூலமாக எங்கும் நிறைந்த பரமாத்மாவை அனுபவித்தறிய முயலுதலும் ஆகிய இவைகளே. கடவுளைச் சிலர் விஸ்வரூபி (பிரபஞ்சரூபி) ஆகவும், சிலர் அவரை ஹிருதயாகாசத்தில் திவ்ய

மங்கள ரூபத்தோடு கூடியிருப்பவராகவும் பாவிக்கிறார்கள். ஆகவே முதல்வித தாரணை இரண்டு விதப்படும். ஆனால் இரண்டாம்வித தாரணையில் உட்பிரிவுகள் இல்லை. ஆகையால் தாரணை, (1) விசுவரூப தாரணை (2) ஹிருதய குகையிலுள்ள திவ்வியமங்கள விக்கிரஹ தாரணை (3) சுவாஸநிரோதாதி பூர்வமான தாரணை, என மூன்று வகைப்படும்.

வின 5.—கடவுளை விசுவரூபியாக எவ்வாறு தாரணை செய்வது?

விடை.—கடவுளை விசுவரூபியாகத் தாரணை செய்யுங்கால் ஒருவன் ஸகல அண்டபிண்ட சராசரத்தையும் மொத்தமாகத் தனது மனதில் கொண்டுவந்து அவைகளைக் கடவுளின் ஸ்தூலதேகமாகப் பாவித்தல் வேண்டும். பாதாள லோகமுதல் ஸத்தியலோகம் வரையில் உள்ள உலகங்கள் கடவுளது பாதாதி கேசபரியந்தமுள்ள அங்கங்களாகும். இந்திரன் முதலிய தேவதைகள் கடவுளது கைகள், திக்குகளே கடவுளது காதுகள், சப்தமே அவரது கேட்கும் இந்திரியம், இராப்பகலே அவரது இமைகள், தண்ணீரே அவரது மேல்வாய், உலகத்தில் காணப்படும் ரஸங்களே அவரது நாக்கு, வேதங்களே அவரது கிரீடம், யமதர்மராஜனே அவரது பற்கள், மாயையே அவரது புன்னகை, புண்ணியமே அவரது மார்பு, பாபமே அவரது முதுகு, ஸமுத்திரங்களே அவரது வயிறு, மலைகளே அவரது எலும்புகள், மேகங்களே அவரது ரோமங்கள், காற்றே அவரது அசைவு, ஜந்துக்களது தொழில்களே அவரது விளையாட்டு, ஸாயங்காலமே அவரது வஸ்திரம், பிரபஞ்சமே அவரது ஹிருதயம், சந்திரனே அவரது மனஸ்,

பிராமணர்களே அவரது வாய், க்ஷத்திரியர்களே அவரது புஜங்கள், வைசியர்களே அவரது தொடைகள், சூத்திரர்களே அவரது பாதங்கள், என இவ்வாறு பிரபஞ்சத்தின் ஒவ்வொரு பாகத்தையும் பரம்பொருளின் ஒவ்வொரு அங்கமாகப் பாவிக்கவேண்டும். மனிதன் எவ்வாறு தனது புத்தி மூலமாக சிலவற்றைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளுகிருனே, அவ்வாறே கடவுளும் ஸமஷ்டி (எல்லாவற்றின்) புத்தியையும் கொண்டு ஸகலத்தையும் அறிந்துகொள்ளுகிருர். இவ்விதமாகத்தான் விச்வரூபதாரணை செய்து பழக வேண்டும்.

விஞ 6.—ஹிருதய குஹையிலுள்ள பகவானது திவ்ய மங்கள விக்ரஹதாரணை எவ்வாறு செய்வது?

விடை.—இந்த தாரணையில் ஒருவன் தனது ஹிருதயாகாசத்தில் (மனவெளியில்) கட்டை விரலுக்கும் ஆட்காட்டி விரலுக்கும் மத்தியிலிருக்கும் இடை வெளி போன்ற சிறிய இடத்தில் சிறிய உருவத்தோடு கடவுள் இருக்கிருர் என்று பாவிக்க வேண்டும். அந்தக்கடவுள் பிரகாச ரூபியாகவும், நான்கு கைகளையும், அவைகளில் சங்கு சக்கரம் முதலிய ஆயுதங்களையும், தாமரையிதழ்போன்ற கண்களையும் உடையவராகவும், திவ்ய ஆபரணங்களை அணிந்து கொண்டிருப்பவராகவும், எண்ணித் தாரணைசெய்ய வேண்டியது. அங்குக் காணப்படும் கடவுளது அங்கங்களை எல்லாம் தியானஞ் செய்து மனதை கடவுள் விஷயத்தில் திடப்படுத்திக் கொள்ளவேண்டியது.

விஞ 7.—எதுவரையில் இந்தத் தாரணைகளை ஒருவன் செய்ய வேண்டும்? இவ்விருவித தாரணையும் ஒரே விதமான பலத்தைதான் கொடுக்குமோ? ஏன்?

விடை.—ஒருவனுக்கு மேலான சிறந்த தாரணையைப் பழகும் சக்தி வரும்வரையில் முன் குறித்த தாரணைகளுள் ஏதாவது ஒன்றின் மூலமாகக் கடவுளது திவ்ய மங்கள விக்கிரஹத்தைத் தாரணை செய்து பழகிக் கொண்டிருக்கவேண்டும். இவ்விருவித தாரணைகளும் சிறந்த நன்மையை உண்டாக்கும் சக்தி உடையனவே. ஏனெனில் பிரபஞ்சத்துள் கடவுள் எவ்வாறு அந்தர் யாமியாக இருக்கிறாரோ, அவ்வாறே ஜீவராசிகள் எல்லாவற்றிலும் பரவி யிருக்கிறார். ஆகையால் ஒருவன் இப்பரம்பொருளை வெளிப் பிரபஞ்சத் துள்ளிருக்கும் அந்தர்யாமியாகவாவது அல்லது உயிர்க்கு உயிரா யாடும் பரஞ்ஜோதியாவாவது பாவனை செய்தால் அவன் மேலான நிலையை எளிதில் அடைவான்.

வின 8.—சுவாஸ நிரோதாதி மூலமாகச் செய்யும் தாரணை யின் விவரம் என்ன ?

விடை.—இந்தத்தாரணை சுவாஸ நிரோதம் செய்து நமது சக்தியைப் படிபடியாக ஆறு ஆதாரங்கள் வழியாக நாபிமுதல் புருவமத்தியம்வரை ஏற்றும் ரூபமாகவே இருக்கும். இதில் பழக சிறந்தயோகிகளுக்குத் தான் முடியும். யோகசாஸ்திரம் பிராணவாயு ஸஞ்சரிக்கக் கூடிய நாடிகள், இடை, பிங்கலை, ஸுஷும்னை ஆகிய மூன்று என்றும், அவை நாபிஸ்தானத்தில் சேர் கின்றன என்றும், இவைகளுள் முன்னிரண்டும் ஸுஷும்னையின் இருபக்கங்களிலும் இருக்கின்றன என்றும், ஸுஷும்ன நாடி நாபி ஸ்தானத்திலிருந்து புறப்பட்டு ஆறு ஆதாரங்கள் வழியாகப் போகின்ற தென்றும் இவைகளுள் நாபி ஹிருதயம் மூளை (புருவ மத்தியம்) ஆகிய இவைகளே முக்கியமானவை யென்

றும், சொல்லுகின்றன. பழக்க விசேஷத்தால் யோகியானவன் தனது சக்திகள் எல்லாவற்றையும் நாபிஸ்தானத்தில் முதலில் சேர்த்துவைத்துப் பின்பு ஆறு ஆதாரங்கள் வழியாக ஏற்றுகிறான். இந்த யோகம் செய்யும்பொழுது கை கால்களின்மேல் தாங்கியிருக்க வேண்டும். அப்பொழுது யோகியானவன் அசைவற்று நிமிர்ந்திருந்து தன் மனத்தை அடக்கி அசையாது நிறுத்திச் சாஸ்திர ஞானத்தின் உதவியால், உலகப் பற்றை ஒழித்துப் பிராணவாயுவைப் படிப்படியாக ஹிருதயஸ்தானத்திலும் கண்ட ஸ்தானத்திலும் ஏற்றவேண்டும். இவ்வாறு பிராணவாயு கண்ட ஸ்தானத்திற்கு வந்ததும், யோகி காது, கண், மூக்கு, வாய் என்னப்படும் ஏழு துவாரங்களையும் மூடிக் கொள்ளவேண்டும். அங்கு பிராணவாயு நிலைத்ததும் அதைத் தலையின் மேற்பக்கத்திலிருக்கும் பிரம்மாந்திரத்திற்குப் போகும்படி செய்யவேண்டும். இங்குதான் மனிதனது பூர்ண சக்தி இருக்கிறது. இந்தத் தாரணையையே மனம் மேல் நோக்குவது என்று சிலர் சொல்வது உண்டு.

வின 9.—இவ்வாறு தாரணையில் ஏன் பக்தன் தனது சக்தியை மேல் நோக்கித் திருப்பவேண்டும்?

விடை.—மனிதனது சக்திகள் கீழ்நோக்கி இறங்கிவரும் பொழுது அவன் மனம் சிற்றின்பங்களில் கிடந்து உழலும். அப்பொழுது அவன் கண்ணுக்குத் தனது நிஜரூபமாகிய ஆத்மதேஜஸ் கொஞ்சங்கூடப் புலப்படாது. அவன் தனது சக்தியை மேல்முகமாகத் திருப்பும்பொழுது தான், உலக இன்பங்களின் சிறுமையை நன்றாக அறிவான். பக்தன் மிகுந்த கஷ்டத்

தின்பேரில் தனது தேகேந்திரியாதிகளை ஜயித்துத் தனது சக்திகள் எல்லாவற்றையும் பிரம்மரந்திரத்தை அடையும்படி செய்யும்பொழுதுதான், அவனுக்கு பிரம்ம ஸாக்ஷாத்காரம் வந்து நிரதிசய ஆநந்தம் உண்டாகி, அவனது மனம் முதலியவைகள் இருந்தவிடம் தெரியாமல் அடங்கிப்போம்.

வின 10.—இம்மாதிரி தாரணைசெய்து தேரும் பக்தனுக்கு வேறு என்ன பிரயோசனங்கள் உண்டு?

விடை.—இவனது இந்திரிய ஜயத்தால் இவனுக்குச் சிறந்த தைரியமுண்டாக இவன் சிறந்த வீரனுவான்; மற்றைய யுத்தவீரர்கள் எல்லோரும் வீரர்கள் அல்லர். அஷ்ட ஐசுவரியங்களுந் தாமே அவனிடம் வந்து குடிகொள்ளும்: பிரபஞ்சங்கள் முழுவதும் அவன் கைக்கீழ் அடங்கிவிடும். இவ்வளவும் இவன் தாரணை செய்துவந்த பகவானது அருளால் அவாந்திரமாக இடையே வந்துசேரும்.

வின 11.—இவ்வாறு தாரணைசெய்யும் பக்தன் உலகில் எவ்வாறு உலாவி வருவான்?

விடை.—இவன் மனதில் ஹரித்யானம் தவிர வேறு ஒரு வித ஆசையும் இல்லாதவனுய், பரம பக்திக் கடலில் மூழ்கி, உலகத்தையே லக்ஷ்யம் செய்யாது இவன் உலாவி வருவான். உலக விஷயாதிகள் அவன் கண்ணுக்கு ஒருபொருட்டாகத் தோன்றமாட்டா. 'கடவுள் ஸ்ருஷ்டித்த தரையிருக்க எனக்கு மெதுவான படுக்கை எதற்கு? மற்றைய பிராணிகளை உயிர் தரிக்கச் செய்யும்படியான செடி கொடி மரங்கள் பகவத் பக்தனுக்குமாத்திரம் உணவளிக்காமற் போய்

விடுமோ? ஆறுகள் வறண்டுபோயினவா? குகைகள் அடைபட்டனவா? கடவுள் தமது பக்தர்களை நிர்கதியாய் விட்டுவிட்டாரா? இப்படி இருக்க, பணத்திற்கும் உலக இன்பங்களுக்கும், இவ்வளவு ஆவல் ஜனங்களிடம் இருப்பானேன்? ஐசுவரியத்தால் குருடராயிருக்கும் தனவான்களுக்கு ஞானியேன் கீழ்ப்படிய வேண்டும்?' என்று இதுபோன்ற எண்ணங்களோடு பக்தர்கள் உலகத்தால் கஷ்டத்தை அடையவே மாட்டார்கள். அவர்களுக்கு ஆராதன வஸ்துக்களைவிட பகவத் ஆராதனைக்கு யோக்கியமான வஸ்துக்களைத் தேடிச்சென்று வீண்காலங்கழியாது ஜீவாத்மாக்களுள்ளும் பரவி இருக்கும் பரம்பொருளை ஸகல பற்றுக்களையும் ஒழித்துச் சுத்த மனத்தோடு ஸதா பக்தி மூலமாக ஆராதித்துக்கொண்டே இருப்பார்கள்.

வின 12.—அவன் எவ்வாறு மரணமடைவான்? பின்பு அவன் எந்நிலையை அடைவான்?

விடை.—பிரம்மமந்திரத்தில் தனது சக்திகளைச்சேர்த்து வைத்திருக்கும் பக்தனுக்கு அடிக்கடி ஸமாதிகைகூடி நிரதிசய ஆனந்தம் கைகூடும். இவ்வாறு உலாவி வரும் அவனைக் கடவுள் தமது பாதாரவிந்தத்தில் சேர்க்க எண்ணுங்கால், அவனது தேகம் விழும் தருணம் வரும். அப்பொழுது அவனது பிரம்மரந்திரம் உடைபட, அவனது ஜீவன் மின்னலைப்போல மஹா தேஜஸ்ஸோடு கிளம்பி ஸகலலோகங்களையும் தாண்டிச்சென்று விஷ்ணுவின் வைகுண்டலோகம் போய் அங்கு ஒப்புயர்வில்லாத ஸுகக்கடலில் மூழ்கி விஷ்ணுவின் ஸந்நிதானத்தில் தடையற்ற ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும்.

வினு 13.—இவ்வாறு தாரணு விஷயத்தை விஸ்தாரமாகச் சொன்ன பின்பு சுகப்பிரம்மம் பரீக்ஷித்தின் கேள்விக்கு தான் முன்பு சொல்லிய பதிலை எவ்வாறு வற்புறுத்தினுர் ?

விடை.—சாகுந் தருணத்திலிருப்பவனுக்குப் பிராம்மண்யத்தில் ஆசை யிருந்தால் வேதத்தையும், இந்திரியபலத்தில் ஆசையிருந்தால் இந்திரனையும், புத்திரர் வேண்டும் என்ற ஆவலிருந்தால் பிராஜாபதிகளையும், நல்ல திசையில் ஆவலிருந்தால் துர்க்காதேவியையும், சக்தி வேண்டுமாகில் அக்னியையும், ஐசுவரியத்தில் மோஹமிருந்தால் வஸுக்களையும், ஸித்திகளில் மோஹமிருந்தால் ருத்திரர்களையும், ஆகாரத்தில் ஆசையிருந்தால் அதிதியையும், ஸ்வர்க்கத்தில் இச்சையிருந்தால் ஆதித்தியரையும், இராஜ்யம் வேண்டும் என்ற எண்ணம் இருந்தால் விச்வேதேவர்களையும், தேகம் விடுபட்டு ஸ்வராஜ்ய மடைய வேண்டுமென்ற ஆசையிருந்தால் ஸாத்தியாளையும், தீர்க்காயுஸ் வேண்டியிருந்தால் அச்வினீ தேவதைகளையும், தேகபுஷ்டிவேண்டுமாகில் பூமியையும், அழகில் ஆசையிருந்தால் கந்தர்வர்களையும், பெண்ணுசையிருந்தால் அப்ஸரஸ்களையும், விரோதிகளைக் கொல்ல ஆசையிருந்தால் ராக்ஷஸர்களையும் முறையே ஆராதித்தல் வேண்டும். எவனுக்கு நிராசை உண்டாகி, ஆசையின் முடிவைக்கண்டு மோக்ஷம் அடைய வேண்டுமென்று தோன்றுகிறதோ அவன் ஆதி புருஷனுகிய பகவானை ஆராதிக்கவேண்டும். முன்சொன்ன தேவதைகளை ஆராதிப்போர்க்குப் பகவத் ஆராதனம் செய்வோரது ஸத்ஸங்கம் இருக்குமாயின் அவர்களுக்கும் பகவத் பக்தி சீக்கிரத்தில் உண்டாய்

விடும். மேலும் மேற்சொன்ன உலக இன்பங்களில் ஆசை வைத்த ஒவ்வொருவனுக்கும் முடிவில் எப்பொழுதாவது பச்சாத்தாபம் வருமே ஒழிய வராமல் போகமாட்டாது. இந்தப் பச்சாத்தாபம் உண்டாகும் என்று அறியும்படியான பக்தியுள்ள எந்த மனிதன் உலகப் பற்றுகளில் யோசனை இன்றி உழன்று விஷ்ணு பக்தியைக் கைவிடுவான்? ஆகையால் மனிதன் மோக்ஷம் அடைய வேண்டுமானால் பரம்பொருளினிடம் முதலில் பக்திசெலுத்தி அதன்பின்பு தாரணை முதலிய த்யான விசேஷங்களால் அதை அவசியம் விருத்தி பண்ணிக்கொள்ள வேண்டியது.

**வின 14.**—இதனால் பரீக்ஷித்தின் நிலை எவ்வாறு மாறியது? அப்பொழுது அவன் என்ன கேள்விகள் கேட்டான்?

**விடை.**—சுகப்பிரம்மம் சொன்னவைகள்யாவும் பரீக்ஷித்தின் மனதில் பசுமரத்தாணிப்போலப் பதிந்தன. அரசன் தனக்குச் சீக்கிரத்தில் மரணம் வரும் என்பதை அறிந்திருந்தான். ஆதலால் அவனுக்கு ஒவ்வொரு நிமிஷமும் மிகச் சிறந்ததென்றும், போனால் வராதென்றும் தோன்ற, அவன் தாமதமின்றித் தனது மனத்தால் கிருஷ்ணபகவானைத் தியானம் செய்யத் தொடங்கினான். அப்பொழுதே தனக்கு தேகம், பெண்டு, பிள்ளைகள் இராஜ்யம் முதலியவைகளிலிருந்த அபிமானம் எல்லாவற்றையும் அரசன் முற்றும் துறந்து விட்டான். அவனுக்குத் தர்ம அர்த்த காமம் என்னும் புருஷார்த்தங்களில் இருந்த ஆசைகள் போய் மோக்ஷம் அடைய வேண்டும் என்ற ஆசையே அதிகரித்தது. இப்படி அவன் சுத்தசித்தனாகப் பகவானைத் தியானம் செய்து வருங்கால், ஒரு பக்கத்திலும் அகப்பட்டுக்கொள்ளாத

பரமாத்மா எவ்வாறு பிரகிருதியோடு ஸம்பந்தப்பட்டு பிரபஞ்சத்தை உண்டாக்கினார்? அவருக்கோ ஆக வேண்டிய காரியம் ஒன்றும் இல்லை. இப்படி இருக்க அவர் ஏன் அவதாரங்கள் செய்ய வேண்டும்? என்ற சங்கை உண்டாகப் பிரபஞ்ச ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார விஷயம் ஒருவாறு தெரிந்துகொள்ளாமற் போனால் தனக்கு மனஸ் ஸமாதானம் ஏற்படாது என்று தோன்றிற்று. உடனே இந்த சங்கைகளைச் சுகப்பிரம்மத்தினிடம் தெரிவித்தான்.

வினா 15 —இக்கேள்விகளைப் பரீக்ஷித்துக் கேட்டவுடன், சுகப்பிரம்மம் முதலில் என்ன செய்தார்?

விடை.—சுகப்பிரம்மம் பரீக்ஷித்தின் கேள்விகளைக் கேட்டதும் மிகுந்த ஸந்தோஷமடைந்து அவனுக்கு மரணம் கிட்டி இருப்பதாலும் பக்தி விசேஷமாக இருப்பதாலும் அவனை தாம் பாகவதம் சொல்லிக் கேட்கத்தக்க சிஷ்யன் என்று புகழ்ந்து பேசினார். இதன் பின்பு அவர் பரம்பொருளை, தாம் தொடங்கப்போகிற பாகவதம் சரிவர முடிவதற்காக மனதாரத் துதிசெய்தார்.

வினா 16.—ஸ்ருஷ்டியைப்பற்றிச் சொல்லத் தொடங்குகையில் சுகப்பிரம்மம் என்ன பீடிகை போட்டுக்கொண்டார்?

விடை.—ஸ்ருஷ்டி ரகஸியம் கேவலம் மனிதர்களால் அறியக்கூடியது அல்ல என்றும், அந்த ரகஸியம் ஹரியினிடமிருந்தே எவ்வாறு குரு சிஷ்ய பரம்பரையாக வந்தது என்றும் சொன்னார். அதன் பின்பு பிரம்மாவால் ஸ்ருஷ்டி உண்டாக அதில் நாரதர் வெளிவந்து பிரம்மாவை நோக்கி, 'நீரே ஸகலத்திற்கும் ஆதி

காரணம் போலத் தோற்றுகிறது. ஏனெனில், வேறு ஒரு காரணத்தையும் நான் காணவில்லை. அப்படியிருந்தும் நீர் அடிக்கடி தியானத்திலிருக்கிறீர். இதை நோக்கினால் உமக்கு மேலே இருக்கும் ஏதோ ஒரு பரம்பொருளை எண்ணி நீர் நிஷ்டையிலிருப்பது போலத் தோற்றுகிறதே. இந்த ரகஸியத்தை நீர் எனக்கு நன்றாக வெளியிடவேண்டும்' என்று மஹா வினயத்துடன் கேட்டார் என்று சொல்லி அதற்குப் பிரம்மா சொன்ன ஸ்ருஷ்டி ரகஸியத்தைப் பரீக்ஷித்துக்குச் சுகப்பிரம்மம் ஆதியோடந்தமாக வெளியிட்டார்.

வினு 17.—பிரம்மா, நாரதர் கேள்விக்கு என்ன பதில் சொன்னார்?

விடை.—என்னைப்போன்ற சக்திகள் வாய்ந்தவர் ஸ்ருஷ்டியுள் ஒருவரும் இல்லாவிடினும் எனக்கு மேல்பட்டதாக நாராயணன் என்ற பரம்பொருள் ஒன்றிருக்கிறது. அவரது அருளால்தான் எனக்கு இந்த ஸ்ருஷ்டி சக்தி கூட வந்தது. அவர் எல்லா ரூபங்களுக்கும், குணங்களுக்கும் அப்பாற்பட்டவர். தேவர்கள், தேவதைகள், யோகமார்க்கம், ஸங்கியாஸம் முதலியன யாவும் அவரிடம் அடங்கிக் கிடக்கின்றன. அவர் உலகங்களை சிருஷ்டிப்பதில், பிரகிருதிக்குக் கீழ்ப்படியாமல், அதனுள் அடங்கி இருக்கும் முக்குணங்களையும் தமது கைக்கீழ் அடக்கிக் கொள்ளுகிறார். முந்தின ஸ்ருஷ்டியின் முடிவில் அநேககாலம் யோகநித்திரையில் மிகுந்த சாந்தத்தோடு இருந்துவிட்டு பின்பு விழித்துப் பார்த்துச் சூனியமாயும், நிச்சப்தமாயும் இருக்கக்கண்டு, தாம் அடையவேண்டியது ஒன்றும் இல்லாவிடினும் தாம்

ஸ்ருஷ்டியை ஜீவராசிகளது நன்மைக்காகத் தொடங்க வேண்டும் என்று எண்ணிப் பகவான் காலம், விதி, குணங்கள், ஆகிய இவைகளை வெளியிட்டார். உடனே அவரது எண்ணமாத்திரத்தில் முக்குணங்களில் ஒரு ஏற்றத்தாழ்வும் சலனமும் ஏற்பட்டன. இதனால் முன் ஏற்பட்ட ஒழுங்குபடி ஸகல வஸ்துக்களும் உண்டாகத் தொடங்கின. சலனமடைந்த முக்குணங்களில் ஒன்றோடொன்று பகவானது இச்சையால் கலக்க ஸ்ருஷ்டி வைசித்திரியங்கள் ஏற்பட்டன. முதலில் கால தத்துவத்திலிருந்து மஹா தத்துவமும், பின்பு அஹங்காரமும் அதிலிருந்து தாமஸ குணத்தால் ஆகாசம், வாயு, அக்னி, அப்பு, பிரிதிவி முதலியவைகளுண்டாகிப் பஞ்சாதி விஷயங்களாயின. ராஜஸகுணத்தால் மெய் வாய் முதலிய இந்திரியங்களும், ஸாத்வீககுணத்தால் இந்திரிய அபிமானி தேவதைகளும் (இந்திரிய சக்தியும்) அஹங்காரத்திலிருந்து உண்டாயின. உலகசித்திரங்கள் யாவும் கடவுளது ஒவ்வொரு அங்கங்களிலிருந்து வெளி வந்தன. அவரிடத்திலிருந்து தான் நான் வெளி வந்து ஸூக்ஷ்மமாக அவரது அங்கங்களிலிருந்து படிப்படியாய் இறங்கி வெளிவந்தவைகளை நான் ஸ்தூலமாக வெளிப்படுத்தினேன். நான் அந்தப் பரம்பொருளை அறிய எவ்வளவுதான் முயன்றும் என்றால் அவரை முற்றிலும் அறிய முடியவில்லை. பிரபஞ்சங்கள் யாவும் அவரிடத்திலேதான் எப்பொழுதும் இருக்கின்றன. இதை ஞானிகளாகிய ரிஷிகள் தான் எளிதில் அறிவார்கள்' என்று ஸ்ருஷ்டி ரகஸ்யத்தை நாரதருக்குப் பிரம்மா வெளியிட்டார்.

வின **18**.—இதன் பின்பு 'பிரம்மா எந்த விஷயத்தை நாரதருக்கு எவ்வாறு எடுத்து உரைத்தார்?

விடை.—இவ்வாறு ஸ்ருஷ்டித்த உலகில் தர்மம் குறைந்து ஸாதுக்கள் துஷ்டர்களால் கஷ்டப்படுங்கால் இவைகளைச் சீர்திருத்த பகவான் அவதாரங்கள் செய்கிருர் என்றும், அவர் அவ்வாறு வந்து ஸாதுக்களைக் காக்குங்கால் அதே ஸமயத்திலேயே தமது கருணை மிகுதியால் தர்மத்தையும் நிலைநிறுத்தி அஸத்துக்களும் ஞானம் அடைந்து மேன்மை அடையும்படி செய்கிருர் என்றும் பகவானது கருணையைப்பற்றிப் பிரம்மா நன்ருக விவரித்தார். இதன் பின்பு பிரபஞ்சம் முழுவதும் பகவானது அவதாரமாயினும், அதில் சிற்சில சிறப்புடையன என்று சொல்லிப் பகவானது சிறப்பாகிய அவதார மாலையை எடுத்து உரைத்தார்.

வினு 19.—பிரம்மா உரைத்த அவதாரமாலையின் விபரம் என்ன?

விடை.—பிரளய ஸமுத்திரத்தில பூமியைக் கொண்டுபோய் ஒளித்துவைத்த ஹிரண்யாக்ஷனைக்கொன்று பூமியை உயர்த்த வராஹரூபியாகவும் உலகத்தை ஸுகப்படுத்த ஸயஞ்ஞராகவும், தாய்மூலமாக உலகத்தில் சிறந்த ஞானத்தை வெளியிடக் கபிலராகவும், ஸந்யாஸ தர்மத்தை விளங்கச்செய்யத் தத்தாத்திரேய ரிஷப ரூபிகளாகவும், தபஸுமூலமாக உலகை ரக்ஷிக்க நரநாராயணராகவும், வேனராஜவம்சத்தை ரக்ஷித்து உலகைக் காக்க பிருது சக்கிரவர்த்தியாகவும், பிரளயத்திலிருந்து வைவஸ்வதமனுவைக் காக்க மத்ஸய ரூபமாகவும், தேவர்கள் பாற்கடலைக் கடையுங்கால் மத்தாகவைத்த மந்தரகிரியைத்தாங்கக் கூர்ம ரூபியாகவும், சிறந்த பக்தனுகிய தனது பிள்ளையை வருத்திய லோககண்டகனை ஹிரண்யகசிபுவைக்

கொல்ல நரஸிம்ம ரூபியாகவும், முதலையால் பிடிபட்டு ஆதிமூலமே என்றழைத்த கஜேந்திரத்தைக் காக்க வந்த பகவத் ரூபியாகவும், மஹாபலியினது வலியை அடக்கித் தேவர்களுக்கு ஸஹாயம் செய்ய வாமன ரூபியாகவும், தேவர்கள் பாற்கடலைக் கடையுங்கால் உலகத்தை வியாதியினின்று பிழைப்பிக்க வெளிவந்த தந்வந்தரி ரூபியாகவும், உலகில் கெட்டுத் தமது தர்மங்களை விட்டு நடந்துவந்த க்ஷத்திரியரது குலத்தை 21 தரம் வேரறுக்கப் பரசுராம ரூபியாகவும், க்ஷத்ரிய தர்மங்களை உள்ளவாறு அனுஷ்டித்துக் காட்ட தசரத சக்ரவர்த்தியின் பிள்ளையாகிய ராம ரூபியாகவும், உலகத்தில் அனேக லீலைகள்மூலமாக சிறந்த ஞானத்தைப் புகட்டிப் பக்தர்களை மேலான நிலைக்குக்கொண்டு வருவதற்கும், பூபாரம் நீங்குவதற்கும், பரம்பொருளது உண்மை ஸ்வரூபத்தை யாவரும் அறியக்காட்டுவதற்கும் கிருஷ்ண பலராம ரூபிகளாகவும், நாளாக ஜனங்களது புத்தி குறைய அப்பொழுதும் அனுகூலமாக இருக்கும்படி பரந்துகிடந்த வேதங்களைச் சீர்திருத்திப் பிரிக்க வியாஸ ரூபியாகவும், அஸுரர்களை மயக்கிப் பின்பு தமது குற்றங்கள் நன்றாக வெளியானதும் நல்ல வழிக்குக் கொண்டுவருவதற்காகப் புத்த ரூபியாகவும், பகவான் அவதாரங்கள் செய்திருக்கிறார். இந்த அவதார மாலையைப் பிரம்மா சொல்லி இதைப் பலர் அறிய வெளியிடும்படி நாரதருக்கு அனுமதி கொடுத்தார்.

வி 20.—இம்மாதிரியாக சுகப்பிரம்ம ஸ்ருஷ்டி அவதாரங்கள் ஆகிய இவைகளின் ரகசியங்களைச் சொல்லியதும் பரீக்ஷித்து என்ன கேட்டான்?

**விடை.**—இவ்வாறு ஸ்ருஷ்டி அவதாரம் முதலியவைகளின் ரகஸ்யத்தைத் தெரிந்துகொண்டதும் பரீக்ஷித்து சுகப்பிரம்மத்தை நோக்கி, 'நாரதர் பிரம்மாவின் உத்தரவின் பேரில் உலகத்திற்கு எவ்வாறு ஹரியினது மஹிமையைத் தெரிவித்தார்? அதன் விவரம் என்ன? தேகத்திற்கும் ஆத்மாவிற்கும் என்ன ஸம்பந்தம்? அது எவ்வாறு உண்டாயிற்று? ஸ்ருஷ்டியின் ரகஸ்யம் நன்ருக விளங்கவில்லை. அதன் விபரம் என்ன? கல்பாதிகள் என்ருல் என்ன? திரிகாலங்களின் ஸ்வரூபமென்ன? மனிதர் முதலியவர்களது ஆயுளின் அளவு என்ன? பிரபஞ்சத்தின் ஸ்வரூபம் என்ன? பெரியோரது வர்ணுசிரமாதிகளை அறிவது எப்படி? யுகதர்மங்கள் எவ்வாறிருக்கும்? வர்ணுசிரம தர்மங்களின் விவரம் என்ன? ஆராதனைக் கிரமங்கள் என்ன? அஷ்டாங்கயோகத்தின் ஸ்வரூபம் யாது? வேதசாஸ்திர இதிஹாஸ புராணுதிகளின் ஸ்வரூபம் என்ன? பிரளயத்தின் ஸ்வரூபம் என்ன? யாகாதிகளின் விவரம் என்ன? மோக்ஷம் அடையும் வழியாது? பகவான் மாயையை எவ்வாறு அடக்கி யாளுகிருர்? எவ்வாறு பகவான் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாக ஏற்படுகிருர்?' என்ற இதுபோன்ற சிற்சில கேள்விகளைக் கேட்டான்.

**விஞ 21.**—இக்கேள்விகளுக்குச் சுகப்பிரம்மம் எவ்வாறு பதில் சொல்லத் தொடங்கிஞர்?

**விடை.**—பிரளய உலகத்தில் பிரம்மாவானவர் பகவானது நாபீகமலத்திலிருந்து ஸ்ருஷ்டி விஷயத்தை அறிய எவ்வளவோ முயன்றும் முடியாததுகண்டு முடிவில் தபஸுசெய்து பகவானது திவ்யரூபத்தை வைகுண்டத்தில் ஸகல வைபவங்கள் மத்தியில் கண்டு துதித்

தார். அப்பொழுது பகவான் பிரம்மாவை வாழ்த்தி 'என்னை அறிய பக்தியே நல்லவழி, என்னை இவ்வாறு காணும்வரையில்தான் ஒருவனுக்குக் கஷ்டம் முதலியவைகள் இருக்கும். நான் இந்தப் பிரபஞ்சத்தை எனது ஸங்கல்ப சக்தியாலேயே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் செய்கிறேன்' என்று கூறினார். அதற்குப் பிரம்மா, 'இந்தப் பிரபஞ்சம் யாவும் உமது திருவிளையாடலே! அதை நன்றாய் உணர எனக்குச் சக்திகொடும்! எனக்குக் கர்வம் முதலாயின இல்லாமலிருக்கட்டும். நான் ஸ்ருஷ்டித் தொழிலைத் தொடங்கி உமது திருவிளையாடலைத் ஸ்தூலமாக்குகிறேன்' என்றார். இதன் பின்பு பகவான், 'நான் ஸ்ருஷ்டிக்கு முன்னும் பின்னும், ஸ்திதி காலத்திலும் ஸதா மாறாதிருக்கிறேன். ஸ்ருஷ்டியாதிகள் எல்லாம் எனது மாயையால் நடக்கின்றன. எவ்வாறு ஒரு சந்திரன் பிரதிபிம்பத்தால் இரண்டாகத் தோன்றியும் உண்மையில் ஒன்றே, அது போல பிரபஞ்சம் விசித்திரமாகக் காணப்பட்டாலும், ஸதா நான் தனிமையாகத்தான் இருக்கிறேன். நான் ஒருநாளும் மாறுபடுவதில்லை. எல்லாக்கருமங்களிலும் புகுந்து அவைகளைவிட வேறாகி ஸாக்ஷியாக இருப்பது எதுவோ அதுவே ஆத்மா. இந்த விஷயங்களை மறவாது நீ ஸ்ருஷ்டி செய்தால் உனக்கு எக்காலத்தும் கர்வம் முதலிய கெட்ட குணங்கள் உண்டாக மாட்டா' என்றார். (இதன் விபரத்தை மூன்றாவது ஸ்கந்தத்தில் காண்க.) பிரம்மா ஸ்ருஷ்டியைத் தொடங்கி அது நல்ல நிலையை அடையும்பொருட்டு நிஷ்டையிலிருந்தார். அது விட்டு எழுந்ததும் அருகில் விஷ்ணுவின் மாயா வைபவங்களை அறிய வேண

டும் என்று தொண்டு செய்துகொண்டிருந்த நாரதருக்கு இந்தப் பாகவத புராணத்தின் ஸாரத்தைச் சொன்னார். அவர் என் தகப்பனாராகிய வியாஸர் மனோ வியாகூலத்தை நீக்க அவருக்கு உபதேசித்தார் என்றுசொன்னார். (முதல் ஸ்கந்தத்தில் காண்க.)

வினா 22.—பாகவத புராணத்தில் அடங்கியிருக்கும் விஷயங்கள் என்ன?

விடை.—இப்புராணத்தில் பின்வரும் 10-விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. பஞ்சபூத தன்மாத்திரைகள் முதலியவைகளின் ஸ்ருஷ்டியாகிய பொது ஸ்ருஷ்டி, ஸ்தூல ஸ்ருஷ்டியாகிய அவாந்திர ஸ்ருஷ்டி, ஒவ்வொரு ஸ்ருஷ்டிப் பொருளின் ஸ்வரூபம், நிலை, கடவுளது கருணையாகிய போஷணை, மன்வந்திரங்கள், கர்மங்கள் செய்து ஏற்படும் ஆசை, பகவானது அவதார சரிதங்கள்: பிரளயாதிகள், முக்தி நிலை, ஸகல வஸ்துக்களின் ஆசிரமமாகிய பிரம்மத்தின் நிஜஸ்வரூபம் ஆகிய இவைகளே.

வினா 23—பாகவதஸாரம் சொல்லிய பின்பு சுகப்பிரம்மம் பரீக்ஷித்துக்கு எந்த விஷயத்தைப் பற்றிச் சொன்னார்.

விடை.—ஸூக்ஷ்ம ஸ்ருஷ்டியை ஒருவாறு சுருக்கிச் சொன்னார். ஆதிபுருஷர் முதலில் பிரளயஜலத்தை உண்டாக்கி அதைத் தமக்கு இருப்பிடமாகக் கொண்டார். இதனால் அவருக்கு நாராயணர் என்ற பெயர் வந்தது. யோகநித்திரை விட்டெழுந்து அவர் தமது தேகத்தை அதிஷ்டான தேவதைகள், அந்தராத்மா, பஞ்சபூதங்கள் ஆகிய இவைகளை உண்டாக்குவதற்காக மூன்று பாகமாகப் பிரித்தார். இம்மூன்றிலிருந்து

பிராணன் என்ற தத்வம் உண்டானது. இதிலிருந்து ஒவ்வொரு ஆசையும் உண்டாக அதிலிருந்து அதை தீர்க்கத்தக்க இந்திரியங்கள் உண்டாயின. அதாவது பிராணனது வலியால் பார்க்கவேண்டும் என்ற ஆவலுண்டாகக் கண்ணுண்டாயிற்று; இதுபோல மற்றைய இந்திரியங்களும் உண்டாயின. இந்த ஸூக்ஷ்மமான தேகத்தைத்தவிர பகவானுக்கு அப்பிராகிருதமான நிலை ஒன்று உண்டு. இவ்விரண்டாகக் காணப்படுவதையும் அறிவுடையோர் மாயை என்றே உணர்வார்கள். அவர் எதை ஸ்ருஷ்டிப்பதாகக் காணப்பட்ட போதிலும், அவர் ஒன்றோடும் ஒட்டினவர் அல்லர். அதன் பின்பு கர்மங்களைப்பற்றி அவைகள் ஸாத்விக ராஜஸ, தாமஸங்கள் என, மூன்று விதம் என்றும், அவைகளால் முறையே தேவர்கள், மனிதர்கள், அஸுரர்கள் உண்டாகிறார்கள்; இம்மூன்றும் ஒன்றோடொன்று ஸம்பந்தப்படுவதால் 9 விதமாக மாறுபடுகின்றன என்றும், இவைகளால் ஸ்ருஷ்டி விசித்திரம் பகவானது ஸந்நிதான மாத்திரத்தில் ஏற்படுகின்றது என்றும் பகவான் உண்மையில் இதனோடு ஒட்டாதிருப்பதால் ஸ்ருஷ்டி வெறும் தோற்றமே ஒழிய வேறில்லை என்றும் சுகப்பிரம்மம் எடுத்துரைத்தார்.



# 3-வது ஸ்கந்தம்

ஸ்ருஷ்டி விஷயம், வராஹ, கபில அவதாரங்கள்
மைத்திரேய விதுரஸம்வாதம்

ஞானமாகிய பரம்பரவமிழ்தமாய் நவிரறுமயக்காகி
வானமாயுடன் வாயுவாய்த்தேயு வாய்வனமுமாய்மண்ணாகித்
தானமாமறை முறைமையிற் பற்பலசராசரங்களுமாகி
யேனமாயிவையனைத்தையுமருப்பினலேந்தினனையாண்டோன்.

வி. 1.—ஸ்ருஷ்டி அவதாராதிகளைப் பற்றிச் சுகப்பிரம்மம் சொன்ன பின்பு வேறு என்ன சொன்னார்?

விடை.—'குருக்ஷேத்திர யுத்தத்தில் இருவர் பக்கங்களிலும் சேராது தீர்த்தயாத்திரைசென்று திரும்பிவந்து திருதராஷ்டிரன் முதலியோர்க்கு வைராக்கியம் வந்து கங்கைக்கரையில் வாசம் செய்யும்படி செய்த விதுரர், மைத்திரேயர் என்ற மஹரிஷியை அடுத்து அவரை நோக்கி நீ கேட்ட கேள்விகள் எல்லாவற்றையும் கேட்டார். அவர் கேள்விக்கு மைத்திரேயர் தகுந்த விடை கொடுத்திருக்கிறார்; அவைகளைச் சொல்லுகிறேன்' என்று ஸ்ருஷ்டி மன்வந்திரம் முதலியவைகளை மைத்திரேயர் விதுரருக்குச் சொன்னபடி சுகப்பிரம்மம் சொல்லத் தொடங்கினார்.

வி. 2.—விதுரருக்கு மைத்திரேயர் இருக்கும் இடம், அவரது சிறப்பு முதலியன எவ்வாறு தெரியவந்தது?

விடை.—விதுரர் தீர்த்தயாத்திரைசெய்து கொண்டு வருகையில் யமுனாதிக்கரையில் பதரிகாசிரமம் நோக்கிப்

போய்க்கொண்டிருந்த பகவத் பக்தரான உத்தவ ஸ்வாமியைக் கண்டு இருவரும் ஒருவரை ஒருவர் ஆலிங்கனஞ் செய்துகொண்டு க்ஷேமஸமாசாரங்களை விசாரிக்கத் தொடங்கினர். அப்போது உத்தவரிடமிருந்து யாதவர்கள் ரிஷி சாபத்தால் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டிறந்ததும், முன் ஜன்மத்தில் வாலியாக இருந்து அந்த ஜன்மத்தில் வேடனாக இருந்த ஒருவனது அம்பால் பகவான் பரமபதம் சென்றதையும் கேள்விப்பட்டு மிகுந்த துக்கமடைந்து பகவான் உலகம் விட்டுப் போகையில் சொல்லிப்போன ரகஸியாதிகளைத் தனக்குச் சொல்லும்படி உத்தவரை விதுரர் கேட்டார். அவர், தாம் ஒரு விரதத்தோடு பகவான் உத்திரவின்படி சீக்கிரம் பதரிகாசிரமம் போய்ச் சேரவேண்டும் என்றும், தனக்கு ரகஸியங்களைப் பகவான் பரமபதம் போகும் தருணத்தில் உபதேசிக்குங்கால் மைத்திரேயர் என்ற மஹாமுனியும் அங்கு வந்திருந்தார் என்றும், பகவான் அந்தக் காலத்தில் தன்னையும் விதுரரையுந்தான் ஞாபகத்தில் வைத்திருந்தார் என்றும், அப்பொழுது விதுரர் இல்லாமையால் அவருக்குத் தாம் எடுத்துச் சொல்லிய ரகஸியங்களை ஆதியோடந்தமாகச் சொல்ல வேண்டும் என்று மைத்திரேயருக்குப் பகவான் உத்தரவு கொடுத்திருக்கிறார் என்றும், மைத்திரேயர் அப்பொழுது ஹரித்வாரத்தில் இருக்கிறார் என்றும், முக்கிய விஷயங்களை உத்தவர் விதுரருக்கு எடுத்துரைத்துப் பதரிகாசிரமம் சென்றார். விதுரருக்குப் பகவான்மேல் பக்தி அதிகரிக்க மைத்திரேயரைச் சீக்கிரத்தில் சென்று அடைந்தார்.

வி **3.**—இரண்டாவது ஸ்கந்தத்தில் எடுத்துக்காட்டியபடி தத்வாதிகளின் ஸ்ருஷ்டி ஸங்கதியை மைத்திரேயர்

சொல்லிய பின்பு விதுரருக்கு என்ன ஸந்தேகம் உண்டாயிற்று. அதை மைத்திரேயர் எவ்வாறு நீக்கினார் ?

**விடை.**—'ஒன்றோடும் ஒட்டாத பகவான் ஸ்ருஷ்டியாதிகளை எவ்வாறு லீலையாகச் செய்யமுடியும் ? பகவான் எங்கும் பரவியிருக்க ஸ்ருஷ்டியில் ஸுகதுக்காதிகள் உண்டாவானேன்' என்ற இரண்டு சங்கைகள் விதுரருக்குண்டாயின. இதற்கு மைத்திரேயர், 'இவைகள் யாவும் பகவத்மாயையால் அவரை ஒருவிதமாகவும் அணுகாது வெளிவருகின்றன. ஸ்வப்னத்தில் நடப்பவை எவையாகிலும் சரி நம்மைப்பாதிப்பதில்லையோ அவ்வாறேஇந்த ஸ்ருஷ்டியாதிகள் பகவானை எவ்விதத்திலும் பாதிக்கமாட்டா. தண்ணீர் அசைவதினால் சந்திரனும் அசைகிறதாகக் காணப்படும் தோற்றத்தைப்போல தேகதர்மமாகியஎல்லாம் ஆத்மானது தர்மம் என்ற தோற்றத்தை உண்மை என்று நாம் எண்ணுவதால் நமக்கு ஸுகதுக்காதிகள் உண்டாகின்றன. ஹரிபக்தியால் நாம் இவைகளிலிருந்து விடுபட்டு எளிதில் பகவானது உண்மைநிலையை அறியலாம்' என்று மறுமொழி கூறினார்.

**வின 4.**—இதன் பின்பு விதுரர் என்ன செய்தார்?

**விடை.**—இவ்வாறு தனது சங்கை நிவர்த்தியானதும், முன்பு பரீக்ஷித்துச் சுகப்பிரம்மத்தைக் கேட்டதாகச் சொன்ன கேள்விகள் எல்லாவற்றையும் மைத்திரேயரை நோக்கிக்கேட்டார். அதற்கு அவர் விதுரரது புத்தி கூர்மைக்கு மெச்சிக்கொண்டு ஒழுங்காக அந்தக் கேள்விகளுக்குப் பதில் சொன்னார்.

**வின 5.**—பிரம்மா உண்டாவதற்கு முன் ஸ்ருஷ்டி எவ்வாறு தொடங்கியது?

விடை.—பிரளயகாலத்தில் இப்பிரபஞ்சங்கள் யாவும் பிரளய ஸமுத்திரத்தில் மூழ்கி இருக்கும்போது ஆதிதேவராகிய ஸ்ரீமந்நாராயணர் ஜீவாத்மா முதலிய ஸகலப் பிரபஞ்சங்களையும் தம்முள் அடக்கிக்கொண்டு காலதத்துவத்தை நோக்கி ஸ்ருஷ்டியாக வேண்டிய காலம் வரும்பொழுது தம்மை எழுப்பும்படி உத்திரவு செய்து விட்டு ஆதிசேஷனாகிய தமது சயனத்தில் தனிமையாகப் படுத்துக்கொண்டு, ஸ்ருஷ்டி முதலிய காரியம் ஒன்றும் இன்றி ஸமாதிஸுகத்தில் மூழ்கினவராய் யோகநித்திரையில் இருந்தார். இவ்வாறு ஆயிரம் சதுர்யுகங்கள் இருந்து விட்டு விழித்து நோக்கிய பொழுது, அவர் தம்முள் எல்லாம் அடங்கிக் கிடப்பதைக் கண்டார். அப்பொழுது அவைகளை வெளிக்கொண்டுவர வேண்டும் என்ற எண்ணம்வர தம்மனதில் ஸ்ருஷ்டிச்செயல் முதலியவைகளை ஞாபகப் படுத்திக் கொண்டார். இந்த ஸூக்ஷ்ம இச்சை ரஜோ குணத்தோடு ஸம்பந்தப்பட்டுத் தகுந்த காலத்தில் பிரபஞ்ச உற்பத்திக்குக் காரணமாகப் பகவான் நாபியின் வழியாக வெளிவந்தது. இது காலதத்துவத்தின் ஸம்பந்தத்தால் ஒரு கமலமாக மாறியது. இது ஸ்வயம் பிரகாசத்தோடு பிரகாசிக்கத்தொடங்க இதில் முக்குணங்கள் வெளியாயின. இதில் நான்கு வேதங்களையும் வெளிப்படுத்திய பிரம்மா தாமாகவே உண்டானார்.

வினா 6.—இவ்வாறு பிரம்மா உண்டானதும் அவர் முதலில் என்னென்ன செய்தார்?

விடை.—பிரம்மா உண்டானதும் அவருக்கு எதிரே ஒன்றும் தோன்றாததால் நான்கு பக்கங்களிலும் பார்த்து எண்ண அவருக்கு நான்கு முகங்கள் உண்டாயின.

அவர் மனதில் ஒருவித எண்ணமும் ஞாபகமும் இல்லை. அப்பொழுது பிரளய ஸமுத்திரம் குழப்பமாக இருந்தமையால் அவருக்குப் பூர்வ ஸ்ருஷ்டி எல்லாம் அடியோடு மறந்துபோய் விட்டன. அப்பொழுது தமது ஸ்வரூபம், தாம் உண்டானவழி, தமக்கு ஆதாரமாக இருப்பவர் ஆகிய இவைகளை அறியவேண்டும் என்ற ஆசையுண்டாக, அவர் பிரளய ஜலத்துள் தாமரைத் தண்டைப்பிடித்துக் கொண்டு மூழ்கி வெகு காலம் முயன்றும் ஒன்றும் பயன்படவில்லை. இவ்வாறு எடுத்தகாரியம் முடியாது மிகுந்த சிரமத்துடன் அவர் தாமரைப் பூவில் வந்து உட்கார்ந்தார்.

**வி௵ 7.**—இந்த ஸமயத்தில் பிரம்மாவுக்கு உண்மை உணர வழிகாட்டியது யார்? அவர் எவ்வாறு உண்மையை உணர்ந்தார்?

**விடை.**—பிரம்மா மிகுந்த கஷ்டப்பட்டு நாபிகமலத்தில் வந்து உட்கார்ந்ததும் பிரளய ஸமுத்திரத்திலிருந்து தபதப (தபஸ் செய்! தபஸ் செய்) என்றொரு அசரீரி வாக்கு உண்டாயிற்று. உடனே பிரம்மா கிரமமாகத் தமது சுவாஸத்தை அடக்கி மனோநிரோதம் செய்து நூறு வருஷம் தியானத்திலிருந்தார். அதன் பின்பு அவருக்கு ஞானம் உதித்தது. அப்பொழுது தாம் முன் தேக சிரமத்தால் அறியக்கூடாத அறிய விஷயங்களைத் தமது மனோபலத்தால் அறிந்தார். அத்தருணத்தில் அல்லியைப்போன்ற ஸர்ப்ப சயனத்தில் 'பச்சை மாமலைபோல் மேனியை' உடையவராய் கடவுள் சயனித்திருப்பதையும் தமது சக்தியால் அக்கடவுள் பிரபஞ்சம் முழுவதும் வியாபித்திருப்பதையும் பகவானது விசுவரூபத்தில் ஸகல ஸ்ருஷ்டி விசித்திரங்

களும் அடங்கி இருப்பதையும், பிரம்மா கண்டு அந்தப் பகவானது விசாலத்திற்கும், கம்பீரத்திற்கும், திவ்ய தேஜஸ்ஸிற்கும், சிறந்த அழகிற்கும் ஈடுபட்டு, தமது திரிகரணங்களையும் அந்த பகவானுக்கு அர்ப்பணம் செய்து கடவுளது அனந்த கல்யாண குணங்களை மன உருக்கத்தோடு எடுத்துரைத்துத் துதிக்கத்தொடங்கினார். அதில் பகவானது சிறப்பு, 'நான், எனது' என்பதை விட்டு ஆராதிப்பதால் ஒருவனுக்கு வரும் மேன்மை, பிரம்மா விஷ்ணு சிவன் பரம்பொருளாகிய விருக்ஷத்திற்குக் கிளையாதல் முதலிய அறிய விஷயங்களை எடுத்துரைத்து ஸ்ருஷ்டித் தொழிலைக் குறைவு வராது செய்து முடிப்பதற்கு வேண்டிய புத்தியும் சக்தியும் தமக்குத் தந்தருள வேண்டும் என்று மிகுந்த ஆவலோடு பிரம்மா ஸ்ரீமந் நாராயணனைப் பிரார்த்தித்தார்.

வினா 8.—பிரம்மாவிற்கு நாராயணமூர்த்தி என்ன கட்டளையிட்டார்? பின்பு பிரம்மா என்ன செய்தார்?

விடை.—பிரம்மா கேட்டவாறு புத்தியையும் சக்தியையும் அவருக்குக் கொடுத்தார். அதன்பின்பு பிரபஞ்சம் முழுமையிலும் தம்முள் பிரம்மாவைத் தரிசிக்கும்படி செய்து, அப்பிரபஞ்சத்துள் தமது சக்தி பரவியிருக்கும் மாதிரியை நன்றாய் அறிய மறுபடியும் தபஸு செய்யும்படி கட்டளையிட்டார். தம்மை ஸகல ஞானங்களுக்கும் இருப்பிடமாக அடிக்கடி தியானம் செய்து அப்போதைக்கப்போது வேண்டிய சக்திகளைப் பெறும்படியும் கட்டளையிட்டார். உடனே பிரம்மா சிறந்த தபஸுக்கு ஆரம்பித்து வேண்டிய சக்தியையும் ஞானத்தையும் கூடியசீக்கிரத்தில் அடைந்தார். அப்

பொழுது விழித்து நோக்குகையில் நாபீ கமலமானது ஆகாய மண்டலம் முழுவதையும் அடைத்துக் கொண்டிருப்பதைக் கண்டு உலகங்களை ஸ்ருஷ்டிப்பதற்காக பிரம்மா அதை மூன்று பாகமாகப் பிரித்தார். இவ்வாறு பிரம்மா மூன்று லோகங்களையும் முதலில் ஸூக்ஷ்மமாக ஸ்ருஷ்டித்தார்.

**வின 9.**—இந்த ஸமயத்தில் கால ரூபியான பகவானுக்கு என்ன ஸ்வரூபம் என்று கேட்ட விதுரருக்கு மைத்திரேயர் என்ன மறுமொழி கூறினார்?

**விடை.**—பகவானது ரூபமாகிய காலத்தின் விவரம் பின் வருமாறு ஸூர்யன் ஒளி ஒரு அணுவைத் தாண்டுவதற்கு வேண்டிய காலத்திற்குப் பரமாணு என்று பெயர்.

2-பரமாணுக்கள்—1-அணு
3-அணுக்கள்—1-திரஸரேணு
3-திரஸரேணுக்கள்—1-துருதி
100-துரிதிக்கள்—1-வீதம்
3-வீதம்—1-லவம்
3-லவம்—1-நிமிஷம்
3-நிமிஷம்—1-க்ஷணம்
3-க்ஷணம்—1-காஷ்டை
15-காஷ்டை—1-லகு
15-லகு—1-நாடி
2-நாடி—1-முகூர்த்தம்
7-நாடி—1-பிரஹரம்
8-பிரஹரம்—1-நாள் (இராப்பகல்)
15-நாள்—1-பக்ஷம்

இது சுக்கிலபக்ஷம் கிருஷ்ணபக்ஷம் என இருவகைப் பட்டு மாறி மாறி வந்துகொண்டிருக்கும்.

2-பக்ஷம்—1-மாதம் (பிதிர்களுக்கு 1-நாள்)
2-மாதம்—1-ருது
6-மாதம்—1-அயனம்

இது உத்தராயணம் தக்ஷிணாயனம் என இருவகைப் பட்டு மாறி மாறி வந்துகொண்டிருக்கும்.

2-அயனம்—1-வருஷம் (தேவதைகளுக்கு 1-நாள்)
100-வருஷம்—1-புருஷாயுஸ்
360-வருஷம்—தேவ வருஷம்

இதற்கு மேல்பட்ட காலங்களுக்கு யுகங்கள் என்று பெயர். அவைகளுள் நான்கு மாறி மாறி புரண்டுகொண்டே வரும். அவைகளில் ஒரு யுகம் முடிந்து மற்றைய யுகம் தொடங்குவதற்கு முன் யுகஸந்தி என்று கொஞ்சகாலம் உண்டு.

ஸந்தி(யுக ஸந்திகள் உள்பட)கிருதயுகம்- (4000+800) தேவ வருஷம்
,, ,, திரேதாயுகம்—(3000+600) தேவ வருஷம்
,, ,, துவாபரயுகம்—(2000+400) தேவ வருஷம்
,, ,, கலியுகம்——(1000+200) தேவ வருஷம்

ஆக 12000 தேவ வருஷங்கள்— 1 சதுர்யுகம்— 1 மஹாயுகம்
71 மஹாயுகம்—1-மன்வந்திரம்.
1000 மஹாயுகம் அல்லது 14 மன்வந்திரம் } —1 கல்பம்

2 கல்பம்—பிரம்மாவுக்கு 1–நாள்
360–நாள்—பிரம்மாவிற்கு 1 வருஷம்
100–வருஷம்—பிர்ம்மாவின் ஆயுஸ்

பிரம்மாவினது ஆயுஸ் தான் பெரிதென்று எண்ணிவிடக்கூடாது. இதைக் கடவுளோடிருக்கும் கால தத்துவத்தில் ஒருநிமிஷம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

வின 10.—மன்வந்திரம், கல்பம், பிரம்மாவின் ஆயுஸ் இவைகளின் ஸ்வரூபம் என்ன?

விடை.—ஒவ்வொரு மன்வந்திரத்திற்கு ஒவ்வொரு மனு அதிபதியாக இருந்து அப்பொழுதிருக்கும் ஜனங்களை அடக்கியாண்டு வருகிறார். ஒவ்வொரு மன்வந்திர முடிவிலும், அவாந்திரப் பிரளயமும் ஒவ்வொரு கல்பமுடிவிலும் பூர்ணப் பிரளயமும் உண்டு. இந்தப் பூர்ணப் பிரளயத்தில் ஸகலலோகங்களும் அழிந்துவிடும். பிரம்மாவினது பகலில் பிரபஞ்சம் ஸ்ருஷ்டியாகித் தழைத்தோங்கும், பிரம்மாவினது இரவில் பிரபஞ்சம் பிரளய நிலையை அடையும், இவ்வாறு ஸகலலோகங்களும் அழிந்தபோதிலும், பிரம்மா அழிவதில்லை. அவருடைய ஆயுஸ்ஸாகிய 100–வருஷங்கள் முடிந்தவுடன் அவர் கடவுளிடம் சென்றடங்குவார். பிரம்மாவினது ஆயுஸ் இரண்டு ஸரிபாகமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொன்றிற்கும் பரார்த்தம் என்றுபெயர். முதல் பரார்த்தம் இரண்டு மஹாகல்பங்களாக பிரிக்கப்பட்டிருக்கிறது. அவையாவன வாக்ரூபமாகி சப்தப்பிரம்மம் இருந்த கல்பமாகிய பிரம்ம கல்பம், பிரபஞ்ச முழுவதும் கடவுளது நாபீ கமலத்திலிருந்து உண்டாகிய பாத்ம கல்பம் என்பவைகளே. இரண்டாம் பரார்த்த ஆரம்பத்திற்கு

சுவேதவராஹ கல்பம் என்று பெயர். இதன் ஆரம்பத்தில் பகவான் ஒரு வெள்ளைப்பன்றி உருக்கொண்டு வந்தமையால் இதற்கு இப்பெயர் வந்தது. இப்பொழுது நாம் இருக்கும் கல்பம் இதுவே. (நாம் இப்பொழுது சுவேதவராஹ கல்பத்தில் வைவஸ்வதமனுவின் அதிகாரத்தை உடைய ஏழாவது மன்வந்திரத்தில் 28-வது மஹாயுகத்தில் நான்காவது யுகத்தில் இருக்கிறோம்.)

வி. **11**.—முன் கூறியவாறு பரம்பொருளிடமிருந்து ஸகல சக்தியையும் அடைந்தபின்னர் பிரம்மா எவ்வாறு ஸ்ருஷ்டிக்கத் தொடங்கினர்? அவர் பிரயத்தனங்கள் எவ்வாறு முடிந்தன?

விடை.—கமலத்தை மூன்றுபாகமாகப் பிரித்தபின்னர் பிரம்மா தமது ஸ்ருஷ்டி சக்தியால் முதலில் வேலை செய்யத் தொடங்கினர். அப்பொழுது அஞ்ஞான ஹேதுவான ஐந்து விஷயங்கள் உண்டாயின. அவையாவன அந்ததாமிச்ரம் (தான் அனுபவிக்கும் விஷயம் நாசமானல், தான் நாசமாகிவிட்டதாக எண்ணுதல்), தாமிச்ரம் (ஸுகானுபவத்தைத் தடுக்குங்கால் வரும்கோபம்), மஹாமோஹம் (விஷயங்களை அனுபவிக்க வேண்டும் என்ற இச்சை), மோஹம் (தேகமே ஆத்மா என்ற அறியாமை), தாமஸம் (உண்மைப் பொருள் உணராததாகிய அஞ்ஞானம்) ஆகிய இவைகளே. இவைகளுக்குப் பஞ்ச அவித்தைகள் என்று பெயர். இவ்வாறு இப்பாபஹேதுக்கள் உண்டாய்விட்டதைப்பிரம்மா கண்டு மனம் நொந்து மனதை நன்றாகச் சுத்தப்படுத்திக் கொண்டு பகவானை த்யானம்செய்து மறுபடியும் ஸ்ருஷ்டிக்க, அப்பொழுது அவரது மனதிலிருந்து மஹா ஸந்யாஸ சிரேஷ்டர்களாகிய ஸனகாதியோகிகள் உண்டானர்கள்.

அவர்களுக்கு முறையே ஸனகர், ஸனந்தனர், ஸநாதனர், ஸனத்குமாரர்என்றும் பிரம்மாவின் மானஸ புத்திரர்கள் என்றும் பெயர். இவர்களோ ஸ்ருஷ்டிக்கு பிரயோஜனப்படாது முற்றுந் துறந்து தபஸுக்குச் சென்றனர். இவ்வாறு முதல் இரண்டு ஸ்ருஷ்டியும் பிரயோஜனமில்லாமல் போனதைக்கண்டு அவருக்கு அடங்காக்கோபம்வர அவர்புருவங்களின் மத்தியிலிருந்து ருத்திரர்உண்டாகித் தமக்கு இருப்பிடத்தையும், பெயரையும், பெண்சாதியையும், ஸ்ருஷ்டிக்கும்படி கூக்குரலிட்டார். பிரம்மா ருத்திரருக்கு வேண்டியவைகள் எல்லாவற்றையுங்கொடுத்து அனுப்ப அவர் கோபத்தில் உண்டானவர் ஆகையால் எல்லாவற்றையும் அழிக்கத் தொடங்கினர். உடனே பிரம்மா அவரைத் தபஸுக்குப் போகும்படி அனுப்பிவிட்டுத்தாமே மூன்றாந்தரம் ஸ்ருஷ்டிக்கத் தொடங்கினர்.

**வின 12** — இந்த மூன்றாந்தரம் ஸ்ருஷ்டி எவ்வாறு நடந்தது?

**விடை.**—மிகுந்த ஆலோசனையின் பேரில் தமது தேகத்தின் அங்கங்களில் இருந்து பிரஜாபதிகளையும் ரிஷிகளையும் ஸ்ருஷ்டித்தார். தமது மடியிலிருந்து நாரதரையும், கட்டை விரலிலிருந்து தக்ஷரையும், தமது உயிரிலிருந்து வஸிஷ்டரையும், தோளிலிருந்து பிருகுவையும், காதிலிருந்து புலஸ்தியரையும், வாயிலிருந்து ஆங்கிரஸரையும், கண்ணிலிருந்து அத்ரியையும், மனதிலிருந்து மரீசியையும், விஷ்ணுவினிருப்பிடமாகிய தமது வலது மார்பிலிருந்து தர்மத்தையும், புருவ மத்தியிலிருந்து கோபத்தையும், உதடுகளிலிருந்து லோபத்தையும், தமது நிழலிலிருந்து (தேவஹூதியின் கண

வராகிய) கர்த்தமரையும் ஸ்ருஷ்டித்தார். இந்த அவஸரத்தில் பிரம்மாவிற்குப் பரமாத்மாவென்று பெயர். இந்த வஸ்துக்களில் வாசா (ஸரஸ்வதி) என்ற ஒரு அழகிய பெண் உண்டாக அவளைப் பிரம்மா கல்யாணம் செய்துகொண்டார். இந்தக் காரியத்தை மரீசி முதலியோர் ஒப்பாது பிரம்மாவிற்குத் தமது அபிப்பிராயத்தைத் தெரிவிக்க அவர் உடனே புகையாக மாறிப் பின்பு வெளிவந்து ஸரஸ்வதியைத் தமது நாவில் வைத்துக்கொண்டார். உடனே அவரது நான்கு வாய்களிலிருந்து நான்கு வேதங்கள் உண்டாயின. நான்கு வர்ணத்தாரும் உடனே அவரிடமிருந்து வெளியானார்கள்.

வின 13.—இந்த ஸ்ருஷ்டி ஏன் பயன்படாது போயிற்று? அதைப் பிரம்மா எவ்வாறு பயன்படும்படி செய்தார்?

விடை.—பிரம்மாவால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட மரீசி முதலிய பிரஜாபதிகள் ஸ்ருஷ்டித் தொழிலை நன்றாக நடத்தவில்லை: உடனே அவருக்கு இதை எவ்வாறு நடத்தி நிலைபெறும்படி செய்வது என்ற கவலை உண்டாக, அப்பொழுது தீவிர ஆலோசனையால் அவரது தேகம் இரண்டுபாகமாகப் பிரிந்தது. அவைகளில் ஒன்றிலிருந்து ஆதி புருஷரும் அரசருமான மனு என்பவரும், மற்றொரு பாகத்திலிருந்து பெண்ணரசியாகிய சுதரூபை என்பவளும் உண்டானார்கள். இவ்விருவருக்கு இரண்டு குமாரர்களும், மூன்று குமாரிகளும் உண்டானார்கள், அந்த இரண்டு பிள்ளைகளுக்கும் முறையே பிரியவ்ருதர், உத்தானபாதர் என்றும், மூன்று பெண்களுக்கும், முறையே அகுதி, தேவஹூதி, பிரஸூதி என்றும் பெயர். அகுதி என்பவளை

ருசி என்பவருக்கும், தேவஹூதி என்பவளைக் கர்த்தமருக்கும், பிரஸூதி என்பவளைத் தக்ஷருக்கும் விவாகம் செய்து கொடுத்தார். தக்ஷருக்குத் திதி என்றும், அதிதி என்றும் இரண்டு பெண்கள் பிறக்க, அவ்விருவரையும் புலஸ்தியரது புத்திரரான காசியபருக்குக் கொடுக்க அவர்களிடத்தில் முறையே அஸுரர்களும், தேவர்களும் உண்டானார்கள். இதனால் தேவதைகள், அஸுரர்கள், அரசர்கள் முதலிய ஜனங்கள் உண்டாகி முன்பு ஒருவாறு மெதுவாக நடந்து கொண்டிருந்த ஸ்ருஷ்டி ஓங்கியது. (சாஸ்திர ஸ்ருஷ்டியின் கிரமத்தையும், அதற்கு இங்கு எடுத்துக் காட்டி இருக்கும் ஸ்ருஷ்டிக் கிரமத்திற்கும் உள்ள பொருத்தத்தையும் பின்வரும் அனுசந்தத்திலிருந்து தெரிந்துகொள்க.)

வின 14.—மனு உண்டானதும் அவர் பிரஜைகளை விருத்தி செய்வதற்கு என்ன தடை இருந்தது? அது எவ்வாறு இருந்தது?

விடை.—அவர் விருத்தி செய்ய ஏற்பட்ட பிரஜைகளுக்கு இருப்பிடம் ஒன்றும் காணாது மனு முதலில் தத்தளித்தார். ஹிரண்யாக்ஷன் என்ற ஒரு கொடிய இராக்ஷஸனால், பிரம்மாவால் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருந்த பூமி, ஸமுத்திரத்தில் மறைக்கப்பட்டிருந்தது. இதை ஸூக்ஷ்மமாக அறிந்து மானவர் பூமியை இராக்ஷஸனிடமிருந்து விடுவிக்கும்படி வேண்ட, பிரமமா பூமி திடீரென்று மறைவதற்குக் காரணம் இன்னதென்று அறியாதவராய் தியானத்தில் இருந்தார். அப்பொழுது அவரது மூக்குத் துவாரங்களிலிருந்து ஒருசிறு வெள்ளைப் பன்றி உண்டாகி அது அவர்கள் முன்னிலையிலேயே ஒரு பெரிய பன்றியாக மாறியது. இதுதான்

பகவானது வராஹவதாரம். இதைக்கண்டதும் பிரம்மாவிற்குப் பூமி காணுமல் போன காரணங்கள் யாவும் விளங்கின. உடனே பிரம்மதேவர் முதலியோர் வராஹ ரூபியான பகவானை வாயாரத் துதித்தனர். அப்பொழுது பகவான் ஹிரண்யாக்ஷன் உற்பத்தியையும், அஸுரர்கள் பிறப்பையும் சொல்லித் தாம் அவனைக் கொன்றுப் பூமியைக் காப்பதாக வாக்களித்து திடீரென்று ஸமுத்திரத்துள் புகுந்தார். உடனே அந்த அஸுரனைக் கண்டு பிடித்துக் கொஞ்சகாலம் விளையாட்டாக அவனோடு கொடிய போர் விளைத்தனர். அப்பொழுது ஸமுத்திரம் முழுவதும் அல்லோலகல்லோலப்பட்டுக்கிடந்து குழம்பியது. பிரம்மதேவர் சீக்கிரம் அஸுரனைக் கொன்று விடும்படி பகவானை வேண்ட, பகவான் அவனைத் தம் முன்காலால் அலக்ஷியமாகக் குத்திக்கொன்ருர். உடனே தமது கொம்புகளால் பூமியை அடியிலிருந்து தூக்கி மேலே நிறுத்தி விட்டுப் பகவான் தேவதைகள் துதிக்க மறைந்தருளினர்.

வி **15**.—இந்த ஹிரண்யாக்ஷன் முன்பு என்னமாக இருந்தான்? அவன் அஸுரனுகக் காரணம் என்ன?

விடை.—ஹிரண்யாக்ஷன், ஹிரண்யகசிபு என்ற இராக்ஷஸர் இருவரும் பகவான் இருப்பிடமாகிய வைகுண்டத்தில் இரண்டு துவாரபாலகராய் இருந்த தேவதைகள். இவர்கள்பகவானுக்குக் கைங்கரியம் செய்துகொண்டிருக்கும் ஒரு நாள் பிரம்மாவினது மானஸ புத்திரர்களாயும், ஸதாஞானிகளாயும், நிர்வாணமாயும், குழந்தைகள் போன்ற ரூபமும் உடைய ஸனகாதியோகிகள் நால்வரும் பகவானைத் தரிசிக்க வைகுண்டம் வந்தனர். துவாரபாலர்களாகிய ஜய விஜயர்கள் தமது நிலையால்

மிகுந்த கர்வமடைந்திருந்தபடியால் இவர்களது மஹத்வத்தை அறியாது இவர்கள் யாரோ தாழ்ந்தவர்கள் என்று தோற்றமாத்திரத்தில் தீர்மானித்து இவர்களை உள்ளே போகவொட்டாது தமது பிரம்பால் மறித்து விட்டார்கள். உடனே ஸனகாதிகளுக்கு மிகுந்த மனக் குழப்பம் உண்டாக அவர்கள் செய்த அபராதத்திற்காக அஸுரர்களாக ஜனிக்கும்படி சபித்தனர். இந்தச் சாபம் பிறந்ததும் ஜய விஜயர்களுக்குக் கர்வம் அடங்கி, நடுக்கம் உண்டாயிற்று. அப்பொழுது ஸநகாதியோகிகளை நோக்கி 'எங்கள் கர்வத்திற்குத் தகுந்த தண்டனை கிடைத்து விட்டது. எங்களுக்கு எவ்வளவு கொடிய ஜன்மம் வந்த போதிலும் பகவான் ஞாபகம் மாறுதிருக்கும்படி அனுக்கிரஹித்தருள வேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர். இவைகளை அறிந்த பரம் பொருள் ஸநகாதிகளை எதிர்கொண்டுவர அவர்கள் பகவானை அடி பணிந்து நின்றனர். அப்பொழுது பகவான் ஜய விஜயர்களுக்கு ஏற்பட்ட சாபத்தை நியாயம் என்று ஒப்புக்கொண்டு அவர்கள் எண்ணப்படி பகவான் தமது ஞாபகம் அவர்களுக்கு ஸதா இருக்கும்படி அனுக்கிரஹித்தார். உடனே அவ்விரு துவாரபாலகரும் வைகுண்டத்திலிருந்து பூமியில் விழுந்து அஸுரர்களாயினர்.

வினா **16.**—காசியபரிடத்திலிருந்து கொடிய அஸுரர்கள் எவ்வாறு உண்டாயினர்?

விடை.—ஒருநாள் ஸாயங்காலம் காசியபர் ஸந்தியாவந்தனம் செய்யத் தொடங்குகையில் திதி தேவிக்குத் தனக்குப் புத்திரர்கள் வேண்டும் என்ற ஆவலுண்டாகக் காசியபரிடம் சென்று தமது ஆவலைத் தெரிவித்தாள். அதற்கு

அவர் 'நான் இப்பொழுது அனுக்கிரஹித்தால் உனக்கு கொடிய பிள்ளைகளே உண்டாவார்கள். இந்தக் காலம் கெட்டது. ஆகையால் பொருத்துக் கொள்' என்று சொல்லத் திதி தேவி கேட்கவில்லை. அப்பொழுது காசியபர் அவளுக்கு அனுக்கிரஹித்தனர். உடனே தனது முரட்டுத்தனத்தின் நிலை இப்படிப்பட்டது, என்று விளங்க மிகுந்த துக்கம் அவளுக்கு வந்தது. இதைக்கண்ட காசியபர் 'உன் பிள்ளைகள் கொடியவர் களாகத்தான் இருப்பார்கள். ஆனால் உன் பேரன் ஒரு வன் மாத்திரம் மஹாத்மாவாவான்' என்று அனுக்கிர ஹித்தார். உடனே ஹிரண்யாக்ஷன், ஹிரண்யகசிபு என்றஇருவர் திதிதேவிக்குப் பிள்ளைகளாகப் பிறந்தனர்.

வி**ஞ 17.**—முற்கூறியபடி பூமியைப் பகவான் வராஹவ தாரம் செய்து வெளிக்கொண்டுவந்த பின்பு மனு என்ன செய்தார்?

விடை.—மனு பூமியில் தமது அரசை நாட்டித் தமது பிள்ளைகளை இளவரசுகளாக்கி தமது பெண்களையும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தார். இப்படி இருக்கையில் அவர் பெண் ணாகிய தேவஹூதி தேவிக்குப் பருவம் வந்தது. உடனே அவளையும் தன் பட்டமஹிஷியையும் அழைத் துக்கொண்டு மனுவானவர் ரிஷிகள் ஆசிரமங்தோறும் தகுந்த வரனைத் தேடிக்கொண்டு புறப்பட்டனர். ஒரு நாள் இவர்கள் ஸரஸ்வதீ நதிக்கரையில் இருக்கும் பிந்து ஸரஸின் அருகில் வந்து சேர்ந்தனர். அங்குள்ள பர்ணசாலையில், மனு தேடி வருகையில் தற்செயலாய் கர்த்தமர் என்ற பிரஜாபதியைக் கண்டார். உடனே அவருக்குத் தனது வரவின் நோக்கத்தைத் தெரிவிக்க,

அவர் 'தேவஹூதிக்கு ஒரு ஆண் குழந்தை உண்டான பின்பு நான் எதேச்சையாகத் தபஸுக்குப் போவேன். இது ஸம்மதமாகில் நான் உமது பெண்ணை ஒப்புக் கொள்ளுகிறேன்' என்று சொல்ல அதற்கு இசைந்து மனு தமது பெண்மணியைக் கர்த்தமருக்குக் கல்யாணஞ் செய்து கொடுத்தனர்.

விஞ 18.—கர்த்தமரும் தேவஹூதியும் எவ்வாறு சேர்ந்து தமது காலத்தைக் கழித்தனர்? அது எவ்வாறு பயன் பட்டது?

விடை.—மனு கல்யாணம் முடிந்ததும் தனது பெண்ணைக் கர்த்தமரிடம் விட்டு விட்டுத் தனது இருப்பிடம் சென்றனர். அன்று முதல் கர்த்தமரும் தபஸு செய்யத் தொடங்க வெய்யில் மழை முதலிய கஷ்டங்கள் ஒன்றையும் லக்ஷ்யம செய்யாது தனது கணவனுக்கு மனப்பூர்வமாகத் தேவஹூதிதேவி தொண்டுகள் செய்து வந்தாள். தன்னைக் கண்ணெடுத்துப் பார்த்து ஸுகப்படுத்தவில்லை என்ற மனக்குறையை ஒரு பொருட்டாக அவள் எண்ணவே இல்லை. இப்புண்ணியவதி இவ்வாறு வெகுகாலம் தனது தர்மத்தை நடத்தி வரும் நாளில் ஒரு நாள் கர்த்தமர் விழித்துக்கொண்டு அவள் செய்த காரியங்களுக்கு மெச்சி அவளுக்கு அனுக்கிரஹம் செய்வதாக ஒப்புக் கொண்டார். அப்பொழுது தனது பக்தி பயன்பட்டதைக்கண்டு மகிழ்ந்து தேவஹூதிதேவி கொஞ்சகாலம் சிற்றின்பங்களின் ரூபத்தை அறியவேண்டும் என்ற தனது ஆவலைத் தன் கணவனுக்குத் தெரிவிக்க, இருவரும் கொஞ்சகாலம் அவ்வாறு இருந்தனர். இப்படி இருக்கையில் தேவஹூதிதேவி கர்ப்பம் தரித்தாள். உடனே கர்த்தமர்

முன்கூறிய வாக்கின்படி தயங்காது ஸந்யாஸத்தைக் கைக்கொள்ள ஏற்பாடு செய்தனர். அப்பொழுது முன்பு தேவஹூதிதேவி செய்த உண்மைத் தொண்டுகள் நன்றாகப் பயன்பட்டன. தன் கணவனை நோக்கி 'இது காறும் யான் உலக இன்பத்தில், போகும் வழியைக் கவனியாது அழுந்திப் போய் விட்டேன். இனி எனக்கு ஞானம் வருவது எப்படி ?' என்று மிகுந்த ஆவலுடன் கேட்க, அவர் 'உன்னிடத்தில் லோகஹிதார்த்தம் பகவான் பிள்ளையாகப் பிறப்பார். அவர் உனக்குவேண்டிய ஞானத்தை அளிப்பார்' என்றார்.

வினு 19.—தேவஹூதிக்கு எவ்வளவு குழந்தைகள் பிறந்தன ? அவர்கள் எவ்வாறு வாழ்க்கையில் அமர்ந்தார்கள் ?

விடை.—கர்த்தமரோடு ஸுகிக்குங்கால் தேவஹூதி தேவிக்கு ஒன்பது பெண்களும் முடிவில் கர்த்தமர் தபஸுக்குப் போனதும் ஒரு பிள்ளையும் பிறந்தன. பெண்களுக்கு முறையே, கலை, அனஸூயை, சிரத்தை, பிரபை, கதி, கிரியாகியாதி, அருந்ததி, சாந்தி, ஹவிர்த்து என்று பெயர். இவர்கள் முறையே மரீசி, அத்ரி, ஆங்கிரஸ், புகுண்டர், கிரது, பிருகு, வஸிஷ்டர், புலஹர், புலஸ்தியர் ஆகிய இவர்களுக்குப் பெண்சாதிகளாக அமர்ந்தனர். இவைகள் முடிந்ததும், தேவஹூதி தேவிக்கு விஷயங்களின் நிலையாமை தோன்ற தனக்கு ஞானம் வரவேண்டும் என்று பகவானை அவள் வேண்டினள். அவள் கணவன் அனுக்கிரஹித்தபடி பகவானே கபிலவாஸுதேவர் என்ற கடைக்குட்டியாக அவதரித்தார். அப்பொழுது பிரபஞ்சம் முழுவதும் தழைத்து ஓங்கியது. கர்த்தமர் கபிலரைத் துதித்து விடைபெற்றுத் தமது ஆசிரமம்

சென்றனர். கபிலரும் தமது தாயாருக்கு ஞானோபதேசம் செய்வதற்காக அவள் அருகாமையிலேயே இருந்தனர்.

வினா 20.—கபிலர் என்ன விஷயங்களை எப்பொழுது தமது தாயாருக்கு உபதேசம் செய்தார்? இதன் பயன் யாது?

விடை.—கபிலர் அவதரித்த பின்பு ஒருநாள் வைராக்கியம் வாய்ந்த தேவஹூதி தேவிக்கு தன் கணவன் சொல் ஞாபகம் வரத் தன் பிள்ளையை அடுத்து தனது மனோ நிலையைத் தெரிவித்தாள். அப்பொழுது பகவான் கபிலர் ஸாங்கியம், பக்தி, யோகம் முதலியவைகளின் ரகஸியங்களைத் தமது தாய்க்கு உள்ளங்கை நெல்லிக் கனிபோல விளங்கும்படி எடுத்துரைத்தார். இவ்வாறு அறிய வேண்டியவைகள் எல்லாவற்றையும் தேவஹூதிதேவி அறிந்து, ஞானத்தில் விருத்தியடைந்து பகவான் காட்டிய வழிப்படி நடந்து நிஷ்டையில் நிலை பெற்று முடிவில் மேலான பரமபதத்தை அடைந்தாள்.

வினா 21.—கபிலர் தமது தாய்க்கு எடுத்துரைத்த அரிய விஷயங்களின் சுருக்கம் என்ன?

விடை.—முதலில் கபிலர் 'அபிமானம் பந்தத்திற்குக் காரணம், அதையே நல்ல விஷயங்களில் திருப்பினால், அதுமோக்ஷஹேதுவாகின்றது. இவ்வாறு திருப்பப்பட்ட அபிமானத்திற்கேபக்தி என்று பெயர்' என்று பக்தியின் ஸ்வரூபத்தை விவரித்தார். இதன்பின்பு ஸாங்கிய சாஸ்திரத்தைச் சொல்லத் தொடங்கி, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், முதலிய பஞ்சபூதங்கள்; கந்தம்,

ருசி, ரூபம், ஸ்பர்சம், சப்தம் ஆகிய பஞ்சவிஷயங்கள்; மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய பஞ்ச ஞானேந்திரியங்கள், வாக்கு, கை, கால், மலத்துவாரம், ஜலத்துவாரம் ஆகியபஞ்ச கர்மேந்திரியங்கள்; மனஸ் புத்தி சித்தம், அகங்காரம் ஆகிய நான்கு ரூபமான அந்தஃகரணம்; ஈசுவரரூபமான காலம் ஆகிய 25-தத்துவங்களின் ஸ்வரூபத்தைவிவரித்து, இவைகளின் மாறுபாட்டிலிருந்து பகவான் ரூபமாகிய ஆத்மாவின் ஸம்பந்தத்தால் ஸ்ருஷ்டி உண்டாகித் தழைத்து ஓங்குவதை எடுத்துரைத்தார். இதற்கே சாஸ்திரீய ஸ்ருஷ்டி என்று பெயர். (அநுபந்தத்தைப் பார்க்க) இதன் மூலமாக பகவானுலேயே ஸ்ருஷ்டியாவும் ஜீவர்கள் விருத்தி, யடைந்து பரமபதம் சேரும்பொருட்டு விருத்திசெய்யப்படுகின்றன என்றும் 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்றும் கபிலர் அவர் தாயாருக்கு விளக்கினுர். மேல் பகவானுகிய ஆதிபுருஷரது ஸ்வரூபத்தையும், பிரபஞ்ச விசித்திரத்திற்கு ஹேதுவாகத் தோன்றும் பிரகிருதியின் ஸ்வரூபத்தையும் எடுத்துரைத்து, புருஷன் எவ்விதப் பிரகிருதியில் கட்டுண்டது போலத் தோன்றிய போதிலும் உண்மையில் ஒன்றும் அவரை ஒட்டுவதில்லை என்றும், இதை உள்ளபடி அறிந்து மனோநிரோதம் செய்து பிரகிருதி ஸம்பந்தம் நீங்கிப் புருஷனில் நிலைபெற்று ஞானியாக வேண்டும் என்றும் எடுத்துரைத்தார். இதற்குமேல் அஷ்டாங்க யோகத்தின் ஸ்வரூபத்தையும், அதனுல் உண்டாகும் திரிபுடி ரஹிதமான ஞானத்தையும், விவரித்தார். பக்தியின் பேதங்கள், காலரூபியான பகவானது செயல்கள், கெட்டவர்கள் நடந்து அதோகதியடைந்து மறுபடியும்

விருத்தி அடையும்விதம், மூன்றுவித கர்மங்கள், மிசிர கர்மத்தால் மனிதஜன்மம் உண்டாவது, அதில் ராஜஸ குணத்தால் அகங்காரம் விருத்தியாகிப் பந்தம் அதிகரிப்பது, இதை ஸத்கர்மம், முதலியவைகளால் தடுத்து பரமபதம் அடையும் விதம் ஆகிய இவ்வரிய விஷயங்களைத் தமது தாயாருக்கு நன்கு விளங்கும்படி கபிலர் விஸ்தரித்தார்.

விஞ **22.**—இவைகளைச் சொல்லித் தமது தாய்க்கு நற்கதி வரும்படி செய்தபின்பு கபிலபகவான் என்னசெய்தார்?

விடை.—இவைகளைச் சொல்லி முடித்ததும் கபிலர் தமது தாயாரிடமிருந்து விடைபெற்று வடக்கு திக்கை நோக்கிச்சென்ருர். அதன்பின்பு பாதாள லோகம் சென்று லோகஹிதத்தின் பொருட்டுத் தபஸு செய்யத் தொடங்கினர். இன்னமும் அவ்வாறே செய்து கொண்டிருப்பதாகப் புராணங்கள் கூறுகின்றன.



# 4-வது ஸ்கந்தம்

## தக்ஷயாகம், துருவசரித்திரம்
## வேனன்கதை, பிருதுகதை, பிராசீன பர்ஹிஸ்கதை
## மைத்திரேய விதுரஸம்வாதம்

*எவ்வன்மை கட்கு மிடனுமெவ னென்னு னேதன்*
*செவ்வன்மை யாற்புக் குறங்கிம்மொழி செங்கை கால்கா*
*திவ்வங்க மாவி பிறவும்முய வெண்ணு கின்று*
*னவ்வண்ண லாகின் னடிக்கிப்பணி வாக மன்னே.*

வினு 1.—*தக்ஷப்பிரஜாபதியைக் கல்யாணம் செய்து கொண்ட பிரஸூதியின் வம்சத்தின் விவரம் என்ன?*

விடை.—இவளுக்கு 16 பெண்கள் உண்டானார்கள். 13 பெயர்களை தர்ம தேவதைகளுக்குத் தக்ஷர் கொடுத்தார். இவர்களுள் மூர்த்தி என்பவளுக்கு நரநாராயணுள் என்று இரண்டு ரிஷிகள் உண்டானார்கள். இவர்கள் விஷ்ணுவின் அம்சம் உடையவர்கள். இவர்களே பாரதயுத்த காலத்தில் அர்ச்சுன கிருஷ்ணுளாகத் தோன்றினர். மற்றைய மூன்றுபெண்களுள் ஒருத்தியை அக்னிக்கும், ஒருத்தியைப் பிதுர் தேவதைக்கும், கடைக்குட்டியாகிய ஸதி என்பவளைப் பரமசிவனுக்கும் தக்ஷர் கொடுத்தார். ஸதி என்பவளுக்குக் குழந்தைகள் உண்டாகவில்லை. பரமசிவனும் ஸதியும் மிகுந்த அந்நியோந்யமாக இருந்தபோதிலும், அவருக்கும் தக்ஷருக்கும உண்டான மனஸ்தாப விஷயத்தில் ஸதி தனது தேகத்தை நழுவ விட வேண்டி வந்தது.

விஞ 2.—தக்ஷருக்கும் பரமசிவனுக்கும் மனஸ்தாபம் வரக்காரணம் என்ன?

விடை.—முன் ஒருகாலத்தில் தேவதைகள் ஒரு பெரிய யாகம் செய்துகொண்டிருந்தார்கள். அங்கு திரிமூர்த்திகளும், மஹாிஷிகளும், தேவதைகளும், பிராமணர்களும் கூடி இருந்தனர். அப்பொழுது தக்ஷர் அங்கு வந்து சேர்ந்தார். அவரைக் கண்டதும் ஸபையில் இருந்தோர் எல்லோரும் எழுந்தனர். பிரம்மாவும், பரமசிவனும் மாத்திரம் எழுந்திருக்கவில்லை. தக்ஷர் தமது பிதாவாகிய பிரம்மாவுக்கு வந்தனம் செய்துவிட்டுப் பரமசிவனை நோக்கினர். அவர் தம்மை லக்ஷ்யம் செய்யாது உட்கார்ந்திருப்பதைக் கண்டு மிகுந்த கோபம் அடைந்து, அவரைத் தமது மாப்பிள்ளை என்ற அஞ்ஞானத்தால் வாயில் வந்தபடி எல்லாம் வையத்தொடங்கினர். பரமசிவத்தின் யோகலக்ஷணங்கள் எல்லாவற்றையும் கேவலமான தாழ்ந்த குறிகளாக எண்ணி இகழ்ந்து பேசி, தன் பெண்ணை அவருக்குக்கொடுத்த விஷயத்தை எண்ணித் துக்கிக்கத் தொடங்கினர். தேவதைகள் எவ்வளவுதான் தடுத்தபோதிலும் முடிவில் கோபாவேசத்தில் பரமசிவத்திற்கு யாகங்களில் ஹவிர்ப்பாகம் இல்லாதிருக்கட்டும் என்றும் வீண் சாபம் கொடுத்துவிட்டு தக்ஷர் அந்த யாகசாலை விட்டு வெளியேறினர்.

விஞ 3.—தக்ஷர் சாபத்தால் ஸபையில் என்னவிஷயம் நடந்தது?

விடை.—தக்ஷரது சாபத்தை பரமாத்மாவாகிய பரமசிவம் லக்ஷ்யமே செய்யவில்லை. அவரோடு தொண்டு செய்துகொண்டுவந்த நந்திகேசுவரருக்கு வைதிக கர்ம

சிரத்தையால் தக்ஷருக்கு உண்டான பகவத்ரூப விஷய அஞ்ஞானம் மிகுந்த கோபம் உண்டாகியது. உடனே, நந்திகேசுவரர், 'இந்த தக்ஷரைப்போல வேத ஸாரத்தை அறியாது, வைதிக கர்மசிரத்தை உடையவர்கள் கதி இதுவே. ஞானம் அவர்களுக்கு ஒருநாளும் வராமலிருக்கட்டும். இந்தத் தக்ஷருக்கு இந்த பகவத் அபராதத்திற்காக ஆட்டு ரூபம் வரட்டும். சிவத் துவேஷிகள் அஞ்ஞானம் நீங்காது ஸதா பணம் ஸம்பாதிப்பதிலும், விஷய ஸுகங்களைத் தேடுவதிலும் முயலட்டும்' என்று தக்ஷரைப் போன்றவர்களுக்குச் சாபம் கொடுத்தார்.

வினா 4.—நந்திகேசுவரரது சாபத்தால் ஸபையில் என்ன குழப்பம் உண்டாயிற்று? ஏன்?

விடை.—நந்திகேசுவரரது வார்த்தையின் உண்மையை அறியாது, அவர் வைதிக கர்மத்தில் சிரத்தை உடையவர்களை அநியாயமாகச் சபித்துவிட்டார் என்று எண்ணி மிகுந்த கோபத்துடன் பிருகுமுனிவர் சிவ பக்தர்களைச் சபிக்கத் தொடங்கினார். 'சிவபக்தர்களுக்குப் பாஷண்டர்கள் என்று பெயர் வரட்டும். அவர்களுக்குக் குடி முதலிய கெட்டவழக்கங்கள் உண்டாகட்டும். நீ வேதத்தையும் வைதிகக் கர்மங்களையும் பழித்த அபராதத்திற்கு இந்த நிலை அவர்களுக்கு வரட்டும்' என்றார். 'நடப்பது நடக்கட்டும், இருதிறத்தாருக்கும் நாசகாலம் வந்திருக்கிறது' என்று எண்ணிக் கொண்டு பரமசிவம் தமது இருப்பிடம் சென்றார்.

வினா 5.—தக்ஷரது மனம் வரவர எவ்வாறு ஏன் கெட்ட நிலையை அடைந்துகொண்டு வந்தது? இது எவ்வாறு முடிவுபெற்றது?

**விடை.**—இவ்வாறு தக்ஷர் பரமசிவத்திடம் அஞ்ஞானத் தால் கோபம் கொண்டிருக்கையில் பிரம்மா அவரைப் பிரஜாபதிகளுக்கு அதிபதியாக நியமித்தார். இதனுல் தக்ஷருக்குக் கர்வம் உண்டாயிற்று. பரமசிவத்தினிட மிருந்த கோபமும் அதிகமாயிற்று. தமது புதிய நிலை யில் இருந்து அநேக யாகங்கள் செய்தார். இவைகளில் சிவனுக்குப் பாகம் கொடுக்கவும் இல்லை. அவரை அழைக்கவும் இல்லை. முடிவில் பிரஹஸ்பதி ஸவனம் என்ற ஒரு பெரிய யாகத்திற்கு ஏற்பாடு செய்து பரம சிவனையும் ஸதியையும் தவிர மற்றவர்கள் எல்லோரை யும் அழைத்தார். இந்த யாகத்தில் சிவ ஸம்பந்தமே இல்லை. இந்தப் பெரிய யாகத்திற்கு ஸகல லோகங் களிலிருந்து எல்லோரும் கூட்டம் கூட்டமாகப் புறப் பட்டு வந்தனர்.

**வினு 6.**—இந்த விஷயம் பரமசிவத்திற்கு எப்படித் தெரிய வந்தது? அவர் அப்பொழுது என்ன செய்தார்?

**விடை.**—கைலாஸமலையின் வழியாக தக்ஷரது யாகத்திற் குப்போகும் கூட்டத்திலிருந்து ஸதி தன் தகப்பன் செய்யும் யாகத்தின் ஸங்கதியை அறிந்துகொண்டு பரமசிவனிடம் வந்து தானும் அந்த யாகத்திற்கு போனுல் நலமாயிருக்கும் என்று சொன்னுள். தகப்ப னுரை வெகு நாளாகக் காணுததால் தன் பெண்சா திக்கு மேலிட்ட ஆவலை அறிந்துகொண்டு பகவான் 'நீ உன் ஆசைமேலிட்டதால் இவ்வாறு சொல்லு கிருய். உன்னை உன் தகப்பன் அழைக்கவில்லை. மேலும் என்னிடம் அவன் கோபம் கொண்டிருக்கிருன். ஆகை யால் நீ இப்பொழுது போனுல் உனக்கு அவமானமே உண்டாகும். அதனுல் மிகுந்த கெடுதிகள் நேரிட்

டாலும் நேரிடும். நீ போகவேண்டாம்!' என்று புத்தி மதி கூறினர்.

வினு 7.—ஸதி அப்பொழுது என்னசெய்தாள்? அதிலிருந்து என்ன விபரீதம் விளைந்தது?

விடை.—தன் தகப்பன் மேலிருந்த அன்பு மேலிட்டதால் பகவான் எவ்வளவு சொல்லியும் கேட்காது யாகத்துக்கு அவள் புறப்பட்டாள். தன் தகப்பன் வீடு சென்றதும் அங்கு கோலாஹலமாக யாகம் நடந்து கொண்டிருப்பதைக் கண்டாள். அங்கு யாவரும் தக்ஷருக்குப் பயந்து, அவளை லக்ஷ்யமே செய்யவில்லை. இதை முன்பு கவனியாது ஸதி பெண்டுகள் இருக்கும் இடம் சென்ருள். அங்குத் தன் தாயும் ஸஹோதரிகளும் அவளுக்குத் தகுந்த மரியாதை செய்தார்கள். இப்படி இருந்தும் யாகத்திற்கு யஜமானனுகிய தன் தகப்பன் கவனியாததால் அவளுக்குத் தன் தாய் முதலியவர்கள் செய்த மரியாதைகள் ஒருபொருட்டாகத் தோன்றவில்லை. அப்பொழுது பரமசிவத்திற்கு அந்த யாகத்தில் பாகமில்லாதிருப்பதை அவள் கண்டாள். உடனே அவளுக்கு மிகுந்த கோபம் வந்தது. தக்ஷரை நோக்கி, 'அடே பாபி! யோக மூர்த்தியாகிய பரமசிவத்தின் ரூபம் உனக்கு எப்படியடா தெரியும்? எல்லாத் தேவதைகளும் அவரைச் சிறந்தவரெனக் கொண்டாடுகிருர்கள்! உன் பெண் என்று சொல்லிக் கொள்ள எனக்கு வெட்கமாக இருக்கிறது. இந்தக் கொடிய விஷயங்களைக் கண்டதும், உன்னைப்போன்ற பாபி வயிற்றில் உண்டானதாகிய இந்தத் தேகத்தை இதோ விடுகிறேன்' என்று சொல்லி யோகாப்பியாஸம் செய்து அதனுல் உண்டாகிய அக்னியில், அந்த யாகசாலையில்

இருப்பவர் முன்னிலையில், பிரவேசம் செய்து ஸதி தேகத்யாகம் செய்தாள்.

வி. 8.—இவ்வாறு ஸதி தக்ஷன் கொடுமையால் தேகம் இழந்ததும் ஸபை எந்நிலையை அடைந்தது?

விடை.—ஸபையிலிருந்தோர் யாவரும் தக்ஷனைப்பழிக்கத் தொடங்கினர். இதற்குள் ஸதியோடு வந்த பூதகணங்கள் தக்ஷரது யாகத்தை அழிக்கத் தொடங்கின. உடனே பிருகு முனி தக்ஷனுக்னியில் யாக ஸம்ரக்ஷணத்திற்காக ஆகுதிசெய்ய அநேக ஜீவராசிகள் உண்டாகி ஸதியினது கணங்களைத் துரத்திவிட்டன. ஸபையிலிருந்தவர் எல்லோரும் தக்ஷன் அபராதத்தால் ஒரு பெரும் தீங்கு விளையும் என்றே பயந்துகொண்டிருந்தனர்.

வி. 9.—பரமசிவம் இங்கு நடந்த சங்கதிகளை எல்லாம் எவ்வாறு அறிந்துகொண்டு என்ன செய்தார்?

விடை.—உலகத்தில் நடக்கும விஷயங்கள் நன்றாக நடந்து தர்மம் நிலைநிற்கும்படி செய்யும் நாரதர் பரமசிவத்திற்குத் தக்ஷயாகத்தில் நடந்த சங்கதிகளைத் தெரிவித்தார். உடனே அவருக்கு அடங்காக் கோபம் உண்டாகப் பூமியைக் காலால் மூன்று லோகங்களும் அதிரும்படி உதைத்து, தனது ரோமம் ஒன்றைப் பிடுங்கிக் கீழே எறிந்து அவர் கர்ச்சித்தார். உடனே அதிலிருந்து மிகுந்த கோரரூபமும், சிறந்த பலமும் வாய்ந்த அகோர வீரபத்திரர் உண்டாக, அவரைத் தக்ஷயாகத்தை அழித்துவரும்படி பகவான் கட்டளையிட்டார். உடனே கர்ச்சித்துக்கொண்டு சிவகணங்களுடன் வீரபத்திரர் தக்ஷயாகத்தை அழிக்கப் புறப்பட்டார்.

வி௺ 10.—*தக்ஷயாகத்தை வீரபத்திரர் எவ்வாறு அழித்தார்?*

விடை.—*யாகசாலையில் எல்லோரும் பயந்து கொண்டிருந்ததற்குத் தக்கபடி வீரபத்திரர் தமது கணங்களோடு கூடிய சீக்கிரத்தில் அங்கு வந்து எல்லோரையும் அடிக்கத் தொடங்கினர். யாகத் திரவியங்களைச் சில கணங்களும், பத்னிசாலையைச் சில கணங்களும், போஜன சாலையைச் சில கணங்களும் மிகுந்த கோர ரூபத்தை எடுத்துக்கொண்டு அழிக்கத் தலைப்பட்டன. அங்கிருந்தவர் எல்லோரும் மிகுந்த பயத்தை அடைந்து நான்கு பக்கமும் சிதறி ஓடினர்கள். வீரபத்திரரும் அவரது கணங்களும் ஓடுபவர்களைத் துரத்தியடித்துக் கதறக்கதறக் கொன்றனர். பரமசிவத்தை அகாரணமாக த்வேஷித்த பிருகுவின் தலைமயிரையும், மீசையையும் வீரபத்ரர் இழுத்துப்பிடுங்கி அவமதித்தார்; தக்ஷரின் தலையை அவர் அறுத்து ஹோமாக்னியில் போட்டு யாகத்தைச் சின்ன பின்ன மாக்கிவிட்டார் இதுபோல மற்றைய சிவத்வேஷிகளையும் வீரபத்ரர் தகுந்தபடி அவமதித்துவிட்டு கைலாஸம் சென்றனர்.*

வி௺ 11.—*இவ்வாறு தக்ஷயாகத்தை அழித்துவிட்டு வீரபத்ரர் கைலாஸம் சென்றதும் தேவதைகள் என்ன செய்தார்கள்?*

விடை.—*முதலில் அங்கிருந்த தேவதைகள் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு பிரம்மாவிடமும், பின்பு விஷ்ணுவிடமும் சென்று முறை யிட்டனர். அப்பொழுது அம்மூர்த்திகள் தக்ஷயாகத்தில் சேர்ந்தவர்கள்*

எல்லோரும் கொடிய சிவாபராதம் செய்தவர்கள் என்றும், வேறு எந்த தேவதையாலும் அவர்களை ரக்ஷிக்க முடியாது என்றும், ஆகையால் அவர்கள் பரமசிவனது கருணைக்குப் பாத்ரமானால்தான் பிழைக்கலாம் என்றும் சொல்லிவிட்டார்கள். உடனே பிரம்மாவை முன்னிட்டுக்கொண்டு தேவதைகள் கைலாஸம் சென்று ஸகல வைபவங்கள் மத்தியில் நிஷ்டையில் வீற்றிருந்த பரமசிவத்தைத் தரிசித்துத் துதிக்க அவருக்குத் தேவதைகள் விஷயத்தில் கருணை உண்டாயிற்று. அப்பொழுது தேவதைகள், 'உங்களுக்கு முடிவில் ஹவிர்ப்பாகம் கொடுக்காமல் செய்யப்படும் யாகம் பூர்த்தியடையாமல் போகட்டும்' என்று வாக்களித்து எப்படியாவது தக்ஷரது யாகத்தைப் பூர்த்தி செய்தருளும்படி பரமசிவத்தைத் தேவதைகள் எல்லோரும் வணங்கிக் கேட்டுக்கொண்டனர்.

**வினா 12.**—அப்பொழுது பரமசிவம் எவ்வாறு தக்ஷயாகம் பூர்த்தியாகும்படி செய்தார்? அங்கு என்ன விசேஷம் நடந்தது?

**விடை.**—இப்பொழுது நடந்தபடி நடக்கிராவிடில் தக்ஷன் பிருகு முதலிய சிவத்வேஷிகளுக்குக் கொடிய எண்ணம் அதிகரிக்க இன்னும் கொடிய பாபத்திற்கும் கஷ்டத்திற்கும் அவர்கள் ஆளாக இடமுண்டாகும் என்பதைப் பரமசிவன் நன்றாகத் தேவர்கள் மனதில் பதியும்படி எடுத்துக்காட்டினார். 'மேலும் அவர்கள் செய்த அபராதம் மிகக் கொடியதாகையால், நஷ்டப்பட்டவர்களுக்கு முன்னிலை வருவது அரிது. ஆகையால் எரிந்துபோன தக்ஷன் தலைக்குப்பதிலாக அவனுக்கு ஒரு ஆட்டுத்தலையும், பிருகுவுக்கு ஆட்டின் தாடியும் இது

போன்ற மற்றையவர்களுக்குத் தாழ்ந்தவைகளுமே உண்டாகும்' என்று அனுக்கிரஹித்தார். உடனே தேவதைகள் மகிழ்ந்து பரமசிவத்தையும் யாகசாலைக்கு அவர்களோடு வரும்படி வேண்ட அவரும் அங்கு சென்று தக்ஷனுக்கு உயிர் கொடுத்தார். உடனே நல்ல புத்தி வந்த தக்ஷன் சமகத்தால் பகவானை வாயாரத் துதித்தான். இவ்வாறு அவன் துதித்துப் பகவானைத் திருப்தி செய்ததும் யாகம் அவரது முன்னிலையிலேயே விட்ட இடத்தில் தொடங்க ஸாதாரண ஆகுதிகளின் பேரில் விஷ்ணு ஸம்பந்தமான முக்கிய ஆகுதி கொடுத்தார்கள். உடனே மஹாவிஷ்ணு தோன்ற எல்லோரும் அவரைத் துதித்தனர். அப்பொழுது அவர் தனக்கும் பிரம்மாவுக்கும் பரமசிவத்திற்கும் யாதொரு பேதமும் இல்லை என்றும், இதை அறிந்து வழிபடுபவர்களுக்கே பரமபதம் ஸித்திக்கும் என்றும், அவ்வாறின்றி துவேஷபுத்தி பாராட்டுபவருக்குத் தக்ஷனது கதியே என்றும் எடுத்துரைத்துத் திரிமூர்த்திகளின் ஸமரஸத்தை வற்புறுத்தினார். (தக்ஷயாகத்தின் உட்கருத்தையும் அதன் விஸ்தாரத்தையும் உணர திரிமூர்த்தி ஸமரஸம் என்ற அனுபந்தபாகத்தைப் பார்க்க.) பின்பு பரமசிவத்தின் அருளால் யாக பூர்த்தியாகித் தக்ஷர் மேன்மையை அடைந்தார்.

வினா **13.**—தேகத்தை யோகாக்னியில் இழந்த ஸதியினது கதி என்னமாயிற்று?

விடை.—அவள் ஜகன்மாதாவாகையால் அவளுக்குத் தேகங்கள் ஒரு பொருட்டேட் அல்ல. உடனே ஹிமவானுக்கு உமை என்ற பெண்ணாகத் தோன்றி ஸதியானவள் பரமசிவத்தை மிகுந்த தபஸின்பேரில் கல்யாணம்

செய்துகொண்டு விநாயகர் ஸுப்ரமணியர் முதலிய வர்களை உண்டாக்கி உலகங்களைக் காத்து ரக்ஷித்தாள்.

விஞ 14.—மனுவின் மாப்பிள்ளை தக்ஷர் கதை இவ்வாருக பிள்ளை உத்தானபாதர் வம்சத்தின் விவரம் என்ன ?

விடை.—மனுவுக்கு பகவான் அம்சம் இருந்தபடியால் அவரது பிள்ளையாகிய உத்தானபாதருக்கு உலகை யாளும் திறனுண்டாயிற்று. அவர் நெறிவழுவாது ஆண்டு வருகையில் முதலில் ஸுநீதி என்பவளையும் பின்பு ஸுருசி என்பவளையும் கல்யாணம் செய்து கொண்டார். அவருக்கு முன்னவளிடத்தில் துருவன் என்ற பிள்ளையும், பின்னவளிடத்தில் உத்தமன் என்ற பிள்ளையும் உண்டாக, அவர் வெகு உத்ஸாஹத்தோடு இராஜ்யம் ஆண்டு வந்தார்.

விஞ 15.—இவ்வாறு இருக்கும் நாளில் உத்தானபாதருக்கு ஏன் என்ன விபரீத நிலை உண்டாயிற்று ?

விடை.—இப்படி இருக்கையில் அவருக்கு வர வர இளையாளாகிய ஸுருசியின் பேரில் காலத்தின் கொடுமையால் ஆசை ஆதரிக்க, அவர் மஹா தர்மசீலையாகிய ஸுநீதியையும் அவள் பிள்ளை துருவனையும் கொஞ்ச காலம் மறந்து இளையாளது ஸுகத்திலேயே அழுந்திப் போய்விட்டார். ஒருநாள் நிலாமுற்றத்தில் உத்தமனை மடியில் வைத்துக்கொண்டு ஸுருசியின் ஸந்நிதானத்தில் அரசன் விளையாடிக் கொண்டிருக்கையில், துருவன் அங்குவந்து அரசன் தன் தகப்பன் என்று அறிந்தவனாய் அவன் மடியில் மிகுந்த ஆவலோடு ஏற வந்தான். ஸந்தோஷ மயக்கத்திலிருந்த அரசன், குழந்தையை லக்ஷ்யமே செய்ய வில்லை.

வி௵ 16.—இவ்வாறு அரசன் இருந்துவிட அப்பொழுது அங்கு என்ன நடந்தது?

விடை.—மிகுந்த ஆவலோடு வந்த துருவனை நோக்கி ஸுருசி முன்பின் யோசியாது, 'அடே பயலே! உனக்கு இவ்வரசன் மடியில் ஏறி விளையாட யோக்யதை இல்லை! நீ என் சக்களத்தி வயிற்றில் பிறந்ததால் தான் உனக்கு இந்த விஷயம் அஸாத்யமாகப் போய் விட்டது. ஆகையால் உனக்கு அரசன் மடிமேல் ஏற வேண்டும் என்ற ஆவல் இன்னும் இருந்தால் தபஸு செய்து பகவானை ஆராதித்து என் வயிற்றில் வந்து பிற' என்று கொடிய வார்த்தையால் தாக்கினாள். இந்தக் கொடுமை பொறுக்க முடியாத துருவன் கண்ணும் கண்ணீருமாக அரசனைத் திரும்பி திரும்பிப் பார்த்துக்கொண்டு தன் தாயாகிய ஸுநீதியண்டை போய் விட்டான். இவைகளைப் பார்த்திருந்த அரசன் ஸுருசி மேல் இருந்த மோஹத்தால் ஒன்றும் சொல்லாது மதம் பிடித்தவன்போல் இருந்து விட்டான்.

வி௵ 17.—ஸுநீதிதன் அருமைப் பிள்ளையாகிய துருவனுக்கு என்ன புத்திமதி கூறினாள்? இதனால் என்ன விளைந்தது?

விடை.—'கண்ணே! நமக்குச் செய்யும் குற்றத்தைப் பாராட்டுவது அழகன்று. ஸுருசி சொன்னது உண்மையே! அரசன் தன் பெண்ஜாதி என்று அங்கீகரிக்க வெட்கப்படும் என் வயிற்றில் பிறந்தது உன் துரதிர்ஷ்டமே! ஆதலால் கோபம் முதலியவைகளை விட்டு உன் சிற்றம்மை சொல்லியபடி நட! பகவானை ஆராதி! அவரை ஆராதிப்பவர்களுக்கு ஒருநாளும் ஒருகுறை

வும் வாராது. பகவான் எங்கும் பரவியுள்ளவர் என்பதை அறிந்து வழிபட்டு உன் தாதா மனு மேன்மையை அடைந்திருக்கிறார்! மனதை ஏகாக்கிரப்படுத்திக் கொண்டு, சுத்தனாக ஆதிபுருஷரை இடைவிடாமல் வழிபடு. நானும் அவரையே வழிபட்டு என் துக்கம் முதலியவைகளைத் தீர்த்துக் கொள்ளுகிறேன்,' என்று புத்திமதி கூற, தாயின் சொற்படி தன் மனதை அடக்கிக் கொண்டு துருவன் தபஸு செய்ய அரண்மனை விட்டுப் புறப்பட்டான்.

வினா 18.—போகும்வழியில் துருவனுக்கு யார் எதிர்ப்பட்டு எவ்வாறு அவனைப் பரீக்ஷைசெய்தார்கள்?

விடை.—துருவன் மிகுந்த உறுதியோடு வனம்நோக்கிப் போகும்வழியில், ஸகல விஷயங்களையும் அறிந்து எல்லாம் நன்றாக முடிவுபெறும்படி செய்யும் லோக ஹிதராகிய நாரதர் எதிர்ப்பட்டு அவன் உறுதி இத்தன்மையது என்று வெளிக்கொண்டு வருவதற்காக 'அப்பா நீயோ சிறுபிள்ளை! உனக்கு மானாவமானம் ஏது? நீ வீணாகச் சிற்றம்மைமேல் கோபம்கொண்டு இவ்வாறு முரட்டுத்தனமாகப் போகாதே! காட்டிலோ புலி, கரடி முதலிய துஷ்டமிருகங்களிருக்கின்றன. அவைகளுக்கு வீணாக இரையாகாதே! இவ்விளம்பிராயத்தில் உனக்குக் கடவுளைக் காணுவதற்கு வேண்டிய மனோதிடம் முதலியன எவ்வாறு வரும்? ஆகையால் நீ திரும்பி இராஜ்யம் போ' என்று புத்திமதி கூறினார். இதைக்கேட்ட துருவன் 'ஐயா எனக்கு மஹான்களுக்கு உள்ள குணங்கள் ஒன்றும் இல்லை என்பது உண்மைதான். எனக்கு அவை உண்டாவதும் மிகக்கஷ்டமாக இருக்கலாம். என் சிற்றம்மையின் வார்த்தை என்மனதில்

பட்டுவிட்டது. நான் க்ஷத்திரியனாகையால் இனி என்னால் இராஜ்யத்திற்குப் போக முடியாது. நான் எனது மூதாதைகள் முதலியோர் இதுவரையிலும் அடைந்திராத மேன்மையான பதத்தை அடையவேண்டும் என்று தீர்மானித்து விட்டேன். தாங்களோ பகவானது தேகத்திலிருந்து வெளிவந்த பெரியோர்கள். தாங்கள் நினைத்தால் என்னை மேன்மைப்படுத்தி விடலாம். ஆகையால் தயவுசெய்து எனக்கு எளிதில் பகவானை அடையும் வழியை எடுத்துரைத்து என்னைக் கறை யேற்றி விடுங்கள்' என்று மஹாவிநயத்தோடு சொல்ல நாரதர் அவனது உறுதியை மெச்சிகொண்டு பகவானை எளிதில் சென்றடையும்வழியை விஸ்தரித்தார்.

வினா 19—நாரதர் துருவனுக்குச் சொன்ன வழிகளின் சுருக்கம் என்ன?

விடை.—மேன்மை அடைய எண்ணம் உடையோர் ஹரியை பூஜிக்கவேண்டியது என்று உன் தாயார் சொல்லியதே சரி. அருகாமையில் மதுவனம் என்றொரு வனமுண்டு. அது ஹரிக்கு இருப்பிடமென்று பெரியோர் சொல்லுவர். அங்குசென்று மூன்றுகாலம் அங்குள்ள திவ்யதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, தேவதைகளைத் துதிசெய்துவிட்டு குசாஸனத்தில் உட்கார்ந்து பிராணாயாமத்தை ஒழுங்காய்ப்பழகு. அதன்பின்பு மிகுந்த அழகு, சாந்தம் முதலிய கல்யாண குணமுடையவராயும், திவ்ய அங்கங்கள் உடையவராயும், யௌவன வயது உடையவராயும், மார்பில்ஸ்ரீவத்ஸம் என்றமறுஉடையவராயும், கௌஸ்துபமணி அணிந்தவராயும், உன் மனதிலேயே இருப்பவராயும் உள்ள ஹரியை, ஓம் நமோ பகவதே வாஸுதேவாய என்ற மந்திரமூலமாகவும், துளஸி என்ற

அவருக்குப் பிரியமான புஷ்பமூலமாகவும் த்யான ஆராதனாதிகளைச் செய்தபின்பு அவரது லீலைகள், அனந்தகல்யாண குணங்கள் முதலியவைகளை த்தியானம் செய். இவ்வாறு செய்தால் உனக்கு தேஹத்தோடு அனுபவிக்கத் தகுந்த எல்லாவற்றையும் ஹரி பிரசந்நமாகித் தாமே கொடுப்பர். உனக்கு மோக்ஷமே வேண்டுமாகில் நீ அவரை விஷயபோகங்களில் இச்சைவிட்டு ஆராதித்தால், அவராலே அதையும் நீ எளிதில் அடையலாம்' என்றார்.

**வின 20.**—இவ்வாறு துருவனுக்கு உபதேசம் செய்துவிட்டு நாரதர் என்ன செய்தார்? துருவன் என்ன செய்தான்?

விடை.—இவ்வளவையும் சொல்லிவிட்டு நாரதர் திடீரென்று பட்டணம்வந்து உத்தானபாதனைக் கண்டார். அவன் மிகுந்த வியஸனத்துடன் இருந்தான். 'நாம் துருவனை எடுத்து விளையாடாது தள்ளிவிட்டோமே' என்ற எண்ணம் அரசனுக்குப் பின்புத்தியாக வர ஸுநீதியின் ஞாபகமும் அவளைத் தான் படுத்திய பாடும் ஞாபகத்திற்கு வந்தது. பின்பு துருவன் தமது அஜாக்கிரதையாலேயே கோரமான காடு புகுந்து விட்டான் என்பதைக் கேட்டவுடன் அரசனுக்குத் துக்கம் அதிகரித்து விட்டது! இதனாலேயே நாரதர் வந்த பொழுது அவன் துக்கத்தில் ஆழ்ந்திருந்தான். இக் காரணங்களைக் கேட்டறிந்த நாரதர் அரசனைத்தேற்றிக் கூடிய சீக்கிரத்தில் துருவன் ஸகலரும் புகழ வந்து ராஜ்யம் ஆளப்போகிறான் என்ற விஷயத்தையும் தெரிவித்து லோக ஹிதார்த்தம் நாரதர் ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டு புறப்பட்டு மறைந்தார்.

துருவனே நாரதர் சொற்படி மதுவனம் சென்று தபஸுக்குத் தொடங்கினன்.

வி **21**.—துருவன் தபஸு செய்தவிதம் எப்படி? அதனல் என்ன பலன் உண்டாயிற்று?

விடை.—ஒரு நாளுக்கு ஒரு இலந்தப்பழத்தைத் தின்று கொண்டு நாரதர் சொல்லியபடியே முதல்மாஸமும், ஆறுநாளுக்கு ஒரு தரம் உதிர்சருகு புல் முதலியவைகளை உட்கொண்டு இரண்டாம் மாதமும், பத்து நாளைக்கு ஒருதரம் தீர்த்தபானம் மாத்திரம் செய்து கொண்டு மூன்றும் மாதமும், பதினைந்து நாளைக்கொருதரம் மூச்சின் மூலமாக காற்றைமாத்திரம் உட்கொண்டு நான்காம் மாதமும் இடைவிடாது துருவன் தபஸு செய்தான். ஐந்தாம் மாதம் தனது மூச்சை அடக்கிக்கொண்டு ஒற்றைக்காலில் நின்று கொண்டு துருவன் மிகுந்த ஏகாக்கிர மனத்தோடு மெய்ம்மறந்து பகவானைத் தியானம் செய்தான். இவ்வாறு இவன் தபஸு செய்யச்செய்ய தேவதைகளுக்கு நிலைக்க முடியாது பகவானிடம் சென்று தெரிவித்தார்கள். வந்த ஸங்கடம் துருவனல் என்பதாகவும், அதைத் தாம் எளிதில் தீர்ப்பதாகவும் வாக்களித்தார். அப்பொழுது நாரதர் சொல்லியபடி பகவானது திவ்யமங்கள ரூபம் மனதில் உதிக்க துருவன் மிகுந்த ஆனந்தத்தோடு தியானத்தில் மூழ்கி இருந்தான்.

வி **22**.—பகவான் எவ்வாறு தரிசனம் கொடுத்தார்? அப்பொழுது அங்கு என்ன நடந்தது?

விடை.—பகவான் தமது திவ்யமங்களரூபத்துடன் தபஸு செய்து கொண்டிருந்த துருவன் முன் வந்து நின்றார்.

துருவன் பகவானது திவ்யமங்களரூபத்தில் ஈடுபட்டுத் தியானம் செய்து கொண்டிருந்ததால் கண்திறந்து வெளியில் வந்திருக்கும் பகவானைப் பார்க்கவில்லை. உடனே அவன் ஹிருதயத்திலிருந்த தமது ரூபத்தை பகவான் மறைக்க, துருவன் கண் விழித்து நோக்கி ஆனந்தத்தில் மூழ்கினுன். சிறு பிள்ளையாகையால் ஸ்தோத்திரம் செய்ய வாயெழாது நிற்கையில் பகவானது அருளால் அவனுக்குத் துதிக்கும் சக்தி உண்டாயிற்று. உடனே துருவஸ்வாமி 'என் இந்திரியம் முதலியவைகளுக்குச் சக்திகொடுக்கும்' ஈசா என்று தகுதியாகத் தொடங்கிப் பகவானைத் துதி செய்தார். அதில் துருவஸ்வாமி பகவத்தரிசன மஹிமையால், தான் தபஸுக்கு வந்த காரணதிகளை மறந்து 'எனக்கு அழியாப் பதவி வேண்டும் அல்லது, அது ஸித்திக்கத் தக்க ஸத்ஸங்கம் வேண்டும்' என்று கேட்டார். எல்லாவற்றையும் அறிந்த பகவான், 'உனக்கு அழிவற்றதாயும் அசைவற்றதாயும் உள்ள பதவியைக் கொடுத்தேன். ஆனுல் நீ தபஸுக்கு இந்த ஆவலோடு வரவில்லையாகையால் உலகத்தில் வெகு காலம் நெறி வழுவாது இராஜ்யம் ஆண்டு உன் கீர்த்தியை நிலை நிறுத்திவிட்டு மேலான நிலையை அடைவாய்' என்று மறைந்தருளினுர். இதை அங்கீகரித்துத் துருவஸ்வாமி தமது ராஜ்யம் சென்றுர்.

வினு **23.**—இராஜ்யத்தில் பின்பு என்னென்ன நடந்தது?

விடை.—இராஜ்யம் சென்றதும் தமது தகப்பன் சிற்றம்மை தாய் முதலியோரை அடிபணிந்து துருவஸ்வாமி நிற்க, எல்லோரும் மகிழ்ந்து அவருக்கே இராஜ்யத்தை ஒப்புவிக்கும்படி அரசனை வேண்டினுர்கள். அரசன் அவ்



பகவான் துருவருக்குப் பிரத்யக்ஷமாதல்.

வாறே செய்து தவவேடம் பூண்டு ஸுநீதியுடன் வனம் சென்றான். துருவஸ்வாமி நெறிவழுவாது இராஜ்யம் நடத்திவரும் நாளில் அவர் தம்பி உத்தமன் வேட்டையாடப்போன இடத்தில் ஒரு யக்ஷனால் இறக்க, அதை ஸஹியாது ஸுருசி அவனைத் தேடிச்சென்று ஒரு காட்டுத் தீயில் மாண்டாள். இதைக்கண்ணுற்ற துருவஸ்வாமிக்கு யக்ஷர்மேல் கோபம் உண்டாயிற்று.

வினா **24**.—துருவ ஸ்வாமி தமது கோபத்தை எவ்வாறு காட்டினார்? அதை யார் எவ்வாறு தடுத்தது?

விடை.—இந்தக்கோபத்தால் துருவஸ்வாமி தமது ஸேனைகளை நடத்திக்கொண்டு யக்ஷர்கள் இருப்பிடமாகிய குபேரபட்டணம் வந்து பெரும்போர் விளைத்து அநேகம் யக்ஷர்களை ஈவு இரக்கமின்றிக் கொன்று சாய்த்து வெற்றி பெற்றார். இவ்வாறு கோபமிகுதியால் யக்ஷர்களையே சின்னபின்ன மாக்குகையில் துருவஸ்வாமி முன்பாக மனு அநேக மஹரிஷிகளோடு தோன்றி 'அப்பா குழந்தாய் அநியாயமாக ஒருவன் மேலிருக்குங் கோபத்தால் அவன் ஜாதியையே இவ்வாறு அழிக்காதே! இவ்வாறு செய்தால் ஹரியின் பாதாரவிந்தம் எவ்வாறு ஸித்திக்கும். ஆகையால்கொலைத்தொழிலை நிறுத்து!' என்று சொல்லிப் பகவானை அடையும் வழியை அவர் விஸ்தாரமாக எடுத்துரைத்தார். உடனே துருவஸ்வாமி வெட்கித் தமது கொலைத் தொழிலை நிறுத்திவிட்டார்.

வினா **25**—துருவஸ்வாமி கொலைத்தொழிலை நிறுத்தியதும் அங்கு என்ன நடந்தது?

விடை.—இந்த ஸங்கதியை அறிந்த குபேரன், யக்ஷர்கள் அவர்கள் விதியால் இறந்தார்கள்என்று தன்னைத்தானே

தேற்றிக்கொண்டு துருவஸ்வாமியை எதிர்கொண்டு வந்து பகவத் ஆராதாைக்கிரமத்தை அவருக்கு எடுத்துரைத்து 'ஏதாவது வரம் வேண்டுமானல் கேட்டுக்கொள்' என்று துருவஸ்வாமிக்கு அனுமதி கொடுத்தான். அப்போது அவர் தமக்கு 'ஹரியின் ஞாபகம் எப்பொழுதும் மாருதிருக்க வேண்டும்' என்று கேட்க, 'அவ்வாறேஆகுக!' என்று வரமளித்துக் குபேரன் மறைந்தான். இதன்பின்பு சிற்றின்பங்களால் தமது மேன்மையைத் தணித்துக்கொண்டும், மனோநிரோதத்தால் அதை அடிக்கடி பலப்படுத்திக்கொண்டும் துருவஸ்வாமி வெகுகாலம் அரசாண்டு வந்தார்.

**விஞ 26.**—துருவஸ்வாமி எவ்வாறு பரமபதம் அடைந்தார்?

**விடை.**—வெகுகாலம் இவ்வாறு தர்மார்த்த காமங்களில் புரண்டு எழுந்து மோக்ஷாபேக்ஷிதராகித் தமது ராஜ்யத்தைத் தன் பிள்ளை வசம் ஒப்புவித்துவிட்டு வனம் சென்று முன் நாரதர்சொல்லி தாம் இருந்தபடி மறுபடி கிரமமாக இருந்தார். இதன் முடிவில் ஹரிஸேவகாள் வந்து துருவஸ்வாமியை திவ்ய விமானத்தில் ஏற்றிக்கொண்டு அழிவற்ற மேலான பதவியில்கொண்டு சேர்த்தார்கள். எல்லா அண்டங்களும் அவரையே ஆதாரமாகக்கொண்டு சுழன்று வருகின்றன. இப்பொழுதும் அவர் ஆகாயத்தில் வடக்குப்பாகத்தில் துருவமண்டலத்தில் ஸ்திரநக்ஷத்திரமாக இருக்கிருர் என்று புராணங்கள் கூறுகின்றன.

**விஞ 27.**—இச்சரித்திரத்தில் உட்பொருள் யாது?

**விடை.**—உத்தானபாதனை ஆத்மா எனக்கொண்டு, அவனுடைய ஸுநீதி ஸுருசி என்ற பத்னிகள் இருவரை ஆத்

மாவுக்குத் தேகஸம்மந்தத்தால் வரும்படியான பகுத்தறிவு, ஸுகஉணர்வு எனக்கொண்டு, துருவன் உத்தமன் ஆகிய இவர்கள் அழியாஞானம் (துருவம்=அசையாது) அஞ்ஞானம் (உத்தமம்=சிறந்த அஞ்ஞானம்) எனக்கொண்டு, உத்தானபாதன் ஸுருசியிடம் மோஹித்து உத்தமனை ஆதரித்து ஸுநீதியை மறந்து துருவனைத் தள்ளிவிடுவது, மனிதன் ஸுகத்தில் ஆசைகொண்டு உலகில் உழன்று, தனது பகுத்தறிவு மழுங்கி அதனால் ஏற்படக்கூடிய ஞானத்தைத் தள்ளிவிடுவதையும், துருவன் ஸுருசியினால வருந்தித் தவம்செய்து முன்னிருந்த ஆசைக்காக ராஜ்யம்பெற்றுப் பின்னர் பரமபதம் அடைந்தது, ஞானம் உலக விஷயமாகத் திரும்ப, அங்கு இருக்கும் ஸுகாதிகளால் மொத்துண்டு வருந்தி மேல்நோக்கித் திரும்பிப் பரிசுத்தமாகி முன்னுள்ள ஸம்பந்தத்தால் தேகத்தோடு கொஞ்சகாலம் இருந்து பின்னர் பரம்பொருளோடு இரண்டறக் கலத்தலையும் உணர்த்துகின்றன என்று கூறலாம். இதுவே துருவசரித்திரத்தில் அடங்கியிருக்கும் உட்கருத்து.

வினா **28.**—துருவனது வம்சம் எவ்வாறு விருத்தியாக அதில் எந்த முக்கிய அரசர்கள் தோன்றினார்கள்?

விடை.—துருவனுக்கு அநேக குழந்தைகள் இருந்தார்கள். அவர்களுள் உத்கலன் என்பவன் முக்கியன். மற்றைய பிள்ளைகள் வம்சத்தில் அநேக தலைமுறைக்குப் பின் அங்கன் என்ற அரசன் பிறந்தான். இவனுக்கு வேனன் என்ற கொடிய பிள்ளையுண்டானான். இவன் பிள்ளை, பூமியை நல்ல நிலைக்குக் கொண்டுவந்த பிருது சக்ரவர்த்தி. பிருதுவின் பிள்ளை விஜிதாசுவன்

என்பவன். இவன் வம்சத்தில் பிராசீனபர்ஹிஸ் என்பவர் பிறந்தார். அவருக்கு 10 பிரசேதஸ்ஸுக்கள் பிறந்தார்கள். இதுவே துருவனது வம்சத்தில் பிறந்தோருள் முக்கியமாகு விவரம்.

விஞ 29.—உத்கலன் எவ்வாறு தன் வாழ்நாளைக் கழித்தான் ?

விடை.—உத்கலன் பிறவி ஞானி. இவனுக்குச் சிறு பிராயத்திலே பெரியோருக்கும் கிடைக்காத ஸமதிருஷ்டியும் திடச்சித்தமும் அனுபூதியுங் கிடைத்துவிட்டது. இவன் குழந்தைகளைப்போல கபடமற்ற சித்தனையும், பைத்தியக்காரன்போல தேசாதிகளில் அசிரத்தை உடையவனையும், பிசாசுகள் போல சிற்சில ஸமயங்களில் பார்ப்போருக்குப் பயங்கரனையும் தோன்றுவான். இவன் மனம் ஸதா பரம்பொருளிடமே லயித்திருந்ததால் வேறொன்றிலும் இவன் மனம் செல்லாமல் போய்விட்டது. அவ்வூர் பெரியோர்கள் இவனை ஜடன் என்று எண்ணி இவன் தம்பிக்கு ராஜ்யாதிபத்யம் கொடுத்தனர். உத்கலனே ஒன்றும் ஒட்டாதவனாய் இருந்து முடிவில் ஒப்புயர்வில்லாப் பரமபதத்தை அடைந்தான்.

விஞ 30.—அங்கன் என்ற அரசனுக்கு வேனன் எப்படி உண்டானன் ?

விடை.—முன்னொரு காலத்தில் அங்கன் ஒரு அசுவமேத யாகம் செய்தான். அதில் ஆகுதி கொடுக்கும் ஸமயத்தில் ஹவிர்ப்பாகம் வாங்க ஒரு தேவரும் வரவில்லை. ஒரு விஷயத்திலும் தப்பிதம் இல்லாதிருக்கையில் தேவர்கள் வராத காரணம் இன்னது என்று புலப்

படாது, பிராமணர்கள் வெகுகாலம் தத்தளித்து முடிவில் அங்கன் பிள்ளையில்லாதவனுக இருந்ததே அதற்குக் காரணம் என்று அவர்கள் தீர்மானித்தார் கள். அதை நீக்குவதற்காக அந்த ஹோமாக்கினியி லேயே விஷ்ணுவை உத்தேசித்துப் புத்திரகாமேஷ்டி ஆகுதியைப் பிராமணர்கள் கொடுக்க, யாகநெருப்பி லிருந்து ஒரு பொற்பாத்திரத்தில் பாயசத்தோடு அக்கினி பகவான் கிளம்பினுர். இதை அங்கன் மஹா வினயத்துடன் வாங்கித் தன் பெண்சாதிக்குக் கொடுக்க அவள் கொஞ்சநாளைக்கெல்லாம் ஒரு பிள்ளையைப் பெற்ருள். அது வரவரக் கொடிய குணங்களையே காட்டிக்கொண்டு வந்தது.

வின 31.—வேனன் என்ன கொடிய செய்கைகளைச் செய்தான்? இதனுல் அங்கராஜன் என்ன செய்தான்?

விடை.—வேனனுக்கு கொலைசெய்தல் என்ருல் கொண் டாட்டமாகவே இருந்தது. குழந்தைகளுக்கு வேனன் என்ருல் மிகுந்த பயம். அஸுரர்கள் எவ்வாறு கஷ்டப்படுத்திக்கொண்டும் உலகத்தை கலக்கிக்கொண் டும் வந்தார்களோ அவ்வாறு இவனும் லோககண்டக னுகவே இருந்தான். தகப்பனுரான அங்கராஜன் எவ்வளவோ கஷ்டப்பட்டு வேனனைத் திருப்பிப்பார்த் தார். ஒன்றும் பயன்படாமல் போய்விட்டது. முடிவில் அவருக்கு உலகவாழ்க்கையிலேயே தன் பிள்ளையால் வெறுப்பு உண்டாய்விட்டது. இந்தப்பிள்ளை தான் தனக்கு வைராக்கியம் வரும்படி செய்யவந்த தேவ தூதன் என்று எண்ணி, அரசர் ஒருநாள் இரவில் தன் பெண்சாதி அண்டையிலிருந்து எழுந்து ஒருவருக் கும் தெரியாமல் வனத்துள் பிரவேசித்துவிட்டான்.

அரசன் போனதை அறிந்த பிரஜைகள் அவனைக் காடெங்கும் தேடிக்காணாது இராஜ்யம் வந்து ஸங்கதி தெரிவித்து விட்டனர்.

வின 32.—அப்பொழுது வேனன் கதி என்னவாயிற்று? அவன் என்ன செய்தான்?

விடை.—உலகத்திற்கு ஹிதம் செய்வதே விருதமாகக் கொண்ட பிருகு முதலிய ரிஷிகள் இராஜ்யம் வந்து, வேனனுக்கு அவன் தாய் முன்னிலையில் ராஜ்யத்தைக் கொடுத்தார்கள். ராஜ்யபாரம் தாக்கின பின்பாவது வேனன் நல்ல வழிக்கு ஒருவேளை திரும்பினாலும் திரும்பலாம் என்பது மஹரிஷிகளது எண்ணம். வேனனோ தன்னிடம் அதிகாரம் வந்தமாத்திரத்தில் முன்னிலும் பதின்மடங்கு கொடியவனாக மாறிவிட்டான். ரிஷிகள் முதலியோர் செய்துவந்த யாகங்கள் முதலிய ஸத்காரியங்களை அவன் தடுத்துவந்தான். எல்லா நல்ல காரியங்களுக்கும் அவன் விரோதியாக ஏற்பட்டான்.

வின 33.—அப்பொழுது ரிஷிகள் என்னென்ன செய்து பார்த்து முடிவில் என்ன செய்தார்கள்?

விடை.—இவ்வாறு வேனன் ஸகிக்க முடியாத அக்கிரமங்களைச் செய்து வருகையில் ரிஷிகள் எல்லோரும் ஒன்றாகக் கூடி இந்த விஷயத்தைப்பற்றி ஆலோசித்து 'முதலில் வேனனுக்குத் தம்மால் இயன்றமட்டும் புத்தி கூறிப்பார்ப்பது. அதை அவன் கேட்காவிடில் அவனை தமது தபோமஹிமையால் சுட்டுக்கொல்வது' என்ற தீர்மானத்திற்கு வந்தார்கள். உடனே எல்லோரும் எழுந்து வேனனண்டை வந்து எவ்வளவோ ஹிதமான

வார்த்தைகளைச் சொல்லி நன்னடக்கை எவ்வாறு மோக்ஷத்தை அடைவிக்கும் என்பதை நன்றாக ரிஷிகள் விளக்கிப் பார்த்தார்கள். வேனன் அதை கேட்காது 'நீங்கள் செய்யும் யாகாதிகள் எவ்வாறு நல்ல கர்மங்கள் ஆகும்? கடவுளையாவது தேவதைகளையாவது உத்தேசித்து ஒரு கர்மத்தையும் செய்யாதேயுங்கள். சாஸ்திரப்படியே ராஜனிடத்தில் விஷ்ணு முதலிய ஸகல தேவதைகளும் இருக்கிறார்கள். ஆகவே எல்லாக் கர்மங்களையும் என்னை உத்தேசித்தே செய்யுங்கள். இல்லாவிடில் நான் நீங்கள் செய்யும் கர்மங்களை அவசியம் தடுப்பேன்?' என்று உறுதியாக மறுமொழி கூறினான். தமது நயம் யாவும் வீணானது கண்டு ரிஷிகள் அவனை ஜனங்களது பொதுநன்மைக்காகச் சபித்துக் கொன்றார்கள். உடனே வேனன் உயிரிழந்து கீழே விழுந்து விட்டான்.

வி **34.**—வேனனிறந்ததும் ரிஷிகள் என்னசெய்து உலகைக் காத்தார்கள்?

விடை —வேனனைச் சபித்த கோபத்தில் மேல் ஒன்றும் செய்யாது ரிஷிகள் தமது ஆசிரமம் சென்றனர். கொஞ்சநாளைக்கெல்லாம் உலகம் ராஜனில்லாது அழியப்போகிறதைக் குறிப்பிக்கும் அபசகுனங்கள் அவர்கள் முன்பு உண்டாக உடனே அவர்கள் ஓடோடியும் வந்து தைலத்தில் காப்பாற்றி வைக்கப்பட்டிருந்த வேனனது தேகத்தில் தொடையை மந்திரப் பூர்வமாகக் கடைய அதிலிருந்து ஒரு கரிய உருவத்தோடு குள்ளமாகிய ஒரு புருஷன் உண்டானான். அவன் ராஜ்யமாள அருகனல்லன் என்று ரிஷிகள் வேனனது கைகளைக் கடைந்தனர். அதிலிருந்து ஒரு அழகிய பிள்ளையும்

பெண்ணும் உண்டாக அவர்களுக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுக்கும்படி சொல்லிவிட்டு ரிஷிகள் மறைந்தனர்.

வினா 35.—இவர்களின் பெயர் என்ன? இவர்கள் உண்டானதும் என்ன நடந்தது?

விடை.—பிள்ளைக்கு பிருது என்றும், பெண்ணுக்கு அர்ச்சி என்றும் பெயர். இவர்கள் உண்டானதும் உலகமே ஸந்தோஷக் குறிகளைக் காட்டியது. பகவான் லோக ரக்ஷணார்த்தம் அவதரித்தால் உலகம் எவ்வாறிருக்குமோ அவ்வாறிருந்தது. உண்மையாகவே இந்த பிருது என்பவர் விஷ்ணுவின் அம்சாவதாரமும், அர்ச்சி என்பவள் லக்ஷ்மியின் அவதாரமுமாம். பிராமணர் முதலியோர் இந்த ரகஸ்யத்தை அறிந்து பிறந்த குழந்தைகளை வாயாரத் துதிக்கத் தொடங்கினர். பிருது 'நான் ஒரு நல்ல காரியங்களும் செய்யாதிருக்கையில் ஏன் என்னை இவ்வாறு துதிக்க வேண்டும்' என்று கேட்டபோதிலும் எல்லோரும் துதியை நிறுத்தவில்லை.

வினா 36.—பிருது சக்ரவர்த்தி ராஜ்யபாரம் தொடங்கியதும் என்ன விசித்திர காரியம் செய்தான்?

விடை.—பிருது சக்ரவர்த்திக்கு நல்ல வயஸு வந்ததும் ராஜ்யத்தை ரிஷிகள் அவனிடம் ஒப்புவித்துப் போயினர். வேனனது காலத்தில் பூமியில் விளைவிக்கும் சக்தி குறைந்துபோக எல்லோரும் பஞ்சத்தில் மிகுந்த கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தனர். இதையறிந்த பிருது பூமியினிடமிருந்து அவளது ரஸங்களை வெளிக்கொண்டுவர மிகுந்த கோபத்துடன் பூமியைத் தண்

டிப்பதாக அம்பும் வில்லுமாகப் புறப்பட்டான். உடனே பூமிதேவி மிகப்பயந்து ஒரு மான் உருவத்தோடு ஓடத் தலைப்பட்டாள். அது சென்றவிடமெல்லாம் பிருதுவும் மிகுந்த கோபத்தோடு துரத்திச் சென்று ஓர் இடத்தில் பிடித்து அதைத் தண்டிக்கத் தொடங்கினான். அப்பொழுது பூமிதேவி பயந்து, 'இதுவரையில் கொடியவர்கள் சோற்றுக்குச் செலவாகவும், பூமிக்குப் பாரமாகவும் இருந்தமையால் நான் ஸகல ஓஷதி முதலியவைகளை என்னுள் ஒளித்துக் கொண்டேன். ஆகையால் பஞ்சம் வந்தது. இப்பொழுது உம்மைப்போன்ற தர்மராஜா வந்தபின் பிறகு எனக்குப் பயம் நீங்கிற்று. நான் மனதார இதோ எனது ரஸங்களைக் கொடுக்கிறேன். எடுத்துக்கொள்ளும்' என்றாள்.

வினா 37.—அப்பொழுது பிருது எவ்வாறு பூமியினிடத்திலிருந்து ஸகல ஸாரத்தையும் வெளிக்குக்கொண்டு வந்தான்?

விடை.—பூமிதேவி பசுவாக மாற, பிருதுசக்ரவர்த்தி மனுவைக் கன்றாகக்கொண்டு ஓஷதிகளையும், பிருஹஸ்பதியைக் கன்றாகக்கொண்டு ரிஷிகளையும் வேதங்களையும், இந்திரனைக் கன்றாகக்கொண்டு தேவதைகள் அமிருதம், மனோபலம், தேகபலம் முதலியவைகளையும், கபிலரைக் கன்றாகக்கொண்டு ஸித்தர்களையும் அஷ்டமா ஸித்திகளையும், மாயையைக் கன்றாகக்கொண்டு ஸகல விசித்திரங்களையும் பால்போலக் கறந்தெடுத்துவிட்டான். உடனே பிருது பூமியை ஸமப்படுத்திப் பயிர்த்தொழில், பட்டணங்கள் முதலியவைகளை ஏற்படுத்தித் தனது ராஜ்யத்தைச் செழிக்கச் செய்தான்.

இவ்வாறு பிருதுவால் மேன்மை யடைந்த பூமிக்குப் பிருதிவி என்ற பெயர் வந்தது.

வினா 38.—முன் இரண்டு வினாக்களில் எடுத்துக்காட்டிய விஷயங்களின் கருத்தென்ன?

விடை.—பிருது சக்கிரவர்த்தி தனது ராஜ்யமாளும் திறமையால் பூமி செழிக்கும்படி செய்ய, எல்லாவித மேன்மையையும் அவன் ராஜ்யத்தில் உண்டாயின. ரிஷிகள் எல்லோரும் கவலை இன்றி வேதாத்யயனம் செய்தனர். பிதிர்க்கள் ஸந்தோஷமடைந்தனர். எல்லா ஸத்கர்மங்களும் சிறப்புற்று ஓங்கின. அவ்வளவு விசேஷமாகப் பிருது சக்ரவர்த்தி ராஜ்யம் ஆண்டான் என்பதே.

வினா 39.—இவ்வாறு பூமியை வசம் செய்ததும் பிருது சக்ரவர்த்தி என்ன செய்தான்? அதில் என்ன விபரீதம் விளைந்தது?

விடை.—பிரம்மவர்த்தத்தில் 100 யாகங்கள் செய்து தேவேந்திரனுக்கு ஸமானமாவதற்காகத் தீக்ஷிதனாகி அசுவமேதயாகத்தைப் பிருது தொடங்கினான். அந்த யாகம் பூர்த்தியானால் தனக்கு ஸமமாகப் பிருது ஆய் விடுவானே என்ற பயத்தால் தேவேந்திரன் அசுவமேதக் குதிரையைத் திருடிப்போய் யாகத்தைக்கலைக்க யத்தனித்தான். திருடிக்கொண்டு போகும் பொழுது பாஷண்டன் (தர்மாதர்ம விவேகமற்றவன்) காபாலிகன் (ஓர்வித கொடிய சிவமதஸ்தன்) முதலியவர்கள் வேஷத்தோடு இந்திரன் மறைந்துசென்றான். இதை யாகத்திலிருந்த ரிஷிகள் அனேகந்தரம் அறிந்து பிருதுவுக்குத் தெரிவிக்க அவன் தன் பிள்ளைமூலமாக இந்திரனைப் பிடித்துத் தோல்வி அடையும்படி செய்து

குதிரையை அநேகந்தரம் மீட்டுக் கொண்டு வந்தான். ஆகையால் இந்தப்பிள்ளைக்கு விஜிதாசிவன் என்று பெயர் உண்டாயிற்று. மேலும் இந்திரனது கொடுஞ் செயலால் உலகத்தில் பாஷண்டம் காபாலிகம் முதலிய பொய் மதங்கள் உண்டாயின. இவ்வாறு அடிக்கடி இந்திரன் யாகத்தைத் தடுக்க யத்தனிப்பதைக் கண்ட பிருது வில்லையும் அம்பையும் எடுத்துக்கொண்டு இந்திரனை யாகத்தில் கொன்று விடுவதாக யத்தனித்தான்.

வி௵ **40**—அப்பொழுது பிருதுவுக்கு யார் எவ்வாறு புத்திமதி கூறி எம்மாதிரி காரியங்களை நடத்திவைத்தது?

விடை.—இந்திரன் சாகும் தருணமாக இருக்கையில் பரம்பொருளாகிய யஞ்ஞபுருஷர் தோன்றி, 'யாகத்தில் யாகபசுவைக்கொல்லவேண்டுமே ஒழிய வேறொன்றையும் கொல்லலாகாது. மேலும் இந்திரனுக்கும் உனக்கும் பேதமில்லை. நீ 99 அசுவமேதத்தோடு நிறுத்திவிடு! அப்படி இருந்தபோதிலும் நீ இந்திரனை விட மேலே ஒழியக் கீழல்ல! இதோடு யாகத்தை நிறுத்தி இந்திரனோடு ஸமாதானமாகிவிடு. நீ 100–வது யாகம் செய்யக்கூடாது! நீ இதைச்செய்தால் உன்னால் இதை முடிக்கவும் முடியாது! வீண் அபகீர்த்தியும் வரும். நீ உலகத்தைக்காக்க வந்தவன் ஆகையால் இந்தத் தர்மத்திற்கு விரோதமாக நடக்காதே! இதுவரையிலும் உன் யாகம் தடைபட்டதிலிருந்து நீ செய்வது மனிதனுக்கு யோக்கியமல்லாத காரியம்' என்றுத் தெரிந்துகொண்டிருக்க வேண்டியது. என்று புத்திமதி கூறினார். உடனே இந்திரனுக்கும் பிருதுவுக்கும் ஸமாதானம் ஏற்பட்டது. யாகம் நின்றவுடன் ரிஷிகள் பிருதுவுக்கு

வேண்டிய வரம் கொடுத்து அவனை ஆசீர்வதித்து மறைந்தனர். எல்லோரும் போனதும் பரம்பொருள் பிருதுவை நோக்கி தேகாத்ம விவேகம், ஆசையின் ரூபம், தமது ஸர்வாந்தர்யாமித்வம், மோக்ஷத்தின் ஸ்வரூபம், ராஜதர்மம், முதலியவைகளை விஸ்தாரமாக எடுத்துரைத்து அவன் மனதைத்தெளிவித்தார். உடனே பிருது இந்திரனை மார்புறத்தழுவி, ஸ்நேகம் பாராட்டினான்.

வினா **41.**—பகவானிடம் அப்பொழுது பிருது என்ன வரம் கேட்டுக்கொண்டான்? அப்பொழுது பகவான் என்ன செய்தார்?

விடை.—பிருது பகவானை நோக்கி 'மோக்ஷத்தில் உமது அனந்த கல்யாண குணங்களைக் கேட்க முடியாதென்றால் எனக்கு அந்த மோக்ஷம் வேண்டியதே இல்லை. அவைகளை என் மனதாரக் கேட்க எனக்கு அநேக காதுகளைக் கொடுங்கள். உமது ஞாபகம் ஸதா எந்த நிலைமையிலும் எனக்கு இருக்கவேண்டும். நீர் கேட்கும் வரனைக் கொடுப்பீர் என்ற நம்பிக்கையிலேதான் உலகமே அசைகின்றது. இந்த ரகஸியம் அறியாது உலகத்தவர் எதை எல்லாமோ விரும்புகிறார்கள்; ஆகையால் எங்கள் ஹிதத்தையே தாங்கள் செய்ய வேண்டும்' என்று கேட்கப் பகவான் 'நீ விரும்பியபடி உனக்கு ஸித்திக்கும். நான் முந்தி எடுத்துக் காட்டியபடி தவறாது நட' என்று அனுக்கிரஹித்து அண்டர்ப் புகழ மறைந்தனர்.

வினா **42.**—பிருது இராஜ்யம் ஆளுங்கால் என்னென்ன ஸத்காரியங்கள் நடந்தன?

விடை.—பிருது ஒரு நாள் யாகதீக்ஷிதனாக இருக்கையில் யாகசாலையில் தமது பிரஜைகளை நோக்கி வெகு நாழிகை தனது வம்சம், கடவுள் உண்டென்பது, பக வானது பாதாரவிந்தங்களின் மஹிமை, பக்தர்களை ரக்ஷிக்கப் பகவான் எடுக்கும் ரூபங்கள், பிராம்மண ஸேவை, மனோநிரோதம் முதலிய நற்குணங்கள் வாய்ந்தவனது பெருமை, ஆகிய இவ்வரிய விஷயங் களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தான். பிரஜைகள் எல்லோரும் மிகுந்த ஆவலுடன் அரசன் சொன்ன தைக் கேட்டு வியந்து கொண்டிருக்கையில், ஸநகாதி யோகிகள் (பிரம்மாவினது மானஸ புத்திரர்கள்) அங்கு தற்செயலாக வந்து சேர்ந்தனர். அவர்களுக்குத் தகுந் தபடி வந்தனை வழிபாடுகள் செய்து பிருதுசக்ர வர்த்தி அவர்களை நோக்கி ‘கண்டதே காட்சி கொண் டதே கோலம்’ என்று உழலும் எங்களைப்போன்ற மானிடர்களுக்கு நற்கதி ஏதாவது உண்டா?’ என்று கேட்டான். அதற்கு அவர்கள் எல்லோர் மத்தியில் அரசனை நோக்கி, ‘உங்களுக்கும் வழியுண்டு; மோக்ஷம் அடைவதற்கு ஆத்மாவைத் தவிர மற்றைய பொருள் களிடத்திலுள்ள பற்றை நீக்குதல், நிர்க்குணப் பிரம் மத்தோடு ஐக்கியமாகிய ஆத்ம விஷயத்தில் பக்தி ஆகிய இவ்விரண்டுமே தக்க ஸாதனங்கள். இது விநயம், உபாஸனை, விசாரணை, நிஷ்டை, பெரியோரை வழிபடுதல், பகவத் கல்யாணகுண ஸங்கீர்த்தனம், ஆகிய இவைகள் மூலமாக ஸித்திக்கும், பாமரரோடு சேராமை, தனிமையாக இருத்தல் ஆகிய இவைகளும் ஸஹாயமானவைகளே. இவைபோன்ற நல்ல வழிகளில் பழகினால் மனிதர்கள் நற்கதி அடைவார்கள். இவைகள்

எல்லாவற்றிலும் ஹரிபக்தியே முக்கியமானது. அதை விடக்கூடாது' என்று மறுமொழி கூறினர்.

விஞ **43**.—இதைக் கேட்டதும் பிருது சக்ரவர்த்தி என்ன செய்தார்? மேல் என்ன நடந்தது?

விடை.—இந்த ரகஸியங்களை மனதில் வைத்துக்கொண்டு பிருது சக்ரவர்த்தி கொஞ்சகாலம் நெறி தவராது எல்லோரும் ஸுகிக்கும்படி ராஜ்யபரிபாலனம் பண்ணி வந்தார். இவர் புகழ் எங்கும் பரவியது. தன் பெண் ஜாதி அர்ச்சியினிடத்தில் இவருக்கு ஐந்து பிள்ளைகள் இருந்தன. முதல் பிள்ளைதான் விஜிதாசுவன். அப்பொழுது பூமியைத் தன் பிள்ளையாகிய விஜிதாசுவனிடம் ஒப்புவித்து விட்டு வனம் சென்று ஸந்யாஸியாகி யோகாப்பியாஸம் செய்துகொண்டிருந்தான். இவன் பெண்ஜாதி அர்ச்சியோ இவனோடு சென்ற விடமெல்லாம் நிழல்போல் பற்றிச்சென்று இடைவிடாது இவனுக்குத் தொண்டு செய்துவந்தாள். கொஞ்சநாளில் பிருது ஸித்தியடைய அவனது தேகத்தைச் சிதையில் வைத்து நெருப்பு மூட்டி மஹா பதிவிரதையாகிய அர்ச்சை தீயில் மூழ்கிப் பரமபதமடைந்தாள்.

விஞ **44**.—விஜிதாசுவன் எவ்வாறு அரசு நடத்திவந்தான்?

விடை.—பிருது சக்ரவர்த்திக்குப் பின்பு விஜிதாசுவன் பூமிக்கு அரசனாக, அதை நான்கு பாகமாகப் பிரித்து தன் தம்பி ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு பாகத்தைக் கொடுத்துவிட்டான். இவன் இந்திரனிடமிருந்து மறையும் வித்தையாகிய அந்தர்தானம் என்ற வித்தையைக் கற்றுக்கொண்டான். இவனுக்கு, மூன்று அக்னிகளும் வஸிஷ்டசாபத்தால் மூன்று பிள்ளைகளாகப்

பிறந்து கூடிய சீக்கிரத்தில் தமது நிலையை அடைந்தார்கள். இவன் ராஜ்ய தந்திரம் மிகக் கடினம் என்றறிந்து தீர்க்கயாகம் செய்யப்போகிறதாகச் சொல்லி மெதுவாக ஒதுங்கி யாகம்செய்து அதில் ரகஸியமாக ஆத்ம நிஷ்டைபழகிக் கூடிய சீக்கிரத்தில் பரம பதத்தையே அடைந்தான்.

வி **45**.—இவனுக்குப்பின் எந்த முக்கிய அரசன் ராஜ்யமாண்டது? அவனுக்கு அப்பெயர் வருவானேன்?

விடை.—இவனுக்குப்பின் அரசாண்டவருள் பகிர்சதன் என்ற பேரப்பிள்ளையே முக்கியன். இவனுக்குப் பிராசீனபர்ஹிஸ் என்று ஒருபெயர் உண்டு. இவன் அரசாளத்தொடங்கியதுமுதல் வேதத்தில் கர்ம காண்டத்தில் இவனுக்கு அதிக நம்பிக்கை. ஆகையால் இவன் அடிக்கடி யாகஞ்செய்துவர பூமியெங்கும் யாகத்தில் போடப்படும் கிழக்கு நுனியான தர்ப்பையாலேயே மூடப்பட்டுப்போயிற்று. ஆகையால் இவனுக்குப் பிராசீனபர்ஹிஸ் என்று பெயர் வந்தது.

வி **46**.—இவனுக்குக் கர்மகாண்டத்திலிருந்த பக்தியை யார் எவ்வாறு மாற்றியது ? பின்பு இவன் கதி என்னமாயிற்று ?

விடை.—பிராசீனபர்ஹிஸ் இடைவிடாது யாகாதிகளைச் செய்து பசுவதம்செய்வதற்கு மேல் விருத்தியாகாதிருப்பதை லோகஹிதரான குருமூர்த்தியாகிய நாரதர் கண்டு மனமிரங்கி அவரிடம் வந்து 'ஐயா ! இந்த வெறுங்கர்மத்தால் உமக்கு என்ன பயன்? துக்கமும் நீங்காது ஸுகமும் வாராதே' என்றுசொல்லி ராஜன் மனதைக் கலக்கிவிட்டார். உடனே இதன் கார

ணத்தை அரசன்கேட்க, அரசன் சிரத்தில் கையை வைத்து நாரதர் அவருக்கு ஞானக்கண்ணைக் கொடுத்தார். அப்பொழுது தாம் யாகத்தில் சிரத்தையாக இரக்கமின்றிக்கொன்ற ஆடுகள் எல்லாம் இரும்புப் பூண்கட்டிய கொம்புகளால் தம்மைக்கொல்ல மிகுந்த ஆவலோடு நிற்பதை அவர்கண்டு பயந்து, 'இனிமேல் தாம் கடைத்தேறும் வழி ஏதாகிலும் உண்டா' என்று நாரதரை நயந்து கேட்டார். அப்பொழுது அரசன் அறிந்து பிழைப்பதற்காக நாரதர் சிறந்த விஷயங்கள் அமைந்த புரஞ்ஜனனது கதையை விஸ்தாரமாகச் சொல்லி ஞானத்தை ஊட்டினார். பின்பு அவரை தம்மோடு நாரதர் அழைத்துக்கொண்டு 'ஸித்த லோகம் சென்று கபிலரால் பக்தி தீக்ஷை பெறுவித்தார். இதை அடைந்த பிராசீனபர்ஹிஸ் கூடிய சீக்கிரத்தில் பரம்பொருளோடு இரண்டறக் கலந்து விட்டார்.

வின 47.— புரஞ்ஜனன் என்பவன் யார்? அவன் என்னென்ன செய்தான்?

விடை.—முன்னொருகாலத்தில் எவனுக்கும் தெரியாத ஒரு தோழனை உடையவனாகிப் புரஞ்ஜனன் என்றொரு அரசனிருந்தான். அவன் எங்கு தேடிப்பார்த்தும் தனக்குத் தக்க இருப்பிடம் காணாது தயங்கி நின்றான். அவன் ஹிமயமலைக்குத் தென்புறத்தில் கோட்டை கொத்தளங்களும் அமைந்தும் ஒன்பது வாயிலோடு கூடிய ஒரு பட்டணத்தைக் கண்டு அதில் பிரவேசித்தான். அங்கு தற்செயலாய் வந்த அழகி ஒருவளை விவாஹம் செய்துகொண்டு அங்கேயே 100-வருஷம் ஸுகானுபவத்தில் மூழ்கி இருந்து

விட்டான். அங்குள்ள அநேக வாயில்கள் வழியாகப் புரஞ்ஜனன் தனது ஸ்திரீயோடு வெளிவந்து உல்லாஸமாகத் திரிந்துகொண்டிருந்தான். திரிவதில் ஸுகம் தீர்ந்துவிட்டால் தன் ஸ்திரீயோடு ஊருக்குள் சென்று தனக்கும் ஸ்திரீக்கும் யாதொரு பேதமும் இல்லா நிலையில் இருந்தான். ஒருநாள் தன் ரதத்தில் ஏறிக்கொண்டு வேட்டைக்குப் புறப்பட்டுப்போய் திரும்பி வந்து தன் பெண்ஜாதியைக் காணாது அவன் மனம் பதைத்தான். வெகுகோபத்தோடு கிடந்த தன் ஸ்திரீயை வசப்படுத்திக்கொண்டு ஆயுள் போவது கூடத் தெரியாதபடி அவளோடு ஸுகித்திருந்தான்.

வின 48.—புரஞ்ஜனன் இவ்வாறு ஸுகித்திருக்கையில் இவனுக்கு எவ்வாறு என்ன ஆபத்து வந்தது?

விடை.—காலன் பெண்ணாகிய ஜ்வரப்பகையைப் பெண்ஜாதியாகக்கொண்டு பயன் (பயம்) என்ற யவனராஜன், ஜ்வரம் மரணம் முதலியவைகளால் சூழப்பட்டுப் புரஞ்ஜனனது பட்டணத்துள் புகுந்தான். உடனே ஜ்வரப்பகை அங்குள்ளவை எல்லாவற்றையும் பிடித்து அவைகளின் அழகைக் கெடுத்து விட்டாள். இதைக்கண்ட புரஞ்ஜனனுக்கு அதிக துக்கம் வர அவன் வெளி வந்தான். உடனே யவனராஜன் முதலியோர் அவனைப் பிடித்துத் தடுத்துக் கட்டி விட்டார்கள். அவன் அந்த கலையபரத்தில் தனது அபூர்வ ஸ்நேகிதனையும் மறந்து தான் யாகம்செய்து கொன்ற பசுக்களால் மொத்துண்டு இறந்தான்.

வின 49.—மறு ஜன்மத்தில் இவன் கதி என்னவாயிற்று?

விடை.—மறு ஜன்மத்தில் புரஞ்ஜனன் விதர்ப்பதேசாதிபதியின் பெண்ணாகப் பிறந்தான். அவன் மலயத்வஜ

பாண்டியனது பெண்ஜாதியானுன். அவன் வயிற்றில் பிறந்த முதற்பெண்ணை அகஸ்திய மஹாமுனி விவாஹம் செய்துகொண்டார். கூடிய சீக்கிரத்தில் மலையத்வஜ பாண்டியன் தனது ராஜ்யத்தைப் பிள்ளைகளிடம் ஒப்புவித்துவிட்டுக் கிருஷ்ண பக்தி செய்துகொண்டு வனம் சென்றுன். புரஞ்ஜனனும் தன் கணவனை தெய்வமென்று கூடச்சென்று, காட்டில் தவம் செய்யும் தன் கணவனுக்கு வேண்டிய தொண்டுகளை மிகுந்த பரபரப்போடு செய்து வந்தாள். இவ்வாறிருக்கையில் மலையத்வஜன் யோகாப்பியாஸத்தால் ஸமாதி அடைய தேகம் இருந்தபடி அசையாதிருந்துவிட்டது. இதை அறியாது புரஞ்ஜனன் வெகு கவனமாகச் சிச்ருஷை செய்துவருகையில் ஒருநாள் இவன் பாண்டியன் காலில் உஷ்ணம் இல்லாதிருந்ததைக் கண்டு நடந்த காரியத்தை அறிந்து வாய்விட்டுக் கதறி அழத்தொடங்கிறுன்.

விஞ 50.—இந்த நல்ல ஸமயத்தில் யார் எவ்வாறு புரஞ்ஜனனுக்குத் தகுந்த ஸஹாயம் செய்தது ?

விடை.—இவ்வாறு தன் உண்மைநிலை அறியாது அழுது உருகும் புரஞ்ஜனனை நோக்கி முன்ஜன்மத்தில் ஒருவரும் அறியாத தோழனுக இருந்தவர் அப்பொழுது ஒரு பிராம்மண உருவோடு வந்து 'ஏ தோழா! நீ யார் ? நீ யாரைக்குறித்து இவ்வளவு பிரலாபிக்கிறுய்? நான் உன் ஸ்நேகிதனென்று விளங்குகிறதா ? உன் முன்நிலை உனக்கு ஞாபகம் வருகிறதா ? என்னைவிட்டு சிற்றின்பம் அனுபவிக்க நீ ஒரு இடம் தேடிப் புறப்பட்டவனல்லவா ? உன் சிற்றின்பத்தால் இந்நிலைக்கு வந்துவிட்டாயா ? நாம் இருவரும் மானஸ ஸரஸில் இரண்டு

அன்னங்களாக இருக்கவில்லையா? என்னைவிட்டு வந்தல்லவோ நீ இந்தப் பாடுபட்டு விட்டாய்? முன்ஜன்மத்தில் நீ மனுஷ்யனென்றும், இப்பொழுது பெண் என்றுமல்லவா நீ எண்ணி விட்டாய். நீயும் நானும் ஒன்று' என்று சொல்லிப் புரஞ்ஜனனது உண்மை உருவத்தை எடுத்துக்காட்ட அவனுக்குத் தன் ஸ்வரூப ஞானம் வந்து ஸுகத்தை அடைந்தான்.

வினா 51.—இக்கதையின் உட்கருத்து என்ன? .

விடை.—இக்கதை மனிதனது வாழ்க்கையையும் அவன் அதிலிருந்து பரமபதமடையும் ஒழுங்கையும் நன்கு உணர்த்துகிறது. இக் கதையின் கருத்து பின் வருமாறு. கடவுளையே தோழனுடைய ஜீவாத்மா அவரிடமிருந்து வேறு பட்டுத் தேகத்தை அடைந்து அதில் புத்தியை விவாஹம் செய்துகொண்டு இந்திரியங்கள் வழியாக ஸுகானுபவம் செய்கிறது. இப்படி இருக்கையில் இந்திரிய ஸுகங்களிலேயே அழுந்திப்போய் கொஞ்சகாலத்திற்கெல்லாம் ஜீவாத்மா திரும்பிப் பார்க்கையில் தன் புத்திகூட மழுங்கியிருப்பதைக் கண்டு துக்கித்து அதை தன் வசப்படுத்திக்கொண்டு அதோடு ஸுகானுபவம் செய்துகொண்டு தனது ஆயுளைக் கழிக்கிறது. இப்படி இருக்கையில் கிழத்தனம் (துர்ப்பகை) வந்து விட மிகுந்த துக்கத்துடன் இருக்க யமனது படர்களாகிய ஜ்வரம் முதலியன வந்து பிடித்துக்கொண்டு அவன் தேகத்தை வாட்டுகின்றன. தன் ஸ்நேகிதனை கடவுளையும் மறந்து ஜீவாத்மா தன் கர்மாதிகளாலேயே மொத்துண்டு மறுஜன்மத்தை அடைகிறது. இவ்வாறு அநேக ஜன்மத்தை அடைந்து (இங்கு ஒரு ஜன்மம் மாத்திரம் தான் காட்டி இருக்

கிறது) அநேக ரூபங்களோடு சேர்ந்து தானே அவ்வுருவங்கள் என்ற அஞ்ஞானத்தில் அழுந்தி முடிவில் துக்க மிகுதியாலும் ஸத்ஸங்கத்தாலும் பரிபக்குவமாகி வருந்துகையில் தோன்றாத் தோழனாகிய கடவுளே குருமூர்த்தமாக வந்து தன் ஸ்வரூபத்தையும் ஜீவப் பிரம்மம் ஐக்கியத்தையும் உபதேசித்து அதை மோக்ஷமடையும்படி செய்கிறார்.

**வின 52.**—பிராசீனபர்ஹிஸின் பிள்ளைகள் யார்? அவர்கள் முதலில் என்ன செய்தார்கள்?

**விடை.**—பிராசீனபர்ஹிஸின் பிள்ளைகள் பத்து பிரசேதஸ்ஸுக்கள். இவர்கள் முதலில் தபஸுக்குச் சென்றார்கள். போகும் வழியில் ருத்திரரை ஸந்திக்க அவர் ஸ்ரீமந் நாராயணரது மஹிமையை நன்றாக எடுத்துரைத்து அவர்களை ஞானபூர்வமாக ஆதிபுருஷரை வழிபடும்படி ஏவினார். இந்த விஷயங்களை மஹாபக்தியோடு பிரசேதஸ்ஸுக்கள் அங்கீகரித்து ஸமுத்திரத்துள் புகுந்து 1000-வருஷம் பரம்பொருளைக் குறித்துத் தபஸிருந்தனர். இதன் முடிவில் பகவான் கருடாரூடராக இவர்களுக்குத் தரிசனங்கொடுத்து 'நீங்கள் செய்த தபஸால் நான் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தேன். நீங்கள் பத்துப்பெயர்களும், கண்டு ரிஷிக்கும் ஒரு அப்ஸரஸுக்கும் பிறந்து மரங்களால் ரக்ஷிக்கப்படும் ஒரு கன்னிகையை விவாஹம் செய்துகொள்ளுங்கள். உங்களுக்கு நல்ல குழந்தைகள் பிறப்பார்கள். நீங்கள் இந்திரிய ஸுகங்களை வெகுகாலம் அனுபவித்தால் என் பேரிலுள்ள பக்தியால் அவைகள் தாமே உம்மை விடும். பின்பு நீங்கள் எளிதில் பரமபதம் அடையலாம்' என்று சொன்னார். பகவத் ஆக்ஞையைச் சிர

மேல் தாங்கிக்கொண்டு அவரை வாயாரத் துதி செய்தனர். உடனே பகவான் மறைந்தார்.

வினா 53.— அப்பொழுது பிரசேதஸ்ஸுக்கள் என்ன செய்தார்கள்?

விடை.—தபஸு நீங்கிப் பிரசேதஸ்ஸுக்கள் வெளிவந்ததும் உலகெங்கும் மரங்களால் சூழப்பட்டுக் கிடப்பதையும் ராஜ்யம் அரசில்லாதிருப்பதையும் கண்டு கோபங்கொண்டு காடுகளை வெட்டத் தொடங்கினர். அழித்து வருகையில், பிரம்மதேவர் அவர்களைத் தடுக்க, மிஞ்சி இருந்த மரங்கள் தாம் வைத்துக் காப்பாற்றிவந்த மரிஷா என்பவளைக் கொண்டு வந்தன. பிரசேதஸ்ஸுக்கள் இவளை விவாஹம் செய்துகொள்ள, இவளிடம் தக்ஷர் தான் சிவாபராதம் செய்ததற்காகப் பிள்ளையாகப் பிறந்தார். பிரசேதஸ்ஸுக்கள் கொஞ்சகாலம் ராஜ்யமாண்டார்கள்.

வினா 54.—தக்ஷருக்கு வயது வந்ததும் யார் பிரசேதஸ்ஸுக்களைப் பார்க்கவந்து என்ன செய்தார்கள்?

விடை.—இந்த ஸமயத்தில் பிரசேதஸ்ஸுக்களை ரக்ஷிக்க நாரதர் வந்து அவர்களுக்கு ஞானோபதேசம் செய்தார். உடனே தமது ராஜ்யாதிகளை அவர்கள் தக்ஷரிடம் ஒப்புவித்து விட்டு பிரசேதஸ்ஸுக்கள் நாரதர் சொல்லியபடி ஹரியின் குணங்களைக் கேட்டுக்கொண்டே எளிதில் பரமபதம் அடைந்தனர்.

வினா 55.—இவ்வளவையும் கேட்டிருந்த விதுரர் என்ன செய்தார்?

விடை.—மைத்திரேயர் தமது விஷயத்தில் கருணை கூர்ந்து அரிய விஷயங்களை எடுத்துரைத்ததற்காக அவரைப் பலவாறாகத் துதி செய்துவிட்டு, ஹரி சரணாரவிந்தத்தைத் தமது மனதில் வைத்துக் கொஞ்சகாலந் தியானம் செய்தார். இதன் முடிவில் விதுரர் மைத்திரேயரின் அனுமதியின் பேரில் தமது உறவினரைக்காண ஹஸ்தினாபுரி நோக்கிப் புறப்பட்டார்.



# 5-வது ஸ்கந்தம்

## சுகபரீக்ஷித்து ஸம்வாதம்

## ரிஷபயோகி சரித்திரம் ஜடபரதர் சரித்திரம்

*நித்தியமாய் நிர்மலமாய் நிஷ்களமாய் நிராமயமாய் நிறைவாய் நீங்காச்*
*சுத்தமுமாய் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை சுடராயெல்லாம்*
*வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி மனவாக் கெட்டாச்*
*சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச் சிந்தை*
*[செய்வாம்.*

வி**ஞ 1**—மனுவின் மூத்தபிள்ளை பிரியவிருதராஜன் முதலில் எவ்வாறு நடந்து கொண்டான்?

விடை.—பிரியவிருதராஜன் ஆதியிலே நாரதரால் உபதேசம் பெற்று தனக்கு ராஜ்யம் முதலியன வேண்டாம் என்ற எண்ணத்துடன் வனம் சென்று ஹரிபாதார விந்தங்களில் மனதைச் செலுத்துவதாகத் தீர்மானித்தான். இதை அறிந்து மனு அவனிடம் ராஜ்யத்தை ஒப்புவிக்க, பிரியவிருதர் முதலில் அதை ஒத்துக்கொள்ளவில்லை. பரமபதம் அடைய முயலுதல், தகப்பன் சொற்படி நடத்தல், இவ்விரண்டில் பரமபதம் அடைய முயலுதலே மேல் எனக்கண்ட அரசன் இவ்வாறு செய்தான்.

வி**ஞ 2.**—யார் இவனுக்கு எவ்வாறு புத்திமதி கூறியது?

விடை.—இந்த விஷயங்களை அறிந்த பிரம்மா மரீசி முதலிய ரிஷிகளை பூமிக்கு வந்து கந்தமாதனமலைக் குகையில் நாரதர் பிரியவிருதருக்கு உபதேசம் செய்து

கொண்டிருந்ததையும், மனு தன் பிள்ளையை அழைத்துப்போக வந்திருந்ததையும் கண்டார்கள். இதற்குள் பரம்பொருளும் அங்கு பிரஸன்னமானுர். அப்பொழுது பிரம்மா பிரியவிருதனை நோக்கி 'அப்பா எல்லாம் கடவுளது எண்ணத்தின்படியே நடக்கின்றன. கடவுள் எல்லா விஷயங்களையும், நாம் பின்பற்றி பிழைத்துப் போவதற்காகவே ஏற்படுத்தி இருக்கிருர். மனோ நிரோத மற்றவன் எங்கு சென்ருலும் அவனுக்கும் ஒன்றும் பயன்படாது. மனோ நிரோதமுடையவன் ஸம்ஸார மத்தியில் இருப்பினும் துறவியாகவே இருப்பான். ஆகையால் இப்பொழுது வலிய வந்திருக்கும் ராஜ்யத்தில் கொஞ்சகாலம் இருந்து ஸுகாதிகளை அனுபவித்து விட்டுப் பின்பு இந்நிலைக்கு வரலாம்' என்று புத்திமதி கூறினுர்.

வினு 3.—பிரியவிருதர் அப்பொழுது என்ன செய்தார்?

விடை.—பிரம்மாவின் சொல்படி பிரியவிருதர் ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு வெகுகாலம் ராஜ்யம் ஆண்டார். அப்பொழுது அவருக்குப் பத்துப் பிள்ளைகள் உண்டானுர்கள். அவர்களுள் மூவர் பிறவித் துறவிகளாகி எளிதில் பரமபதம் அடைந்தனர். இவர் காலத்தில்தான் பூமி, ஜம்பு முதலிய ஏழு த்வீபங்களாகப் பிரிக்கப்பட்டது. மிகுதி இருந்த ஒவ்வொரு பிள்ளைக்கும் ஒவ்வொரு தீவைக்கொடுத்தார். அதில் அக்னீதரன் என்ற பிள்ளை ஜம்புத்தீவிற்கு அரசன் ஆனுன். இவ்வாருன தும் பிரியவிருதருக்கு முன்பு நாரதர் செய்த உபதேசம் ஞாபகம்வரத் திடீரென்று தமது உலகப்பற்றுகளை விட்டுத் துறவுபூண்டு பரமபதம் அடைந்தார்.

வினா 4.—அக்னீதரன் இராஜ்யம் ஆண்ட விதம் என்ன?

விடை.—அக்னீதரன் நெறிவழுவாது ஜம்புத்தீவை ஆண்டு வந்த நாளில் ஒருநாள் அவன் பகவானைக் கொடிய தபஸால் ஆராதிக்கத் தொடங்கினான். அப்பொழுது அவனது தபஸைக் கலைக்க இந்திரன் பூர்வசித்தி என்ற அப்ஸர ஸ்திரீயை அனுப்பினான். அப்பொழுது அவள் அழகைக்கண்டு அரசன் மோஹித்துத் தன் தபஸை விட்டு வாயில் வந்தபடி எல்லாம் பிதற்றத் தொடங்கினான். அவனது வாக்சாதுரியத்தில் ஈடுபட்டு அந்த அப்ஸரஸ் அவனோடு கொஞ்சகாலம் ஜம்புத்தீபத்திலேயே இருந்து விட்டாள். அவனுக்கு அவளிடம் நாபி முதலிய ஒன்பது பிள்ளைகள் உண்டானார்கள். அக்னீதரனுக்கு எவ்வளவு அனுபவித்தும் உலக இன்பங்களிடத்து இருந்த ஆசை மாறாததால் அவன் முடிவில் பிதிர்லோகத்தை அடைந்தான்.

வினா 5.—அக்னீதரனுக்குப்பின் யார் எவ்வாறு ராஜ்யம் ஆண்டது?

விடை.—நாபி என்ற மூத்தகுமாரன் மேருதவி என்பவளை கல்யாணம் செய்துகொண்டு விதிப்படி ராஜ்யம் ஆண்டு வந்தான். அவனுக்கு அப்பொழுது பிள்ளையில்லாக் குறை ஒன்றுதான் பெருங்குறையாக இருந்தது. அதை நீக்கிக்கொள்ளுவதற்காக அவன் சிறந்த யாகங்களைச் செய்யத் தொடங்கினான். அப்பொழுது பகவான் தமது திவ்யமங்கள ரூபத்தோடு நாபி முதலியவர்களுக்கு யாகசாலையில் தரிசனம் கொடுத்தார். பகவானைக் கண்டதும் நாபிராஜா திவ்ய ஸ்தோத்திரம் செய்து, ஜகந்நாதா! நான் பணக்காரனை நோக்கி உமி

வேண்டும் என்று கேட்கிறவன்போல உம்மிடத்தில் ஒரு அல்பவரம் யாசிக்கிறேன்! எனக்குத் தங்களைப் போல் சிறப்பாகிய பிள்ளை ஒருவன் வேண்டும். இதை கிருபைகூர்ந்து தந்தருள வேண்டும்!' என்று மஹா விநயத்தோடு கேட்டான். அதற்குப் பகவான் 'எனக்கு நிகர் ஒருவரும் இல்லை. ஆகையால் பிராம்மணர்களது பிரயத்தனத்தை வீணாக்காதிருக்க நானே உனக்குப் பிள்ளையாகவந்து அவதரிக்கிறேன்!' என்று அனுக்கிரஹித்து மறைந்தார். அவருக்குக் கொஞ்சநாளில் ரிஷபர் என்ற பிள்ளையாகப் பகவானே தோன்றினார். ஒருதரம் இந்திரன் நாபிராஜாவின் நாட்டில் மழை பொழியாது போய்விட ரிஷபமூர்த்தி தமது மஹிமையால் மழை பொழியும்படி செய்தார். ரிஷப மூர்த்திக்குத் தகுந்த வயது வந்ததும் நாபிராஜா தமது நாட்டை அவரிடம் ஒப்புவித்துவிட்டுப் பதரிகாசிரமம் சென்று நரநாராயணனை உபாஸித்துப் பரமபதத்தை அடைந்தார்.

வின 6.—ரிஷபமூர்த்தி எவ்வாறு தமது ராஜ்யத்தில் பழகி வந்தார்?

விடை.—ரிஷபமூர்த்தி ராஜ்யம் ஆளுங்கால் தமது புரோஹிதர்கள் அனுமதியின்பேரில் அடிக்கடி ஜனங்களுக்கு நற்புத்திகூறிக் காலம் கழித்தார். இப்படி இருக்கையில் அவருக்கு பரதர் முதலிய 100-பிள்ளைகள் உண்டானார்கள். இவர்களுள் சிலர் பரதரைப் பின்பற்றியும், அநேகர் துறவிகளாகியும் இருந்தனர். ரிஷபமூர்த்தி ராஜ தர்மத்தை விதிப்படி அனுஷ்டித்து உலகத்தார் அறியக்காட்டினார். அவர் காலத்தில் நாடெங்கும் செழிக்க,

எல்லோரும் ஸுகித்திருந்தனர். இப்படி இருக்கையில் அவர் ஒருதரம் பிரம்மவர்த்தம் போக அங்கு தமது பிள்ளைகளில் சிலர் இருப்பதைக்கண்டு அவர்களுக்கு, ஆத்மவித்தை, தேகத்தின் ஸ்வரூபம், ஸந்யாஸிகளின் நடை உடை பாவனைகள், பக்தியின் ஸ்வரூபம், பிராம்மணர்களின் மேன்மை முதலியவைகளைப்பற்றி விஸ்தாரமாக எடுத்துரைத்தார்.

விஞ 7.—இவ்வாறு ராஜநீதிகளை அனுஷ்டித்துக் காட்டிய பிறகு ரிஷபர் எதை எவ்வாறு அனுஷ்டித்துக் காட்டினார்?

விடை.—ஸந்நியாஸத்தை உலகத்தவர் அறியும்படி அனுஷ்டித்துக்காட்ட பரதரிடம் அவர் ராஜ்யத்தை ஒப்புவித்துவிட்டு அவதூத விருதம் பூண்டு தமக்கு என்று ஒன்றும் இன்றி லோக ஸஞ்சாரம் செய்யத் தொடங்கினார். ஜீவன்முக்தர்களுக்கு இருக்கவேண்டிய லக்ஷணங்கள் யாவும் அவரிடம் குடிகொண்டிருந்தன. பார்ப்பவர்களுக்கு அவர் ஒரு ஸமயம் குழந்தைகள் போலவும், பைத்தியக்காரர்கள் போலவும், பிசாசுகள் போலவும் காணப்பட்டார். அவர் ரூபமோ மிகுந்த ஸுந்தரமாகவே இருந்தது. அவர் கண்கள் மிகுந்த பிரகாசமாகக் காணப்பட்டன. இவ்வாறிருக்கையில் ஜனங்கள் தமது தபஸுக்கு சிலகாலங்களில் தடையாக ஏற்படுகிறார்கள் என்று கண்டு அவர் அஜகரவிருதத்தை அனுஷ்டித்துக் காட்டினார். இதில் ஒரு இடத்திலே அவர் மலைப்பாம்புபோல் விழுந்து கிடப்பார். வலியவந்த உணவு முதலியவைகளை அங்கீகரிப்பார். ஸதா அவர் மனம் பரம்பொருளிலேயே இருந்தபடியால், அவர் இருந்த இடத்தைவிட்டு அசையக்கூட வேண்டிய

தில்லை. இந்த ஸமயத்தில் அவர் யோகஸித்திகளைக் கவனியாது ஆத்மநிஷ்டையையே முக்கியமாகக் கவனித்துவந்தார். அவர் இவ்வாறிருந்து கொண்டு முடிவில் ஒரு காட்டுத்தீயில் தமது தேகத்தை த்யாகம் செய்தார். இவ்வாறு யோகிகள் ஸித்திகளை ஒரு பொருட்டாக எண்ணாது ஆத்ம நிஷ்டையையே முக்கியமாகக் கருதவேண்டும் என்பதை நன்றாக இவர் அநுஷ்டித்துக் காட்டினார்.

**வின 8.**—பாதர் ராஜ்ய விஷயத்தில் எவ்வாறு நடந்து கொண்டார்?

**விடை.**—இவர் ராஜ்யத்தைச் சாஸ்திரவிதிப்படி நடத்திவந்தார். அவர் காலத்தில் அநேக யாகாதிகள் நடந்தன. உலகமே மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தது. இவர் ராஜ்யபாரம் செய்த சிறப்பாலே இவர் ஆண்ட ராஜ்யத்திற்குப் பாரதவருஷம் அல்லது பரதகண்டம் என்று பெயர் வந்தது. இவர் ராஜ்யத்திலிருக்கையிலேயே பகவந்நிஷ்டை பழகி வந்தார். இவர் விச்வரூபரது பெண்ணாகிய பாஞ்சனியைக் கல்யாணம் செய்து கொண்டு ஸுமதி முதலிய ஐந்து பிள்ளைகளை அடைந்தார். இவர்களுக்கு வயதுவந்த காலத்தில் ராஜ்யத்தை இவர்கள் வசம் ஒப்புவித்துவிட்டு, மேல்போகும் வழிக்கு ஸஹாயமாக இருக்கும்படி தவம் செய்ய வனம் சென்றார்.

**வின 9.**—பரதர் எங்கு சென்று எவ்வாறு தவம் செய்தார்?

**விடை.**—ராஜ்யம் விட்டுப் பரதர் புலஹாசிரமம் சென்று அருகிலிருந்த கண்டகீ நதியில் ஸ்நானம் செய்து துளஸி

ஜலம், கந்தமூலபலங்கள் முதலியவைகளால் பகவானை ஆராதித்து வந்தார். இவ்வாறு இவர் ஸகல உலகப் பற்றுக்களையும் அறவே விட்டு பகவானது பாதார விந்தங்களில் தமது மனதைச் சதா செலுத்திவந்தனர். ஸூர்யன், சந்திரன், செடி, மரங்கள் இன்னும் மற்றுமுள்ள வஸ்து விசேஷங்கள் எல்லாவற்றிலும் பரதர் ஸதா பகவானிருப்பதாகப் பாவித்து நிஷ்டை செய்தார்.

வினா 10.—இவ்வாறு நிஷ்டை செய்து வந்த பாதருக்கு என்ன தடை எவ்வாறு ஏற்பட்டது?

விடை.—ராஜ்யம், மனைவி, பிள்ளைகள் எல்லாம் மோக்ஷ மார்க்கத்தில் தடையாக இருப்பவைகள் என்று எண்ணித் துறந்து வனம் வந்த பரதருக்கு ஜீவகாருண்யத்தால் ஒரு மான்குட்டியின் மேல் ஏற்பட்ட ஆசை ஒரு தடையாக வந்து சேர்ந்தது. இவர் ஒருநாள் கண்டகீ நதியில் ஸ்நானம் முதலியவைகள் செய்து பிரணவத்தைத் தியானம் செய்து கொண்டிருக்கையில் பூர்ண கர்ப்பமான மான் பேடு ஒன்று அங்குத்தண்ணீர் குடிக்க வந்தது. அப்பொழுது ஒரு சிங்கம் கர்ச்சிக்கப் பயந்து நடுநடுங்கி மான் பேடானது துள்ளி அக்கரையை நோக்கிக் குதித்து அங்கு விழுந்து இறந்தது. போன வேகத்தில் அதன் கர்ப்பம் நழுவி ஆற்றில் விழுந்ததைக் கண்ட பரதர் அதற்கு இறங்கி, எடுத்துவந்து அதை வளர்க்கத் தொடங்கினார். தாயில்லா அந்த மான் குட்டிக்குத் தாமே ரக்ஷகர் என்ற எண்ணம் வரவரப் பாதருக்கு உண்டாக அதன்மேல் அபிமானம் அதிகரித்தது. ஆகவே அவர் ஜபம், ஆராதனை நிஷ்டை முதலியவைகள் வரவரக் குறைய அவர் அந்த மானைப் போஷிப்பதி

லேயே மிகுந்த அபிமானமுடையவராக மாறிவிட்டார். இதனால் அவர் நிஷ்டை முதலியன தடைபட்டது.

**வின 11.**—இந்தத்தடையால் அவருக்கு எவ்வாறு முடிவில் கெடுதி உண்டாயிற்று ?

**விடை.**—இவ்வாறு மானையே தனக்கு முக்கிய வஸ்துவாக எண்ணி அதைச் சீராட்டுவது, அதற்கு ஆகாரம் போடுவது, அதன் விளையாட்டு முதலியவைகளைக் கண்டு களிப்பது ஆகிய இந்த உலகவிஷயத்திலே மூழ்கி அந்த மானின் ஸந்நிதானத்திலே பரதர் மிகுந்த இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். பரதர், இப்படி இருக்கையில் ஒருநாள் மான்குட்டி கால்முளைத்து விட்டபடியால் எங்கேயோ போய் விட்டது. மான்குட்டி காணமற்போனதும், தமது பிள்ளைகள் முதலியவர்களைத் துறந்து பகவத்யானத்திற்காகக் காட்டிற்கு வந்த பரதருக்கு மிகுந்த துக்கம் உண்டாய் விட்டது. கேவலம் ஸாதாரண ஜனங்களைப் போல, வெகுவாக அந்த மான் விஷயமாகப் பரதர் பிரலாபிக்கத் தொடங்கினார். அபிமானத்தால் துக்கம் உண்டாக அவர் ஸதா மானைப்பற்றியே எண்ணிக் கொண்டிருந்தார். இப்படி இருக்கையில் அவருக்கு அந்தியகாலம் வர அப்பொழுதும் மானைப்பற்றிய எண்ணம் மாறாமலே அவர் உயிரைவிட்டார். இந்தக் காரணத்தால் மோக்ஷம் அடைந்து நிரதிசய ஆனந்தம் அனுபவிக்கவேண்டிய அவருக்கு மான் ஜன்மம் உண்டாயிற்று.

**வின 12.**—ஜீவகாருண்யத்தின் பலன் இம்மாதிரி தாழ்ந்த ஜன்மம்தானா?

விடை.—பரதர் காண்புவித்தது ஜீவகாருண்யம் அல்ல. அவர் முதலில் ஜீவகாருண்யத்தைக் காட்டிய போதிலும் அவர் வர வர அபிமானத்தைக் காட்டத் தொடங்கிவிட்டார். அந்த அபிமானத்திற்குக் காரணம் தெய்வம் பொதுவாக எல்லோரையுங் காக்க இருக்கையில், அதை மறந்து 'இந்த மான் குட்டியின் ரக்ஷகன் நான்' என்ற அஞ்ஞானமே. அஞ்ஞானத்தால் எப்பொழுதும் தாழ்ந்த ஜன்மமே உண்டாகும். மேலும் இரக்கம் என்பதே அறியாத காட்டு மிராண்டியிடம் பரதர் காட்டிய அபிமானம் குடிகொண்டிருந்தால் மேன்மைப் படுத்தும் காரணமாகலாம். அது அவன் மனதைச் சுத்தம் செய்து அவனை மேலானவழிக்குக் கொண்டுவரலாம். ஆனால் பரதரைப்போன்ற ஞானிகள் இம்மாதிரியான அபிமானத்திற்கு உள்படுவது, மேலே நோக்கிக் கற்பாறையில் ஏறுபவன் ஒருவன், கீழே இருக்கும் ஒருகொடியை எட்டிப்பிடிக்க முயலுவதுபோலாம். ஆகையால் மேல் நோக்கிப் போகப் போக ஸாதாரணமான அபிமானம் பயன்படாது; ஏனெனில், அது சிற்சில வஸ்துக்கள்மேல் மாத்திரம் தான் பாய்கிறது. அதனால் நமக்கு வரும் ஸுகதுக்காதிகளையே நாம் அதிகமாகக் கவனிக்கும்படி வந்துவிடும். இம்மாதிரியான அபிமானம் ஞானிகளுக்கு அவசியம் தடையே யன்றி வேறல்ல என்பதை இந்த ஜடபரதர் கதை காட்டுகிறதே ஒழிய, நற்குணமாகிய ஜீவகாருண்யத்திற்குத் தாழ்ந்த ஜன்மம் தான் பலன் என்று அது ஒருநாளும் சொல்ல வரவில்லை.

வினா 13.—மான் ஜன்மத்தை அடைந்த பரதர் எவ்வாறு அந்த ஜன்மத்தைக் கழித்தார்?

விடை.—மான்ஜன்மம் வந்தபோதிலும் பரதருக்கு பூர்வ ஜன்மத்தில் விட்ட குறைவந்து தொட்டுக்கொள்ள (பண்ணிய ஆராதனைகளின் பலனாக) அவருக்குப் பூர்வ ஞாபகம் மாறாமலிருந்தது. 'சற்றுத் தாம் அஜாக்கிரதையாக இருந்து மான்பேரில் துர் அபிமானம் வைத்தபடியால் அல்லவோ நமக்கு இந்த ஜன்மம் வந்தது!' என்று அவர் யோஜித்து ஸதா தமது மனதைப் பகவான்மேல் செலுத்தத் தொடங்கினார். மற்றைய மான்களோடு சேர்ந்தால் இன்னும் எங்கே அந்த ஜன்மத்திற்கு உரிய அபிமானாதிகள் வந்து மூடிக்கொள்ளுமோ என்ற பயத்தால் மான் கூட்டத்தை விட்டு தாம் முன்னிருந்த புலஹாசிரமம் வந்து காய்கிழங்குகளைத் தின்று கொண்டு பகவானை ஸதா த்யானித்துக்கொண்டு காலம் கழித்து வந்தார். இப்படி இருக்கும்பொழுதே காலம்வர மான் சரீரத்தை அவர் விட்டுவிட்டார்.

வினா 14.—மான் ஜன்மம் நீங்கியதும் பரதருக்கு என்ன ஜன்மம் வந்தது? அவர் இந்த ஜன்மத்தில் எப்படி இருந்தார்?

விடை.—அடுத்த ஜன்மத்தில் பரதர் ஆங்கிரஸப் பிராம்மண வம்சத்தில் ஆத்மஞானம் முதலியன நிறைந்த ஒரு பிராம்மணருக்கு இளையாளது கடைக்குட்டியாகப் பிறந்தார். இவ்வாறு பிறந்ததும் பரதருக்கு முன் ஜன்மங்களில் பட்டபாடு ஞாபகத்திற்குவர, பிறந்தது முதல் அவர் ஹரியினிடமே தமது மனதைச் செலுத்தி, மற்றையவர்களோடு சேர்ந்து தாழ்ந்த நிலையை அடையாதிருப்பதற்காக அவர் பைத்தியம் பிடித்தவர்போல வெளிக்குக் காட்டிக்கொண்

டார். அவர் தகப்பனார் எவ்வளவு முயன்றும் அவருக்கு ஒருவிதப் படிப்பும் ஏறவில்லை. இவ்வாறு இவர் மந்தராயிருப்பதைக்கண்டு எல்லோரும் இவரை ஜடபரதர் என்று பெயரிட்டழைத்தனர்.

வினா 15.—ஜடபரதர் என்ன தொழில் செய்யவேண்டி வந்தது? ஏன்?

விடை.—இப்படி இவர் மந்தராக இருக்கையில் இவர் தகப்பனார் இறக்க இவர்தாயும் இவரை மூத்த தாயாரிடம் ஒப்புவித்துவிட்டு உடன்கட்டை ஏறினள். மூத்த தாய்க்கு ஸமர்த்தர்களான ஒன்பது குமாரர்கள் இருந்தார்கள். அவர்கள் ஜடபரதரது மந்ததனத்தைக் கண்டு அவருக்குத் தகுந்த தேகசிரமம் உண்டாகும்படி வயல் வெளிகளில் வேலைசெய்யும்படி செய்தனர். ஆனால் அவருக்கு நல்ல உணவு மாத்திரம் கொடுத்தார்கள் இல்லை. கிடைத்ததைக்கொண்டு திருப்தி அடைவது ஞானியின் லக்ஷணமாகையால் பரதர் இதைக்கவனியாது தமக்கு இட்டவேலையை வயல் வெளியில் தம்மால் இயன்றமட்டும் செய்து வந்தார். நல்ல உணவில்லாதிருந்தபோதிலும், அவரது மனதின் சிறப்பால் அவர் தேகம் வாடாது தடித்தே இருந்தது. இவர் அடிக்கடி இரவில் வயல் வெளியில் காவலாய் கையில் தடிவைத்துக்கொண்டு பரண்மேல் ஏறி இருப்பது வழக்கம். இவர் அங்கிருக்கும் பொழுதும் மனதைப் பரம்பொருளிடம் செலுத்திக் கொண்டிருந்தபடியால் பிரதிமைபோல் இவர் அசைவற்றிருந்தார்.

வினா 16.— இவ்வாறிருந்த ஜடபரதருக்கு எவ்வாறு என்ன ஆபத்து வந்தது?

விடை.—ஒரு திருட்டு ராஜனுக்கு வெகுநாள் பிள்ளையில்லாதிருக்க அவன் பத்ரகாளிக்கு ஒரு நரபலி கொடுப்பதாக வேண்டிகொண்டிருந்தான். அதற்காக அவன் நான்கு புறத்திலும் ஆட்களை விட்டுத் தகுந்த மனிதனைப்பிடித்து வரும்படி உத்தரவு செய்தான். அவர்களில் சிலர் ஜடபரதர் உட்கார்ந்திருந்த பரணண்டை வந்து பார்க்க, அதில் கொழுத்த பரதர் இருப்பதைக் கண்டு இவரே நரபலிக்குத்தகுந்த பசுவென்று எண்ணி அவரைப்பிடித்துத் தமது ராஜன்முன் கொண்டுபோய் விட்டார்கள். ஜடபரதர் அப்பொழுது ஞானநிஷ்டையில் இருந்தபடியால் அவருக்கு நடப்பது ஒன்றும் தெரியவே இல்லை. திருட்டு ராஜன் அன்றிரவே காளி கோவில்சென்று ஜடபரதரை எண்ணெய் முழுக்காட்டி அலங்கரித்துக் காளி விக்கிரஹத்திற்கு முன் கொண்டு போய் முட்டிபோட்டு உட்காரச்செய்து அவரைத்தலை குனிந்திருக்கும்படி செய்தான். இவ்வளவும் முடிந்ததும் உரையிலிருந்த கத்தியை உருவி மஹாத்மாவான பரதரை வெட்டத் தூக்கிவிட்டான்!

வினா 17.—இந்த மஹத்தான ஆபத்து எவ்வாறு நீங்கிற்று?

விடை.—இந்தக் காரியங்கள் நடந்து கொண்டிருக்கையில் பத்திரகாளிக்கு விக்கிரஹத்தில் இருப்புக் கொள்ளவில்லை. பலிக்காகக் கொண்டுவந்திருக்கப்பட்டவன் மஹா பிராம்மணன், பிரம்மஞானி. காளியைப்போன்ற ஸகல தேவதைகளிலும் இருந்து பிரகாசிக்கும் பரம் பொருள் தாமேயாய் இருக்கும் ஞானியைப் பலியாகக் காளிக்கு ஏற்றுக்கொள்ள சக்தி எவ்வாறிருக்கும்! மேலும் பிராம்மணனது தபாக்னி காளியைக் கொளுத்தத் தொடங்க, அவள் உடனே விக்கிரஹத்தை

விட்டு வெளிவந்தாள். தம்மால் அங்கீகரிக்க யோக்யமா யில்லாத பரிசுத்தாத்மாவைப் பலியாகக்கொண்டு வந்த தனாலேயும், பரிசுத்தாத்மாவை அநியாயமாய் கொலை செய்யப் போகிறார்கள் என்பதினாலேயும் காளிக்குக் கோபம் அதிகரிக்க, அவள் அதிவேகமாக வந்து திருட்டு ராஜன் கையிலிருந்த கத்தியைப் பிடுங்கிக்கொண்டு அவ னையும் அவனது பரிவாரங்கள் எல்லாவற்றையும் ஒரே வீசாய் வீசிக் கொன்றுவிட்டு விக்கிரஹத்துள் மறைந் தாள். நடந்த காரியம் ஒன்றும் மஹாத்மாவான பரத ருக்குத் தெரியாது.

வினா **18**.—ஜடபரதர் பிழைத்ததிலிருந்து நாம் என்ன தெரிந்துக் கொள்ளலாம்?

விடை.—பகவத் பக்தர்களுக்குவரும் மலைபோன்ற துன்பங் கள் கடவுளது அருளால் ஸூர்யன் முன் இருக்கும் பனிபோல் பறந்தோடிப்போகும். மேலும் பரம் பொருளை வழிபட்டு நிஷ்டையை அடைந்திருக்கும் மஹான்களிடத்தில் மற்றை தேவதைகளின் சக்தி ஒன்றும் பயன்படாமல் போய்விடும். ஆகையால் பிசாசு காற்று சங்கை முதலியவைகளில் நமக்கு இருக்கும் நம்பிக்கையில் ஒரு சிறு பாகம் பரம்பொருளிடம் வைத்து அவரை வழிபடுவோமாகில் நமக்கு எவ்வித சங்காதோஷமும் அணுகாது. பரம்பொருளையே நாம் வழிபடுங்கால் எந்த மனோவ்யாதிதான் நம்மைஅண்டும்! இவ்விரு விஷயங்களும் ஜடபரதர் பிழைத்த விதத்தி லிருந்து நாம் தெரிந்து கொள்ளவேண்டியது.

வினா **19**.—ஜடபரதர் காளிகோயிலில் இருக்கையில் அவர் என்ன தொழில் செய்யவேண்டிவந்தது? ஏன்?

விடை.—காலையில் காளிகோயில் வாயிலில் ஜடபரதர் உட்கார்ந்திருக்கையில் அவருக்கு ஒரு ராஜனது பல்லக்கைச் சுமக்கும்படி நேர்ந்தது. அன்று காலையில் ஸிந்து ஸௌவீரதேசாதிபதியாகிய ரகுகுணன் என்ற அரசன் பல்லக்கு ஏறிக் கபில மஹாமுனியிடம் உபதேசம் பெறுவதற்காகப் போய்க்கொண்டிருந்தான். அவன் பல்லக்குத் தூக்குவதற்கு ஒரு ஆள் குறைவாக இருந்தது. பல்லக்குக் காளி கோயிலண்டை வந்ததும், பல்லக்குப்போயிகள் கொழுத்திருக்கும் ஜடபரதரைக்கண்டார்கள். உடனே அவரே பல்லக்குச் சுமக்கத்தக்கவர் என்று எண்ணி அவரைப் பிடித்து இழுத்துவந்து அவர் தோளில் பல்லக்கை வைத்தார்கள்.

வினா 20.—ஜடபரதரது மஹிமை ரகுகுணனுக்கு எவ்வாறு தெரியவந்தது?

விடை.—பிரம்மஞானிகள் ஜீவகாருண்யத்தில் கீழே பார்த்துக்கொண்டு ஜந்துக்களின்மேல் தற்செயலாகக் காலைவைத்து விடாமலிருப்பதற்காகத் தமது காலை எட்டிவைப்பது வழக்கம். ஜடபரதரும் அவ்வாறே செய்ய, பல்லக்குப்போயிகள் நடைக்கும் இவர் நடைக்கும் மாறுபாடு உண்டாயிற்று. உடனே பல்லக்கு அசையத்தொடங்க அரசனுக்குக் கஷ்டம் உண்டாயிற்று. அவன் பரதரைக் கோபித்துப் பேசினான். இப்படி இருந்தும் இரண்டு மூன்றுதடவை இவ்வாறாக, அரசன் கோபத்தால் 'நீ என்ன நடைபிணமா? என் உத்தரவுக்கு விரோதமாகவா நடக்கிறாய்? பார்! நான் உனக்குக் கொடியதண்டனை விதிப்பேன்!' என்று கர்ச்சித்தான். இதைக்கேட்டதும் அரசனது நல்ல பாக்கியத்தால் பரதர் வாயைத்திறந்து நகைத்துச்

சொல்லுகிறார். 'எனக்குத் தேகத்தில் அபிமான மில்லாததாலும், ஸதா ஆத்மரூபத்திலேயே நான் ஈடுபட்டிருப்பதினாலேயும், நான் உயிரோடிருந்தும் இறந்தவனுக்கு ஸமானம்தான். நடைபிணம்தான். எனக்கு உலக விஷயங்கள் ஒரு பொருட்டல்ல, அவை செத்தவனை எவ்வாறு தாக்குகிறதில்லையோ அவ்வாறு என்னைத் தாக்குகிறதில்லை. ஆகையால் 'செத்தாரைப் போலத் திரிபவனாகிய' என்னைத் தண்டிப்பதினால் எனக்கு ஒரு மாறுபாடும் வாராது. நீ அப்படி செய்வது அரைத்த மாவை மறுபடியும் அரைப்பதுபோல் பயனற்றதாக முடியும்!' என்று திருவாய் மலர்ந்து அருளினார். உடனே அரசனுக்கு ஜடபாரதரது சிறப்பு தெரிந்துவிட்டது.

வினா 21.—அப்பொழுது ரகுகுணர் என்ன செய்தார்?

விடை.—'நாம் உபதேசம் பெறப் போகையில் இம்மாதிரி மஹானுக்குக் கொடிய அபராதம்செய்யும்படி நேரிட்டதே! ஒருவேளை 'கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது!' என்பதுபோல் கபிலமுனி இவர்தானோ?' என்று பரிதவித்துப் பல்லக்கினின்று குதித்து மிகுந்த பரபரப்புடன் ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து ஜடபரதரிடம் மிகுந்த விநயத்துடன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

வினா 22.—அப்பொழுது ஜடபாரதர் என்ன செய்தார்? எல்லாம் எவ்வாறு முடிந்தது?

விடை.—ஞானிகளுக்கு மானாவமானங்கள் ஒரு பொருட்டல்ல. ஆகையால் ஜடபரதர் அரசன் கேட்ட மன்னிப்பைக் கவனியாது அவனுக்கு ஞானோபதேசம் செய்

யத்தொடங்கினர். அப்பொழுது ஜடபரதர் மனத்தின் ஸ்வரூபம், குணங்களின் ஸ்வரூபம், கடவுள் எங்கும் பரவியிருத்தல், ஹரி ஸேவையால் மனதை அடக்க அதனால் உண்டாகும் பயன், ஹரிபக்தி இல்லாது மற்றைய ஸத்கர்மங்களால் பயனில்லாமை, அபிமானத்தால் தாம் பட்டபாடு, அகங்காரம் உண்மையாக உள்ளது அல்ல, என்னும் அரிய விஷயங்களை எடுத்துரைத்தார். அதன் பின்பு உலகத்தில் ஜனங்கள் பொதுவாகச் சிற்றின்பாதிகளில் சிக்கிச்சண்டை சச்சரவுகள் செய்து பணத்தாசையால் பணம் ஸம்பாதித்துப் பலாத்காரமாக மற்றவர் அதைப்பிடுங்கிப் போவதால் வரும் துக்கத்திற்கு ஆளாகிக் காமக்ரோதாதிகளுக்கு அடிமையாகி, மோக்ஷவழி அறியாது தத்தளிப்பதை வெகு விசித்திரமாக எடுத்துச் சொல்லி அரசனுக்கு உள்ளத் துறவு வரும்படி செய்தார். உடனே அரசனும் துறவு பூண்டு பரதரது ஸஹாயத்தால நாளடைவில் பரமபதம் அடைந்தான். பரதரும் பரம்பொருளைத் தியானம் செய்துகொண்டே காலக்கிரமத்தில் தமது தேகத்தைவிட்டுப் பரம் பொருளொடு கலந்து ஸமாதிபெற்றார்.

வி 23.—இவ்வாறு ஜடபரதரது திவ்யசரிதம் முடிந்ததும் பரீக்ஷித்திற்கும் சுகப்ரம்மத்திற்கும் எதைப்பற்றி எவ்வாறு ஸம்பாஷணை நடந்தது?

விடை.—பரீக்ஷித்து முதலில் பூமியைப்பற்றி நன்றாக விஸ்தரித்துச் சொல்லும்படி கேட்கச் சுகப்ரம்மம் பூமியின் ஏழுத்வீபங்கள், அவைகளின் உட்பிரிவாகிய வர்ஷங்கள், அவைகளில் நடந்த விசேஷங்கள், இருந்த பெரியோரின் சிறப்புக்கள், ஒவ்வொன்றிலும் இருக்கும் பகவான் அவதாரங்கள், ஆகிய இவைகளை எடுத்து

விஸ்தாரமாக விவரித்தார். இதன் பின்பு ஸூர்யகதி அதனால் இராப்பகல்களின் நாழிகைகளில் உண்டாகும் மாறுதல்கள், சந்திரகதி, கிரஹங்களின்கதி, துருவ ஸ்தானம், கிரஹணங்களின் ஸ்வரூபம், கீழேழ் லோகங்கள் ஆதிசேஷனின் ஸ்வரூபம், ஆகிய இவைகளை எடுத்து விவரித்தார்.

**வினா 24.**—இதன் பின்பு சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப் பற்றி விவரித்தார்?

விடை.—ஜனங்களுக்கு விதம் விதமான நிலைகள் ஏற்படுவதன் காரணத்தைக் கேட்ட பரீக்ஷித்தை நோக்கி, சுகர் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் விதம் விதமான கலப்பால் ஜனங்களுள் மாறுதல் உண்டாகின்றன என்று சொல்லி அதில் தாமஸ குணத்தால் முடிவில் உண்டாகும் நரகங்களின் விவரத்தை எடுத்துக் கூறினார். இந்த ஸந்தர்ப்பத்தில் எமபட்டணத்தையும், அதில் பாபிகள் கஷ்டப்பட்டுத் தேறுவதற்காக ஏற்பட்ட ரௌரவாதி 21 நரகங்களையும், அவைகளில் ஒருவனை வீழ்த்தும் பாபங்களையும் பரீக்ஷித்துக் கேட்டு நடுங்கும்படி வெகு கோரமாகவிடாது வர்ணித்தார். பின்பு உலகில் ஜன்மம் எடுக்கும்படி ஓர் ஆத்மாவைச் செய்வது ஸ்வர்க்க நரகங்களில அனுபவித்த புண்ய பாபங்களில் மிஞ்சிய சேஷமே என்று வற்புறுத்தினார். அதன் பின்பு இது வரையில் தான் சொல்லிவந்தனயாவும் கடவுளது விசுவரூபத்தின் சிறு திவலைகள் என்றும் இவைகளின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்த பின்பு யோகிகள் கடவுளின் ஸூக்ஷ்மரூபத்தில் ஈடுபட்டுப் பிழைக்கிறார்கள் என்றும் சுகர் எடுத்துக் காட்டினார்.

---

# 6-வது ஸ்கந்தம்

## அஜாமிளன் கதை விருத்ராஸுரவதம்

### சுகபரீக்ஷித்து ஸம்வாதம்

பொய்யினேன் புலையினேன் கொலையினே னின்னருள்
புலப்பட வறிந்திலையாப்
புன்மையேன் கல்லாத தன்மையே னன்மைபோற்
பொருளலாப் பொருளோடும்
வெய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினே னென்றென்னைநீ
விட்டுவிட நினைவையேற் றட்டழிவ தல்லாது
வேறுகதி யேதுபுகலாய்
துய்யனே மெய்யனே யுயிரினுக் குயிரான
துணைவனே யிணையொன்றிலாத்
துரியனே துரியமுங் காணு வதீதனே
சுருதிமுடி மீதிருந்த
வையனே யப்பனே யெனுமறிஞ ரறிவைவிட்
டகலாத கருணைவடிவே
யண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

வினு **1.**—இவ்வாறு நரகயாதனையைக் கேட்டதும் பரீக்ஷித்து என்ன கேள்வி கேட்டான்? அதற்குச் சுகப்பிரம்மம் என்ன மறுமொழி கூறினார்?

விடை.—நரகவிஷயத்தைக் கேட்டதும் பரீக்ஷித்துச் சுகப்பிரம்மத்தை நோக்கி, 'ஸ்வாமீ! நீங்கள் எடுத்துக் கூறிய நரகங்களிலிருந்து தப்புவதற்கு எது நல்ல வழி' என்று

கேட்டான். அதற்குச் சுகப்பிரம்மம் 'தேஹத்தில் வியாதி முதலியன வந்து கஷ்டப்படுத்தும் முன்னரே ஒருவன் தனக்குக் கிடைத்த காலங்களைத் தபஸ் முதலிய நல்ல வழிகளில் கழிக்கவேண்டும். ஆனால் கேவலம் தபஸ் மாத்திரம் ஒருவனைக் காப்பாற்றாது. ஏனெனில் தபஸ் செய்யுங் காலத்தில் மனது வழிபட்டு வரலாம்' பின்பு அது முன்போலவே கெட்டவிஷயங்களில் ஓடிவிடலாம். ஆகையால் தபஸோடு ஞானம் இருத்தல் வேண்டும். இந்த ஞானம் ஓங்கிச்செழித்து ஒருவனை மேன்மைப்படுத்த ஹரி பக்தி ஒருவனுக்கு அவசியம் இருக்கவேண்டும். இந்தப் பக்தி ஆதியில் ஒருவனுக்கு எவ்விதத்தாலாகிலும் வந்து விட்டதானால் அவனுக்குப் பரமபதம் காலக்கிரமத்தில் எளிதாக ஸித்திக்கும். பக்தியில்லாது ஒருவனுக்கு ஆதியில் எவ்வளவு ஞானமும் தபஸும் இருந்தபோதிலும் அவை பயன்படாமல் போய் விடும்' என்று கூறி பக்தியினால் உண்டாகும் சிறப்பை அஜாமிளன் என்ற பிராம்மணன் கதையால் வெளிப்படுத்தினர்.

வி **2**.—அஜாமிளன் யார்? அவன் முதலில் எந்த நிலையில் இருந்தான்?

விடை.—அஜாமிளன் சிறந்த பிராம்மணர் குலத்தில் பிறந்தவன். வேதம் ஓதுதல், அனுமதி, நன்னடக்கை, தபஸ் மனோநிரோதம் முதலிய நற்குணங்களில் அவன் சிறந்தவனாக முதலில் இருந்தான்.

வி **3**.—இப்படி சிறந்தவனாக இருந்த அஜாமிளனுக்கு யாது காரணத்தால் எவ்வாறு குணம் மாறுபட்டது?

விடை —ஒருநாள் தனது தகப்பனார் இஷ்டப்படி காடு சென்று அங்கிருந்து அவருக்காகக் காய் கிழங்கு கனி

முதலியவைகளைச் சேகரித்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினன். வரும் வழியில் ஒரு சூத்திரன் அவன் அடிமைப் பெண் ஒருவளோடு வெகு உல்லாஸமாக விளையாடிக் கொண்டிருந்ததைக்காண அவனுக்கு மனம் கெட்டுப் போய்விட்டது. அன்றுமுதல் அவனுக்கு எப்படியாவது அந்த அடிமைப் பெண்ணை விவாஹம் செய்து ஸுகிக்க வேண்டும் என்ற பைத்தியம் பிடித்துத் தனது குணவதியான பெண்சாதியைப் பறக்கவிட்டு விட்டு அந்த அடிமைப் பெண்ணுக்குத்தனதுஸொத்துக்கள் எல்லாவற்றையும் கொண்டுவந்து கொடுத்து அவளோடு வாழ்ந்து வந்தான்.

விஞ 4.—இவ்வாறு கெட்டுப்போன அஜாமிளன் கதி வரவர என்னமாயிற்று?

விடை.—அஜாமிளன் அடிமைப் பெண்ணே கதி என்று வெகு காலங்கழித்து விட்டான். அவளிடம் அவனுக்குப் பத்துக்குழந்தைகள் உண்டாயின. அவைகளைக் காப்பாற்ற தன்காலம் முழுவதையும் கெட்டவழிகளிலேயே கழித்து வந்தான். தன்பிராம்மண கிருத்யங்கள் யாவும் அவனுக்கு ஞாபகம்கூட இருக்கவில்லை. இவன் கடைக்குட்டிக்கு நாராயணன் என்று பெயர். அவனிடம் இவனுக்கு அதிகப்ரீதி. இவ்வாறு ஆயுளில் மிகுதியான பாகம் வீணுகவே கழிந்தது.

விஞ 5.—இவனை மாற்றும்படியாக அப்பொழுது என்ன நடந்தது?

விடை.—இவனுக்குவரவர ஆயுள் குறுகிக் கொண்டேவர அபாயமானநோய் கண்டது. அப்பொழுது உயிர் போகும்தருணம் என்று சொல்லத்தக்க நிலை இவனுக்கு

வர, இவன் மனம் கடைக்குட்டியான நாராயணன் மேலே பாய்ந்து ஓடியது. இப்படி இருக்கையில் இவன் கண்முன் மூன்று குரூபமான உருவங்கள் தென்பட்டன. உடனே இவனுக்குப் பயம் அதிகமாக உண்டாகத் தன் அருகாமையில் விளையாடிக்கொண்டிருந்த கடைக்குட்டியை "நாராயணு" என்று குளறிய மொழியால் அழைத்தான். உடனே ஸ்ரீமந்நாராயணரது தூதர்களும் அவனுக்குத் தோன்றினார்கள். அங்கு அவர்களுக்கும் முன் தென்பட்ட யமதூதர்களுக்கும் தர்க்கம் உண்டானது. அதில் யமதூதர்கள், 'இந்த அஜாமிளன் மஹாபாபி! தன் குலம், நிலை முதலிய எல்லாவற்றையும் ஆசையால் கெடுத்துக் கொண்டவன். நாங்கள் இவனை யமதர்மராஜனிடம் கொண்டு போய்விட்டுத் தக்க தண்டனைக் குள்ளாக்குவோம்!' என்றனர். அதற்கு ஹரிதூதர்கள் 'இவன் எவ்வளவு பாபியாகிலும் இந்த ஆபத் ஸமயத்தில் ஜகந்நாதராம் எங்கள் பிரபுவின் நாமத்தை உச்சரித்து விட்டான். இவனுக்கு இதுவரையில் இருந்த பாபம் எல்லாம் போய்விட்டது. ஆகையால் நீங்கள் இவனைத் தொடக் கூடாது! விட்டுப்போய் விடுங்கள் என்று சொல்லி யமதூதர்களை ஓட்டிவிட்டனர். இந்த ஸம்பாஷணை அஜாமிளன் காதில் பட அவன் மனம் முன்பு செய்த பாபத்தை எல்லாம் எண்ணி உருகத் தொடங்கியது!

வினு **6.**—அஜாமிளன் தன் பாபத்தை எண்ணித் துக்கித்ததும் மேல் என்ன நடந்தது?

**விடை.**—அவன் மனம் இவ்வாறு உருகியதும் அவன் தனது மனத்தை அடக்கி பகவானது பாதாரவிந்தத்தில் வைக்க முயற்சிகள் செய்தான். அவன் உண்மையில்

உருகித் தனது பாபங்களை மனதார வெறுத்தபடியால் அவன் மனம் நல்லவழியில் திரும்பிவிட்டது. அது உடனே பரிசுத்தமானது. அவன் தேகம் உடனே தெளிய அஜாமிளன் கங்கோத்தரையாகிய ஹரித்வாரம் சென்று ஓர் கோயிலில் உட்கார்ந்து கொண்டு தன் மனதைத்திருப்பிப் பகவானது பாதாரவிந்தங்களில் செல்லவிட்டு நிஷ்டையில் மூழ்கிவிட்டான். அவன் மனது நன்ருக நிஷ்டையில் அழுந்தின உடனே முன்கண்ட ஹரிதூதர்கள் அவன் கண்முன் தோன்றினூர்கள். முன்பழக்கம் அவனுக்கு ஞாபகம்வர அவன் அவர்களுக்குத்தக்க மரியாதையைச் செய்தான். அங்கேயே அவன் தேகம் நழுவியது. உடனே அவன் ஆத்மா திவ்ய விமானத்தில் ஏற்றப்பட்டு ஹரிதூதர்களால் வைகுண்டம் கொண்டு சேர்க்கப்பட்டது.

வி 7.—அஜாமிளன் உபாக்யானத்தால் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் என்ன? இக்கதை தாறுமாருக பாகவதர்களால் எவ்வாறு அர்த்தம் பண்ணப் படுகிறது? அதற்கு ஆக்ஷேபம் என்ன?

விடை.—பகவந்நாம ஸங்கீர்த்தனத்தால் ஒருவன் மனம் எவ்வளவு கெட்டதாக இருப்பினும், நல்ல விஷயங்களுக்கு ஆரம்பமாகிய உண்மையான பச்சாத்தாபத்தால் கவரப்படும் என்றும், இதனுல் காலாக்கிரமத்தில் அவன் மனம் நல்லவைகளிலேயே ஊறி, அவனைப் பரமபதம் அடையும்படி செய்விக்கும் என்றும், நாம் இந்தக் கதையினுல் தெரிந்துக்கொள்ள வேண்டியது. இந்தக் கதையை ஸாதாரணமாகப் பாகவதர்கள் முழுவதும் கூருது அறைகுறையாகக் கூறி பகவந்நாமத்தை ஒரு தரம் எப்படியாவது ஒருவன் சொல்லிவிடுவானுனுல்,

அவன் எவ்வளவு பாபியாயினும் வைகுண்டம் சேர்க்கப் படுவான் என்று கூறுவர். இது முழுத்தவறே ஒழியே வேறில்லை. பாகவதர்கள் கூறுவது பின்வருமாறு. அஜா மிளன் பகவந்நாமத்தின் வைபவத்தை அறியாது அந்திய காலத்தில் தனது கடைக்குட்டியை நாராயணா வென்று அழைத்தான். உடனே ஹரிதூதர்கள் வந்து அவனைக் கொண்டுபோக வந்திருந்த யமதூதரை துரத்திவிட்டுத் தாம் அவனை வைகுண்டம்கொண்டு சேர்த்தனராம் இது வெறும் பொய்யல்லவா? ஆகவே பாகவதர்கள் கூறுவது இவ்விஷயத்தில் உண்மை என அங்கீகரிக்கப் படமாட்டாது.

வி௵ **8.**—பாகவதர்கள் கூறுவதை ஒப்புக் கொண்டால் என்ன கெடுதி?

விடை.—பாகவதர்கள் இதுவரையில் முன் காட்டி யிருக்கிற படி கதை செய்துதான் நமது ஜனங்களுள் அநேகரை பகவந்நாமாவோடு வெகு தந்திரமாகப் பழகி வரும்படி செய்து விட்டார்கள். நம்மவரில் வியாபார நோக்கம் வாய்ந்த அநேகர் அஜாமிளன் சொன்ன ஒருநாமாவிற்கு ஸகல பாபத்தை விடாது செய்துகொண்டு அதற்குப் பரிஹாரமாக இடை இடையே ராம ராமா கிருஷ்ணா கிருஷ்ணா என்று சொல்லி வருவோமாகில் நமது லௌகிக காரியத்திற்குக் குறைவில்லாமல் பரம பதத்தையும் அடையலாமே என்று கணக்கிட்டுப் பார்க் கிறார்கள். கதை சொல்லுபவர்கள் மாத்திரம் 'அஜா மிளன் முதலில் அதிக சுத்தனாக இருந்தான். அவன் இடையில் கெட்டுப்போனான். அபாயகரமான ஸமயத் தில் அவன் பகவந்நாமத்தைச் சொல்ல, அதன் சிறப் பால் முன்நிலை அவனுக்கு ஞாபகம் வந்தது. அவன்

மனம் திரும்பியது. அதனால் அவன் கொஞ்சகாலம் நிஷ்டைபழகித் தேர்ந்து பரமபதம் அடைந்தான்' என்று சொல்லி வருவார்களாகில் முற்கூறிய மாதிரியான கெட்ட நிலை நம்மவருக்கு வந்திராது.

வினா 9.—அஜாமிளனிடமிருந்து துரத்தப்பட்ட யமதூதர்கள் என்ன செய்தார்கள்? மேல் என்ன நடந்தது?

விடை.—ஹரிதூதரால் துரத்தப்பட்ட யமதூதர்கள் யமதர்மராஜனிடம் சென்று தாம் பட்ட அவமானத்தைச் சொன்னார்கள். அதற்கு யமதர்மராஜன், 'பகவத்பக்தர்களிடம் நமது அதிகாரம் செல்லாது அப்பா! ஆதலால் அகங்காரம் மிகுந்து பகவத்பக்தி செய்யாதவர்களை நீங்கள் தைரியமாக அணுகி எனது ஆக்ஞைகளை நடத்தலாம். பக்தர்களிடம் இனிமேல் ஜாக்கிரதையாய் இருங்கள்! பக்தியின் சிறப்புக்கு அளவேயில்லை. அதன் ஆரம்பமாகிய பகவந்நாம ஸங்கீர்த்தனம் ஒருவனது பாபங்கள் எல்லாவற்றையும் போக்கி, அவன் மேன்மை அடைவதற்குவேண்டிய பரிசுத்தத்தை உண்டாக்கும்!' என்று தமது தூதர்களுக்குப் புத்திமதி கூறினான்.

வினா 10.—இவ்வாறு பகவந்நாமத்தின் சிறப்பைக் கூறினபின்பு, சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப் பரீக்ஷித்திற்கு உபதேசம் செய்தார்?

விடை.—'உலகத்தில் அஸுரர்கள், நாகர்கள், பட்சிகள், மிருகங்கள் முதலியன ஸ்வாயம்புவ மன்வந்திரத்தில் உண்டான விதத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும்,' என்று பரீக்ஷித்துக் கேட்டான். ஸமுத்திரத்துள் புகுந்து கொண்டு தபஸு செய்து கொண்டிருந்த

பத்து ப்ரசேதஸ்ஸுக்கள் வெளியில் வந்து பார்க்கையில் உலகம் எல்லாம் மரம், செடி, கொடி முதலியவைகளால் மூடப்பட்டிருக்கத் தமக்கு வாஸஸ்தான மில்லாததால் கோபங்கொண்டு அவைகளை அவர் தகிக்கத் தொடங்கின விதத்தையும், அப்பொழுது அவைகளுக்கு அதிபதியாகிய சந்திரன் அவர்களைச் சாஸ்திரத்தை முன்னிட்டு ஸமாதானப்படுத்தி அவர்களுக்கு மரங்களால் வளர்க்கப்பட்ட ஒரு அப்ஸர ஸ்திரீயை விவாகம் செய்துகொடுத்ததையும், அதனால் அவர்களுக்குப் பின்னர் தக்ஷப்பிரஜாபதி பிள்ளையாகப் பிறந்ததையும், அவரால் மிகுந்த கஷ்டத்தின்பேரில் உலகம் ஜனங்களால் நிரப்பப்பட்டது என்பதையும் சுகர் விஸ்தாரமாக எடுத்துரைத்தார்.

வின 11.—தக்ஷருக்கு என்னென்ன கஷ்டங்கள் முதலில் நேரிட்டன? அதனால் அவர் நிலை எவ்வாறிருந்தது?

விடை.—தக்ஷர் தமக்குத் தகுந்த பெண்ஜாதி ஒருத்தியை ஸம்பாதிப்பதற்கு வெகுகாலம் தபஸு செய்ய வேண்டிவந்தது. அதன் முடிவில் பகவான் பிரத்யக்ஷமாகி ஒரு ஸ்திரீயை அவருக்குக் கொடுத்தார். அவளிடத்தில் அவருக்குப் பகவத்கிருபையால் அநேகம் பிள்ளைகள் பிறந்தனர். அவர்களுக்கு ஹரியசுவாள் என்று பெயர். அவர்களைக் கிருஹஸ்தர்களாகவிருந்து தர்மப்பிரஜைகளை விருத்தி செய்யும்படி தக்ஷர் கட்டளையிட, அவர்கள் மேற்கே ஸிந்து நதியின் முகத்துவாரத்திலிருந்த நாராயண ஸரஸிற்குப்போய் ஸ்நானம் செய்தனர். அது சிறந்த ஸித்தர்கள், ஸந்யாஸிகள் முதலிய புண்ணிய புருஷர்களால் பரிசுத்தப்படுத்தப்பட்ட தீர்த்தமாதலின், அவர்கள் மனதில் உள்ள

உலக எண்ணங்கள் யாவும் அவர்களைவிட்டு அகன்றன. உடனே அவர்களும் ஸந்யாஸிகளாகப் பரம்பொருளை அடையவேண்டும் என்ற உண்மையான எண்ணம் உண்டாகிவிட்டது. தகப்பனார் கட்டளைக்கு விரோதமாக அவர்கள் தபஸ்செய்யத் தொடங்கினர். அப்பொழுது நாரதர் வந்து அவர்களுக்கு ஞானோபதேசம் செய்து அவர்களைப் பரமபதம் அடையும்படி செய்துவிட்டார். இது தக்ஷருக்கு ஏற்பட்ட முதல்தடை. இதன் பின்பு அவர் பாஞ்சஜனி என்ற தமது மற்றொரு பெண்ஜாதியிடம 1000 பிள்ளைகளை உண்டாக்கினர். அவர்களும் நாராயண ஸரஸை அடைந்து நாரதர் உபதேசம் பெற்று மேலான பதவியை அடைந்துவிட்டனர். இதனால் தக்ஷருக்குத் துக்கம் அதிகரிக்க, நாரதரைக் கண்டதும் இவருக்குக் கோபம் அதிகரித்தது. அவரை வாயில் வந்தபடி பழித்தார். நாரதர் எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டார். இவ்வாறு பிள்ளைகள் மூலமாக தமது காரியம் பூர்த்தியாகாதது கண்டு பெண்களை உண்டாக்கி அவர்கள் மூலமாகத் தமது காரியத்தைத் தக்ஷர் நிறைவேற்றினர். இப்பெண்கள் மூலமாகத்தான் உலகில் நாகாள், பசு, பக்ஷிகள் முதலியன உண்டாயின.

வினா 12.—இதன் பின்பு சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப் பற்றிப் பேசலானார்.

விடை:—பிரஹஸ்பதியாகிய தேவகுரு ஒருநாள் தேவஸபைக்கு வந்தார். ஸுகத்தில் மூழ்கி ஸபையில் நடந்த விநோதங்களைக் கவனித்துக் கொண்டிருந்தமையால், இந்திரன் அவருக்குத் தகுந்த மரியாதைகள் செய்யவில்லை. அவர் கோபித்துக்கொண்டு தமது

பௌரோஹித்யத்தை விட்டுவிட, அதனால் தேவ லோகத்தில் விளைந்த பிரமாதங்களைச் சுகப்பிரம்மம் விவரிக்கலானார்.

வினா **13.**—பிரஹஸ்பதி கோபித்துக்கொண்டு ஸபை விட்டுச் சென்றதும் மேல் என்ன நடந்தது?

விடை.—பிரஹஸ்பதி திடீரென்று இந்திர ஸபையை விட்டுப் போனதும், இந்திரனுக்குத் தான் செய்த அபராதம் ஞாபகம் வந்தது. தனது ஆசாரியரை அவமதித்ததை எண்ணி எண்ணித் துக்கித்துவிட்டு, அவர் வீடுசென்று அவருக்கு அடிபணிந்து அவரைத் திருப்திப் படுத்தவேண்டும் என்று இந்திரன் எண்ணினான். இதை அறிந்ததும் பிரஹஸ்பதி தமது வீட்டைவிட்டு வெளியேறி தமது மாயா சக்தியால் மறைந்து கொண்டார். இந்திரன் சேவகர்கள், ஸ்வர்க்கம் எங்கும் தேடியும் தேவகுரு அகப்படவில்லை. இதை அறிந்த அஸுரர்கள் சுக்கிராசாரியரது அனுக்கிரகத்தின்பேரில் தேவர்களைத் தாக்க அவர்களுக்குக் கஷ்டம் அதிகரித்தது. அவர்கள் பிரம்மாவினிடம் சென்று முறையிட்டனர்.

வினா **14.**—பிரம்மா தேவர்களுக்கு என்ன தந்திரம் சொல்லிக் கொடுத்தார்?

விடை.—கஷ்டம் தாங்கமாட்டாது பரிதவித்துக்கொண்டிருந்த தேவர்களை நோக்கிப் பிரம்மா கொஞ்சம் குற்றங்கூறிவிட்டு முடிவில், 'துவஷ்டா என்ற ஓர் பிராம்மண ஸந்யாஸி இருக்கிறார். அவருக்கு விசுவரூபன் என்று ஓர் பிள்ளை, மஹாசிஷ்டன். ஆனால் அவனுக்கு அஸுரர்களிடம் கொஞ்சம் பக்ஷபாதம்

உண்டு. அதைக்கவனியாது நீங்கள் அவனைச் சென்று துதித்துத் திருப்திப்படுத்தினால் அவன் இந்தக் காலத்தில் குருவாக இருந்து ஸஹாயம் செய்வான்' என்று உபாயம் சொல்லிக் கொடுத்தார்.

வின 15.—தேவதைகள் என்ன செய்தார்கள்? மேல் என்ன நடந்தது?

விடை.—தேவதைகள் பிரம்மா சொன்ன புத்திமதிப்படி விசுவரூபரிடம் சென்று அவரைத் துதித்துத் தமது கஷ்டங்களைத் தெரிவித்துக்கொண்டு முடிவில் அவரையே தமக்குப் புரோஹிதராக இருக்கும்படி வேண்டிக்கொண்டனர். அவர் அதற்கு இசைந்து தேவதைகளுக்கு விஷ்ணு ஸம்பந்தமாகியும் அஸுரர்கள் ரக்ஷணத்திற்காகச் சுக்கிராசாரியரால் அவர்களுக்கு உபதேசிக்கப்பட்டதுமாகியும் உள்ள திவ்ய மந்திரத்தை விசுவரூபர் தேவதைகளுக்கு உபதேசம் செய்ய, அவர்களுக்கு மெதுவாக ஜயம் வரத் தொடங்கியது. (இவ்விடத்தில் சுகப்பிரம்மம் பரீக்ஷித்திற்கு இந்த மந்திரத்தை விஸ்தாரமாக உபதேசிக்கிறார்).

வின 16.—இந்த விசுவரூபருக்கு அஸுரர்களிடம் பக்ஷபாதம் இருப்பானேன்? இதனால் என்னென்ன பிரமாதங்கள் விளைந்தன?

விடை.—விசுவரூபரது தாயார் அஸுரவம்சத்தைச் சேர்ந்தவள். ஆகையால் அவருக்கு அஸுரர்களிடம் பக்ஷபாத மிருந்தது. இந்த பக்ஷபாதத்தால் தேவர்களது மேன்மைக்காக வெளிப்படையாக இவர் யாகாதி கிருத்தியங்களைச் செய்து கொண்டிருந்தபோதிலும், மறைவாக அஸுரர்களது மேன்மைக்காக ஆஹுதிமுதலி

யன கொடுத்துக் கொண்டே வந்தார். இதை ஒருதரம் இந்திரன் கண்டுபிடித்து அதிக கோபங்கொண்டு தாமதிக்காமல் விசுவரூபரது தலையை ஓரே வீச்சாக் வீசி அவரைக் கொன்றுவிட்டான். இவன் கொன்றது நியாயமாக விருந்தபோதிலும், பிரம்மஹத்தி தோஷத்தை இவன் அங்கீகரித்துக்கொண்டு, அதை பூமி, மரம், ஜலம், ஸ்திரீகள் ஆகிய இவைகளுக்கு நான்கு பாகமாகப் பிரித்துக்கொடுத்துச் சுத்தமானன். இந்தப் பாபத்தை முற்கூறியவர்களின்மேல் சாற்றியதால் அவர்களுக்கு ஒவ்வொரு வரத்தையும் கொடுத்துத் திருப்திசெய்தான்.

வி. 17.—இவ்வாறு விசுவரூபரால் உண்டான ஆபத்து நீங்கியதும், இந்திரனுக்கு வேறு எந்தப்பெரிய ஆபத்து எவ்வாறு வந்தது?

விடை.—விசுவரூபர் இந்திரனல் இறந்த ஸங்கதி அவர் தகப்பனரான துவஷ்டா காதில் விழுந்ததும், அவர் அதிக கோபங்கொண்டு ஓர் யாகம்செய்து அதிலிருந்து இந்திரன் முதலிய தேவர்களை வேரறுக்கும்படியான ஓர் அஸுரனை ஸ்ருஷ்டித்தார். இவன் பிராம்மணனுகவும், வைராக்கியம் முதலியவைகள் உடையவனுகவும், தேவர்களிடம் விரோதம் குடிகொண்டிருந்த அஸுரனுகவும் இருந்தான். இவன் பெயர் விருத்ரன். இவனை தேவர்கள் எதிர்த்துப் போர்செய்ய அவர்களுடைய திவ்ய ஆயுதங்கள்யாவும் விருத்ராஸுரனல் விழுங்கப்பட்டு வீணுயின.

வி. 18.—தேவதைகள் கதி இவ்வாருக அவர்கள் என்ன செய்தார்கள்? அதன் பயன் என்ன?

விடை.—இப்புதிய ஆபத்து வந்ததும் மிகப்பயந்த தேவதைகள் மஹா விஷ்ணுவை அடுத்துத் தமது கஷ்டங்களைத் தெரிவிக்க அவர் பிரத்யக்ஷமாகி தேவதைகளை நோக்கி 'பூலோகத்தில் ததீசி என்ற ஒரு மஹரிஷி இருக்கிறார். அவரிடம் சென்று அவர் தேகத்தை யாசித்துப் பெற்றுக்கொண்டு வாருங்கள்! அவரது முதுகு எலும்பால் அதிக கொடூரமான ஆயுதம் ஒன்று செய்யலாம். எனது அனுக்ரஹத்தால் அந்த ஆயுத மூலமாக நீங்கள் எளிதில் விருத்திராஸுரனைக் கொன்று விடலாம்' என்று உபாயம் சொன்னார்.

வின 19.—இந்திரன் ததீசியினிடம் சென்று எவ்வாறு காரியத்தை ஸாதித்தான்? இதனால் நாம் அறிந்துகொள்ள வேண்டியது என்ன?

விடை.—இந்திரன் ததீசியிடம் சென்று அவரைத் துதித்து 'அவரது தேகம் தேவதைகளது பொது நன்மைக்காக வேண்டும்!' என்று கேட்டான். ஸகல தர்மத்தையும் அறிந்த ததீசிமஹாமுனி பலர் நன்மைக்காகத் தாம் இறத்தல் நலம் என்று எண்ணி மிகுந்த ஸந்தோஷத்துடன் யோகாப்பியாஸம் செய்து பகவத்தியான பூர்வகமாகத் தமது தேகத்தை நழுவவிட்டார். உடனே இந்திரன் விசுவகர்மாவின் ஸஹாயத்தால் வைரம் பாய்ந்த ததீசி முனிவரது எலும்புகளால் வச்சிராயுதம் உண்டாக்கி அதைக்கொண்டு விருத்திராஸுரனை வந்து எதிர்த்தான். இந்தக் கதையிலிருந்து ஸர்வ பூதங்களிடத்தும் தயை குடி கொண்டிருக்கும் மஹான்கள் பொது நன்மைக்காகத் தமது உயிரை வேண்டினாலும் கொடுப்பார்கள் என்று தெரியவருகிறது.

வினு 20.—இந்திரனுக்கும் விருத்திராஸுரனுக்கும் யுத்தம் எவ்வாறு நடந்து வந்தது? அது எவ்வாறு முடிவு பெற்றது?

விடை.—வச்சிராயுதத்தை எடுத்துக்கொண்டு இந்திரன் அஸுரர்களைத் தாக்கவும் அவர்கள் சிதறி ஓடத்தொடங்கினார். அப்பொழுது விருத்திராஸுரன் மிகுந்த கோபத்துடன் இந்திரனோடு போர்செய்து அவனது ஆயுதங்கள் எல்லாம் வீணாகும்படி செய்தான். இப்படி யுத்தம் நடந்து வருகையில் விருத்திராஸுரன் இந்திரனைக் கொல்லுவதற்காக ஒருசூலத்தை அவனை நோக்கி எறிந்தான். உடனே இந்திரன் தனது வச்சிராயுதத்தால் அந்த சூலத்தையும் அவன் கையையும் வெட்டி எறிந்தான். விருத்திராஸுரன் அப்பொழுது செய்து வந்த விசித்திர யுத்தத்தைக்கண்டு யாவரும் அவனைப் புகழ்ந்து பேசினர். இச்சண்டை நடக்கும் பொழுதே விருத்திரன் தனது ஞானத்தைப் பலவித வாக்கியத்தால் வெளியிட்டுக்கொண்டும், இந்திரன் விசுவரூபரைக்கொன்றதால் செய்த பெரும்பாபத்தை வெளியிட்டுக்கொண்டும், மிகுந்த பலத்தோடு விடாது சண்டை செய்தான். இதில் இந்திரன் முதலியவர்களை விருத்திராஸுரன் விழுங்கி விட்டான். உள்ளே இருந்தபடியே இந்திரன் தனது வச்சிராயுதத்தால் அதிகக் கஷ்டத்தின் பேரில் அவன் தலை முதலியவற்றை வெட்டி அவனைக் கொன்றான். உடனே விருத்திராஸுரன் ஆத்மா எல்லோர் முன்னிலையிலே ஜ்யோதிரூபமாக கடவுளிடம் லயித்தது.

வினு 21.—இந்திரனுக்கு விருத்திராஸுர வதத்தால் என்ன ஆபத்து வந்தது? அது எவ்வாறு நீங்கிற்று?

விடை.—விருத்திராஸுரன் மஹா, பிராம்மணனாகையால் இந்திரனுக்குப் பிரம்மஹத்தி தோஷம் வர அதற்குப் பயந்து கொண்டு கொஞ்சகாலம் அவன் தாமரை தண்டுள் ஒளித்திருந்தான். இந்தக் காலத்தில் நகுஷன் இந்திரப்பட்டம் பெற்றுத் தனது துர்நடத்தையால் மலைப்பாம்பானான். பின்பு தேவதைகள் அசுவமேத யாகம் செய்து இந்திரனது பிரம்மஹத்தியைத் தீர்க்க இந்திரன் தனது ஸ்தானத்திற்கு வந்து ஸுகமாக இருந்தான். (மஹாபாரத வினவிடை முதல்பாகம் உத்தியோக பர்வம் வினக்கள், 9 முதல் 15 வரை பார்க்க.)

வின **22**.—விருத்திராஸுரனுக்கு இந்த சிறந்தயோக்யதை வருவானேன் என்ற கேள்விக்குச் சுகப்பிரம்மம் என்ன பதில் சொன்னார்?

விடை.—விருத்ராஸுரனுக்குப் பூர்வ ஜன்மத்திலிருந்த யோக்கியதையை விஸ்தாரமாக எடுத்துக்கூறி அவனுக்கு அஸுரனாகப் பிறக்க ஏற்பட்ட சாபத்தை விவரித்து, முன் குறிப்பித்த கேள்விக்குத் தகுந்த பதில் சொன்னார்.

வின **23**—விருத்திராஸுரன் பூர்வஜன்மத்தில் யாராக இருந்தான்? அவன் குடும்ப விஷயங்கள் எவ்வாறிருந்தன?

விடை.—இவன் முன் ஜன்மத்தில் ஸுரஸேன தேசத்து அரசன் சித்திரகேதுவாக இருந்தான். இவனுக்குக் கோடி பெண்சாதிகள் இருந்தனர். அவர்களுள் பட்ட மஹிஷிக்கு கிருதத்யுதி என்று பெயர். அவனுக்கு ஸகல ஸம்பத்துகளிருந்தும் புத்திர ஸம்பத்து மாத்திரம் இல்லாமலிருந்தது. அப்பொழுது அவன் ஸபைக்குத் தற்செயலாக வந்த ஆங்கிரஸ மஹா முனியின் ஸஹாயத்தால் ஓர் சருவை (மந்திரித்த

சோற்றை) தனது பட்டமஹிஷிக்குக் கொடுக்க, அவ்விடம் ஓர் பிள்ளை அவனுக்கு உண்டாயிற்று.

வி. **24**.—இவனுக்கு என்ன ஆபத்து யாரால் வந்தது?

விடை.—ஒரு பெண்சாதிக்குப் பிள்ளையுண்டானதும். மற்றவர்களுக்குப் பொருமையுண்டாகிவிட்டது. ஒரு நாள் அவர்கள் இப்பிள்ளையை விஷம்வைத்துக் கொன்றனர். சித்திரகேது முதலியோருக்கு இதனல் மிகுந்த துக்கம் வர, ஸமாதானம் செய்வார் இன்றி எல்லோரும் துக்கத்தால் மெய்ம்மறந்து கிடந்தனர்.

வி. **25**.—இந்த ஸமயத்தில் யார்வந்து எவ்வாறு சித்திரகேதுவைத் தேற்றியது? மேல் என்ன நடந்தது?

விடை.—இந்த துக்கசமயத்தில் ஆங்கிரஸ்ஸும் நாரதரும், சித்திரகேது ஸபைக்கு வந்து புண்ய பாபத்தின் ஸ்வரூபம், ஜீவ ஆத்மாவின் ஸ்வரூபம் முதலியவைகளை விஸ்தாரமாக எடுத்துக்கூறி அவனைத் தேற்றிப்பார்த்தார்கள். இதற்கு மேல் விஷயங்களின் நிலைமையை அவர்கள் எடுத்துக்கூறினர். இதனல் அரசன் தேருததுகண்டு நாரதர் இறந்த குழந்தையின் ஜீவாத்மாவை அழைத்து அதற்கு அதன் தாய்தந்தையார் படும் துக்கத்தைக் காட்டினர். அது அவர்கள் முன்னிலையில் ஜீவாத்ம ரூபத்தை உள்ளபடி எடுத்துக்கூறி தனக்கும் அவர்களுக்கும் யாதொரு ஸம்பந்தமும் இல்லை என்று கூறியது. உடனே எல்லோரும் தேறிஞர்கள். கொலைசெய்த பெண்சாதிகள் எல்லோரும் ரிஷிவாக்கியத்தால் பயப்படுத்தப்பட்டுத் தகுந்த பிராயச்சித்தங்கள் செய்து சுத்தர் ஆஞர்கள்.

வி. **26**.—சித்திரகேதுவின் மனேநிலை எவ்வாறிருந்தது? இதனல் அவனுக்கு என்ன நன்மை உண்டாயிற்று?

விடை.—சித்திரகேதுவின் மனம் தெளிந்து அவன் ஸுகம் அடைந்தான் அப்பொழுது அவனுக்கு நாரதர் விஷ்ணு ஸம்பந்தமான ஓர் திவ்ய மந்திரத்தை உபதேசிக்க அவன் அதை மிகுந்த பக்தியுடன் ஏழுநாள் ஜபித்தான். அவனுக்குப் பகவான் தமது திவ்யமங்கள ரூபத்தோடு தோன்றி திவ்ய ஞானம் வரும்படி அனுக்கிரஹித்து மறைந்தார்.

வின 27.—இப்படி ஸன்மார்க்கத்திலிருந்த சித்திரகேதுவுக்கு விருத்திராஸுர ஜன்மம் வரக்காரணம் என்ன?

விடை.—இவன் உலாவி வருங்கால் மஹாரிஷிகள் மத்தியில் பரமசிவன் பார்வதியைத் தமது மடியில் வைத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டவுடன் இவனுக்கு 'இவர் மஹா யோகியாம்! இவருக்கு ஸ்திரீயிடம் என்ன இவ்வளவு ஆசை?' என்று எண்ணம் உண்டாக இவன் உரக்கச் சிரித்தான். பரமசிவம் இவன் அறியாமையைக் கண்டு சிரித்தார். அம்பிகைக்கு இவன் அறியாமையை மாற்ற முன்னதாகக் கோபம் உண்டாக அவள் 'நீ அஸுரனாகக்கடவது!' என்று சபித்தாள். சித்திரகேது அந்தச்சாபத்தை அங்கீகரிக்க அவன் விருத்திராசுரனாகப் பிறந்தான். (இதனால்தான் விருத்திராஸுரனுக்கு மிகுந்த ஹரிபக்தி இருந்தது.)

வின 28.—இதன் பின்பு சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப் பற்றிப் பேசினார்?

விடை.—சுகப்பிரம்மம் மருத்துக்கள் தேவதைகளான விதத்தைப்பற்றி விஸ்தாரமாகப் பேசினர். (இதன் விவரத்தை இராமாயண வின விடை, பாலகாண்டம் வின 39–தைப்பார்க்க.) இதன் பின்பு மருத்துக்களது ஜனனத்திற்கு முன்பு திதிதேவி அனுஷ்டித்த பும்ஸவன விரதத்தை விஸ்தாரமாக எடுத்துரைத்தார்.

# 7-வது ஸ்கந்தம்

## பிரஹ்லாத சரித்திரம்

### நாரத யுதிஷ்டிர ஸம்வாதம்

*துன்ப வாத்தரும் இன்பவா வின்மையே தொகுக்கும்*
*இன்ப வேதுநின் னன்பிறு லன்றியார்க் கெய்தும்*
*வன்பி லாவிலங் கென்பிலாப் புழுவின்யான் வரினும்*
*நின்ப தாய்புயத் தன்புமா றுமைதா நெடியோய்!*

வின 1.—விருத்திராஸுரவதம் சொல்லி முடிந்ததும் பரீக்ஷித்திற்கு என்ன ஸந்தேகம் வந்தது? அதைச் சுகப்பிரம்மம் எவ்வாறு நிவர்த்தித்தார்?

விடை.—ஆனந்த ரூபியாகிய பகவான் தேவர்கள் மேல் மாத்திரம் பக்ஷபாதமாக இருந்து அஸுரர்களைக் கொல்லுவானேன்? என்று பரீக்ஷித்துக் கேட்க, சுகப்பிரம்மம் 'பகவான் ஸகலத்திற்கும் நாதர் ஆதலால், அவருள்ளே ஸ்நேகிதம், விரோதம் முதலிய துவந்துவங்கள் யாவும் அடங்கியுள்ளன. பிரபஞ்ச காரணமாகிய பிரகிருதிக்கு ஸத்வம் ராஜஸம் தாமஸம் ஆகிய மூன்று குணங்கள் உண்டு. இவைகளில் ஒரு ஸமயத்தில் ஏதாவது ஒரு குணம் ஓங்கிநிற்கும். மற்றிரண்டும் தணிந்து நிற்கும். ஸத்வம் ஓங்குங்கால் தேவதைகளுக்கும், ராஜஸம் ஓங்குங்கால் அஸுரர்களுக்கும், தாமஸம் ஓங்குங்கால் ராக்ஷஸர்களுக்கும் பலம். பகவான் இவை மூன்றிலும் ஒட்டினவர் அல்லர். முக்குணங்களிலும் சிறந்ததாகிய ஸத்வம், தேவதைகளி

டம் அதிகமாக இருப்பதாலும் அக்குணத்தின் மூலமாகத் தமது ரூபம் எளிதில் விளங்கும் ஆதலாலும் பகவான் தேவர்கள் பக்கம் இருப்பதும்போலக் காணப்படுகிறார், என்று சொல்லிப் பின்பு யுதிஷ்டிர மகாராஜரது ராஜஸூய யஞ்ஞ ஸபையில் அவருக்கும் நாரதருக்கும் நடந்த ஸம்வாதத்தை விஸ்தாரமாகச்சொல்லிப் பரீக்ஷித்தை திருப்திப்படுத்தினர்.

வினு 2.—யுதிஷ்டிர ராஜரது ஸபையில் ஸம்வாதம் நடக்கக் காரணம் என்ன? அது எவ்வாறு நடந்து வந்தது?

விடை.—சேதி தேசாதிபதியாகிய சிசுபாலன் கிருஷ்ண பகவானை வாயில்வந்தபடி எல்லாம் வைது முடிவில் அவர் சக்ராயுதத்திற்கு இரையானன். இவன் இறந்ததும் இவனது ஆத்மா தேஜஸ்ரூபமாக கிருஷ்ணபரமாத்மாவுள் பிரவேசித்தது. (இதன் விஸ்தாரத்தை மஹாபாரத வினு விடை, ஸபாபர்வம் வினுக்கள் 28 முதல் 32 வரையில் பார்க்க.) இதைக்கண்ட யுதிஷ்டிரருக்கு 'இவ்வளவு கொடிய சிசுபாலனுக்கு இவ்வளவு நல்ல பதவி எவ்வாறு கிடைத்தது?' என்ற சங்கை உண்டாக, அவர் தமது சங்கையை அருகிலிருந்த நாரதருக்குத் தெரிவித்தார். நாரதர் 'எவ்விதத்திலாவது பகவானைப் பக்திசெய்ய வேண்டியது. கம்ஸன் பயரூபமான பக்தியையும், கோபிகள் ஸ்நேகரூபமான பக்தியையும், சிசுபாலன் பொறாமை ரூபமான பக்தியையும், விருஷ்ணி யாதவாள் உறவு ரூபமான பக்தியையும், உம்மைப் போன்றவர்கள், அன்பு ரூபமான பக்தியையும், எங்களைப்போன்ற ரிஷிகள் நேரான தியான ரூபமான பக்தியையும் செய்து பகவானை அடைந்திருக்கின்றனர். மேலும் சிசுபால தந்தவக்கிரர்கள் உண்மையில் பகவா

னது துவார பாலகர்கள். அவர்கள் ஸனகாதிகள், சாபத்தால் பகவானுக்கு விரோதமாக மூன்று ஜன்மங்கள் எடுக்க வேண்டிவந்தது. முதலில் அவர்கள் ஹிரண்ய கசிபு ஹிரண்யாக்ஷராகவும், இரண்டாவது ராவண கும்பகர்ணராகவும், மூன்றாவது சிசுபால தந்தவக்கிரர்களாகவும் பிறந்து, இந்த முடிவான ஜன்மத்தில் பகவானை அடைந்தார்கள். ராவண கும்பகர்ணர்கள் பகவத் அவதாரமான ஸ்ரீ ராமனால் இறந்த கதை இனிமேல் மார்கண்டேயர் மூலமாக உமக்குத் தெரியவரும். ஹிரண்யகசிபுவை பகவான், வராகவதாரம் செய்து கொன்றார் (ஸ்கந்தம் 3—ஐப்பார்க்க). பகவத் பக்தனை தன் பிள்ளை பிரஹ்லாதனைக் கஷ்டப்படுத்தியதற்காகப் பகவான் நரசிங்க உருக்கொண்டு ஹிரண்யாக்ஷனைக் கொன்றார். மூன்றும் ஜன்மத்தில் பகவான் கிருஷ்ணன் உருக்கொண்டு அவர்களைப் பிறவிக்கடலிலிருந்து தப்புவித்தார்' என்று சொல்லித் தருமபுத்திரர் வேண்டுகோளின்படி அவருக்கு நாரதர் பிரஹ்லாத சரித்திரத்தை விஸ்தாரமாக எடுத்துரைத்தார்.

வினு 3.—பிரஹ்லாதன் யார்? அவன் குணவிசேஷம் என்ன?

விடை.—இவன் ஹிரண்யகசிபு என்ற தைத்யனது பிள்ளை. இவன் பிறக்கும்பொழுதே மிகுந்த ஹரி பக்தியோடு கூடியவனாக இருந்தான். ஸதா பகவானது தியானத்திலேயே இவனது மனது ஊறிக் கொண்டிருந்தது.

வினு 4.—இவனுக்கு என்ன விதமாக முதலில் தடை ஏற்பட்டது? அப்பொழுது இவன் எவ்வாறு நடந்து கொண்டான்?

விடை.—இவன் தகப்பனை ஹிரண்யகசிபு இவனுக்கு ஹரி பக்தியே வராமலிருக்கும்படி தனது குருவாகிய சுக்கிராசாரியரைக்கொண்டு கல்வி கற்பிக்கும்படி செய்தான். அவர், இவனைத் தமது பிள்ளைகளாகிய சண்டாமர்க்கர்களிடம் ஒப்புவித்தார். அவ்விருவரும் உலகத்திற்கு வேண்டிய தர்மார்த்த காமங்களை மாத்திரம் பூர்த்தியாகக் கற்றுக்கொடுத்தார்களே ஒழிய மேலான மோக்ஷ உபாயத்தைச் சொல்லிக் கொடுக்கவேயில்லை. இப்படி இருக்கையில் ஒருநாள் ஹிரண்யகசிபு பிரஹ்லாதனை மடிமேல் வைத்துக்கொண்டு 'எது மிகச்சிறந்தது?' என்று கேட்க, பிரஹ்லாதன் 'நாம் அவசியம் செய்யவேண்டிய கர்மங்களைச்செய்து பலன்உட்பட எல்லாவற்றையும் பகவத் அர்ப்பணம் செய்து, நாமசிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், கைங்கரியம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸ்நேகம், கர்மத்தைப் பாகவதர் அர்ப்பணம் செய்தல் ஆகிய இந்த ஒன்பது ரூபமாக பகவத் பக்தியை இடைவிடாது செய்தலே மிகச்சிறந்தது' என்று தனது பிறவிக்குணத்தை முன்னிட்டுக்கொண்டு சொன்னான். இதைக்கேட்டதும் ஹிரண்யகசிபுவுக்கு அதிகக்கோபம் வந்துவிட்டது. தனது பிள்ளையைப் பயமுறுத்திப் பார்த்தான். ஒன்றும் பயன்படவில்லை. குரு புத்திரர்களிடமிருந்து, தன்பிள்ளை ஸ்வபாவத்தை அறிந்துகொண்டு அவனை வருத்தத் தொடங்கினான்.

வினு 5.—ஹிரண்யகசிபு எவ்வாறு பிரஹ்லாதனை வருத்தினன்? இது பின்பு எவ்வாறு முடிவு பெற்றது?

விடை.—கோபாவேசத்தில் தனது வேலைக்காரர்களை அழைத்துத் தன்பிள்ளையை எவ்விதத்திலாவது சொல்

லும்படி கட்டளையிட்டான். வேலைக்காரர்கள் மிருந்த குரூர ரூபத்தோடு முதலில் பிரஹ்லாதனைப் பயமுறுத்தினர். அவனைச் சூலங்களால் குத்தினர். பாம்புகளைக் கடிக்க விட்டனர். மலைகளிலிருந்து உருட்டிவிட்டனர். யானைகளைக்கொண்டு இடறுவித்தனர். அநேக நாள் பட்டினி போட்டுப் பார்த்தனர். விஷங்கலந்த சோறுகளைக் கொடுத்துப் பார்த்தனர். மழை வெயில் முதலியவைகளில் நிறுத்திப் பார்த்தனர். எல்லாவற்றையும் ஹரி நாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டே பிரஹ்லாதன் ஸஹித்து வந்தான். வேலைக்காரர்கள்செய்த கொடுமை யாவும் இவனைப் பாதிக்கவேயில்லை. இதைக் கேள்விப்பட்ட ஹிரண்யகசிபுவுக்கு பயம் வந்துவிட்டது. பிள்ளையின் ஸ்திரபுத்தியைப் பார்த்தால் எங்கே அவனோடு விடாது சண்டையிட்டால் தனக்கு அதனால் மரணம் ஸித்திக்குமோ என்ற குழப்பமும் உண்டாய் விட்டது. அப்பொழுது குருபுத்திரர்கள் சொன்னபடி திரும்பவும் ஜாக்கிரதையாய்க் கல்வி கற்பிக்கத் தன் பிள்ளையை அவர்களிடம் ஒப்புவித்தான்.

வினு 6.—ஹிரண்யகசிபுவுக்கு இம்மாதிரியான கொடிய ஹரித்துவேஷம் வருவானேன்? இதை எவ்வாறு ஆதியில் காட்டினன்?

விடை.—தனது தமயன், வராஹரூபியான ஹரியால் கொல்லப்பட்டான் என்று கேட்டதும், இவனுக்கு ஹரியின் மேல் மிகுந்த பகை உண்டாயிற்று. ஹரியானவர் பிராம்மணர்கள், ஸந்மார்க்கர்கள், தேவதைகள், யஞ்ஞாதிகள்! ஆகிய இவைகளில் அடங்கியிருக்கிருர் என்று அறிந்த இவன், உடனே தன் அஸுரகுணத்தை முன்னிட்டுக் கொண்டு முற்கூறியவைகளை ஈவு இரக்கமின்றி அழிக்

கும்படி தனது பரிவாரங்களுக்குக் கட்டளையிட்டான்! இது முடிந்ததும் தன் விரோதியான ஹரியை வேரறுக்கும் சக்தி தனக்கு வருவதற்காகப் பிரம்மதேவரைக் குறித்துத் தபஸுசெய்ய மந்தரமலை சென்றான்.

வினா 7.—இவன் எவ்வாறு தபஸு செய்தான்? இது எவ்வாறு முடிவு பெற்றது? பின்னர் இவன் என்ன செய்தான்?

விடை.—இவன் வனம் சென்று மெய்மறந்து வெகுகாலம் பிரம்ம தேவரைக்குறித்துக் கோரமான தவம் செய்தான். இவன் பேரில் புற்று மூடிக்கொண்டது. இவன் சதைகள்யாவும் அழிந்துபோனபோதிலும் அசையாத பிடிவாதத்துடன் இவன் தபஸுசெய்ய இவன் தவத்தீ உலகங்கள் எல்லாவற்றையும் தஹிக்கத் தொடங்கியது! இது பொறுக்க மாட்டாது தேவர்களின் வேண்டுகோளின்படி பிரம்மா இவனுக்குப் பிரத்தியக்ஷமானார். இவன் அவரைத் துதித்து, 'எனக்கு இப்பொழுது சிருஷ்டியிலிருக்கும் தேவர், அஸுரர், மனிதன், புலி, சிங்கம் முதலிய ஜந்துக்கள் எதனாலும் சாவுவரக்கூடாது! உயிருள்ள வஸ்து, உயிரில்லா வஸ்து, எதனாலும் சாவு வரக்கூடாது. எந்த ஆயுதத்தினாலும் நான் இறக்கக்கூடாது. நான் ஆகாயத்திலும் பூமியிலும்; இரவிலும் பகலிலும்; வெளியிலும், உள்ளிலும்; மரணம் அடையக்கூடாது!' என்ற பெரிய வரத்தைக் கேட்டான். பிரம்மதேவர் இதைக் கொடுத்து விட்டு மறைந்தார். தனக்கு ஹரியிடம் உள்ள பகையை மறவாதவனாய் இவன், தேவதைகள் முதலிய ஸகல ஜீவராசிகளையும் வருத்தி எல்லோரையும் தனக்கு அனுகூலமாக ஊழியம் செய்யும்படிக் கட்டுப்படுத்தி

மிகுந்த கஷ்டப் படுத்தினான். ஹரிபக்தி செய்பவர்களைக் கண்டால் இவனுக்கு மிகுந்த கோபாவேசம் வர, அவர்களை இவன் கொல்வது வழக்கம். தன் பிள்ளைக்கே இந்தப் பக்தி வந்ததாக முதலில் கண்டவுடன் அவனைச் சீர்த்திருத்தும்படி மிகுந்த கோபத்துடன் குருபுத்திரருடன் ஒப்புவித்தான்.

வினா 8.—இந்தக்கொடிய ஹிரண்யகசிபுவினிடம் நற்குணங்கள் ஒன்றும் இல்லையா? அவை எவ்வாறு வெளி வந்தன?

விடை.—இவனுக்கு நல்ல ஞானம் மாத்திரம் உண்டு. ஹிரண்யாக்ஷனாகிய இவன் தமயன் இறந்த ஸங்கதியைக் கேள்விப்பட்டதும் மிகுந்த துக்கக் கடலில் ஆழ்ந்திருந்த தன் தாயாகிய திதியையும் தன் தமயன் பெண்டு பிள்ளைகளையும் மிகுந்த நேரான ஞான வழியில் நியாயங்களை எடுத்துக் கூறித் தேற்றினான். இப்படித்தேற்றி வருகையில் உசீனரதேசத்து அரசனாகிய ஸுயஞ்ஞன் கதையை எடுத்துரைத்து அவர்கள் துக்கம் ஆறும்படி செய்தான்.

வினா 9.—ஸுயஞ்ஞன் கதை என்ன?

விடை.—உசீனர தேசத்தில் ஸுயஞ்ஞன் என்ற ஒரு அரசன் இருந்தான். அவன் போர்க்களத்தில் முன்வைத்த கால் பின்வைக்காது இறந்தான். அவன் தாய் பெண் சாதிகள் முதலிய ஸ்திரீகள் யுத்தகளம்வந்து துக்கிக்கத் தொடங்கித் தேறுதல் அடையாமலே வெகு நாழிகை இருந்துவிட்டனர். அப்பொழுது யமதர்மராஜன் ஓர் சிறுவன் வேஷங்கொண்டு வந்து 'ஓர் ஊரில் ஓர் வேடன் ஆண் பெண்ணாகி இருந்த இரண்டு பறவை

களுள் ஒன்றை வலை வைத்துப் பிடித்தான். மற்றொன்று தப்பி ஓடாது மிகுந்த துக்கத்துடன் இருந்தவிடத்திலேயே அசையாதிருந்துவிட, கொஞ்ச நாழிகையில் ஒளிந்திருந்த வேடன்விட்ட அம்பிற்கு இரையாகி இறந்தது.' இதுபோல நீங்களும் யம பாதைக்கு உட்பட்டவர்கள்தான், இவ்வாறு புலம்பிக்கொண்டே இருப்பீர்களாகில் முடிவில் இப்படியே நீங்கள் இறந்து பிறப்பு இறப்பிற்கு மறுபடியும் ஆளாகி வருந்தவேண்டியதுதான். இவ்வுலகில் எப்படியாவது ஜீவிக்க உபாயம் தேடலாம். அதை காலதாமதம் இன்றிப் பின்பற்றிக்கொண்டு இருக்கிற வரையில் துக்கத்தை அதிகமாய் பாராட்டாது நல்ல வழியில் பகவத் பக்தியோடு நடந்து வருவீர்களாகில் நீங்கள் நல்ல கதியை அடைவீர்கள்' என்று சொல்லித் தேறுதல் சொல்ல, அவர்கள் தேறி தமது இருப்பிடம் சென்றனர்.

வினா **10**.—இந்த ஞானமிருந்த ஹிரண்யகசிபுவுக்கு ஹரித் துவேஷம் என்ற கெட்ட குணம் வருவானேன்?

விடை.—என்ன ஞானமிருந்தும் அஸுரனாகையாலும், ஸநகாதிகள் சாபத்திற்கு உட்பட்டவனாகையாலும் இவனுக்கு இருந்த ஞானம் எல்லாம் மழுங்கிப்போக ஹரித்வேஷமே மேலிட்டது.

வினா **11**.—இக்கொடிய ராக்ஷஸனுக்கு மஹா பக்திமானான பிரஹ்லாதன் எப்படி பிள்ளையாக ஏற்பட்டான்?

விடை.—ஹிரண்யகசிபு பிரம்மதேவரைக் குறித்து தபஸு செய்யச் சென்ற காலத்தில் தேவதைகள் ஒன்று சேர்ந்து இந்திரனை முன்னிட்டுக்கொண்டு அஸுரர்

களைத் தாக்கித் தோல்வி அடையும்படி செய்யப் படை எடுத்து வந்தனர். அப்பொழுது ஹிரண்யகசிபுவினது அரண்மனையில் அவன் பெண்சாதி கர்ப்பமாக இருக்கக் கண்டு இந்திரன் அவளைச் சிறைபிடித்துக்கொண்டு தேவலோகம் சென்றான். போகும் வழியில் நாரதர் அவனை ஸந்தித்து 'பரஸ்திரீயை ஏன் இவ்வாறு வருத்துகின்றாய்?' என்று கேட்க இந்திரன் 'இவள் ஹிரண்யகசிபுவின் பெண்சாதி. அவனே உலகத்தை எவ்வளவு வருத்துகிறான் பாருங்கள்! அவன் பிள்ளை அவனுக்கு மேலிருந்தால் என்ன பண்ணுகிறது? ஆதலால் இவளைப் பிரஸவமாகிறவரையில் என் வீட்டில் வைத்திருந்து பிறக்கும் பிள்ளையைக் கொன்றுவிட்டு இவளை ஹிரண்யகசிபுவினிடம் ஒப்புவித்து விடலாம் என்ற எண்ணத்துடன் சிறைபிடித்துப்போகிறேன்' என்றான். அதற்கு நாரதர் 'என்ன கெட்ட காரியம் செய்யத் துணிந்தாய்! இந்திரா! இவள் வயிற்றிலிருக்கும் பிள்ளை மஹாஹரிபக்தன். இவனால்தான் உங்களுக்கு நல்ல கதிவரப்போகிறது. ஆதலால் அவளை என்னிடம் விட்டுவிட்டுப்போ. நான் தகுந்த ஏற்பாடு பண்ணுகிறேன்!' என, இந்திரன் அவ்வாறு செய்தான். நாரதர் ஹிரண்யகசிபுவினது பெண்சாதியை தமது ஆசிரமத்திற்குக் கொண்டுபோய் அவள் வயிற்றுள் இருக்கும் குழந்தையின் க்ஷேமத்திற்காக அவனுக்குப் பக்தி மார்க்கத்தின் ரகஸியங்களை ஸாவதானமாகப் போதித்தார். இதனால்தான் பிரஹலாதன் பிறக்கும் பொழுதே மஹாபக்திமானாக இருந்தான்.

வி௵ **12.**—சண்டாமார்க்கரிடம் திரும்பவும் அனுப்பப் பட்ட பிரஹ்லாதன் என்ன செய்தான்?

விடை.—குருபுத்திரர்கள் தம்மால் கூடியவரையில் பிரஹ்லாதனுக்கு ஹரிபக்தி வாராதபடி கல்வி கற்பித்து வந்தார்கள். ஒரு நாள் இவர்கள் பள்ளிக்கூடம்விட்டு ஓர் காரியமாக வெளியே போயிருந்த ஸமயத்தில் பிரஹ்லாதன் பள்ளிக்கூடத்திலிருந்த தைத்யப்பிள்ளைகளைக் கூட்டி வைத்துக்கொண்டு ஞானம், வைராக்கியம், ஹரிபக்தி முதலிய விஷயங்களைப்பற்றி விஸ்தாரமாகப்பேசி அவர்களை நல்ல வழிகளில் திருப்ப முயன்றான். இதையறிந்த குரு புத்திரர்கள் நடுநடுங்கி ஓடிவந்து ஹிரண்யகசிபுவினிடம் தெரிவித்தனர்.

வின 13.—அப்பொழுது ஹிரண்யகசிபுவுக்கும் பிரஹ்லாதனுக்கும் என்ன சம்பாஷணை நடந்தது? எவ்வாறு முடிவுபெற்றது?

விடை.—தனது பிள்ளையை வெகு கோபத்தோடு அழைத்து, 'உனக்கு மரணம் அணுகிவிட்டதுபோல தோற்றுகிறது! என்னைக்கண்டு ஸகல லோகங்களும் பயப்படுகின்றன. நீ மாத்திரம் இவ்வளவு தைரியமாக இருக்கிறாயே! உன் இந்த தைரியத்திற்கு ஆதாரம் யாது?' என்று கேட்டான். அதற்கு பிரஹ்லாதன் 'எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளாகிய ஹரியே எனக்கு முக்கிய ஸஹாயம். அவரது பலத்தால்தான் நான் இவ்வளவு தைரியமாக இருப்பது. உம்மைப்போல் அறியாமை நிறைந்து ஏமாந்திருக்கும் ஜனங்கள் கண்ணில் அவர் படமாட்டார்! நீங்கள் உமது மனதை நேர்மைப்படுத்தினால்தான் ஜயித்தவராவீரே ஒழிய, வேறு விதத்தில் உமக்கு எவ்வளவு சக்தியிருந்தும் பிரயோஜனமில்லை!' என்று தைரியமாகக் கூறினான்.



நரஸிம்மாவதாரம்.

இதைக் கேட்டதும் தகப்பனுக்குக் கோபாவேசம் அதிகரிக்க ‘அடே பாபி! உனக்கு இறப்பதில் இஷ்டம் வந்துவிட்டதுபோலத் தோற்றுகின்றது’ என்று கர்ச்சித்துக்கொண்டு தன் பட்டாக்கத்தியும் கையுமாய் ஸிம்மாசனம்விட்டு இறங்கி ‘என்னைவிட வேறு சிறந்த பொருள் இருக்கிறதாகில் அது எங்கே? அது எங்கும் பரவியிருக்குமாயின் ஏன் இந்தத் தூணில் அது காணப்படவில்லை?’ என்று பரிஹாஸம் செய்து தனது முழு பலத்துடனே அருகிலிருந்த தூணைத் தன் கத்தியால் அடித்துவிட்டு, ‘நான் உன் கழுத்தை இப்பொழுது வெட்டப்போகிறேன்! உனக்கு ஆதாரமாகிய ஹரி இப்பொழுது எப்படி ரக்ஷிக்கிறார் பார்ப்போம்!’ என்று சீறிக்கொண்டு தூணை மறுபடி தன் கையினால் குத்திவிட்டு மஹா பக்தசிரோமணியான பிரஹ்லாதன் அருகில் மிகுந்த ஆத்திரத்துடன் சென்றான்.

வினா **14**.—அப்பொழுது என்ன அற்புதத் தோற்றம் உண்டாயிற்று?

விடை.—ஹிரண்யகசிபு தூணைக் குத்தியதும் அதிலிருந்து அண்டம் பிளந்துபோகும்படியான ஓர் அட்டஹாஸம் உண்டாயிற்று. பிள்ளையைக்கொல்ல முயன்றுகொண்டிருக்கும் தகப்பனுக்கு இந்தச் சப்தத்தின் காரணம் புலப்படவில்லை. சுற்று முற்றும் வெருண்டு நோக்கிக்கொண்டிருந்த ஹிரண்யகசிபுவின் முன், தன் பக்தன் வார்த்தையை உண்மைப்படுத்துவதற்காக அவனடித்த தூணைப் பிளந்துகொண்டு பகவான் நரசிங்க வடிவாகத் தோன்றினார். இதைக் கண்டதும் ஹிரண்யகசிபுவுக்குத் தன் வரபலம் போய்விட்டது என்று

தோன்றிவிட்டது. ஸகல ஆயுதங்களையும் தனது பல புஜங்களிலும் ஏந்திக்கொண்டிருந்த நரசிங்கமூர்த்தியை ஹிரண்யகசிபு தன் பட்டாக்கத்தியுடன் எதிர்த்துப் போர்செய்ய இருவருக்கும் ஸாயங்கால நேரம் வரும் வரை போர்நடந்தது.

**வினு 15.**—அப்பொழுது பகவான் எவ்வாறு ஹிரண்யகசிபுவை ஸம்ஹாரம் செய்தார்?

**விடை.**—ஸாயங்கால ஸமயம் வந்ததைக் கண்ட நரசிங்கமூர்த்தி ஹிரண்யகசிபுவைத் துரத்திச்சென்று பிடித்து ஸந்தியாகாலம் தவறுதபடி விரைவில் அவனைத் தூக்கிக்கொண்டு, வாயிற்படி சென்று அங்கு அவனை மடிமேல் போட்டுக்கொண்டு தமது நகங்களால் அவன் வயிற்றைக் கிழித்து அவனைக் கொன்று அவன் குடலை மாலையாகப்போட்டுக்கொண்டு அவன் ரத்தத்தையுங் குடித்துவிட்டார். இவ்வாறு பிரம்மதேவரது வரத்துக்குக் கேடு வராமல் ஹிரண்யகசிபுவைக்கொன்ற நரசிங்கமூர்த்திக்கு உக்கிரகம் அதிமாக உண்டாயிற்று.

**வினு 16.**—இந்த ஸம்மார உக்கிரகத்தை யார் யார் தணிக்க முயன்றது? முடிவில் இது எவ்வாறு தணிந்தது?

**விடை.**—இந்த அற்புதத்தைப் பார்க்க வந்த தேவர்கள் முதலிய எல்லோரும் ஒழுங்காக உக்ரநரசிங்கரைத் துதிசெய்து சாந்தப்படுத்த முயன்றனர். இவர்களது முயற்சிகள் யாவும் வீணனதுகண்டு பிரம்மாவின் ஏற்பாட்டின்படி பிரஹ்லாதன் மஹா விநயத்துடன் பகவானை அணுகித் துதிக்க அவருக்குக் கோபம்தணிந்தது. உடனே அவர் தேவதைகளை மெச்சிக்கொண்டு

பிரஹ்லாதனை நோக்கி உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள் என்று ஆஞ்ஞாபித்தார்.

வினா **17**.—அப்பொழுது பிரஹ்லாதன் என்ன வரம் கேட்டுக்கொண்டான்?

விடை.—அப்பொழுது பிரஹ்லாதன் நரசிங்கமூர்த்தியை நோக்கித் 'தாங்கள் ஏழையை இப்படிப் பரிசோதிக்கக் கூடாது. எனக்கு வரனைக்கொடுத்து மறுபடியும் ஸம்ஸாரத்தில் அழுந்தும்படி செய்வது நியாயமா? நான் உலக இன்பங்களை உத்தேசித்துத் தங்களைப் பக்திசெய்யவில்லை. நான் நிராசையாகவேதான் பக்திசெய்தேன். எனக்கு ஏதாவது ஒரு வரம் கொடுத்தே தீரவேண்டும் என்று உங்களுக்குத் தோன்றினால், எனக்குப் புல் பூண்டு புழு முதலிய தாழ்ந்த ஜன்மங்கள் வந்தபோதிலும், தங்கள்மேலுள்ள பற்று மாறாதிருக்கும்படியாகவும், என் மனம் ஓர்வித ஆசையாலும் வருந்தாதிருக்கும்படியாகவும் அநுக்கிரஹியுங்கள். ஆசையால்தான் ஸகல கஷ்டங்களும் வருகின்றன. இந்த ஆசை நீங்கினால்தான் மேலான நிலையை அடைய யோக்யதை எனக்கு வரும்' என்றான்.

வினா **18**.—பகவான் என்ன ஏற்பாடு செய்தார்?

விடை.—பகவான் பிரஹ்லாதனை நோக்கி 'நீயே எனது பக்தன். அதனால்தான் ஒரு வரத்தையும் அபேக்ஷிக்காது நிஷ்காம்யமாக என்னைப் பக்திசெய்திருக்கிறாய் இருந்தபோதிலும் நீ முன் ஜன்மத்தில் செய்த புண்யத்தின் பலத்தை இப்பொழுது அனுபவிக்க வேண்டியதுதான். ஆதலால் நீ உலகிலிருந்து என்னை ஸதா பக்தி செய்துகொண்டு உலக ஸுகங்களில் தாக்கின்றி இருந்

துவிட்டு காலக்கிரமத்தில் என்னை வந்து அடைவா யாக' என்று அநுக்கிரஹித்தார்.

வினு 19.—பின்பு பகவான் மறையும்முன் என்ன செய் தார்?

விடை.—அப்பொழுது பிரஹ்லாதன் 'என் தகப்பன் தங் ளது கடாக்ஷ மாத்திரத்திலேயே புனிதனுய்விட்டபோ திலும் தாங்களும் அவரது பாபத்தை மன்னித்து கடைத்தேறும்படி அவரை அநுக்கிரஹிக்கவேண்டும்' என்று வேண்டிக்கொள்ள, பகவான் 'அப்படியே ஆகட் டும். உன்னைப்போன்ற புனிதன், பிறந்ததுமே உன் குடும்பம் அநேக தலைமுறை வரையில் கடைத்தேறி விட்டது!' என்று பிரஹ்லாதனை தேற்றிவிட்டு, தமது அருகில் வந்து துதித்த பிரம்மதேவரை நோக்கி 'இவ் வாறு இனிமேல் அஸுரர்களுக்கு வரங்கொடுப்பது மிகுந்த கஷ்டத்திற்கு காரணமாகும்' என்று புத்திமதி கூறி மறைந்தார்.

வினு 20.—இந்தக் கதையைக் கேட்டுவந்த யுதிஷ்டிரர் மேல் என்ன கேட்டார்? அப்பொழுது நாரதர் என்ன செய்தார்?

விடை.—இக்கதையைக் கேட்டுவந்த யுதிஷ்டிரர் நாரதரை நோக்கி 'மஹாமுநியே! நமது மதத்தையும் ஆசாரங் களையும் பற்றி விஸ்தரித்துக்கூறி என்னை அனுக்கிர ஹித்தருளவேண்டும்' என்று கேட்க, அவர் பகவானைத் துதிசெய்துவிட்டு வர்ணுசிரம தர்மங்களை விவரி[த்] தார்.

வினு 21.—வர்ணங்கள் எத்தனை விதம்? அவைகளி[ன் தர்] மம் என்ன?

விடை.—வர்ணங்கள் நான்கு. அவையாவன பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வர்ணங்களே. இவைகளோடு ஸ்திரீகள், கலப்பு வர்ணங்கள் ஆகிய இரண்டையும் சேர்த்துக்கொள்ளுவது வழக்கம்.

பிராம்மணர் தர்மம்.—இவர்களிடம் ஆசாரங்கள் கர்மங்கள் யாவும், நிலைகுலையாதிருக்கவேண்டும். யாகஞ் செய்தல், வேதம் ஓதல், தானம் செய்தல், ஆசிரம தர்மப்படி நடத்தல், ஆகிய இவைகள் பிராம்மண தர்மம் (இது க்ஷத்திரிய வைசியர்களுக்கும் உள்ள தர்மம்). ஓதல், ஓதுவித்தல், யாகஞ் செய்தல், செய்வித்தல், தானம் கொடுத்தல், வாங்கல், ஆகிய இவ்வாறும் பிராம்மணன் தொழில். இவைகளுள் 2-வது, 4-வது, 6-வதும் பிராம்மணன் பிழைக்க ஏற்பட்ட வழிகள். மேலும் கிருஷி வியாபாரம் முதலிய தொழில்களைச் செய்தல், கோராது வந்தவைகளை அங்கீகரித்தல், பிக்ஷை எடுத்தல், உஞ்ச விருத்தி ஆகிய இவைகளும் பிராம்மணன் ஜீவிக்க ஏற்பட்ட வழிகள். இவைகளுள் முறையே முன்னதைவிட பின்னது சிறந்தது. பிராம்மணனும் (க்ஷத்ரியனும்) தாழ்ந்த ஜாதியாரிடம் ஊழியம்செய்ய எக்காலத்திலும் அமரவே கூடாது. பிராம்மணனுக்கு இருக்கவேண்டிய குணங்கள் மனோநிரோதம், இந்திரிய ஜயம், தபஸ், சௌசம், திருப்தி, பொறுமை, ஞானம், டம்பமின்மை, தயை, விடாபக்தி, ஸத்யம் ஆகிய இவைகளே.

க்ஷத்திரிய தர்மம்.—பிராம்மணரைத் தவிர மற்றைய ...மிருந்து மிதமான வரிவாங்கிப் பிரஜைகளை ரக்ஷித் ... சூரத்தனம், வீரியம், சாந்தம், தைர்யம், கொடுத்

தல், ஆத்மஜயம், பொறுமை, ஸத்யம், பிராம்மண பக்தி, ஆகிய இவைகள் அவன் குணங்கள்.

வைஸ்ய தர்மம்.—வியாபாரம், பயிரிடல், பிராம்மணரிடம் அடங்கி நிற்றல், ஆகிய இவைகளே. தேவதாபக்தி, பிராம்மண பக்தி, ஆசார்ய பக்தி, பகவத் பக்தி, தர்மார்த்தகாமங்களைப் பரிபாலித்தல், மதவிஷய சிரத்தை, விடாமுயற்சி, ஸாமார்த்தியம் ஆகிய இவைகள் வைசியன் குணங்கள்.

சூத்ர தர்மம்.—முதன் மூன்று வருணத்தாருக்கும் தொண்டு செய்தல், அடக்கம், சுத்தம், எஜமான் பக்தி, வேதமந்திரமில்லாத யாகம் செய்தல், திருட்டுத்தனமின்மை, ஸத்யம், கோ, பிராம்மணர்களை ரக்ஷித்தல், ஆகிய இவைகள் அவன் குணம்.

ஸ்திரீகள் தர்மம்.—தங்கள் புருஷனைக் கடவுளாகப் பாவித்து அவனுக்குத் தொண்டு செய்தல், அவனைத் திருப்தி செய்தல், கணவன் விருதத்தைக் கைக்கொள்ளுதல், கணவன் ஸ்நேகிதர்களுக்கு மரியாதை செய்தல், வீட்டை ரக்ஷித்தல் ஆகிய இவைகளே. ஸதா திருப்தி, பொருளாசையில்லாதிருத்தல், ஸாமர்த்தியம் ஞானம், ஸத்யமாயும், ஸந்தோஷகரமாயும் உள்ள வார்த்தைகள் உரைத்தல், சிரத்தை, சுத்தம், ஸஹஜமாக இருத்தல், ஆகிய இக்குணங்களோடு நல்ல ஸ்திரீ தன் கணவனை (நல்லவனாக இருந்தாலும் சரி, கெட்டவனாக இருந்தாலும் சரி) ஆராதிக்கவேண்டியது.

கலப்பு ஜாதிகளது தர்மம்.—இவர்கள் வம் ரது தொழில்களை இவர்கள் பின்பற்றுவதே இ குப் பாபமற்ற செயலாகும்.

தாழ்ந்த வர்ணத்தைச் சேர்ந்தவன் அபாயம் ஒன்றும் இல்லாத காலங்களில் மேலான தர்மங்களைப் பின்பற்றலாகாது. ஆபத்துக்காலத்தில் க்ஷத்திரியனைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் வேறு தர்மங்களைக் கைக்கொள்ளலாம். இம்மாதிரி தர்மங்கள் தவறாது நடப்பவர்களுக்கு ஆசை சீக்கிரத்தில் நிவர்த்தியாக, மோக்ஷம் எளிதில் கைகூடும். பொதுவாக எந்த வர்ணத்தின் தொழில் முதலியன ஒருவனிடம் காணப்படுகின்றதோ அவனை அந்த வர்ணத்தானாகவே மதிக்கலாம்.

வினா **22**.—ஆசிரமங்கள் எத்தனை? அவைகளின் தர்மம் என்ன?

விடை.—ஆசிரமம் நான்கு. பிரம்மசரிய, கிருஹஸ்த, வானப்பிரஸ்த, ஸந்நியாசம், ஆகிய இவைகளே.

பிரம்மசரிய தர்மம்.—பிரம்மசாரி குருகுலவாசம் செய்யவேண்டியது. ஸதா குருபக்தி உடையவனாக இருத்தல்வேண்டும். தன் பாடங்களைக் கவனமாகப் படிக்கவேண்டியது. பசிவந்த வேளை பிக்ஷை எடுத்துக்கொண்டுவந்த அன்னத்தைக் குரு அனுமதியின்பேரில் புசிக்கவேண்டியது. எவ்வித தேகசௌக்கியத்தையும் கவனிக்கக்கூடாது. அவசியமான சமயங்கள் தவிர மற்றைய வேளைகளில் ஸ்திரீகளிடமாவது, ஸ்திரீகளை உடைய கிருஹஸ்தர்களிடமாவது ஸம்பாஷணை செய்யக்கூடாது (இது ஸந்நியாசிக்கும், உபதேசம் பெற்ற கிருஹஸ்தனுக்கும் தர்மம்தான்). இதிலிருந்து மற்றை மூன்று ஆசிரமங்களுக்கும் நேரே போகலாம்

போகுங்கால் குருவைத் திருப்திசெய்துவிட்டுப் போக வேண்டும்.

கிருஹஸ்த தர்மம்.—பலத்தில் இச்சை விட்டுப் பகவத் அர்ப்பணம் செய்து ஸகல ஸத்கர்மங்களையும் இவன் செய்யவேண்டியது. தனக்கு அவசியமான அளவுதான் உலக ஸுகங்களை இவன் அநுபவிக்கலாம். டம்பமான வழிகளை ஒரு நாளும் இவன் பின்பற்றக்கூடாது. ஸகல ஜந்துக்களிடத்தும் ஜீவகாருண்யம் இருத்தல்வேண்டும். பணக்காரனாக இருப்பின் இவன் பணத்திற்கேற்ப விருதாதிகளைச் செய்து அநேகருக்கு உபகாரமாக இருத்தல்வேண்டும். இவன் வாழ்க்கை முழுதுமே பரோபகாரார்த்தமாகவே இருக்கவேண்டும். இவனுக்குக் கர்வமே இருக்கக் கூடாது.

வானப்பிரஸ்தன் தர்மம்.—இவன் பெண்சாதியோடு காட்டில் வாசம்பண்ணி உபரதி திதீக்ஷை ஆகிய இக் குணங்களை விருத்திபண்ணவேண்டியது. ஒரு வருஷமாவது இவன் இவ்வாறு இருக்கவேண்டியது. இவன் இவ்வாறிருக்கும்பொழுது புத்தி முதலியவைகளுக்குக் குழப்பம் வராமலிருக்கும்படி ஜாக்ரதையாக நடந்து கொள்ளவேண்டியது. ஒழுங்காகப் பகவத்தியானம் செய்து தனது மனதைச் சுத்தப்படுத்திக்கொண்டு அடங்கி இருக்கவேண்டியது.

ஸந்நியாசி தர்மம்.—மோக்ஷாபேக்ஷை வந்தவு[illegible] வது அல்லது மோக்ஷத்தின் ஸ்வரூபத்தை அறி[illegible] டும் என்ற ஆவல் வந்தவுடனாவது இந்த ஆசிர[illegible] ஒருவன் வரலாம். ஆபத்துகாலங்கள் தவிர [illegible]

வேளைகளில் இவன் விட்டவைகளைத் திரும்பி நோக்கக் கூடாது. ஸகல ஜந்துக்களுக்கும் அபயப்பிரதானஞ் செய்து பகவானையே கதியாகக்கொண்டிருக்கவேண்டும். விசாரணை ஞானம் இவைகளில் இவன் முயற்சிக்க வேண்டும். இதன் முடிவில் தியானம்செய்து காலங் கழிக்கவேண்டும். தர்க்கம் செய்தல், பக்ஷபாதம், உரு வேற்றல், சிஷ்யன் வேண்டும் என்று இச்சித்தல், வேத விஷயங்களில் உபந்நியாசம் செய்தல், கோவில், மடா திகள் கட்டல், ஆகிய இவைகளை ஜீவனோபாயங்களாகக் கொள்ளுதல் முதலியவற்றை வெகு ஜாக்கிரதையாக நீக்கவேண்டும். இவன் திறங்களை வெளிக்காட்டிக் கொள்ளாது பாலன் பைத்தியக்காரன், பிசாசு ஆகிய இவைகளைப்போல் நடிக்கவேண்டும். இதன் முடிவில் நாரதர் பிரஹ்லாதருக்கும், ஓர் பிராம்மண ஸந்யாசிக் கும் நடந்த ஸம்வாதமூலமாகவும் அஜகர விருதத்தின் சிறப்பை விளக்கினார். (11-வது ஸ்கந்தத்தைப் பார்க்க).

வி**ன 23**.—இதன் முடிவில் நாரதர் என்ன அரிய விஷ யத்தை யுதிஷ்டிரருக்குச் சொன்னார்?

விடை.—உலகவின்பங்களில் ஆழ்ந்திருந்தால் முடிவில் கெடு திவரும் என்றும், அந்தக் கெடுதிக்கு மாற்று ஸத்ஸங் கம் என்றும், ஸத்ஸங்கமூலமாக பகவத் பக்தியுண்டாகி மேன்மை கிடைக்கும் என்ற விஷயத்தைத் தனது பூர்வஜன்ம சரிதங்களைத் திருஷ்டாந்தமாகக்கொண்டு விளக்கினார்.

வின **24**.—நாரதர் பூர்வ ஜன்மங்களின் விருத்தாந்தம் என்ன?

விடை.—ஓர் ஜன்மத்தில் நாரதர் கந்தர்வனாக இருந்தார். அப்பொழுது அவர் சிற்றின்பங்களில் மூழ்கிக்கிடந்தார். ஒரு நாள் தேவதைகள் யாகஞ்செய்ய, அங்கு தமது அப்ஸர ஸ்திரீகளோடு ஆடிப்பாடிக்கொண்டு அவர் போனார். தேவதைகள் 'நீ சூத்ரனாகப் போகக்கடவாய்' என்று சபித்தார்கள். அடுத்த ஜன்மத்தில் சூத்திரப் பிள்ளையாகப் பிறந்தார். ஸாதுஸங்கத்தால் அவர் மறு ஜன்மத்தில் நாரதராகிப் பிரம்மாவின் பிள்ளையாகப் பிறந்தார். (பிரதம ஸ்கந்தத்தைப் பார்க்க).

# 8-வது ஸ்கந்தம்

கஜேந்திரமோக்ஷம், ஸமுத்ரமதனம், மஹாபலி கதை, மத்ஸாவதாரம், சுக பரீக்ஷித்து ஸம்வாதம்.

*ஈரொரு பிறப்பி லொருசிறு குறளா யாவருந் தேவரும் வியப்பக்*
*காரொரு வடிவு கொண்டெனச் சென்று காவல்கூர் மாவலி யளித்த*
*நீரொரு கரத்தில் வீழுமுன் றரங்க நீனிற மகரநீ ருடுத்த*
*பாரொரு கணத்தி லளவிடுங் கமல பாதனுர் நாதனுர் நமக்கே.*

வினு **1.**—*மேல் சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப்பற்றி எவ்வாறு பேசினுர்?*

விடை.—*இதற்குமேல் ஸ்வாயம்புவம் முதலிய ஆறு மன்வந்திரங்களைப்பற்றிப் பொதுவாகப் பேசத்தொடங்கினுர். இதில் ஸ்வாயம்புவமனு வானப்பிரஸ்தராகி முதலில் தவம் செய்ததும், அவர் தியானம் செய்யுங்கால் அஸுரர்கள் வந்து தாக்கியதும்; அவரை நல்ல தருணத்தில் பகவான் காத்து ஆட்கொண்டதும் வெளிவந்தன. மற்றைய மன்வந்திரங்களைச் சுருக்கமாகச் சொல்லி நான்காவது மன்வந்திரத்தில் பகவான் ஓர் கஜேந்திரத்தை முதலை வாயில் இருந்து தப்புவித்த கதையை விஸ்தாரமாகச் சொன்னுர்.*

வினு **2.**—*இந்தக் கஜேந்திரம் யார்? அது முதலை வாயில் அகப்படக் காரணம் என்ன?*

விடை.—*திரிகூடம் என்னும் மலைச்சாரலில் தனது யானைப் பரிவாரங்களோடு ஓர் யானையரசு இருந்தது, அதற்*

குத்தான் கஜேந்திரன் என்று பெயர். அது ஒரு நாள் தனது பரிவாரங்களோடு அந்த மலைச்சாரலிலிருந்த ஓர் தடாகத்திலிறங்கி ஜலக்ரீடை செய்துகொண்டு வெகு உல்லாசமாக இருந்தது. இதனால் அங்கிருந்த ஜல ஜந்துக்களுக்குக் கஷ்டம் உண்டாக அதிலிருந்த முதலை யொன்று அந்தக் கஜேந்திரன் காலைக் கவ்விக் கொண்டது.

வின 3.—முதலை வாயில் அகப்பட்டதும் யானை என்ன செய்தது ?

விடை.—முதலை யானையை இழுக்க, யானை முதலையை இழுக்க இரண்டிற்கும் வெகு நாழிகை சண்டை நடந்தது. ஜலத்தில் முதலைக்கு அதிக பலமானதால் முடிவில் முதலைக்கு வரவரப் பலவிருத்தியும், யானைக்குப் பலக்குறைவும் உண்டாகத் தொடங்கியது. தனது பரிவாரங்களால் தனக்கு ஓர் பிரயோசனமும் இல்லாதது கண்டு 'அகதிக்குத் தெய்வமே துணை' என்பதிற்கேற்ப யானை பகவானை சரணம் என்று எண்ணித் தனது பூர்வ ஜன்ம வாஸனையை முன்னிட்டுக்கொண்டு பரம் பொருளை ஆதிமூலமே! என்று கதறிக்கொண்டு துதிக்கத்தொடங்கியது.

வின 4.—இந்தக் கஜேந்திரம் பூர்வ ஜென்மத்தில் எவ்வாறிருந்தது ?

விடை.—முன்னர் இது பகவத் பக்தனை திராவிட தேசாதிபதியாகிய இந்திரத்யும்னனுகவிருந்தது. அப்பொழுது இவன் வானப்பிரஸ்தனுகித் தனது ஆசிரமத்தில் நிஷ்டை செய்துகொண்டிருக்கையில் அகஸ்தியர் வந்து சேர்ந்தார்: வெகு நாழிகை காத்துப் பார்த்தும்

தம்மை அவ்வரசன் மரியாதை செய்யாதது கண்டு அதிகக் கோபங்கொண்டு 'இவன் யானையைப்போல மௌனமாக இருக்கிறான். இவனுக்கு யானை ஜன்மமே வரட்டும்' என்று சபித்தார். இவ்வாறு சாபம் கிடைத்ததால்தான் இவனுக்கு யானை ஜன்மம் வந்தது. பகவத்கிருபையால் இவனுக்குப் பூர்வ ஜன்மத்தில் விட்டகுறை வந்து தொட்டுக்கொண்டது.

**வி 5.**—யானை மனதார நடுங்கித் துதித்ததும் என்ன நடந்தது ?

விடை.—இந்தத் துதியைக் கேட்டதும், மஹாவிஷ்ணு கருடாரூடராய் வெகு சீக்கிரத்தில் கஜேந்திரன் முன் தோன்றிக் கருணைகூர்ந்து யானையையும், முதலையையும் தண்ணீரைவிட்டு வெளியிலே இழுத்து முதலையைத் தமது சக்ராயுதத்தால் அறுத்துத் தள்ளிவிட்டுவிட்டார்

**வி 6.**—இவ்வாறு பகவான் யானையைக் காத்ததும் என்ன நடந்தது? ஏன் ?

விடை.—முதலை இறந்ததும் அதன் தேகத்திலிருந்து ஓர் கந்தர்வன் மிகுந்த தேஜஸ்ஸோடு வந்து பகவான் பாதாரவிந்தத்தில் விழுந்து நமஸ்கரித்துத் துதித்துவிட்டுத் தனது லோகம் சென்றான். இவ்வாறு ஹூஹூ என்ற கந்தர்வன் பகவானது கிருபையால் தனக்குத் தேவலர் என்ற ரிஷியால் கொடுக்கப்பட்ட சாபத்தினின்றும் நீங்கி ஸ்வகத்தை அடைந்தான்.

**வி 7.**—கஜேந்திரமோக்ஷம் முடிந்ததும் சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்தார் ?

விடை.—சுகப்பிரம்மம் பரீக்ஷித்தினிடம் ஐந்து ஆறு ஆகிய இம்மன்வந்திரங்களைப்பற்றிச் சொல்லத்தொடங்கி விவரித்துக்கொண்டு வருகையில் ஆறும் மன்வந்திரத்தில் பகவான் கூர்மாவதாராதிகள் எடுத்துத் தேவதைகளுக்கு மேன்மை வருவதற்காக ஸமுத்திரத்தைக் கடைவதில் மிகுந்த ஸஹாயம்செய்த கதையை விஸ்தாரமாகச் சொன்னார்.

வின. 8.—தேவர்களுக்கு ஸமுத்திரத்தைக் கடையும்படி வருவானேன்?

விடை.—துர்வாஸ மஹரிஷி சாபத்தால் தேவதைகள் அஸுரர்களால் மாண்டு விழுந்துகொண்டுவர, மிகப் பயந்தவர்களாகி மிகுதியாக இருந்த தேவதைகள் பிரம்மாவினிடம் சென்று தமது எண்ணங்களைத் தெரிவிக்க இவர்களை மஹாவிஷ்ணுவிடம் கொண்டுபோய்ச் சேர்த்துத் தாமே அப்பரம்பொருளைத் துதிக்கலாயினர். தேவதைகளும் கொஞ்ச நாழிகை பிரம்மாவைப் போல தாமும் துதிக்க முடிவில் பகவான் ஜகத்ஜோதி பிரகாசமாகத் தமது உருவத்தைக் காட்டினார். அப்பொழுது பிரம்மாவும் தேவதைகளும் தமது நோக்கத்தைத் தெரிவிக்கப் பரம்பொருள் தேவதைகளை நோக்கி 'அஸுரர்களோடு முதலில் ஸமாதானம் செய்துகொண்டு பாற்கடலைக் கடைந்து அமிர்தம் எடுத்தால்தான் உங்கள் கஷ்டம் தீரும். அதற்குத் தகுந்த ஸஹாயம் யான் செய்கிறேன்' என்று கூறி மறைந்தார். இதனால்தான் தேவர்களுக்கும் பாற்கடலைக் கடையும்படியான அவசியம் நேர்ந்தது.

வின 9.—பாற்கடலைக் கடையும் விஷயத்தில் பகவான் என்ன உத்திரவு அளித்தார்?

விடை.—உலகில் அகப்படக்கூடிய பச்சிலைகளை எல்லாம் பாற்கடலில் போட்டு விட்டு, மந்தரபர்வதத்தை மத்தாகவும், வாஸுகியைக் கயிருகவும் கொண்டு தமது ஸஹாயத்தின் பேரில் கடையவேண்டும்என்றும், அதில் அஸுரர்களை வேலைமாத்திரம் வாங்கிவிட்டுப் பலன் முழுதும் தேவதைகளே அனுபவிக்க வேண்டும் என்றும், இதற்காகக் கடையுங்கால் அஸுரர்கள் மனப்படியே நடக்க வேண்டுமென்றும், பாற்கடலில் உண்டாகப்போகிற விஷத்தைக் கண்டு பயப்படவேண்டியதில்லை என்றும் அதில் உண்டாகும் எந்த வஸ்துவிடத்திலும் வெறுப்பு விருப்பு ஆகிய இரண்டும் இல்லாதிருக்கவேண்டும் என்றும் பகவான் தேவதைகளை எச்சரிக்கை செய்தார்.

வினு 10.—ஸமுத்திரத்தைக் கடைவதில் தேவதைகள் எவ்வாறு தொழிற் பட்டனர்? அவர்களுக்கு என்ன தடைகள் உண்டாகி எவ்வாறு நீங்கின?

விடை.—தேவதைகள் எல்லோரும் அஸுர ராஜனிடம் சென்று ஸமுத்திரம் கடைவதாகச் சொல்லிமிகவும் நயமாக ஸமாதானம் செய்துகொண்டனர். அஸுரர்கள் ஸகாயத்தாலே மந்தர மலையை வேரோடு பெயர்த்து எடுத்துக்கொண்டு வெகுதூரம் போக நடுவழியில் அந்தமலையைத் தூக்கமாட்டாது கீழே வைத்துவிட்டு எல்லோரும் மிகுந்த கஷ்டப்பட்டனர். அப்பொழுது பகவான் கருடாரூடராக அவர்களுக்குத் தரிசனம் கொடுத்து மலை முதலிய எல்லாவற்றையும் கருடனைத் தூக்கிக்கொள்ளும்படி ஏவ, கருடன் பாற்கடல் கொண்டு மலையைச் சேர்த்துவிட்டுப் பகவான் உத்திர

வின் பேரில் தனது இருப்பிடம் சென்றது. பின்பு தேவாஸுரர் வாஸுகியைக் கயிறுகும்படி வேண்ட அமிர்தத்திற்கு ஆசைகொண்டு வாஸுகி கயிறுக வந்தான்.

வின 11.—இவர்கள் எவ்வாறு கடையத் தொடங்கினர்? முதலில் வந்த ஆபத்துக்கள் எவ்வாறு நீங்கின?

விடை.—முதலில் பகவான் வெகு கெம்பீரமாக வாஸுகியின் தலைபாகத்தைப் பிடித்துக்கொண்டு நின்றார். உடனே தேவதைகள் பகவான் இருக்குமிடம் நோக்கிச் சொல்ல, பாம்பின் தலைப்பக்கம் பிடிப்பது மிகுந்த கௌரவமான வேலை என்று எண்ணி அஸுர ராஜன் 'நாங்கள் கேவலமான பாம்பின் வால்பாகத்தைப்பிடிக்க மாட்டோம்.' என்று தமது எண்ணத்தை வெளியிட்டனர். பகவான் புன்னகையோடு பாம்பின் வாலைச் சென்றுபிடித்துக்கொள்ள தேவதைகளும் அவ்வாறே செய்தனர்! இவ்வாறு பிரிந்து நின்று கடையத் தொடங்கியதும் மலை கீழே அமுங்கவும் ஸ்திரமாக நில்லாது நகரவும் தொடங்க, பகவான் கூர்மாவதாரம் எடுத்து அடியில் மலையைத் தாங்கிக்கொண்டு நின்றனர். மலை திரும்புவது பகவான் முதுகு அரிப்புக்குச் ஸுகமாக இருந்தது. பகவான் தமது அம்ஸங்களால் தேவர்களுள்ளும் அஸுரர்களுள்ளும் பாம்பினுள்ளும் புகுந்து அவர்களுக்குப் பலவிருத்தியாகும்படி செய்து தமது ஆயிரம் கரங்களால் மந்தர மலையை மேலே இருந்து நகர்ந்துபோகாது அழுத்திக் கொண்டிருந்தார். இவ்வாறு பகவத் ஸஹாயத்தால் ஸமுத்திரமதனம் வெகு விசேஷமாக நடந்துவந்தது.



கூர்மாவதாரம்.

வி௵ 12.—இப்படி நடந்து வருங்கால் உண்டான விபரீதங்கள் என்ன ? இவை யாரால் நீங்கின ?

விடை.—வெகு உத்ஸாகத்தோடு தேவாஸுரர்கள் ஸமுத்திரத்தைக் கடைந்து வருகையில் வாஸுகி சிரமம் அதிகத்தால் விஷம் அக்னிஜ்வாலை முதலியவைகளைக் கக்கத் தொடங்கினன். வாஸுகியின் தலைபக்கம் இருந்தவர்கள் அஸுரர்களாகையால் அவர்கள் அந்தக் கொடுமையைத் தாங்கினார்கள். இதனால் அஸுரர்களுக்கு மிகுந்த பலக்குறைவு ஏற்பட்டது. மந்தர பர்வதம் அசைந்தாடும் பொழுது ஸமுத்திரம் அல்லோலப்பட்டது. அதிலுள்ள ஜலஜந்துக்கள் யாவும் மிகவும் வருந்தின. இப்படி இருக்கையில் திடீரென்று ஸமுத்திரத்திலிருந்து ஆலஹால விஷம் காலாக்கினியைப்போல உண்டாயிற்று. ஒருவராலும் இதைத் தாங்க முடியவில்லை. தேவதைகள் முதலியவர்கள் எல்லோரும் பரமசிவத்தைச் சென்று துதித்து சரணம் அடைய அவர் மிகுந்த கருணையுடன் வந்து உலகத்தின் பொது நன்மைக்காக அந்தக் கொடிய விஷத்தைப் பானம் பண்ணினார். இந்த விஷம் அவர் கழுத்தைத் தனது வேகத்தால் நீலமாக்கிவிட்டது. இதனால் பரமசிவத்திற்கு நீலகண்டர் என்ற பெயர் வந்தது. இவர் விஷத்தைக் குடிக்குங்கால் கீழே சிதறிய சிறு திவலைகள் ஸம்பந்தப்பட்டுத்தான் உலகில் உள்ள விஷஜந்துக்களும், விஷப்பச்சிலைகளும் உண்டாயினவாம்.

வி௵ **13.**—இவ்வாறு பரமசிவம் எல்லோரையும் ரக்ஷித்த பின்னர் பாற்கடலிலிருந்து என்ன வஸ்துக்கள் உண்டாயின ? யார் யார் அவைகளை அங்கீகரித்தனர் ?

விடை.—முதலில் ஸுரபி என்ற காமதேனு உண்டாயிற்று. அதை ரிஷிகள் தமக்கு அக்கினிஹோத்திராதிகளுக்கு உபயோகமாகும் என்று அங்கீகரித்தனர். உச்சைசிரவஸ் என்ற வெள்ளைக்குதிரை உண்டாயிற்று. அதை அஸுரர்கள் எடுத்துக்கொண்டனர். ஐராவதம் என்ற வெள்ளை யானை உண்டாயிற்று. அதை இந்திரன் எடுத்துக்கொண்டான். திக்கஜங்கள் உண்டாகி எட்டுத் திக்குகளுக்கும் சென்றன. கௌஸ்துபமணி உண்டாயிற்று. அதைப் பகவான் ஆபரணமாக்கொண்டார். பாரிஜாதமலரும் அப்ஸரஸ்திரீகளும் உண்டாயினர். இவற்றைத் தேவர்கள் எடுத்துக்கொண்டனர். லக்ஷ்மி உண்டானாள். எல்லாத் தேவர்களும் இவளுக்குத் தகுந்த மரியாதைசெய்ய இவள் மஹாவிஷ்ணுவுக்கு மாலையிட்டாள். உடனே பகவான் இவளைத் தமது மார்பில் வைத்துக்கொண்டார். வாருணி என்ற அப்ஸரஸ் உண்டாக அஸுரர்கள் அங்கீகரித்தனர். பின்னர் விஷ்ணுவின் அவதாரமாகிய திவ்யபுருஷரான தன்வந்தரி தமது கையில் அமிருத கலசத்துடன் பாற்கடலிலிருந்து வெளியாகி அமிருதத்தைக் கீழே வைத்தார்.

வின 15.—அமிருதம் உண்டானதும் என்ன கஷ்டம் நேரிட்டது? இது நீங்க என்ன ஏற்பாடுகள் செய்யப்பட்டன?

விடை.—அமிருதம் உண்டானதும் அஸுரர் முழுவதையும் தாமே கைப்பற்றிக்கொள்ளவேண்டும் என்ற எண்ணத்துடன் அமிருத கலசத்தைப் பலாத்காரமாக எடுத்துக்கொண்டு ஓடிப்போய்விட்டனர். தேவதைகளுக்கு

மிகுந்த துக்கம்வரப் பகவான் அவர்கள் முன் தோன்றித் தாமே தந்திரமாக அவர்களுக்கு அமிருதம் முழுவதையும் கொடுத்துவிடுவதாக வாக்களித்துத் தேற்றினர்.

வினா **15.**—பகவான் தேவதைகளுக்கு அமிருதம் கொடுத்த விதம் எப்படி?

விடை.—பகவான் உடனே ஜகன்மோஹினி அவதாரம் செய்து அஸுரர் இருக்கும் இடம் சென்றனர். அங்கு 'நான்தான் முன்பு குடிப்பேன்' என்று ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொண்டிருக்கும் அஸுரர்களை நோக்கித் தான் அமிருதத்தை எடுத்து எல்லோருக்கும் கொடுப்பதாகச்சொல்ல அஸுரர்கள் மயங்கி அவள் அழகிற்கு ஈடுபட்டு அமிருதகலசத்தை அவளிடம் ஒப்புவித்தனர். உடனே அவள் அஸுரர்களை ஓர் பக்கத்திலும், தேவர்களை மற்றோர் பக்கத்திலும் உட்காரவைத்துத் தேவதைகளுக்குத் முதலில் அமிருதம் கொடுக்கத் தொடங்கினள். அஸுரர்கள் எல்லோரும் மயங்கி இன்னது நடக்கின்றது என்று அறியாது சும்மாவிருந்தனர்.

வினா **16.**—பகவான் இவ்வாறு அமிருதம் எல்லாவற்றையும் தேவர்களுக்கே கொடுத்துவருகையில் என்ன வேடிக்கை நடந்தது?

விடை.—பகவானது தந்திரம் ராகு என்ற ஓர் அஸுரனுக்கு மாத்திரம் தெரியவர அவன் தந்திரமாகத் தேவதைகள் இருக்குமிடத்தில் ஸூர்ய சந்திரர்கள் இடை வந்து உட்கார்ந்துவிட்டான். பகவான் அவனுக்கும் அமிரு

தம் கொடுத்துவிட்டார். அவனும் தனது வாய்க்குள் அதைப் போட்டுக்கொண்டுவிட்டான். அப்பொழுது ஸூர்ய சந்திராள் அவன் அஸுரன் என்று சொல்லி உண்மையை வெளியிடப் பகவான் தமது சக்ரத்தால் அவன் தலையைக் கொய்துவிட்டார். அவன் தலை யறுபட்டபோதிலும் அமிருத ஸம்பந்தத்தால் அது அழிவில்லாது நின்று, கிரகங்களுள் ஒன்றாகி ஸூர்ய சந்திரர்களைப் பருவகாலங்களில் வருத்தத் தொடங்கிய தாம் (இந்தப் பீடைதான் கிரஹணமாகத் தோன்று கின்றனவாம்).

வின 17.—தேவதைகளுக்குள்ளேயே அமிருதம் முழு வதும் சாப்பிட்டுத் தீர்ந்த பின்னர் என்ன நடந்தது?

விடை.—அஸுரர்கள் தாங்கள் ஏமாந்ததை அறிந்தபின்னர் மிகுந்த கோபத்துடன் தேவர்களை வந்து தாக்கினர். தேவாஸுரர்களுக்குக் கொடிய போர் விளைந்தது. அஸுரர்கள் தங்களுக்குத் தெரிந்த மாயைகளை முன்னி ட்டுக்கொண்டு போர்செய்ய தேவதைகள் மிகுந்த கஷ் டத்தை அடைந்தனர். இதைக்கண்டு பகவான் கருடா ரூடராகயுத்தகளத்தில் தோன்றி அஸுர மாயைகளைச் சிதற அடித்து அஸுரத் தலைவர்களைத் தமது சக்க ரத்தால் கொன்று தள்ளிவிட்டார். பின்பு பகவானது கருணையால் தெளிந்த தேவதைகளுக்கும் அஸுரர் களுக்கும் போர் திரும்பவும் தொடங்கியது. அதில் நமுசியினிடத்தில் தனது வச்சிராயுதம் பயன் படாதது கண்டு மிகுந்த துக்கத்தை இந்திரன் அடைந்தான். அப்பொழுது ஓர் அசரீரி வாக்கு 'இவன் நனைந்த வஸ்து வாலும் இறக்கமாட்டான். உலர்ந்த வஸ்துவாலும் இறக்கமாட்டான்' என்று கூற, மிகுந்த யோசனையின்

பேரில் நுரையால் நசிமுகியின் தலையை இந்திரன் வெட்டிச் சாய்த்தான். உடனே நாரதர் வந்து சண்டையைத் தடுத்து நிறுத்திவிட்டார். அப்பொழுது சுக்கிராச்சாரியார் ஸஞ்சீவினி மந்திரத்தால் தேகம் சின்னபின்னமாகாத அஸுரப் பிணங்களைப் பிழைப்பு மூட்டிக்கொண்டு போய்விட்டார்.

வி௵ **18**.—இவ்வாறு ஸமுத்திர மதன கதை முடிந்ததும் சுகப்பிரமம் எந்தவிஷயத்தைப் பற்றி பேசினார் ?.

விடை.—சமுத்திர மதன கதை முடிந்ததும் சுகப்பிரம்மம் ஏழாவது மனுவந்திர கதையை விஸ்தாரமாகக் கூறி பின்னர் அந்த மன்வந்திரத்தால் மஹாவிஷ்ணு வாமனவடிவமாக வந்து மஹாபலியை மூன்றடி மண்யாசித்த கதையை விஸ்தாரமாகச் சொன்னார்.

வி௵ **19**.—மஹாவிஷ்ணு யாரிடம் வாமனரூபமாக அவதரித்தது ? ஏன் ?

விடை.—மஹாவிஷ்ணு அதிதிதேவியினிடத்தில் காசியபர் மூலமாக மஹாபலி சக்ரவர்த்தியின் வலியை அடக்க வாமன ரூபியாக அவதரித்தார்.

வி௵ **20**.—மஹாபலி யார் ? அவன் ஸ்பாவம் என்ன ?

விடை.—இவன் அஸுரராஜன். இவனுக்கு வலிமை அதிகப்பட அஸுரர்கள் கை ஓங்கியது. இவன் மூன்று லோகங்களையும் தன் ஆளுகைக்குள் அடக்கிக்கொண்டு இந்திரனுக்கு அதிகாரமில்லாமலே போகும்படி செய்து விட்டான். தேவதைகளே இருக்குமிடம் தெரியாமல் மறைந்து போய்விட்டனர். மஹாபலியோ பிரஹலாதரது ஸந்ததியில் தோன்றினவராகையால்

மிகுந்த நீதிமானாகவும் பக்திமானாகவும் இருந்தான். ஆகவே இவனது பலத்தை ஒருவராலும் குறைக்க முடியவில்லை.

வி 21.—இந்த ஸமயத்தில் தேவதைகளுக்கு ஸஹாயம் செய்ய யார் எவ்வாறு முயன்றனர்? அது எவ்வாறு முடிவு பெற்றது?

விடை.—தமது புத்திரர்களாகிய தேவர்கள் மறைந்து போனதைக் கேள்விப்பட்ட அதிதி தேவியானவள் காசியபரிடம் சென்று தமது புத்திரர்களுக்கு நன்மை உண்டாகும்படி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். உடனே இந்த விஷயத்தை உத்தேசித்துப் பகவானைக் குறித்து பயவிருதம் என்பதைச் செய்யவேண்டும் என்று சொல்லி ஓர் மந்திரத்தையும் அதை விருத காலத்தில் ஜபம் செய்யும் ஒழுங்கையும் காசியபர் அதிதிக்கு உபதேசித்தார். அவ்வாறே இதை ஒழுங்குபடி 12 நாள் அனுஷ்டிக்க அதன் முடிவில் பகவான் அதிதிதேவிக்கு பிரத்யக்ஷமானார். உடனே அவள் தகுந்தபடி துதித்தாள். அப்பொழுது பகவான் 'நான் உன் தவத்தால் கட்டுண்டேன். உன் வயிற்றில் பிள்ளையாகப் பிறந்து தேவதைகளுக்குத் தகுந்தஸஹாயம் செய்கிறேன்!' என்று அனுக்கிரகித்து மறைந்தார். உடனே அவரது அநுக்கிரகத்தின் பேரில் இவளுக்கு ஓர் குழந்தை உண்டாயிற்று.

வி 22.—பகவான் அதிதி தேவியிடமிருந்து அவதாரம் செய்தது எப்படி? பின் என்ன நடந்தது?

விடை.—அதிதி பிரஸவிக்கும் காலத்தில் பிரம்மா வந்து அவளது வயிற்றுள் இருந்த பகவானை மிகுந்த உருக்-



வாமனுவதாரம்.

கத்துடன் துதித்தார். உடனே பகவான் சதுர்புஜாதிகளுடன் கூடிய தமது ஸ்வந்தரூபத்துடனே அவதரித்தார். பிரபஞ்சமே அப்பொழுது ஆனந்தித்துச் செழிப்பாக விளங்கியது. அப்பொழுது காசியபர் அதிதி தேவதைகள் ஆகிய இவர்கள் துதிக்க அவர்கள் முன்னிலையிலேயே பகவான் ஓர் குட்டையான ரூபத்தை அடைந்தார். கொஞ்ச நாளில் வாமனருக்கு உபநயனம் வெகு கோலாஹலமாக நடந்தது.

வி 23.—உபநயனமானதும வாமனர் என்ன செய்தார்?

விடை.—இந்திரனுக்கு ஸமனான மஹாபலி சக்கிரவர்த்தி ஓர் சிறந்த யாகம் செய்கிறார் என்று கேள்விப்பட்டு அந்த யாகத்திற்கு வாமனர் புறப்பட்டுப்போனார். அங்குள்ளவர்கள் இவருக்கு மிகுந்த மரியாதைகள் செய்ய அரசன் வாமனரைக்கண்டு அடி பணிந்து அவரை ஆஸனத்திலிருத்தி 'தங்களுக்கு என்ன வேண்டுமோ அதைக் கேட்கலாம். தங்களைத் திருப்தி செய்தால் என் யாகம் ஸரிவரப் பூர்த்தியாகும்!' என்று வேண்டிக்கொண்டான்.

வி 24.—இந்த ஸமயத்தில் தேவதைகளுக்கு உபகாரம் செய்ய வாமனர் எவ்வாறு நடந்துகொண்டார்?

விடை.—மஹாபலியினது பணம் முதலியவைகள் ஒன்றையும் கவனியாது தேவதைகளுக்கு உபகாரம் செய்தற் பொருட்டு தமது அடியால் மூன்றடி மண் வேண்டும் என்று அவர் கேட்டார். மஹாபலி இந்த வேண்டுகோளைக்கண்டு வியந்து, வேறு விஷயங்களை மேலும் கேட்கும்படி எவ்வளவோ வேண்டிக்கொண்டான். வாமனர் ஒரே பிடிவாதமாகத் தமக்கு மூன்றடி மண்

போதும் என்று சொன்னார். அப்பொழுது அதைத் தானம் செய்ய மஹாபலி அரை மனதோடு யத்தனம் செய்தான்.

வின 25.—அந்த ஸமயத்தில் மஹாபலிக்கு யார் எவ்வாறு புத்திமதி கூறியது? மஹாபலி மேல் என்ன செய்தான்?

விடை.—அந்த ஸமயத்தில் சுக்கிராசாரியர் மஹாபலியை நோக்கி, 'வாமன உருவாக வந்திருக்கிறவர் தேவதைகளுக்கு ஸதா ஹிதம் செய்யும் மஹாவிஷ்ணுவே. இவர் மூன்றடி மண் போதும் என்று பிடிவாதமாக இருப்பதை நோக்கில் இதில் ஏதோ சூதிருக்கிறதாகத் தோற்றுகிறது. ஆகையால் இதை நீ கொடுத்துவிடாதே நான் சொல்லுவதற்கு விரோதமாக நீ செய்வாயாகில் உனக்கு ஆபத்து வரும்!' என்று எச்சரிக்கை செய்தார். மஹாபலி இதைக் கேட்டதும், 'மஹாவிஷ்ணுதான் இவ்வாறு வந்திருக்கிறார். ஆனால் நான் அவர் கேட்டதைக் கொடுத்தால் கிருதார்த்தனாவேன். மேலும் என் வாக்கிற்கு விரோதமாக நடக்கமாட்டேன்!' என்று சொல்லி மூன்றடி மண் கொடுத்துவிட்டதாக வாமனர் கையில் மஹாபலி தீர்த்தத்தை வார்த்துவிட்டான்.

வின 26.—உடனே என்ன அற்புதம் நடந்தது?

விடை.—தானம் வாங்கினதும் பகவான் தமது வாமன ரூபத்தைவிட்டு வரவர ரூபத்தில் பெரியவராகித் தம் விசுவரூபத்தை எடுத்துவிட்டார். இந்த உருவத்திற்குத்தான் திரு விக்ரம உருவம் என்று பெயர். இந்த உருவத்தோடு பகவான் ஸகல உலகங்களையும் தமது இரண்டு அடிகளால் அளந்துவிட்டார். கீழேழுலோ

கத்தை முதல் அடியால் அளந்துவிட்டு, இரண்டாவது அடியால் மேலேழுலோகங்களையும் அளந்தார். அப்பொழுது ஸத்யலோகத்திலிருந்த பிரம்மா தமதருகில் வந்த விஷ்ணு பாதத்தைத் தமது கமண்டல தீர்த்தத்தால் அலம்ப அதுதான் கங்கையாக மாறியதாம்.

வி 27.—இரண்டடி அளந்த பின்னர் என்ன விபரீதம் விளைந்தது? இது எவ்வாறு நீங்கிற்று?

விடை.—இந்தச் சூதைக்கண்ட அஸுரர்கள் யாவரும் மிகுந்த கோபத்துடன் திருவிக்கிரம மூர்த்தியைச் சென்று தாக்கத் தொடங்க விஷ்ணு தூதர்களும் படர்களும் அஸுரர்களை எதிர்த்துப் போர்செய்யத் தொடங்கினர். அப்பொழுது மஹாபலி தனது பரிவாரங்களை நோக்கி 'நமக்கு இப்பொழுது நற்காலம் இல்லை. நீங்கள் போர் செய்வீர்களாகில் மாண்டு விழுவீர்கள். ஆகையால் ஓடிவிடுங்கள்!' என்று புத்திமதிகூற, அஸுரர் பின்னர் நமக்கு நல்லகாலம் வருங்கால் பார்த்துக் கொள்ளுவோம் என்று விஷ்ணு தூதர்களைக்கண்டு பயந்து பாதாள லோகத்தில் சென்று ஒளித்துக் கொண்டனர்.

வி 28.—இவ்வாறு அஸுரர்கள் மஹாபலியை விட்டுப் போனதும் அவனுக்கே என்ன ஆபத்து வந்தது?

விடை.—மூன்றாவது அடிக்கு இடம் இல்லாமல் போகவே மஹாபலி கடன்காரனாய்ப் போய்விட்டான். உடனே பகவான் கருடனைக்கொண்டு மகாபலியை வருணபாசத்தால் கட்டுவித்து மிக்க வருத்தப்படுத்தித் தமக்கு கொடுக்க வேண்டிய மூன்றாவது அடியைக் கொடுத்துவிடும்படி கேட்டார். மஹாபலி மகாபக்திமானாகை

யால், இந்தக் கஷ்டத்தைக் கவனியாது மன ஸமாதானத்தோடு பகவானைத் தியானம் செய்து கொண்டிருந்தான். பிரஹ்லாதரும் அப்பொழுது வந்து, மஹாபலியின் நிலை அவனுக்கு நன்மை பயக்கக் கூடியது என்று அவனைத் தேற்றிவிட்டுப் பகவானை ஸ்தோத்திரம் செய்துகொண்டு நின்ருர்.

வி௵ 29.—மஹாபலிக்கு இந்த ஆபத்து ஏன் வந்தது?

விடை.—மஹாபலி மஹா பகவத் பக்தனுகையிஞலேயும், அஸுரனுகையிஞலேயும் அவனுக்கு உலகச்சிறப்பு அதிகமாகவரின், கர்வாதிகளால் கெட்டுப் போவான் என்ற எண்ணத்துடன் பகவான் அவனை அப்பொழுது வருத்திஞர். பகவான் தமது பக்தர்களுக்கு இந்தக் காரணத்தால், அதிக கஷ்டத்தையே கொடுப்பது வழக்கம். மகாபலி தனது பக்தியால் இதை லக்ஷ்யம் செய்யாது பகவானை உறுதியாக மனதில் வைத்து வந்தான்.

வி௵ 30.—இந்தக் கஷ்டம் மஹாபலிக்கு எவ்வாறு நீங்கிற்று? பின்பு என்ன நடந்தது?

விடை.—பகவான் வருணபாசத்தால் வருத்திக் கேட்கும் பொழுது மஹாபலி அவரை நோக்கி 'நான் என் வார்த்தையை ஸத்தியமாகச்செய்து கொள்ளுகிறேன். மூன்ருவது அடியை என் தலையில் வையும்!' என்ருன். அப்பொழுது பகவான் மிகுந்த சந்தோஷத்துடன் மஹாபலி தலையில் தமது பாதத்தை வைத்து அநுக்கிரஹித்து அவனை வருணபாச துயரத்திலிருந்து விடுவித்து, பாதாளலோகத்தில் அடுத்த மன்வந்திரம்

வரையில் தனது பரிவாரங்களோடு அடங்கி யிருக்கும் படியாகச் சொல்லி அவனைப் பாதாளலோகம் அனுப் பிப் பிரஹலாதரையும் கூடவே போகச் சொன்னார். மேலும் அங்கேயே தாமும் அவனைக் காத்துக்கொண் டிருப்பதாகவும், பின்னர் அடுத்த மன்வந்திரத்தில் அவனுக்கு இந்திரப் பட்டம் கொடுப்பதாகவும் வாக்க ளித்தார். மஹாபலி வெகு சந்தோஷத்தோடு பாதாள லோகம் சென்றான். பகவான் இந்திரனுக்கு மூன்று லோகங்களையும் கொடுத்தார்.

வினா **31.**—மஹாபலி கதையைச் சொல்லி முடித்த பின்னர் சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப்பற்றி விவரித்தார்.

விடை.—பரீக்ஷித்தின் வேண்டுகோளின்படி சுகப்பிரம்மம் மத்ஸ்யாவதாரக் கதையை எடுத்து விவரித்தார்.

வினா **32.**—பகவான் மத்ஸ்யாவதாரம் எடுக்கக் காரணம் என்ன?

விடை.—முன் கல்ப முடிவில் பிரம்மா பிரளய நித்திரை யில் மறைந்துபோக, அவரிடமிருந்து வெளிவந்த வேதத்தை ஹயக்கிரீவன் என்ற அஸுரன் திருடிக் கொண்டுபோய் ஸமுத்திரத்தில் ஒளித்துக்கொண் டான். இவனைக் கொல்ல பகவான் மத்ஸ்யாவதாரம் செய்தார்.

வினா **33.**—பகவான் மத்ஸ்யாவதாரம் எடுத்த விதம் எப்படி?

விடை.—இந்தக் கல்பத் தொடக்கத்தில் ஸத்யவ்ருதர் என்ற ராஜரிஷி மனுவானார். அவர் ஓர் ஆற்றில் அனுஷ்டானாதிகளை செய்துகொண்டிருக்கையில் அவர் கையில் தண்ணீரோடு ஓர் சிறு மீன் பிடிபட்டது.

அதன் வேண்டுகோளின்படி மனு அதைத் தமது கமண்டலத்தில்போட சீக்கிரத்தில் அது கமண்டலுவின் அளவுக்கு வந்தது. அப்பொழுது தன்னை ஓர் பெரிய பாத்திரத்தில் போடும்படி அது வேண்டிக் கொண்டது. மனு, பகவானே மத்ஸ்யாவதாரம் செய்திருக்கிறார் என்றறியாது அவ்வாறே செய்தார். அது கிரமமாகப் பெரிதாகக் குளங்கூட அதற்குப் போதாமல்போய்விட்டது. மனு அதை ஸமுத்திரத்தில் கொண்டுபோய்விட்டார்.

விஞ 34.—ஸமுத்திரத்தை அடைந்ததும் பகவான் என்ன செய்தார்?

விடை.—சீக்கிரத்தில் பெரிதாகிய மீனைக்கண்டு வியந்து பகவான் என்று எண்ணித் துதித்த மனுவை நோக்கிப் பகவான், 'இன்றைக்கு ஏழாம் நாள் உலகம் பிரளய ஜலத்தால் மூடப்படும். உலக வஸ்துக்கள் எல்லாவற்றிலும் ஒவ்வொன்றை எடுத்துக்கொண்டு ஓர் கப்பலில் ஏறிக்கொண்டு தயாராக இரு. உனக்கு யாதொரு கேடும் வராது. நான் அந்த ஜலத்தில் என் காரியத்தை முடித்துக்கொண்டு வருவேன். என் கொம்புகள் ஒன்றில் உன் கப்பலை ஓர் பாம்பால் கட்டிவிடு' என்று சொல்லி மறைந்தார்.

விஞ 35.—பிரளயம் எவ்வாறு நடைபெற்றது? இது எவ்வாறு முடிந்தது?

விடை.—பகவான் கூறியபடி ஏழாம்நாள் ஸமுத்திரம் பொங்கிவர, அவர் உத்திரவின்படி நடந்துவந்த மனு கப்பலில் இருந்தபடியால் ஸமுத்திரத்தில் நிர்ப்பயமாக மிதக்கத் தொடங்கினர்' அப்பொழுது மத்ஸ்யத்தி



மத்ஸ்யாவதாரம்.

னது கொம்பு அந்த ஜலத்தில் வெளிப்பட அதனோடு தமது கப்பலைச் சேர்த்துக் கட்டிவிட்டு, மத்ஸ்ய ரூபி யான பகவானைத் துதி செய்தார். அப்பொழுது பக வான் மனு முதலிய ரிஷிகளுக்கு ஞானோபதேசம் செய்தார். பிரளயம் முடிந்ததும் வெளிவந்த பிரம் மாவிடம் தாம் ஹயக்ரீவனைக் கொன்று எடுத்து வந்த வேதத்தை ஒப்புவித்து விட்டு மறைந்தார். இந்தக் கல்பத்தில் ஸத்ய விருதர் விஸ்வதரது பிள்ளையாகப் பிறந்து முதல் மனுவானார்.

---

# 9-வது ஸ்கந்தம்

ஸூர்ய சந்திர வம்ஸங்கள் கதை, அம்பரீஷர் கதை, பரசுராமாவதாரம், சுகபரீக்ஷித்து ஸம்வாதம்

குலந்தருஞ் செல்வந் தந்திடும் அடியார் படுந்துய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யு நீள் விசும் பருளு மருளொடு பெருநிலமளிக்கும்
வலந்தரு மற்றுந் தந்திடும் பெற்ற தாயினு மாயின செய்யு
நலந்தருஞ் சொல்லை நான் கண்டுகொண்டே னாராயணாவென்னு நாமம்.

வின 1.—ஸூர்ய வம்சத்தில் உண்டான இவ்வைவஸ்வத மனுவினது வம்சவிருத்தி விஷயத்தில் என்ன விசித்திர விஷயங்கள் நடந்தன?

விடை.—மனுவிற்கு வம்சவிருத்தியாக வேண்டிய விஷயமாக வஸிஷ்டர் ஓர் யஞ்ஞம் செய்துவைத்தார். அப்பொழுது மனுவின் பெண்சாதி மந்திரம் சொல்லி ஆஹூதிவிடும் பிராம்மணனிடம் சென்று தனக்குப் பெண் பிறக்கும்படியான ஆஹூதியை விட வேண்டும் என்று கேட்டுக்கொண்டாள். அவர் அப்படியே செய்ய இளை என்ற ஓர் பெண் உண்டானாள். மனுவிற்குப் பிள்ளை பிறக்காததால் மிகுந்த கஷ்டம் உண்டாக வஸிஷ்டரிடம் சென்று தமது துக்கத்தைத் தெரிவித்தார்.

வின 2.—வஸிஷ்டர் என்ன செய்தார்?

விடை.—வஸிஷ்டர் மிகுந்த ஆராச்சியின் பேரில் யஞ்ஞத்தில் ஏற்பட்ட மந்திரலோபத்தை அறிந்து அதை

மனுவிற்குத் தெரிவித்துத் தமது தபோமஹிமையால் அவனுக்குப் பிள்ளை உண்டாகும்படி செய்வதாகச் சொன்னார். உடனே பகவானைக்குறித்து வஸிஷ்டர் தியானத்திலிருந்து அவரிடம் இளைக்குப் புருஷத் தன்மை வரும்படி செய்ய வேண்டும் என்று வேண டிக்கொண்டார். பகவான் வஸிஷ்டருக்குத் திருப்தி உண்டாக, இளைக்குப் புருஷத்வம் வரும்படி செய்ய அவளே ஸூத்யும்னன் என்ற அரசன் ஆனாள்.

வி 3.—ஸூத்யும்னனுக்கு என்ன ஆபத்து வந்தது? ஏன்? இது எவ்வாறு யாரால் நீங்கிற்று?

விடை.—இவன் ஒருநாள் வேட்டையாடிக்கொண்டு வருகையில் பரமசிவன் உல்லாஸமாக இருக்கும்படியான குமாரிவனத்துள் புகும்படி நேரிட்டது. உடனே பரமசிவன் முன்னர் செய்திருந்த ஏற்பாட்டின்படி ஸூத்யும்னனுக்கு மறுபடி பெண் உருவம் வந்து விட்டது. பின்பு வஸிஷ்டர் முதலியவரது ஸஹாயத்தின்பேரில் பரமசிவத்தை உத்தேசித்து ஆராதனைகள் செய்து அவன் ஒருமாஸம் புருஷனாகவும், ஒரு மாஸம் ஸ்திரீயாகவும் இருக்கும்படி அனுக்கிரஹம் பெற்று, ராஜ்யமாண்டு ஸுகித்து வந்தான். (இராமாயண வினா விடை உத்தரகாண்டம் வினாக்கள் 114, 115களைப் பார்க்க).

வி 4.—ஸூத்யும்னன் கதி இவ்வாறாக, மனு என்ன செய்தார்?

விடை.—மனு யமுனா நதிக்கரையில் 100 வருஷம் தபஸு செய்து புத்திரன் வேண்டும் என்ற ஆசையுடன் ஹரியை ஆராதனை செய்தார். அவருக்குப் பத்துப்

பிள்ளைகள் உண்டானார்கள். அவர்களுள் முதலாவது பிள்ளைதான் இக்ஷ்வாகு.

வின 5.—மனுவின் பிள்ளைகளுள் ஒருவனாகிய பிரஷாத்ருவைப் பற்றிய விசேஷம் என்ன ?

விடை.—இவன் குரு இவனைத் தமது மாடுகளை மேய்க்கும்படி ஏற்பாடு செய்தார். இவன் மிகுந்த சாந்த மனதுடனும் பொறுமையுடனும் இந்தத்தொழிலைச் செய்துவர, ஓர் இரவில் பசு மந்தையைப் புலி வந்து தாக்கி ஓர் மாட்டைக் கவ்விக்கொண்டு போயிற்று. இதைப் பிரஷாத்ரு பின் தொடர்ந்து சென்று ஓர் ஈட்டியாய்க் குத்த மாடு குத்துப் பட்டு இறந்தது. குத்து புலியின் மேலும்பட, அது மாட்டை விட்டு ஓடிப்போய்விட்டது. மறுநாட் காலையில் பசு இறந்திருப்பதைக்கண்டு, குரு 'நீ சூத்திரனாகப் போகக்கடவாய்,' என்று சபித்தார்.

வின 6.—இந்தச்சாபம் வந்ததும் பிரஷாத்ரு என்ன செய்தான் ?

விடை.—அடங்கின மனதுடன் குரு கொடுத்த சாபத்தை வாங்கிக்கொண்டு மஹா விரக்தனான். மிகுந்த பகவத் பக்தி, தியானம், ஞானம் முதலிய நற்குணங்களைப் பின்பற்றிப் பெரிய ரிஷியாகித் தனது வாழ்நாட்களை மிகுந்த மேன்மையாய்க் கழித்து ஓர் காட்டுத் தீயில் அகப்பட்டுத் தனது தேகத்தை நழுவவிட்டான்.

வின 7.—மனுவின் மற்றொரு பிள்ளையாகிய சரியாதியைப் பற்றிய விஷயம் யாது ?

விடை.—சரியாதி என்பவருக்கு ஸுகந்யை என்றொரு பெண் உண்டு. அவளை ச்யவன ரிஷிக்குக் கொடுத்து

அவர் மூலமாக ஓர் யாகம் செய்து, அதில் தனது மாப்பிள்ளையின் மேன்மையை உணர்ந்தார். (மஹா பாரத வினு விடை முதல் பாகம் ஆரண்யபர்வம் வினு 52ஐப் பார்க்க).

வினு **8**.—சரியாதி வம்சத்தில் பிறந்த ரைய்வத ராஜன் விஷயத்தில் நடந்த அற்புதங்கள் எவை ?

விடை.—ரைய்வத ராஜன் குசஸ்தலம் என்ற பட்டணத்தில் ராஜ்யம் ஆண்டுவரும் நாளில் அவனுக்குக் குழந்தைகள் பிறந்தன. ஒருநாள் தனது பெண் ரேவதீதேவி யுடன் அவன் பிரம்மலோகம் சென்று அவளுக்குத் தக்க புருஷன் இன்னுன் என்று பிரம்மாவிடம் இருந்து அறிந்து வரவேண்டும் என்று ஆவல்கொண்டு பிரம்ம லோகம் நோக்கிப் புறப்பட்டார். பிரம்மஸபையில் கந்தர்வர்கள் அப்பொழுது பாடிக் கொண்டிருக்க, அவன் அதைக் கேட்டுக்கொண்டே நின்றுவிட்டான் பாட்டு முடிந்ததும், பிரம்மாவிடம் அவன் தனது நோக்கத்தைத் தெரிவிக்க பிரம்மா சிரித்துக்கொண்டு 'நீ வந்து இருபத்தேழு யுகம் ஆய்விட்டது. உன் காலத்திலிருந்தவர்களில் ஒருவராவது இப்பொழுது இல்லை. இப்பொழுது கிருஷ்ணனது தமயன் பலராமர் என்று ஒருவர் இருக்கிறுர். அவருக்கு உனது பெண்ணைக்கொடு. அவர் தம்மைவிட அவளைச் சிறிய வளாக்கிக் கொள்வார் பயப்படாதே' என்று சொல்ல அவன் அப்படியே செய்து தனது ராஜ்யம் சென்றுன் (இதனுல் ஸங்கீதத்தின் பெருமை விளங்கும்).

வினு **9**.—ஸூர்ய வம்சத்தில் உதித்த நாபாகராஜனைப் பற்றிய விசேஷம் என்ன ?

விடை.—நாபாகன் என்பவன் கடைக்குட்டி நாபாகன், இவன் குருகுலத்தில் இருந்து பிரம்மசர்யம் முடித்துக் கொண்டு வந்தவுடன் இவனுக்கு இவன் தமையன்மார் கள் தகப்பனுரையே பிதிரார்ஜித பாகமாகக் கொடுத்து விட்டு மற்றையவைகளைத் தாமே எடுத்துக்கொண்ட னர். அப்பொழுது தகப்பனுர்,கடைக்குட்டியை நோக்கி 'ஆங்கீரஸாள் யாகம் செய்கின்றனர். அவர்கள் பக்தி மான்களாயிருந்தபோதிலும், யாகத்தில் பிழைகள் செய்திருக்கின்றனர். அவர்களது பாபம் நீங்கும்படி அவர்களுக்கு மந்திரங்கள் கூறுவாயாகில், உனக்கு யாகத்தில் மிகுதியான திரவ்யங்களைக் கொடுத்துவிடு வார்கள் போ' என்று சொல்ல அவனும் அவ்வாறே செய்து யாகத்திரவ்யங்களைப் பெற்றுக்கொண்டான்.

வினு 10.—இந்த ஸமயத்தில் நடந்த விசேஷம் என்ன? இதனுல் நாபாகனுக்கு என்ன மேன்மை உண்டா யிற்று?

விடை.—யாக திரவ்யத்தை வாங்கிக் கொண்டவுடன் வடக்கு திக்கிலிருந்து ஓர் கரிய புருஷன் வந்து அவை கள் தன்னைச் சேர்ந்தவை என்று சொல்லத் தொடங்கி னன். அப்பொழுது நாபாகன் 'இவை எல்லாம் இந்த யாகம்செய்த எஜமானர்களால் எனக்குக் கொடுக்கப் பட்டவை!என்றுன். இருவரும் இவ்வழக்கை தீர்த்துக் கொள்ள நாபாகன் தகப்பனிடம் போவதாகத் தீர்மா னித்தார்கள். நாபாகன் சென்று கேட்டதற்கு அவன் தகப்பன் பக்ஷபாதம் இன்றி வைதிக ஸம்பிரதாயப்படி 'யாகத்தில் மிஞ்சியவை ருத்திரனைச் சேர்த்தது. ஆதலால் நீ பெற்றுக்கொண்டவை எல்லாம் கரிய

புருஷனிடம் கொடுத்துவிடவேண்டும் என்று தீர்மானித்தார். இந்தத் தீர்மானத்தைக் கேட்டவுடன் கரிய புருஷனுகிய ருத்திரர் நாபாகன் தகப்பனது பக்ஷபாதமின்மைக்கு மெச்சி 'என் பாகமாகிய இந்த யாகப் பொருள்களை உனக்கே கொடுத்துவிடுகிறேன். நீ உண்மை பேசியதால் உனக்குப் பிரம்மஞானத்தையும் கொடுக்கிறேன்' என்று நாபாகனுக்கு அனுக்ரஹித்து மறைந்தார். இதனுல் ஸத்யம் தலை காக்கும் என்பது விளங்கும்.

வி**ஞ 11**—நாபாக மஹாராஜாவின் பிள்ளையாகிய அம்பரீஷரது சிறப்பு எவ்வாறு வெளிவந்தது?

**விடை.**—இவர் சிறந்த பகவத் பக்தராக விருந்துகொண்டு தமது ராஜ்யத்தை ஆண்டுவந்தார். இவர் தமது அங்கங்கள் எல்லாவற்றையும் தமது இஷ்ட தெய்வமாகிய வாஸுதேவரது ஆராதனைகளிலே உபயோகப்படுத்தி வந்தார். இவருக்கு இந்த ஸன்மார்க்க அப்பியாஸத்தால் உலகப் பற்றுக்கள் விட்டுக்கொண்டே வர, ஸகல வித போகங்களின் மத்தியில் இருந்தபோதிலும் இவர் மனம் தாமரை இலைத் தண்ணீர்போல பற்றற்று நின்றது. இப்படி இருக்கையில் இவர் தமது பெண்சாதியுடன் ஒரு வருஷகாலம் வாஸுதேவருக்கு மிகப்பிரீதியான துவாதசி விருதம் அனுஷ்டிக்கத் தொடங்கினார்.

வி**ஞ 12.**—துவாதசி விருதம் என்பது என்ன? இதன் உட்கருத்து என்ன?

**விடை.**—மாதத்தில் இரண்டு துவாதசி வரும். அதற்கு முன் தினமாகிய ஏகாதசியில் சுத்தமாக உபவாஸம்

(சாப்பாட்டைக்கூடக் கவனிக்காது ஆத்மா அருகே வஸித்து) இருந்து ஹரிநாம ஸங்கீர்த்தனம், பூஜை, ஹரிகதா சிரவணம் முதலிய ஸத்காலக்ஷேபாதிகள் செய்து மறுநாள் அதிகாலேயில் ஏற்பட்ட நாழிகைக்குள் பிராம்மணர்கள் ஸமாராதனை செய்து பின்னர் பாரணை (தாம் உண்ணுதலை) செய்வதே. இவ்விருதமானது தச இந்திரியங்களுக்கு அப்பாலுள்ள ஏகாதச இந்திரியமாகிய மனதை வெளி வஸ்துக்களில் செல்லவொட்டாது மிகுந்த கஷ்டத்தின்பேரில் அடக்கித் துவாதச வஸ்துவாகிய ஆத்மாவின் உண்மை உருவைக் கண்டு களித்து ஆனந்தித்து முன்பட்ட கஷ்டங்களிலிருந்து விடுபடச் சற்றே இளைப்பாறித் திருப்தி அடைவதைக் குறிப்பிக்கின்றது. இந்நிலேயில் வருபவனுக்குத் தன்னுயிரைப்போல மன்னுயிரையும் நோக்குவது வரும் என்பதை ஸூசிபிக்கத் துவாதசி அன்று ஸமாராதனை விதிக்கப்பட்டு அதன் பிறகு தான் யஜமானன் பாரணை செய்யவேண்டுமென்று வைத்திருக்கிறது. இந்த சிறந்த நிஷ்டாக்கிரமத்தை நமக்குப் புகட்டத்தான் மாதம் இருமுறை இவ்விரதம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதை அறிந்து செய்பவர்களுக்குத் தேக ஆரோக்கியமும், மனோதிடமும் உண்டாகும். இதையறியாது பக்தியோடு செய்பவர்களுக்குத் தேக ஆரோக்கியமும், இந்த விருதத்தின் நோக்கத்தை அறியவேண்டும் என்ற ஆவலும் உண்டாகும். இந்த ஆவல் மூலமாக இவர்களுக்கு ஞானம் உண்டாக இவர்கள் பரமபத மார்க்கத்தில் பழகத் தொடங்குவார்கள்.

வி 13.—இந்தச் சிறந்த விருதத்தை அனுஷ்டித்து வந்த காலத்தில் அம்பரீஷருக்கு என்ன ஆபத்து யாது காரணத்தால் ஏற்பட்டது ?

விடை.—இந்த விருதத்தின் முடிவில் கார்த்திகை மாதத்தில் மூன்று நாள் உபவாசமிருந்து பின்னர் காளிந்தி நதியில் ஸ்நானம் செய்து அருகே உள்ள மது வனத்தில் வாஸுதேவரை த்யானம் செய்து விட்டு பிரம்ம நிஷ்டர்களான மஹான்கள் அநேகரை போஜனம் முதலியவைகளால் இவர் ஆராதித்தார். அப்பொழுது தாம் பாரணை செய்ய யத்தனிக்கையில் மகா கோபிஷ்டரான தூர்வாஸ மஹரிஷி அதிதியாக வர அவரையும் போஜனத்திற்கு அரசன் மஹா வினயத்துடன் அழைத்தான். அப்பொழுது அவர் தமது ஸ்நான அனுஷ்டானுதிகளை முடித்து விட்டு வருவதாகச் சொல்லிக் காளிந்திக்குச் சென்றார். ரிஷி திரும்பி வருவதற்கு நாழிகை யாகும் போலத் தோற்றியது. துவாதசி கொஞ்ச நாழிகைதான் இருந்தது. அதற்குள் விருதத்தின் ஏற்பாட்டின்படி யஜமானன் பாரணை செய்ய வேண்டியது. அதிதி ஒருவர் இருக்கையில் முன்னதாக உண்ணுவது ஒழுங்குக்கு விரோதம். இம் மாதிரி தர்மஸங்கடமாகிய ஆபத்தில் அம்பரீஷர் சிக்கிக் கொண்டார். ஒன்றும் தோன்றுமல் தயங்கினின்றார்.

வி 14.—இந்த ஆபத்திலிருந்து எவ்வுபாயத்தால் இவர் நீங்கினர் ? இதனால் என்ன பெரிய ஆபத்து இவருக்கு வந்தது ?

விடை.—இப்படி ஒன்றும் தோன்றுது தத்தளித்துக் கொண்டு இந்த தர்மஸங்கடத்திலிருந்து தப்புவிக்கும்

வழி யாது என்று அம்பரீஷர் பிராம்மணர்களைக் கேட்டார். அதற்கு அவர்கள் ‘ துவாதசி போவதற்குள் தீர்த்தத்தை மாத்திரம் குடித்துப்பாரணை செய்யலாம். தண்ணீர் குடித்தலை பிராம்மணர்கள் உபவாஸத்திற்கும், பாரணைக்கும் ஸமானமாக எண்ணுகிறார்கள். அதிதி போஜனம் செய்த பின்னர் தாங்கள் போஜனம் செய்யலாம். இதனால் தங்கள் துவாதசி விருதத்திற்குக் குறைவும் வாராது, அதிதிக்கு முன் உண்ட பாபமும் வாராது’ என்று புத்திமதி கூறினர். அரசனும் மனதில் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைத் தியானம் செய்துகொண்டு தீர்த்தத்தை ஆசமனீயம் செய்தார். உடனே துர்வாஸர் வந்துவிட அவர் அந்த விஷயத்தை அறிந்தார். தனக்கு முன் உண்டுவிட்டு மிகுந்ததைத் தனக்கு அரசன் போட வருவதைத் தமது ஞான திருஷ்டியில் அறிந்ததும், அவர் அம்பரீஷரை தர்மத்தை மீறினவன் பாபி என மிகுந்த கோபத்துடன் வைதுவிட்டுத் தமது ஜடையிலிருந்து கொஞ்சம் ரோமங்களைப் பிடுங்கி எடுத்து ஓர் சக்ராயுதம் செய்து அதை அரசன் உயிரை வாங்கிவிட்டு வரும்படி விடுத்தார். அம்பரீஷர் நிர்ப்பயமாக தாம் இருந்தவிடத்தில் அசையாமலே இருந்துவிட்டார்!

வின **15**.—இந்தக்கஷ்டஸமயத்தில் அம்பரீஷருக்கு யார் எவ்வாறு ஸஹாயம் செய்தது? மேல் என்ன நடந்தது?

விடை.—இந்தத் தருணத்தில் ஆபத் பாந்தவரான வாஸுதேவரது ஸுதர்சன சக்கரம் தமது பக்தனைக் காப்பாற்ற ஆகாயத்தினின்றும் திடீரென்று இறங்கி வந்து

தூர்வாசரது யோக சக்கரத்தை எரித்துவிட்டு அவரையும் துரத்தத்தொடங்கியது. தூர்வாஸர் எல்லாத் தேவதைகளிடமும் சென்று சரணமடைந்து பார்த்தார். அவர்கள் எல்லோரும் தம்மால் அவரைக் காப்பாற்ற முடியாது என்று நிராகரித்து விட்டனர். பிரபஞ்சம் முழுவதும் ஓடி ஒளிந்து பார்த்தார், அங்கும் காலன் போல சக்ரம் வந்து விட்டது. முடிவில் வாஸுதேவர் இடம் சென்று சரணம் புகுந்தார். அதற்கு அவர் 'நான் என் அடியார்களுள் அடக்கம் அவர்களுக்காக இந்த ஆயுதம் புறப்பட்டது. இப்பொது என்னால் ஒன்றும் செய்யமுடியாது. அம்பரீஷனே இரங்கி உன் விஷயத்தில் ஏதாவது செய்தால் உண்டு. அவனைச் சென்று சரணமடை, என்று ஆஞ்ஞாபித்தார்.

வினு 16.—பின்பு தூர்வாஸர் என்ன செய்தார்? இதனால் அம்பரீஷரது நற்குணம் எவ்வாறு வெளிவந்தது? மேல் என்ன நடந்தது?

விடை.—தூர்வாஸ மஹருஷி எங்கும் ஓடிக்களைத்து தமது எண்ணம் பூர்த்தியாகாததால் மனம் நொந்து 'நீயே கதி' என்று அம்பரீஷரிடம் வந்துவிழுந்தார். உடனே தூர்வாஸ மஹரிஷி தமக்குச் செய்த கெடுதியை மறந்துவிட்டு அம்பரீஷர் ஸுதர்சன சக்ரத்தை உள்ளன்புடன் ஆராதித்து அதை வாஸுதேவரிடம் செல்லும்படி பிரார்த்தித்தார். உடனே அது அனலை அடக்கிக்கொண்டு சாந்தமாகிப் பரம்பொருளிடம் சென்றது. அதுவரையில் போஜனம் செய்யாதிருந்த அம்பரீஷர் தூர்வாஸ ரிஷிக்கு போஜனம் செய்வித்து மரியாதைகள் செய்துவிட்டுத் தர்மம் பாரணை செய்து

ஸுகமாக இருந்தார். பின்பு தமது ராஜ்யத்தைத் தமது பிள்ளையிடம் ஒப்புவித்துவிட்டு வனம் சென்று வாஸுதேவரைத் தியானம் செய்து பரமபதம் அடைந்தார்.

விஞ **17.**—மனுவினிடம் உண்டான இக்ஷ்வாகுவினது வம்சம் எவ்வாறு விருத்தியாயிற்று?

விடை.—இக்ஷ்வாகுவுக்கு பிகுக்ஷி என்றொரு பிள்ளை இருந்தான். அவன் சிரார்த்த விஷயத்தில் தடுக்க முடியாமல் ஓர் அபராதம் செய்யும்படி நேரிட நாடு நீக்கப்பட்டான், இக்ஷ்வாகு இறந்த பின்னர் பிரஜைகளின் அநுமதியின் பேரில் பிகுக்ஷி ராஜ்யபாரம் செய்து ககுஸ்தன் என்ற தன் பிள்ளையை ராஜனாக்கி விட்டுப்போனான். இவன் தேவதைகளுக்கு உபகாரம் செய்து விஷ்ணு ஸஹாயத்தால் அஸுரர்களது பட்டணங்களை ஜயித்ததால் இவனுக்குப் புரஞ்ஜயன் என்ற பெயர் கிடைத்தது. இவன் வம்சத்தில் யுவனாச்வன் என்ற ராஜன் பிறந்தான்.

விஞ **18.**—யுவனாச்வன் விஷயத்தில் யாது காரணத்தால் என்ன அதிசயம் சம்பவித்தது?

விடை.—இவன் அனேகம் பெண்சாதிகளைக் கல்யாணம் செய்தபோதிலும் பிள்ளை இல்லாது மிகவருந்தி தனது பெண்சாதிமார்களோடு காட்டுக்குள் புகுந்தான். அங்கிருந்த ரிஷிகள் இவன் கதையைக் கேட்டு மிகவும் இறங்கி இவனுக்கு இந்திரனை உத்தேசித்து யாகம் செய்து வைத்தார்கள். அதில் வைத்திருந்த ஜபதீர்த்தத்தை யுவநாச்வன் இரவில் தாக அதிகத்தால் எடுத்துக் குடித்துவிட்டான். அப்பொழுது ரிஷிகள் தூங்

கிக்கொண்டிருந்தமையால் இவனை ஒருவரும் தடுப்பாரில்லாமல்போய்விட்டது. காலக்கிரமத்தில் தீர்த்தத்தின் சக்தியால் யுவனாசுவனது வலது இடுப்பைப் பிளந்துகொண்டு ஓர் குழந்தையுண்டாயிற்று. அப்பொழுது பால் குடிக்க அழுத குழந்தைக்கு இந்திரன் தனது கட்டை விரலை 'நான் கொடுக்கிறேன்' என்று முன் வந்து கொடுக்க அந்தக் குழந்தைக்கு மாந்தாதா என்ற பெயர் வந்தது. தேவதைகளது கிருபையால் யுவனாசுவனும் பிழைத்துக்கொண்டான்.

வினா **19**.—மாந்தாதாவின் வம்ச கதையென்ன?

விடை.—இவனுக்கு முசுகுந்தர் முதலிய நான்கு பிள்ளைகளும் ஐம்பது பெண்களும் உண்டானார்கள். யமுனா நதியுள் வெகுகாலம் தபஸு செய்துகொண்டிருந்த ரிஷியாகிய ஸௌபரிக்கு அங்கிருந்த மத்ஸயராஜனது போகத்தைக் கண்டதும் போகத்தில் இச்சையுண்டாக அவர் நதியைவிட்டு வெளியேறி மாந்தாதாவிடம் வந்து ஓர் பெண்ணைத் தனக்குக் கன்னிகாதானம் செய்யும்படி கேட்டுக்கொண்டார். மாந்தாதா ஸ்வயம்வரம் ஏற்படுத்துவதாகச்சொல்ல ஸௌபரி மிகுந்த அழகிய ரூபத்தை எடுத்துக்கொண்டு அரசன் அந்தப்புரம் சென்றார். உடனே அங்கிருந்த ஐம்பது பெண்களும் ஸௌபரியைக் கல்யாணம் செய்துகொள்வதாக ஒப்புக்கொண்டனர். உடனே அரசன் முன்னிலையிலேயே மிகுந்த ஆடம்பரத்துடன் ஐம்பது ஸ்திரீகளையும் சண்டையின்றி மிகுந்த ஸந்தோஷத்துடன் வாழும்படி ஆண்டுவந்து அரசன் கர்வத்தை அவர் தணித்தார். கொஞ்சகாலத்திற்கெல்லாம் அவருக்குத்

தமது தபஸு குறைந்துவிட்டது என்ற ஞாபகம் வந்துவிட்டது. உடனே மீனைக்கண்டு மோசம் போனேமே என்ற எண்ணத்துடன் கொஞ்சகாலம் வீட்டிலேயே மனதை அடக்கிக்கொண்டு இருந்து பார்த்து முடிவில் ஸந்யாஸங்கொண்டு வனம் புகுந்து பகவத்தியானம் செய்து பரமபதம் அடைந்தார். அவர் பெண்சாதிகளும் அவரைத் தொடர்ந்து சென்று தாமும் கூடவே உலகம் துறந்தனர்.

வினு **20.**—மாந்தாதாவுக்குப் பின் அவன் வம்சம் எவ்வாறு விருத்தியாயிற்று ?

விடை.—இவர் வம்சத்தில் கொஞ்சகாலத்திற்குமேல் அனரண்யர் என்ற அரசர் தோன்றினர். இவர் வம்சத்தில் திரிசங்கு தோன்றினன். இவன் குரு சாபத்தாலும், விசுவாமித்திரரது யோசனை குறைவான காரியத்தாலும் ஆகாயத்தில் தலைகீழாகத் தொங்கும்படி நேரிட்டது. இவன் பிள்ளை ஹரிச்சந்திரன்.) (திரிசங்கு கதையை இராமாயண வினுவிடை பாலகாண்டத்திலும், ஹரிச்சந்திரன் கதையை மஹாபாரத வினுவிடை முதல் பாகம் ஆரண்ய பர்வத்திலும் காண்க).

வினு **21.**—ஹரிச்சந்திரனுக்குப் பின்னர் யார் எவ்வாறு உண்டானது ? அவன் சிறப்பு என்ன ?

விடை—ஹரிச்சந்திரன் வம்சத்தில் பாஹுகன் என்ற ராஜன் பிறந்தான். அவனது ராஜ்யத்தை எதிரி அரசர்கள் பிடுங்கிக் கொள்ள அவன் காடு அடைந்து வயது முதிர்ச்சியால் இறந்தான். அவனது பட்டஸ்திரீ உடன் கட்டைஏறத்;தொடங்குவதைக் கண்ட ஔரவர் என்ற ரிஷி அவள் கர்ப்பிணி என்று கண்டு

அவளை உடன் கட்டை ஏறவொட்டாது தடுத்துவிட்டார். இதைக்கண்டு பொறாமை கொண்ட இவளது சக்களத்திகள் இவளுக்குச் சோற்றோடு விஷங்கலந்து கொடுக்க விஷத்தோடு குழந்தை காலக்கிரமத்தில் பிறந்தது. இவர்தான் ஸகர சக்கரவர்த்தி (இவர், இவர் பிள்ளைகள் ஆகிய இவர்களின் சரித்திரத்தை இராமாயண வினு விடை பாலகாண்டம் 29 முதல் 36 இறுதியாக உள்ள வினுக்களில் காண்க).

வினு **22.**—ஸகர வம்சத்தில் பகீரதருக்குப்பின் யார் யார் உண்டானது? அவர்களைப்பற்றிய விஷயங்கள் என்ன?

விடை.—பகீரதனுக்கு பின்னர் கொஞ்சம் தலைமுறை விட்டு ருது பர்ணன் பிறந்தான். இவனுக்குத்தான் நளமகாராஜன் ஸாரதியாக இருந்தது. இவன் வம்சத்தில் ஸௌதாஸன் பிறந்தான். இவன் தனது செய்கையாலேயே வஸிஷ்ட சாபத்திற்கு ஆளாகி கஷ்டபட்டான்.

வினு **23.**—ஸௌதாஸராஜாவுக்குக் குருசாபம் வரவேண்டிய காரணம் என்ன?

விடை.—இவன் ஒரு நாள் வேட்டைக்குப் போகும் பொழுது ஓர் ராக்ஷஸனைக் கொன்றுவிட்டு அவன் ஸஹோதரனைக் கொல்லாதுவிட்டு விட்டான். இந்த ராக்ஷஸன், சமையல்காரன் வேஷம்பூண்டு அரஸனிடம் அமர்ந்து வஸிஷ்டருக்கு நரமாம்ஸம் படைத்தான். இதை அறிந்த வஸிஷ்டர் ஸௌதாஸராஜனை 'நீ 12-வருஷம் ராக்ஷஸனாக இருக்கக் கடவாய்' என்று சபித்தார்.

**வின 24.**—அப்பொழுது ஸௌதாஸராஜன் நிலை எவ்வாறிருந்தது? பின்பு அவன் என்ன செய்தான்?

விடை.—தான் ஒருதோஷமும் அறியாதிருக்கத் தன்னை அநியாயமாகச் சபித்த குருவைச் சபிக்கத் தண்ணீரைக் கையில் எடுத்துவிட்டான். அந்தக் கோபத்தை அவன் பெண்சாதியாகிய தமயந்திமாற்ற அவன் அந்த ஜலத்தைத் தன் காலிலேயே கொட்டிக் கொண்டான். அவன் கால் கருத்துப்போய்விட்டது. அதனால் அவனுக்குக் கல்மாஷபாதன் என்ற பெயரும் வந்தது.

**வின 25.**—கல்மாஷபாதனுக்கு வஸிஷ்டசாப காலத்தில் என்ன விபத்து வந்தது? இது என்னமாக முடிந்தது?

விடை.—கல்மாஷபாதர் ராக்ஷஸராகத்திரிந்து வருகையில் பசிவேளையில் ஓர் பிராம்மணனும் அவன் ஸ்திரீயும் விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்டு பிராம்மணனைக் கொன்று தின்ன யத்தனித்து விட்டார். அப்பொழுது பிராம்மண ஸ்திரீ அரசனை நோக்கி 'நீ சிறந்த அரசன் சாபத்தால் இந்தக் கொடிய நிலை உனக்கு வந்திருக்கிறது. இக்கொடியத் தொழிலைச் செய்யாதே. இந்த நிலை சீக்கிரத்தில் மாறிவிடும்' என்று எவ்வளவு சொல்லியும் சாப மயக்கத்தால் பிராம்மணனை அரசர் கொன்றுவிட்டார். பிராம்மண ஸ்திரீயும் 'நீயும் உன் பெண்சாதியோடு விளையாடுங்கால் மரணத்திற்கு இறையாகக் கடவாய்' என்று சபித்து விட்டு உடன்கட்டை ஏறினாள். அரசன் சாபம் நீங்கிய பின்னர் தன் பெண்சாதியை நெருங்க வருகையில் அவள் காட்டில் பிராம்மண ஸ்திரீ கொடுத்த சாபத்தை ஞாபகப் படுத்த அரசன் பிள்ளையில்லாது இருக்கும்படி நேரிட்டது.

இவனுக்கு வஸிஷ்டர் அனுக்கிரஹத்தால் அச்மகன் என்ற பிள்ளையுண்டானான்.

வினா 26.—அச்மகன் வம்சத்தில் பிறந்த முக்கிய அரசனது விசேஷம் என்ன?

விடை.—இவன் வம்சத்தில் கட்வாங்க மஹாராஜா பிறந்தார். இவர் தேவதைகளுக்குச் சிறந்த ஸஹாயம் செய்தார். பின்னர் இந்திரனிடமிருந்து தாம் இன்னும் ஓர் முகூர்த்தம்தான் ஜீவித்திருக்கப்போகிறதாக அறிந்து தமது ராஜ்யம் வந்து மனதைப் பகவானிடம் செலுத்துக் கொஞ்ச நாழிகைக்குள் பரமபதம் பெற்றார்.

வினா 27.—கட்வாங்க ராஜன் வம்சத்தில் யார் யார் உண்டானார்கள்? அவர்கள் சிறப்பு என்ன?

விடை.—கடவாங்க ராஜன் வம்சத்தில்தான் ரகு, அஜன், தசரதர், ராமர் முதலியோர் உண்டானார்கள். (ராம சரித்திர விஸ்தாரத்தை இராமாயண வினாவிடையிலும், சுருக்கத்தை மஹாபாரத வினாவிடை முதல் பாகம் ஆரண்யபர்வம் 11-வது வினாவிலும் காண்க). பின்பு இராமருக்கு குசலவாள் உண்டானார்கள். இந்த வம்சம் கலியில் ஸுமித்திர ராஜனோடு முடிவு பெறும்.

வினா 28.—இக்ஷ்வாகுபிள்ளை நிமியின் வம்சம் என்னவாயிற்று?

விடை.—(நிமியின் கதையை இராமாயண வினாவிடை உத்தரகாண்டம் வினாக்கள் 82-84-களில் காண்க) இவர் வம்சத்தில்தான் பின்னர் ஜனகர் பிறந்து ராமருக்கு ஸீதையை விவாஹம் செய்துகொடுத்தது.

வி 29.—இதன் பின்பு சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப் பற்றி கூறலுற்றார்?

விடை.—இதன் பின்பு சந்திரவம்சத்தை விஸ்தாரமாக எடுத்துச் சொல்லத் தொடங்கினார். அதில் சந்திரனுக்குப் புதன் பிறந்த விவரம், அவனுக்கு இளை மூலமாகப் பூரூரவ சக்கிரவர்த்தி பிறந்த விவரம் (இராமாயண வினாவிடை உத்தரகாண்டம் வினாக்கள் 113-முதல் 115-வரையில் காண்க) பின்பு பூரூரவ சக்கிரவர்த்தி ஊர்வசியைக் கல்யாணம் செய்துகொண்டு ஸுகித்து அவளைப் பிரியும்படி நேரிட்ட காலத்தில் பட்டபாடு, முதலியவைகளை விஸ்தாரமாகச் சொல்லிவிட்டுப் பின்பு அந்த வம்சத்தில் காதி மஹாராஜா வரையில் வம்சாவளியை எடுத்துச் சொன்னார்.

வி 30.—காதிவம்சத்திற் குழந்தைகள் உண்டா? இந்த விஷயத்தில் முதலில் அவர் என்ன செய்தார்?

விடை.—காதி மஹாராஜனுக்கு ஸத்யவதி என்ற ஒரு பெண் மாத்திரம்தான் இருந்தாள். அவளை ரிசீகர் என்ற மஹரிஷி விவாஹம் செய்துகொள்ளுவதாக வந்து கேட்க, அவரது கோர ரூபத்தைக்கண்டு, 'இவர் நமது பெண்ணுக்குத் தக்கவர் அல்லர்! என்ற எண்ணங்கொண்டு, அவரை நோக்கி 'என் பெண்ணுக்குக் கந்யாசுல்கமாக, ஆயிரம் வெள்ளைக் குதிரைகள் கொடுக்கவேண்டும். அவைகள் காதுகளில் ஒன்று மாத்திரம் கருத்திருக்கவேண்டும்' என்று கேட்டான். இதை ரிஷியால் கொடுக்க முடியாது, நாம் தப்புவித்துக்கொள்ளலாம்' என்பது அரசன் எண்ணம். ரிசீகர் வருணனிடம் சென்று அரசன் குறிப்பிட்ட லக்ஷ

ணங்களோடு கூடிய குதிரைகள் ஆயிரத்தைக் கொண்டுவந்து கொடுத்து ஸத்யவதியை விவாஹம் செய்துகொண்டார். இவரது கிருபையால் அரசனுக்குப் பின்னர் ஓர் பிள்ளை பிறந்தது.

விஞ **31**.—காதிக்குப் பிள்ளை பிறந்தவிதம் எவ்வாறு?

விடை.—ரிசீகரிடம் ஸத்யவதியும் அவள் தாயாரும் தமக்கு புத்திர ஸந்தானம் வேண்டும் என்று யாசிக்க அவர் இரண்டு பாத்திரத்தில் ஹவிஸ் இட்டு, ஹோமம் செய்து அவர்களுக்குக் கொடுத்தார். இந்த ஹவிஸின் சக்தியால் இருவருக்கும் பிள்ளை பிறந்தன.

விஞ **32**.—இந்த ஹவிஸ் விஷயத்தில் முதலில் என்ன பிரமாதம் விளைந்தது? அதை யாது காரணத்தால் ரிசீகர் எவ்வாறு மாற்றினார்?

விடை.—ரிசீகர் இரண்டு ஹவிஸ்களையும் மந்திரித்து வைத்துவிட்டு ஸ்நானத்திற்குச் சென்றார். அந்த சமயத்தில் காதிராஜன் பெண்சாதி ஸத்யவதியிடமிருந்து அவர்கள் இருவருக்கும் ஒவ்வொருக்கு ஒவ்வொன்றாக இரண்டு ஹவிஸ் மந்திரித்திருக்கிறது என்று கேள்விப்பட்டு, ரிஷி தன் பெண்சாதி ஹவிஸில் ஏதாவது விசேஷமந்திரம் ஏற்றியிருப்பார் என்ற எண்ணத்துடன் ஸத்யவதியின் பாகத்தைத் தான் உண்டு, தன் பாகத்தை அவளுக்குக் கொடுத்து விட்டாள். ரிஷி திரும்பிவந்து நடந்த விஷயத்தை அறிந்து, ' இதென்ன விபரீதம், நான் பிராம்மணனாகையால் என் பெண்சாதிக்குப் பிராம்மணப் பிள்ளை உண்டாகும்படியான ஹவிஸையும், என் மாமன் க்ஷத்திரியனாகையால் அவனுக்கு ராஜ்யம் ஆள யோக்யமான க்ஷத்திரியப் பிள்

ளையை உண்டாகும்படியான ஹவிஸ்ஸையும் தயார் செய்திருந்தேன். நீங்கள் மாற்றிக்கொண்டு விட்டீர்களே! ஆதலால் என் பிள்ளை கோரமான க்ஷத்திரியனாகவும், என் மைத்துனன் நல்ல பிரம்ம நிஷ்டனாகவும் இருப்பான்!' என்று கோபத்துடன் கூறினார். அப்பொழுது ஸத்தியவதி கெஞ்சிக் கேட்டதின் பேரில், 'உனக்காக வேண்டுமானால் இதைச் சற்று மாற்றலாம்! உன் பிள்ளை பிராம்மணனாகவே இருக்கட்டும், உன் பேரன் க்ஷத்திரிய தர்மத்தை அனுஷ்டிப்பான் என்று ஏற்பாடு செய்து விட்டார்.

விஞ **33.**—ரிசீகர் பிள்ளை யார்? அவருக்குப் பிள்ளைகள் உண்டா? அவர்களுள் முக்கியமானவர் குணங்கள் என்ன?

விடை.—ரிசீகர் பிள்ளை ஜமதக்னி என்ற மஹரிஷி. அவருக்கு மூன்று பிள்ளைகள். கடைக்குட்டிதான் பரசுராமர். இவர் தான் க்ஷத்திரியரிடம் இருந்த சிறிய அபராதத்தைச் சாக்காகக் கொண்டு பரத கண்டத்திலிருந்த கொடிய அரசவம்சங்கள் அநேகத்தை 21 தரம் வேரறுத்தார். இதன் மூலமாகத்தான் ரிசீகர் சொல்லியபடி க்ஷத்திரியராகவே இவர் மாறிவிட்டார்.

விஞ **34.**—பரசுராமருக்கு ஆதியில் க்ஷத்திரியரிடம் விரோதம் வரக் காரணம் என்ன?

விடை.—தபஸால் ஆயிரம் கரங்கள் ஸம்பாதித்தவனாகியும் திக்விஜயம் செய்து கொண்டுவந்த ராவணனை லக்ஷயம் செய்யாது சிறைபடுத்திவைத்தவனாகியும் உள்ள கார்த்திவீர்யார்ச்சுனன், ஒருநாள் நிர்மானுஷ்யமான காட்டில் வேட்டையாடி வருகையில், ஜமதக்னி முனிவரது



பரசுராமாவதாரம்.

ஆசிரமத்துள் தனது பரிவாரங்களோடு புகுந்தான். தபோதனராகிய அம்முனி தமது காமதேனுவைக் கொண்டு அர்ச்சுனன் அவன் பரிவாரங்கள் எல்லோருக்கும் திருப்தியாகப் போஜனாதிகள் செய்துவைத்தார். இதைக்கண்ட அர்ச்சுனனுக்குக் காமதேனுவின் பேரில் ஆசை உண்டாக அதைத் திருடிபோகும்படி தனது பரிவாரங்களுக்கு உத்தரவு செய்தான். இதைப் பரசுராமர் அறிந்ததும் மிகுந்த கோபத்துடன் தமது பரசு ஆயுதத்தை எடுத்துக்கொண்டு தனிமையாக அர்ச்சுனன் பட்டணம் நோக்கிப் புறப்பட்டு அவன் ஸேனைகளோடு கொடிய போர் செய்து முடிவில் அவனையும் கொன்று காமதேனுவைக் கைப்பற்றிக் கொண்டு வந்து விட்டார். இதனால் தான் முதலில் பரசுராமருக்கு க்ஷத்திரியரிடம் வெறுப்பு உண்டாயிற்று. யுத்தத்தில் கொலை செய்த பாவம் தீருவதற்காகப் பரசுராமர் தமது தகப்பனார் உத்திரவின்படி தீர்த்த யாத்திரை செய்துவிட்டு வந்தார்.

வின **35**.—இந்த ஸமயத்தில் பரசுராமரது மேலானகுணம் எவ்வாறு வெளியாயிற்று?

விடை.—பரசுராமர் தாயாகிய ரேணுகாதேவி ஒருநாள் கங்கைக்கு ஹோம விஷயத்திற்கு வேண்டிய சுத்த ஜலம் எடுத்துவரச் சென்றாள். அங்குச் சித்திரரதன் என்ற கந்தர்வன் தனது அப்ஸரஸ்திரீகளோடு விளையாடுவதைக்கண்டு இவள் மனம் சலித்தது. தன் காரியத்தை மறந்துவிட்டதால் ஹோமவேளை தவறிவிட்டது. மனம் தன்வசப்பட்ட பிறகு தான் ஏமாந்ததையும், ஹோமவேளை தவறிப்போனதையும் எண்ணி

எங்கே தன் நாயகன் சாபம் வருமோ என்ற பயத்துடன் ஆசிரமம் வந்து சேர்ந்தாள். கங்கைக் கரையில் நடந்த ரஹஸியங்களை ஜமதக்னி தமது ஞானதிருஷ்டியால் அறிந்து, 'இந்தப் பாபியைக் கொன்று விடுங்கள்' என்று தமது பிள்ளைகளுக்குக் கட்டளையிட்டார். முதல் இரண்டு பிள்ளைகளும் தகப்பன் கட்டளைப்படி நடவாமல் இருப்பதைக்கண்டு பரசுராமர் தகப்பன் உத்திரவுபடி தாயையும் தமையன்மார்களையும் கூசாது கொன்றுவிட்டார். இவ்வாறு பிதிர்வாக்கிய பரிபாலனம் செய்த பரசுராமரிடம் மிகுந்த ஸந்தோஷம் உண்டாக ஜமதக்னி 'உனக்கு என்ன வரம் வேண்டும் கேட்டுக்கொள்' என்று சொல்ல பரசுராமர், 'நான் இப்பொழுது கொன்றவர்கள் எல்லோரும் உயிரோடு எழுந்துவிட வேண்டும். அவர்களுக்கு அவர்கள் செய்த குற்றங்களும், நான் அவர்களைக் கொன்றேன் என்ற சங்கதியும் மறந்துபோய் விடவேண்டும்!' என்று கேட்டுக்கொள்ள, முனியின் தபோபலத்தால் அவ்வாறு நடந்தேறியது. இவைகளால் பரசுராமரது நல்ல குணங்கள் வெளிவந்தன.

**விஞ 36.**—இப்படி இருக்கையில் பரசுராமருக்கு முன்னரே க்ஷத்திரியரிடம் உண்டான வெறுப்பு யாது காரணத்தால் அதிகமாயிற்று?

**விடை.**—கார்த்தவீர்யார்ச்சுனன் பிள்ளைகளுக்குத் தமது தகப்பனைக் கொல்லுவித்த ஜமதக்னி முனிவரிடம் தீராக்கோபம் இருந்தது. அவர்கள் ஸமயம் பார்த்துக்கொண்டிருந்து ஒரு நாள் பரசுராமர் இல்லாத ஸமயத்தில் ஆசிரமத்தில் நுழைந்து, அங்கு முனிவர்

ஹோமாக்னியின் எதிரில் ஸமாதியில் மெய்ம்மறந் திருப்பதைக்கண்டு அவரைக் கொல்ல யத்தனித்த னர். அப்பொழுது ரேணுகாதேவி எவ்வளவு நய மாகக் கேட்டுக்கொண்டும் அவளை அலக்ஷயம் செய்து விட்டு, அவர்கள் ஜமதக்னி ரிஷியை வெட்டிச் சாய்த் துவிட்டனர். அப்பொழுது ரேணுகாதேவி கதறின சப்தத்தைக்கேட்டுப் பரசுராமர் ஆசிரமம் வந்து பார்த் தார். தகப்பனார் விஷயமாகக் கொஞ்சம் கதறிவிட்டு எழுந்தார். உடனே அவருக்கு க்ஷத்திரியர்கள்மேல் அடங்காக்கோபம் மூண்டது.

வி**ஞ 37**.—இந்தக் கோபம் எந்தமாதிரியாக வெளிவந்தது? அப்பொழுது பரசுராமர் என்ன செய்தார்?

விடை.—கோபாவேசத்தில் ‘உலகில் க்ஷத்திரியப் பூண்டே இல்லாமல் அடித்துவிடுகிறேன்’ என்று சபதம் செய்து கொண்டு முதலில் கார்த்தவீர்யார்ச்சுனன் பிள்ளை களைக் கொன்றார். பின்பு 21 முறை பாதகண்டத்தை வலம் வந்து க்ஷத்திரியர்கள் எல்லோரையும் கொன்று குருக்ஷேத்திரத்தருகில் ஸ்மந்த பஞ்சகம் என்ற ஐந்து ரக்த மடுக்களை உண்டாக்கினார். இதன் பின்பு அந்த மடுவில் பரசுராமர் தமது தகப்பனாருக்கு அபரக் கிரி யைகள் செய்து முடித்து, பாதகண்டத்தை அக்கிரியை களில் ஸஹாயம் செய்த எல்லோருக்கும் பிரித்துத் தானம் செய்துவிட்டார். அதில் ஆர்யாவர்த்தம் என்ற மத்தியப் பிரதேசத்தைக் காச்யபருக்குக் கொடுத் தார். கொலைத்தொழிலால் ஏற்பட்ட பாபங்களைச் சுத்த மனதோடு ஸரஸ்வதீ நதியில் ஸ்நாநம் செய்து தீர்த்துக்கொண்டு வெளியேறினார்.

விஞ **38.**—இதன் பின்பு நடந்த விசேஷம் என்ன?

விடை.—பரசுராமர் சிரத்தையோடு செய்த கர்மங்களால் ஜமதக்னி ஸப்தரிஷிகளுள் ஒருவரானார். பரசுராமர் சிரஞ்சீவியாக மஹேந்திர மலையில் வந்து அமர்ந்தார். இவ்வாறு பரம்பொருள் பிருகு வம்சத்தில் அவதரித்து க்ஷத்திரியர்களைக்கொன்று பூபாரம் நீக்கினார்.

விஞ **39.**—ரிசீகர் வம்ஸம் இவ்வாருகக் காதி வம்சம் என்னமாயிற்று?

விடை.—காதிக்கு விசுவாமித்திரர் உண்டானார். இவர் தபோபலத்தால் பின்பு பிராம்மணரானார். (இவர் பட்டபாடுகள் முதலியவற்றை இராமாயண விஞ விடை, பாலகாண்டம் 43 முதல் 56 வரை இறுதியாக உள்ள விஞக்களில் பார்க்க).

விஞ **40.**—இந்தப்படி பரசுராமாவதாரக் கதையைக் கூறி வந்த சுகப்பிரம்மம் எந்த விஷயத்தை எடுத்து விவரித்தார்?

விடை.—சந்திரவம்சக் கதையை எடுத்துக்கொண்டு சொல்லி வருகையில் யயாதி கதையையும், சகுந்தலை கதையையும் விஸ்தரித்தார். (இவைகளின் விஸ்தாரத்தை மஹாபாரத விஞவிடை ஆதிபர்வம் 16 முதல் 41 இறுதியாகவும், 1 முதல் 13 இறுதியாகவும் உள்ள விஞக்களில் காணலாம்.)

விஞ **41.**—இதன் பின்பு யாருடைய சிறப்பை எடுத்து எவ்வாறு விவரிக்கப்பட்டது?

விடை.—சுகப்பிரம்மம் ரந்திதேவர் என்ற ஓர் சந்திரவம்சத்தரசனது சிறப்பை எடுத்து விவரித்தார். தமக்கு

யெதேச்சையாகக் கிடைத்த வஸ்துக்களை எல்லாம் அவர் தன் பசியைக்கூடக் கவனியாது இரப்போர்க்குத் தடையின்றிக் கொடுத்துவந்தார். இந்த வழக்கத்தால் ஒரு சமயத்தில் இவர் 48 நாள் தீர்த்தம்கூட இல்லாது பட்டினியாக இருக்கவேண்டி வந்துவிட்டது. இதன் முடிவில் இவருக்கு யெதேச்சையாக ஆஹாரம் கிடைத்தது. அதை அவர் புஜிக்கத் தயாராகும் காலத்து பிராம்மணர் இருவர், சூத்திரன், சண்டாளன் ஆகியஇவர்கள் ஒருவர் பின் மற்றொருவராக வந்து அவர் உணவு எல்லாவற்றையும் வாங்கி உண்டு திருப்தி யடைந்து போயினர். கடைசி பங்கை சண்டாளன் கையில் கொடுக்கும்போது ரந்திதேவர் 'எனக்கு மோக்ஷம்கூட வேண்டியதில்லை. உலகத்தில் உள்ளவர் துக்கம் எல்லாம் என்னிடம் வருவதால் அவர்களுக்கு ஸுகம் வருமாயின் நான் துக்கம் அனுபவிக்கத் தயாராக இருக்கிறேன். இப்படிச் செய்வதால் எனக்கு அஞ்ஞானம் கழன்றுவிடும்' என்று சாந்த மனதோடு சொன்னார். அப்பொழுது அவருக்குப் பகவான் பிரத்யக்ஷமானார். ரந்திதேவருக்குச் சாந்தி பிறந்தது. அவருடன் கூடவே இருந்தவர்கள் எல்லோரும் பக்தசிரோமணிகளாயினர்.

வி 42.—ரந்திதேவரது மஹிமையைக் கூறியதன் பின்னர், சுகப்பிரம்மம் என்ன செய்தார்?

விடை.—சந்திரவம்ச கிளைகள் எல்லாவற்றையும் கோர்வையாகச் சொல்லிக்கொண்டுவந்து, பரதவம்சம் எடுத்துக் கூறிப் பரீக்ஷித்து வரையில் கொண்டுவந்து விட்டார். மேல் பரீக்ஷித்து பிள்ளை ஜனமேஜயன் செய்யப்போகும் காரியங்களையும் எடுத்துக் கூறினார். அதன்

பின்பு பாரதவம்சத்தில் ப்ரதீபர் பிள்ளைகளில் ஒருவராகிய தேவாபி ரிஷியாக மாறிக் கலாபக்கிராமத்திலிருந்து கொண்டிருப்பதாகவும், அவரே கலியுகத்தில் சந்திர வம்சம் க்ஷீணித்த உடன் அதை விருத்தி செய்யப் போகிறதாகவும் எடுத்துக் கூறினார். இதன் பிறகு யயாதி பிள்ளையாகிய யதுவினிடமிருந்து தோன்றிய யாதவ குலத்தை எடுத்துரைத்து, பின்பு அதனோடு ஸம்பந்தப்பட்ட விருஷ்ணி, அந்தாள் முதலிய குலத்தவரது வம்சாவளியைச் சொன்னார். முடிவில் பகவான் கிருஷ்ண ராம அவதாரங்கள் செய்து பூபாரம் நீக்கித் தர்மத்தை நிலை நிறுத்தியதைச் சுருக்கிச்சொல்லப் பரீக்ஷித்திற்குக் கிருஷ்ண கதையைப் பூர்த்தியாகக் கேட்கவேண்டும் என்ற ஆவல் உண்டானதைக் கண்டு இதை விஸ்தாரமாகச் சொல்லத் தொடங்கினார்.

---



வெண்ணெய்த்தாழி கிருஷ்ணன்.

# 10-வது ஸ்கந்தம்

## கிருஷ்ணகதை

### சுகபரிக்ஷித்து ஸம்வாதம்

அரும்பொனே மணியேயெ னன்பேயெ னன்பான
வறிவேயெ னறிவிலூறு
மானந்த வெள்ளமே யென்றென்று பாடினே
னாடினே னாடிநாடி
விரும்பியே கூவினே னுலறினே னலறினேன்
மெய்ச்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி யெனவெனிரு கண்மாரி பெய்யவே
வேசற்றயர்ந் தேனியா
னிரும்புநேர் நெஞ்சகக் கள்வனா னாலுமுனை
யிடைவிட்டு நின்றதுண்டோ
வென்றுநீ யன்றுநா னுன்னடிமை யல்லவோ
யாதேனு மறியாவெறுந்
துரும்பனே னென்னினும் கைவிடுத னீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

வின 1.—கிருஷ்ணபரமாத்மா எந்த வம்சத்தில் யாருக்குப் பிள்ளையாக அவதரித்தார் ?

விடை.—முன்காலத்தில் மதுராபுரியை அரசாண்டு வந்தவனும் யயாதி மஹாராஜனால் 'உன் வம்சத்தவர்கள் ராஜ்யம் நேரே ஆள யோக்கியர்களாகாமல் போகட்டும்!' என்று சபிக்கப்பட்ட யதுவினது வம்சத்தி

னுதித்தவராயும் உள்ள ஸூரஸேனனது பிள்ளை யாகிய வஸுதேவருக்கும், போஜர்குலச் சிரேஷ்டரா கிய தேவகராது புத்திரியாகிய தேவகீதேவிக்கும் எட்டாவது பிள்ளையாக அவதரித்தார். (இதன் விவரத்தை மஹாபாரத விஞ விடை முதல் பாகம் 17-ம் பக்கத்தில் காண்க.) இந்த வசுதேவருடைய நேர் தங்கைதான் பாண்டவர்களுடைய தாயாகிய குந்தி தேவி. இவளை இளமையிலேயே ஸூரஸேனராஜன் குந்தி போஜராஜனுக்குத் தத்தாகக் கொடுத்துவிட் டான்.

விஞ 2.—கிருஷ்ணபரமாத்மா இவ்வாறு அவதரிக்கக் கார ணம் யாது? இவர் அவதரிக்கும் முன் வேறு என்ன விஷயங்கள் நடந்தன?

விடை.—இவர் அவதரிக்கும் முன் தேவகராஜன் ஸஹோ தரனை உக்கிரஸேனனது பிள்ளை கம்ஸன், அவன் மாமனார் ஜராஸந்தன் இவர்கள்போன்ற மற்றைக் கொடியவர்கள் பூமியில் அதிகரித்து விட்டனர். எவ் வளவு நல்லவர்கள் இருந்தாலும் தாங்கிநிற்கும் பூமிக்கு இக்கொடியவர்கள் பெரும்பாரமாகத் தோற்ற காம தேனு உருக்கொண்டு பிரம்மதேவரிடம் சென்று பூமி தேவி தனது கஷ்டத்தைத் தெரிவித்துக்கொண்டாள். அவரும் மற்றைய தேவதைகளும் சென்று திருப்பாற் கடலை அடைந்து பரம்பொருளைத் துதிக்க, அவர் தேவர்கள் முதலில்போய் யாதவகுலத்தில் அவதரிக்க வேண்டும் என்றும், பின்பு தாமே அவதரிப்பதாகவும் கூறினர். இதைக்கேட்டு தேவதைகள் அவ்வாறே செய்தனர். இதற்குள் தர்மாத்மாவான தருமபுத்திர ரும், பீமனும், கொடியவர்களாகிய துரியோதனுதி

யரும் பிறந்தாய்விட்டது. இந்த நல்ல தருணத்தில் துஷ்டநிக்கிரஹ சிஷ்டபரிபாலனம், தருமத்தை நிலை நிறுத்தல் ஆகிய மூன்றிற்கும் இதுதான் தருணம் என்று பகவான் அவதரித்தார்.

வினு 3.—பகவான் எங்கு எவ்வாறு அவதரித்தார்?

விடை.—கம்ஸனது சிறைச்சாலையில் விலங்கு பூட்டப்பட்டும், ஆறு பிள்ளைகளை இழந்ததும் அல்லாமல், ஏழாவது கர்ப்பம் கலைந்ததைக் கண்டு வருந்திக்கொண்டிருந்த தேவகி வஸுதேவர்கள் களிப்படையும்படி முதலில் பகவான் வஸுதேவருள் புகுந்து கொண்டார். அவரிடமிருந்து தேவகீதேவி கர்ப்பத்துள் புகுந்துகொண்டார். தேவகீதேவி பகவானைத் தாங்கி விளங்குகையில் பிரம்மா முதலிய தேவதைகள் எல்லோரும் அங்கு வந்து பகவானைத் துதித்தனர். நாளடைவில் கோகுலாஷ்டமியன்று இரவு சந்திரோதய காலத்தில் சங்கு சக்ர பீதாம்பரதாரியாயும், சதுர்புஜராயும், திவ்ய மங்கள விக்கிரஹத்தை வெளிக் காட்டிக்கொண்டு பகவான் அவதரித்தார். பகவானைக் கண்ணாரக் கண்டார்கள் தேவகீ வஸுதேவாள். தாம் சிறைச்சாலையில் இருப்பதை மறந்துபோய் விட்டார்கள். காலில் பூட்டி இருந்த விலங்குகள் தறித்துப்போய் விட்டன. தேவதைகள் மகிழ்ந்தனர். இம்மாதிரியான ஆனந்தத்தை ஸத்துக்களுக்குக் கொடுத்துக்கொண்டு கம்ஸன், அவன் காவலாளர் முதலியோர் உறங்குகையில் பொய்வளரும் நெஞ்சினர் காணாத காட்சியாகிய பகவான் அவதரித்தார்.

வினு 4.—வஸுதேவரும் தேவகீதேவியும் ஏன் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டார்கள்? இவர்கள் முதல் ஆறு குழந்தைகளை இழக்கக் காரணம் என்ன?

விடை.—கம்ஸனுக்குத், தேவகீதேவி வயிற்றில் பிறக்கும் எட்டாவது பிள்ளை தனக்கு யமனாகும் என்பது தெரிய வர, அவன் இவர்களை ஏழாவது பிள்ளை பிறப்பதற்கு முன்னமேயே சிறைச்சாலையில் அடைத்து விட்டான். மேலும் முதலில் பிறந்த ஆறு பிள்ளைகளையும் முன் ஏற்பாட்டின்படி கம்ஸனிடம் வஸுதேவர் ஒப்புவிக்க அவன் 'நமக்கு எட்டாவது பிள்ளைதானே யமன்; இப்பிள்ளைகளை நாம் கொல்ல வேண்டியது இல்லை!' என்று முதலில் விட்டுவிட்டான். அப்பொழுது நாரதர் ஓடோடியும் வந்து கம்ஸன் ஜராஸந்தன் முதலியோரைக் கொன்று பூபாரம் தீர்க்க நடத்திருக்கும் ஏற்பாட்டைக்கூறக் கம்ஸன் பயத்தால் அந்த ஆறு குழந்தைகளையும் கொன்றுவிட்டு வஸுதேவரையும் தேவகியையும் சிறைச்சாலையில் அடைத்தான்.

வினு 5.—ஏழாம் கர்ப்பம் கலையக் காரணம் என்ன? இதில் என்ன பிரமாதம் விளைந்து எவ்வாறு தீர்ந்தது ?

விடை.—இப்படி இருக்கையில் பகவானது ஆக்ஞைப்படி யோக மாயைத் தேவகீயினது ஏழாம் கர்ப்பத்தைக் கலைத்து வேறோர் இடம்கொண்டு சேர்க்கக் கம்ஸனுக்குப் பயம் அதிகரித்தது. தேவகீதேவி எட்டாம் கர்ப்பம் ஆனதும் அவளைக் கொன்று விடலாமா என்று சிறைச்சாலை சென்றான். அவளது திவ்யசோபையைக் கண்டதும் அவளைக்கொல்ல மனம் வரவில்லை! ஆனால் தன் மனத்திலிருந்த பயம் அதிகரித்தது; அதனால் அவன் அங்குக் கடுங்காவல் வைத்து எட்டாம் குழந்தை பிறந்ததும் தனக்குத் தாமதியாமல் தெரிவிக்க வேண்டும் என்று உறுதியான கட்டளை யிட்டிருந்தான். பகவான் அவதாரமாகும் அன்றிரவு காவலாளர்கள்

சந்திரோதயம் வரையில் விழித்திருந்து, சென்ற சில நாள் தூக்கம் விழித்த சிரமத்தால் அயர்ந்து தூங்கினார். சென்ற சிலநாளாகத் தூக்கம் பிடிக்காது பயத்தால் தன்னைச் சுற்றிலும் தன் எட்டாவது மருமகன் இருப்பதாகக்கண்டு வெருண்டு கொண்டிருந்தமையால் அவதாரமான இரவில் கம்ஸனும் சற்று அயர்ந்து தூங்கி விட்டான். இவ்வாறு பகவான் எல்லாவற்றையும் முன்னமே ஒழுங்கு படுத்திவிட்டார்.

வினா 6.—கம்ஸனுக்கு எவ்வாறு எத்தருணத்தில் தன் எட்டாவது மருமகன் தனக்கு யமன் என்று தெரிய வந்தது? இதனால் என்ன பிரமாதம் விளைந்தது?

விடை.—வஸுதேவர் தேவகீதேவியை விவாஹம் செய்து கொண்டு மறுநாள் அவளைத் தன் வீடு அழைத்துச் செல்ல எண்ணி மணக்கோலத்தோடு தமக்குத் தயாராகவிருக்கும் ரதத்தின்மீது வந்து ஏறினார். அப்பொழுது தன் தங்கையின் மேல் இருந்த அன்பால் கம்ஸன் ஸாரத்யம் செய்ய வந்து உட்கார்ந்தான். உக்கிரஸேனராஜன் தன் பெண்ணுக்கு வெகு சிறப்பாகச் சீர்களை எடுத்துவிட வெகு கோலாஹலமாக ஊர்கோலம் புறப்பட்டது. வழியில் வருகையில் கம்ஸனுக்கு எதிரே 'அடே மூடா! இந்தத் தேவகீயினது எட்டாவது பிள்ளை உனக்கு யமன்! நீ யேன் இந்த விவாஹத்தை இவ்வளவு கொண்டாடுகிறாய்?' என்று ஒரு அசரீரி வாக்குப் பிறந்தது. இயற்கையாகவே கொடியவனாகிய கம்ஸன், 'இவன் இருந்தால் அல்லவோ இவளுக்கு எட்டாவது பிள்ளை பிறந்து எனக்கு யமனாகும்! இதோ இவளைக் கொன்றுவிடுகிறேன்!' என்று கோபாவேசத்துடன் தன் பட்டாக்கத்தியை உருவிக்கொண்டு தேவகியின் தலைமயிரைப் பிடித்து விட்டான்!

வின 7.—இந்த அவஸர ஸமயத்தில் எவ்வாறு தேவகீ தேவி பிழைக்கும்படி நேர்ந்தது? பின்னர் என்ன நடந்தது

விடை.—இந்த அபாயத்தைக் கண்ணுற்ற வஸுதேவர் முதலில் எவ்வளவோ தர்மங்களை எடுத்துரைத்து, 'ஆறிலும் சாவு நூறிலும் சாவு. மனிதனுக்கு ஸாதாரணமாக உண்டாவதை ஆகாயவாணி கூறியதே ஒழிய புதிதாக ஒன்றையும் சொல்லி விடவில்லையே! இப்படி இருக்க நீ சாவு வரப்போகிறதென்று பயந்து உன் தங்கையைக் கொல்வதால் என்ன பயன்? நல்ல வழியில் பிரவர்த்தித்து மரணத்தைச் சாந்த மனதோடு ஏற்பதே புருஷனுக்கு அழகு! அதற்குப் பயந்து கெட்டவனாகி விடக்கூடாது!' என்று புத்திமதி கூறினார். இந்த உபதேசம் கொடிய கம்ஸனுக்கு ஏறவே இல்லை! 'கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாஸனை?' மறுபடியும் தன் தங்கையை வெட்டத் தொடங்கும் கம்ஸனை நோக்கி 'எனக்குப் பிறக்கும் பிள்ளைகளை எல்லாம் தவறாது உன் கையில் ஒப்புவித்து விடுகிறேன். நீ அவைகளை உன் இஷ்டப்படி நடத்திக்கொள். நான் ஒன்றும் தடுத்துச் சொல்வதில்லை. இவள் பிள்ளைதானே உனக்கு விரோதி அதற்கு இவள் என்ன செய்வாள்?' என்று மிகுந்த உருக்கத்துடன் வஸுதேவர் கூற, கம்ஸன் தேவகீதேவியை விட்டுவிட்டான். அதுமுதல் ஆறு பிள்ளைகளையும் வஸுதேவர் சொன்ன சொற்படி கம்ஸனிடம் ஒப்புவிக்க, தயவாக அவன் முதலில் அவர்களைக் கொல்லாது விட்டான். பின்பு நாரதர் சொன்ன விஷயங்களால் பயம் அடைந்து ஆறு பிள்ளைகளையும் கொன்று தேவகீ வஸுதேவரை வருத்தினான்.

விஞ .8—நாரதர் இவ்வாறு ஆறு பிள்ளைகளைக் கொல்லும்படி செய்தது நியாயமா?

விடை.—தேவகிக்கு முதற் பிறந்த ஆறு பிள்ளைகளும் பகவத் ஆக்ஞையால் பிறந்த தேவர்கள். அவர்களால் உலகில் நடக்க வேண்டிய வேலை ஒன்றும் இல்லை. ஆதலால் உலகில் அவர் கிடந்து உழலாது தேவலோகம் அடைந்து ஆனந்திக்க வேண்டியது அவர்களுக்கு ஏற்பட்ட ஆக்ஞை. அவர்களைத் தேவலோகம் அனுப்ப நாரதர் கம்ஸனால் அவர்களைக் கொல்லுவித்தார். மேலும் கொடியவன் மிகக் கொடியவனானால்தான் கடவுள் அநுக்கிரஹமாகிய தண்டனைக்கு ஆளாகிச் சீர்திருந்துவான். அவன் நல்லவனாகிக் கடவுள் அநுக்கிரஹத்திற்கு ஆளாவது அஸாத்யம். ஆறு பிள்ளைகளையும் கம்ஸன் கொல்லாதிருந்தால் அவனுக்குப் பகவத் தண்டனை வராது. ஆதலால் கம்ஸனது நன்மையின் பொருட்டு நாரதர் இவ்வாறு செய்தது நியாயம்தான்.

விஞ 9.—இவ்வாறு ஆறு பிள்ளைகளையும் இழந்து ஏழாவது கர்ப்பம் மாயமாகக் கலைந்து வருந்திய தேவகீயின் எட்டாம் கர்ப்பத்தில் அவதரித்த திவ்ய மங்கள ரூபியான பகவான் முதலில் என்ன செய்தார்?

விடை.—சிறைச்சாலையில் நடு நிசியில் அவதரித்த பரம்பொருள் தம்மைத் துதித்த வஸுதேவதேவகிகளை நோக்கி 'எனது யோகமாயைதான் உங்களது ஏழாவது பிள்ளையைக் கர்ப்பத்திலேயே எனது உத்தரவுபடி கலைத்து என் தாயாகிய ரோஹிணீதேவியிடம் சேர்த்து, என் தமயன் பிறக்கும்படி செய்தது. அவள் இப்பொழுது யமுனைக்கு அக்கரையிலிருக்கும் நந்தகோபர்

மனைவியாகிய யசோதைக்குப் பெண்ணாகப் பிறந்திருக்கிறாள். நீங்கள் காலதாமதம் செய்யாமல் சிசுரூபமாகும் என்னை எடுத்துக்கொண்டு நந்தகோபரது வீட்டிற்குச்சென்று அங்கு விட்டுவிட்டு அங்கிருக்கும் பெண் சிசுவை இங்கு கொண்டுவந்து விடுங்கள். உங்களுக்கு எல்லாம் அநுகூலமாக இருக்கும். தைரியமாக இருங்கள் !' என்று கூறிச் சிசுவானார். உடனே தமது குழந்தை பகவான் என்ற ஞாபகம் இவர்கள் இருவருக்கும் இல்லாமலே போய்விட்டது.

**வினா 10.**—பின்னர் வஸுதேவர் என்ன செய்தார் ?

விடை.—வஸுதேவருக்குப் பகவான் இட்ட கட்டளை மாத்திரம் ஞாபகம் இருக்க, எங்கே கம்ஸனுக்குத் தெரிந்துவிடுமோ என்ற பயத்தோடு குழந்தையை எடுத்துக்கொண்டு சிறைச்சாலைக் கதவைத் தொட்டார். கதவு திறந்து விட்டது ! வெளியில் வந்தார் ! காவலாளர்கள் எல்லோரும் மெய்ம்மறந்து உறங்குவதைக் கண்டார் ! மிகுந்த பயத்துடன் வீதிக்கு வந்தார்! ஊரே அடங்கிக்கிடந்தது ! அப்பொழுது மழைபெய்து கொண்டிருந்தது. சிறு இடிகள் உறுமின. எங்கே கம்ஸன் எழுந்துவிடுவானோ என்று வஸுதேவர் மனம் பகீர் என்றது ! ஆதிசேஷன் வஸுதேவரையும் குழந்தையையும் மழையில் நனையாது மறைத்தார். வஸுதேவர் யமுனைக்கரை வந்தார். யமுனைக்கரை புரண்டோடியது! அப்படி இருந்தும் வஸுதேவருக்கு யமுனை வழி விட்டாள். நந்தகோபர் வீடுசென்றார். அங்கும் எல்லோரும் உறங்கிக்கொண்டிருந்தனர். ஒருவருக்கும் தெரியாது யசோதை பிரஸவித்த அறைக்குள் சென்றார். பகவானைக் கீழே விட்டார். அங்கிருந்த பெண்ணை எடுத்துக்

கொண்டு தமது சிறைச்சாலை வந்து கதவைச் சாத்தினார். பூட்டு தானே விழுந்து விட்டது. விலங்கை எடுத்து தேவகீ காலில் மாட்டித் தானும் மாட்டிக் கொண்டார். விலங்கு பூட்டிக் கொண்டது.

வி 11.—நந்தகோபர் யார்? வஸுதேவரிடம் முதலில் பிறந்து பின் அவரிடம் பகவான் வலுவில் வந்து சேருவானேன்? வஸுதேவர் செய்தகாரியம் ஏன் அவர்களுக்குத் தெரியாமல் போயிற்று?

விடை.—மதுரைக்கு அருகாமையில் யமுனைக்கு அக்கரையில் இருந்த கோகுலம் என்ற இடையர் சேரியின் அதிபதி நந்தகோபர். வஸுதேவர் பூர்வ ஜன்மங்களில் செய்த தபஸுக்காக அவர் வேண்டுகோளின்படி பகவான் அவருக்குப் பிள்ளையாகப் பிறந்தார். நந்தகோபர் பூர்வ ஜன்மத்தில் பகவானைக் குழந்தையாக அடைந்து சீராட்டி ஆனந்திக்க வேண்டும் என்று தபஸு செய்தமையால் அவரைத் திருப்தி செய்யப் பகவான் தமது பால்யத்தில் நந்தகோபர் வீட்டில் வளர்ந்து வந்தார். வஸுதேவர் குழந்தையை மாற்றிவிட்டு வந்தது நந்தகோபர் முதலியோர்க்குத் தெரியவே தெரியாது. யோகமாயை பிறந்ததும் எல்லோருக்கும் தூக்க மயக்கம் உண்டாகிவிட, யசோதைக்குக் குழந்தைப் பிறந்தது எல்லோருக்கும் தெரியுமே ஒழிய, குழந்தை ஆணோ பெண்ணோ என்பது ஒருவருக்கும் தெரியாது. இதனால் வஸுதேவர் செய்த காரியம் ஒருவருக்கும் தெரியாமலே போய்விட்டது.

வி 12.—இவ்வாறு வஸுதேவர் யோகமாயையைக் கொண்டு வந்து சிறைச்சாலை புகுந்ததும் மேல் என்ன நடந்தது?

விடை.—விலங்குகள் எல்லாம் முன்போல மாட்டிக் கொண்டதும் இப்பெண் குழந்தை அழத் தொடங்கியது. இதைக்கேட்டு காவலாளர்கள் ஓடோடியும் வந்து கம்ஸனுக்குத் தெரிவித்தனர். கிருஷ்ணன் பிறந்து விட்டதாக ஸ்வப்னம் கண்டு கொண்டிருந்த அவன் அலறிக் கொண்டு எழுந்து சிறைச்சாலையுட் பிரவேசித்துப் பார்த்தான். அப்பொழுது தேவகீ தேவி தன் பெண்ணைக் கொல்லக் கூடாதென்று எவ்வளவோ கம்ஸனிடம் மன்றாடினாள். கம்ஸன் அவளை அதட்டிவிட்டுச் சிசுவைப் பிடுங்கிக்கொண்டுபோய் விட்டான்.

வி 13.—சிசுவைக் கம்ஸன் என்ன செய்தான்? மேல் என்ன அற்புதம் நடந்தது?

விடை—கம்ஸன் அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு மிகுந்த கோபாவேசத்துடன் அதை ஓர் பாறையில் அடிக்க முயன்றான். அப்பொழுது அந்தக் குழந்தை அவன் கையைவிட்டு நழுவி ஓர் தேவி உருக்கொண்டு அநேக கைகளோடு தேஜோரூபியாக ஆகாயத்தில் கிளம்பி நின்றுகொண்டு கம்ஸனை நோக்கி, 'அடே பாபி! என்னைக் கொல்வதால் உனக்கு என்னலாபம்? உனக்கு யமனாக இருப்பவன் வேறோர் இடத்தில் வளருகிறான்! வீணாகக் குழந்தைகளையெல்லாம் வருத்தாதே' என்று எச்சரிக்கை செய்துவிட்டு உலகில் அவள் பரம்பொருளது உத்தரவுபடி துர்க்கை முதலிய பல நாமங்களோடு அமர்ந்து விட்டாள்.

வி 14.—இதைக் கண்ட கம்ஸன் என்ன செய்தான்? அவனை யார் பின்னர் எவ்வாறு மாற்றியது?

விடை.—அன்றிரவு யோகமாயையினது சொற்களைக் கேட்டதும் கம்ஸனுக்குப் பச்சாத்தாபம் வந்து விட்டது.

உடனே சிறைச்சாலை வந்து வஸுதேவரையும் தேவகியையும் விடுவித்தான். அவர்கள் காலில் விழுந்து தான் செய்த அபராதங்களுக்கு மன்னிக்கவேண்டும் என்று பலவாறாகப் புலம்பினான். அப்பொழுது வஸுதேவரும் தேவகியும் கம்ஸனை ஸமாதானப் படுத்தினர். அவன், அவர்கள் அனுமதியின் பேரில் தனது இருப்பிடம் சென்றான். காலையில் எழுந்ததும் கம்ஸன் புத்தி மாறி விட்டது! யோகமாயை கூறியதை அவன் தன் மந்திரிகளிடம் கூற அவர்கள் புத்திமதிப்படி பரம்பொருள் ரூபமாகிய, பிராம்மணர், யாகம், பசு முதலியவைகளை அழித்துத் தனது பயமனை அடக்கிவிட முயற்சித்தான்.

**வி ஞ 15.**—இப்படி இருக்கையில் நந்தகோபரது வீட்டில் என்ன நடந்தது ?

**விடை.**—மறுநாட்காலையில் விழித்ததும் நந்தகோபருக்குப் பிள்ளை பிறந்திருக்கும் ஸமாசாரம் கோகுலம் முழுதும் பரவியது. நந்தகோபர் மிகுந்த ஸந்தோஷத்தால் அநேகவித தானங்களைச் செய்தார். கோபாலர்கள் எல்லோரும் நந்தகோபருக்குப் பிறந்த பிள்ளையைத் தமது பிள்ளையாகப் பாவித்து அந்த நாள்களைத் திருவிழாவாகக் கொண்டாடினர். கோபாலர்கள் ஸந்தோஷத்தால் ஒருவரை ஒருவர் வெண்ணெய் முதலியவைகளால் அடித்துக்கொண்டு விளையாடினர். பகவான் கோகுலம் வந்தது முதல் அது செழித்து ஓங்கத் தொடங்கி விட்டது.

**வி ஞ 16.**—நந்தகோபர் புத்திரோத்ஸவத்தைக் கொண்டாடி முடித்ததும் என்ன செய்தார்? அப்பொழுது என்ன நடந்தது?

**விடை.**—இந்த ஸந்தோஷ ஸமயத்தில் தனக்கு மேலே இருக்கும்படியான கம்ஸனுக்கு நந்தகோபர் கப்பங் கட்ட மதுரை வந்தார். இதைக் கேள்வியுற்ற வஸுதேவர் நந்தகோபர் இருந்த கிருஹம் வந்து அவரது யோக க்ஷேமங்களை விசாரித்தார். அப்பொழுது நந்தர் மிகுந்த துக்கத்துடன் வஸுதேவருக்குக் குழந்தைகளை இழக்கும்படியாக வந்த கஷ்டத்தை விசாரித்தார். வஸுதேவர் முடிவில் 'நீர் இங்கு அதிக நாள் நிற்பது தகாது. இனிமேல்தான் கோகுலத்திற்கு ஆபத்து அடிக்கடி வரும். நீர் அங்கே இருந்தால்தான் மற்றவர்களுக்குத் தைரியமாக இருக்கும்,' என்று எச்சரிக்கை செய்ய, நந்தகோபர் 'வஸுதேவர் சொல்வது பொய்யாக இராது. நமக்கு என்ன ஆபத்து வரப் போகிறதோ தெரியவில்லை! எல்லாவற்றிலும் பகவானே நமக்கு ஸஹாயம்' என்று எண்ணமிட்டுக்கொண்டு முடிவில் பகவான்மேல் பாரத்தைப்போட்டுவிட்டுக் கோகுலம் நோக்கிப் புறப்பட்டார்.

**வினா 17.**—இவர்கள் கோகுலம் வந்து சேருவதற்குள் என்ன தடபுடல் ஆகி இருந்தது?

**விடை.**—இவர்கள் கோகுலத்திற்கு அருகாமையில் வருங் காலத்தில் பத்து மைல் நீளமுள்ள பெரிய ராக்ஷஸியினது பிணம் கிடப்பதைக் கண்டு, வஸுதேவர் ஏது திரிகாலஞானிபோல இருக்கிறதே! அவர் யோகாப்பியாஸத்தில் தேர்ந்து வருகிறாற்போல இருக்கிறது. இங்கு நடந்திருப்பதை முன்னரே அறிந்து சொல்லிவிட்டாரே!' என்று வியந்துகொண்டு மிகுந்த பரபரப்புடன் தன் வீடு வந்து தனது குழந்தையை எடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு உச்சி முகர்ந்து

ஆனந்தித்துவிட்டு நடந்த விஷயங்களை யசோதை முதலியவர்களிடம் இருந்து தெரிந்து கொண்டார்.

**வினா 18.**—இந்த ராக்ஷஸி யார்? இவள் கோகுலத்தில் இறந்து விழக் காரணம் என்ன?

**விடை.**—இவள்தான் பூதனை. இவள் கம்ஸன் உத்தரவின் பேரில் கிராமங்கள் தோறும் சென்று விஷம்நிறைந்த தனது பாலைச் சிறுகுழந்தைகளுக்குக் கொடுத்து அவைகளைக் கொன்றுவந்தாள். இப்படி வருகையில் ஓர் நாள் இரவு கோகுலத்தில் வந்திறங்கி அழகிய பெண் உருக்கொண்டு பகவான், படுக்கையண்டையில் வந்து அவரை எடுத்து பால் கொடுத்தாள். இவள் கெட்ட எண்ணத்தை அறிந்த பகவான் அவள் பாலோடு ஒரே மூச்சில் அவள் உயிரையும் சேர்த்து உறிஞ்சிவிட்டார். அப்பொழுது அவள் 'இதென்ன! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதே!' என்று பயந்து கூக்குரலிட்டாள். பகவான் ஒரே மூச்சில் பூதனை இறந்து விழும்படி செய்தார். அப்பொழுது பூதனையின்பிணத்தின் மேல் பகவான் விளையாடிக்கொண்டிருந்தார்.

**வினா 19.**—பூதனைக் கூக்குரல் இட்டதும் கோகுலத்தில் என்ன நடந்தது?

**விடை.**—கோரமான பெரிய தேஹத்துடன் கூக்குரலிட்டுக் கொண்டு உயிர் மாய்ந்து விழுந்த பூதனையின்பேரில் பகவான் விளையாடிக்கொண்டிருப்பதை ஓடோடியும் வந்து கண்ட யசோதை முதலியோர் மிகுந்த பரப்ரப்புடன் குழந்தையை வாரி எடுத்துச் சென்று, பயத்தால் அதற்கு ஏற்படக்கூடும் கெடுதிகளை நிவர்த்திக்க வேண்டிய ரக்ஷாபந்தனங்கள் செய்து பகவானைத்

தூங்கப் பண்ணிஞர்கள். மறுநாட்காலையில் நந்தகோபர் வந்து நடந்த காரியத்தைத் தெரிந்துகொண்டார்.

விஞ **20**.—பூதனையின் பிணத்தை எவ்வாறு கோபாலர்கள் அடக்கம் செய்தனர்? அடக்கம் செய்யுங்கால் என்ன அற்புதம் நேர்ந்தது?

விடை.—கோபாலர்கள் பூதனையின் பிணத்தைக் கோடாலிகளால் துண்டம் துண்டமாக வெட்டிச் சேர்த்து காட்டு விறகுகளைச் சேர்த்திட்டுத் தீ மூட்டினர். அப்பொழுது பூதனையின் பிணத்திலிருந்து உண்டான புகை, நல்ல சந்தனக் கட்டை முதலிய வாஸனைக்கட்டைகளது புகைகளைப்போல வாஸனையுடன் இருந்தது. இதனுலே எல்லோருக்கும் 'பூதனை பாபம் நீங்கிக் கிருதார்த்தமாகிப் பரமபதம் பெற்ருள் என்பது விளங்கிற்று. எல்லோரும் இந்த ஆச்சரியத்தைக் கண்டு ஆனந்தித்து வெகுகாலம் கோகுலத்தில் இதைக் கதையாகச் சொல்லிவந்தனர்.

விஞ **21**.—பூதனை பரமபதம் அடைந்ததிலிருந்து நாம் என்ன தெரிந்துகொள்ள வேண்டியது?

விடை.—பகவானைக் கெட்ட எண்ணத்தோடு எடுத்துப் பால்கொடுத்தபோதிலும் அவரது பாதார விந்தங்களால் உதைக்கப்பெற்று இறக்கும்படி நேரிட்டதால் பூதனை புனிதையாஞள் என்ருல், பகவானை மிகுந்த அன்புடன் பால்கொடுத்து வளர்த்த யசோதை முதலியோருக்கும், அவருக்குப் பால்கொடுத்த கோபாலர்களுக்கும் பசுக்களுக்கும் பரமபதம் கிடைத்திருக்கும் என்று சொல்லவும் வேண்டுமா? ஆதலால் பகவான் கெட்டவர்களையும் நிர்க்கதியாக விட்டுவிடுவதில்லை

அவர் நிஜபக்தி செய்தவர்களுக்கு எளிதில் பரமபதம் அளிக்கும் தன்மை வாய்ந்தவர் என்று அறிந்து நாமும் அவர் கிருபையை அடைய யோக்கியர்களாக முயல வேண்டும்.

வி**ை 22.**—பூதனா ஸம்ஹாரம் ஆனதும் பகவான் செய்த லீலா விசேஷம் என்ன?

விடை.—முதல் ஜன்ம நக்ஷத்திரத்தன்று நந்தகோபர் வீட்டில் உள்ளோர் எல்லோரும் குழந்தைக்கு வேண்டியவைகள் யாவும் செய்துமுடித்து அதை ஓர் இடத்தில் விட்டுவிட, யசோதை வீட்டிற்கு வந்தவர்களைத் தகுந்த மரியாதைசெய்து அனுப்புவித்துக் கொண்டிருந்தாள். இப்படியிருக்கையில் குழந்தைக்குப் பால் குடிக்க வேண்டும் என்ற ஞாபகம் வர அது அழத் தொடங்கியது. அப்பொழுது அதன் அருகாமையில் இருந்த சிறு வண்டி அதன் அருகே நகர்ந்துவர அதை அது தன் காலால் உதைத்தது. உடனே அது கவிழ்ந்து இருசு முதலியவைகள் முறிந்து போக, மிகுந்த சப்தம் உண்டாகியது. இதைக்கேட்டுத் திடுக்கிட்டு யசோதை முதலியோர் ஓடிவந்து அழும் குழந்தையை எடுத்துச் சீராட்டி வண்டி குழந்தையின் கால் பட்டுச் சாய்ந்தது என்பதை உண்மை என நம்பாது, கிருஷ்ணனுக்கு வேண்டிய ரக்ஷாபந்தனங்களைச் செய்து மனம் ஆறினர்.

வி**ை 23.**—பகவானுக்கு யாது காரணத்தால் எவ்வாறு ஆபத்து வந்தது? அதை அவர் எவ்வாறு நிவர்த்தித்தார்?

விடை.—கம்ஸனது ஏவலால் பகவானைக் கொல்ல திருணாவர்த்தன் என்ற அஸுரன் கோகுலம் வந்தான். அவன்

வருவதை அறிந்த பகவான் திடீரென்று யசோதை மடியிலிருந்தபடி அதிக பாரமாகத் தமது தேகத்தைச் செய்து கொண்டார். உடனே யசோதை பாரம் தாங்க முடியாது பகவானைக் கீழே விட்டாள். தருணம் பார்த்திருந்த திருணுவர்த்தன் புயல்காற்று ரூபமாகி குழந்தையை எடுத்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பினுன். அருகில் இருந்தவர் கண்களில் எல்லாம் தூசியை வாரி அடித்துத் தான் திருடியது கோகுலத்தவருக்குத் தெரியாதவண்ணம் செய்து விட்டான். யசோதை குழந்தையைக் காணுமல் பரிதவித்தாள். எல்லோரும் அவளோடு துக்கித்தனர். இப்படி இருக்கையில் ஆகாயத்தில் சென்ற பகவான் மிகுந்த உயரம்போமளவும் சும்மா இருந்துவிட்டுப் பின்பு தன் கனத்தைத் திருணுவர்த்தன்மேல் போட்டார். குழந்தை மலைபோல் திடீரென்று கனப்பதைக் கண்டு திருணுவர்த்தன் தனக்கு ஏதோ ஒரு ஆபத்து வந்ததென்று பயந்தான். இதற்குள் பகவான் அவன் கழுத்தை இறுக்கிக் கட்டிக் கொள்ள அதனுல் அவரை விடவும் முடியவில்லை! மேலே போகவும் முடியவில்லை! கண் பிதுங்க அவன் இறந்து பெரிய பாறை போல கோகுலத்துள் வந்து விழுந்தான். அவன் மார்பில் குழந்தை விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்ட கோகுலத்தவர், குழந்தை பிழைத்த அற்புதத்தைக் கண்டு ஆச்சரியம் அடைந்தனர். நந்தகோபர் மாத்திரம் தமக்கு வஸுதேவர் முன்னமே அறிந்து கூறியதை எண்ணி வியந்து கொண்டிருந்தார்.

வி 24.—பகவான் யசோதைக்கு எவ்வாறு தமது சிறப்பைக் காட்டினுர்?

விடை.—ஒருநாள் பகவானுக்கு யசோதை பால் கொடுத்துக் கொண்டிருந்தாள். பகவான் திருப்தியடைந்து பால் குடிப்பதை நிறுத்திக் கொட்டாவி விட்டார். அவர் வாயுள் அண்டபிண்ட சராசரங்கள் எல்லாவற்றையும் யசோதைகண்டு மிகுந்த ஆச்சரியத்தை அடைந்து பிரமித்து அசைவற்று நின்று விட்டாள். அந்தக்காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருந்ததால் அவள் கண்ணை மூடிக்கொண்டாள். குழந்தையும் வாயை மூடிக்கொள்ள அந்தக்காட்சி மறைந்து விட்டது. குழந்தை அற்புதக் குழந்தை என்பதை யசோதையும் மறந்து விட்டாள்.

வி **25**.—இப்படி இருக்கையில் யார்வந்து குழந்தை விஷயமாக என்ன கர்மத்தை எவ்வாறு நடத்தி வைத்தது? ஏன்?

விடை.—இந்த ஸமயத்தில் வஸுதேவரால் அனுப்பப்பட்டு யாதவர்கள் புரோஹிதராகிய கார்கருஷி கோகுலம் வந்தார். அவர் மிகுந்த ரஹஸ்யமாக, நந்தகோபர் பிள்ளைக்கும் முறையே கிருஷ்ணன், ராமன் (பலராமன்) என்று பெயரிட்டு வேண்டிய சடங்குகளை நந்தகோபரது வேண்டுகோளின் மேல் நடத்தினார். யாதவகுல புரோகிதர் இக்குழந்தைகளுக்கு நாமகரணம் முதலிய சடங்குகளை நடத்தினார் என்ற ஸங்கதி வெளியானால் கம்ஸனுக்கு இக்குழந்தைகள் விஷயத்தில் ஸந்தேகம் உண்டாக எங்கே இவைகளுக்குப் பெரிய ஆபத்து வந்து விடுமோ என்று பயந்து, கார்கர் இந்தச் சடங்குகளை இவ்வாறு மிகுந்த ரகஸியமாக நடத்தினார். பின்பு குழந்தைகளை எந்த அஸுரர்களாலும் கொல்ல முடியாது. ஆகிலும் அவர்களை மிகுந்த ஜாக்ரதையுடன்

காப்பாற்ற வேண்டும் என்று சொல்லிவிட்டுக் கார்கர் தமது இருப்பிடம் சென்றார்.

விஞ **26.**—இதன்பின்பு குழந்தைகள் என்ன செய்தன?

விடை.—இக்குழந்தைகளுக்குத் தவழும் பருவம் வரவே, தமது ஓட்டம் முதலியவைகளால் கோகுலத்திலுள்ளவர்கள் எல்லோருக்கும் மிகுந்த ஸந்தோஷத்தை உண்டாக்கின. பின்னர் நடக்கும் சக்தி வந்ததும், கன்றுகுட்டிகளை அவிழ்த்துவிட்டுப் பசுமாடுகளை ஊட்டும்படி செய்வதும், நல்ல வெண்ணெய்களைத் திருடி குரங்குகள் உண்ணும்படி கட்டாயப் படுத்துவதும், (புத்திமனதிற்கு ஞானம் புகட்டல்) ஒன்றும் அகப்படாத விடங்களில் இருக்கும் குழந்தைகளை அழவிட்டுவிட்டு ஓடிவிடுவதும், எட்டாத உயரத்திலிருக்கும் உரிகளை உரல் முதலியவைகளின் ஸஹாயத்தால் தந்திரமாக எட்டித் திருடுவதும், கண்டவிடங்களில் அசுத்தப் படுத்துவதும், ஒன்றும் அறியாததுபோல யசோதை அருகில் வந்து நின்று விடுவதும் ஆகிய பால்ய சேஷ்டைகளைத் தங்குதடையின்றி இவர்கள் செய்து வந்தனர். யார் வந்து என்ன சொன்னாலும் யசோதை தன் பிள்ளைகளின்மேலிருந்த அன்பால் அவைகளைத் தண்டியாது விட்டாள்.

விஞ **27.**—இப்படி இருக்கையில் பகவான் மறுபடியும் யசோதைக்குத் தமது சிறப்பை எவ்வாருகக் காட்டி மறைந்தார்?

விடை.—இவ்வாறு சிறுவர்கள் விளையாடிக்கொண்டு வருகையில் ஒருநாள் பலராமர் ஓடிவந்து, 'தம்பி மண் தின்றுவிட்டான்!' என்று கோள்சொல்லி விட்டார்.



வாய்திறந்து காட்டிய விச்வரூப தரிசனம்.

யசோதை மிகுந்த பரபரப்புடன் வந்து 'கிருஷ்ணா ! ஏன் மண் தின்ருய் ? பார் இதோ உன்னை என்ன செய்யப் போகிறேன் !' என்று அதட்டிக் கேட்க, 'நான் தின்னவே இல்லை' என்று ஸாதுபோல் மறுமொழி கூற, அவள், கையில் கோலை எடுத்துப் பயமுறுத்திக் கொண்டு "வாயைத்திற பார்ப்போம்' என்ருள். தயங்காது ஒன்றும் அறியாதவர் போல் பகவான் தமது வாயைத் திறந்தார் ! மண்ணிருக்கிறதோ என்று பார்க்கச்சென்ற யசோதைக்குப் பிரபஞ்சத்தி லிருக்கும் மண் முதலியன எல்லாம் அந்தவாயுள் தென்பட்டன ! முன்னொருதரம் கொட்டாவி விடுங்கால் கண்ட காட்சியையே மறுபடியும் கண்டாள் ! ஆச்சரிய மடைந்து தூண்போல் நின்று விட்டாள் ! தன் பிள்ளை அற்புதப் பிள்ளை என எண்ணமிட்டாள் ! இவ்வாறிருக்கையில் திடீரென்று வாயை மூடியது குழந்தை. மறைந்தது காட்சி. அத்துடன் மறைந்துபோய் விட்டது குழந்தையின் சிறப்பு எல்லாம், முன்போல தன் குழந்தை என்ற அபிமானம் வந்து மூடிக்கொண்டது.

வி'ு **28**.—பகவானது சேஷ்டைகளை யசோதை எவ்வாறு தெரிந்துகொள்ளும்படி நேரிட்டது ?

விடை.—ஒருநாள் யசோதை தயிர்கடைய உட்கார்ந்தாள். குழந்தை பால்குடிக்க மிகுந்த ஆவலாய் வந்தது. அதற்குப் பாலைக்கொடுத்துக்கொண்டு தயிர் கடைந்துகொண்டிருந்தாள். இப்படி இருக்கையில் அடுப்பில் காயவைத்திருந்த பால் பொங்கத் தொடங்கியது. பார்த்தாள் யசோதை. திருப்தி அடையாத குழந்தையைக் கீழே இழுத்து விட்டுவிட்டுப் பாலை இறக்கச் சென்ருள். குழந்தை கோபம் மூள, அது தயிர்ப்

பானையை உடைத்துவிட்டு அதிலிருந்த வெண்ணெயைத் தூக்கிக்கொண்டு வீட்டில் ஓர் மூலைக்குப்போய் அங்குத் தனிமையாகத் தின்னத் தொடங்கியது. யசோதை திரும்பிவந்து பார்க்கிறாள். குழந்தையைக் காணோம். தயிர்ப்பானை உடைந்து கிடக்கிறது. குழந்தையைத் தேடிக் கண்டுபிடித்தாள்.

வின 29.—அப்பொழுது யசோதை பகவானுக்கு என்ன தண்டனை விதித்தாள்? அப்பொழுது என்ன வேடிக்கை நடந்தது?

விடை.—யசோதை கைப்பிடித்துக் கொண்டதும் பகவான் பயத்துடன் மிரள விழிக்கத் தொடங்கினார். அவரை அடிக்க யசோதைக்கு மனம் வரவில்லை. உடனே கயிறுகொண்டு வரச்சொல்லி அளவிடமுடியாத பரம்பொருளைக் கட்டத் தொடங்கினாள். எவ்வளவு கயிறு கொண்டு கட்டிப்பார்த்தும் இரண்டு விரக்கிடை குறைவாக எப்பொழுதும் இருந்தது. இவர்கள் படும் கஷ்டத்தையும் ஆச்சரியத்தையும் கண்டு பகவான் கருணையால் தமது தேகத்தைக் குறுக்கிக்கொண்டு அவர்கள் கட்டுக்கு உள்பட்டார். (இவ்வாறு தான் பகவான் பக்தர்கள் வசமாவது.) உடனே யசோதை பகவானை ஒரு கனமான உரலில் கட்டிவிட்டு வீட்டுவேலையைப் பார்க்கத் தொடங்கினாள்.

வின 30.—இதைச் சாக்கிட்டுப் பகவான் என்ன அற்புதத் தொழிலைச் செய்தார்?

விடை.—இப்படித் தம்மை ஒருவரும் கவனியாதிருந்ததைக் கண்டு குழந்தை விளையாட்டாக அந்த உரலை இழுத்துக்கொண்டு அருகாமையிலிருந்த இரட்டை விருக்ஷத்

திற்கு இடையில் சென்றது. அங்குப்போனதும் குழந்தை மரத்தின் இடுக்குவழியாகப் போய்விட்டது பின்னேவந்த உரல் குறுக்கிட்டுவிட குழந்தை பலமாக உரலை இழுத்தது. இந்த வேகம் தாங்காது மடமட வென்று அவ்விருவிருக்ஷங்களும் முறிந்துவிழ அதிலிருந்து இரண்டு குஹ்யகர்கள் வெளிவந்து குழந்தை ரூபமான பகவானை நன்றாய்த் துதித்து 'எங்களுக்கு எப்பொழுதும் கர்வம் முதலியன வரப்படாது. எங்களுக்குத் தங்கள் ஞாபகம் மாறாதிருக்கவேண்டும்' என்ற வரங்களைக் கேட்டுப் பெற்றுக்கொண்டு தமது தகப்பனாராகிய குபேரனிடம் சென்றனர். யசோதை கட்டியதை முன்னிட்டுப் பகவான் இரண்டு குஹ்யகர்களை இவ்வாறு காத்தருளினார்.

**வி.** **31**.—இந்தக் குஹ்யகர்கள் யார்? இவர்கள் மரமாக கோகுலத்தில் வளர்ந்து வருவானேன்?

**விடை.**—இவர்கள் குபேரன் பிள்ளைகளாகிய நளகூபர மணிக்கிரீவர்கள். இவர்கள் ஒருநாள் கங்கையில் தமது பெண்களுடன் ஜலக்ரீடை செய்ய இறங்கிவிட்டனர். இப்படி இருக்கையில் அம்மார்க்கமாக நாரத பகவான் வரும்படி நேரிட அவரைக் கண்டு பெண்டுகள் வெட்கித் தமது ஆடை முதலியவற்றை அணிந்துகொண்டனர். குபேரன் பிள்ளைகள் மாத்திரம் ஸுகத்தில் மூழ்கிய விசேஷத்தால் தாம் இருந்தபடியே நின்றுவிட்டனர். சிற்றின்பங்களில் மூழ்கி மயங்கிக்கிடக்கும் இவர்கள் நற்கதி அடைவதற்காக நாரதர் இவர்களை மரமாகி விடும்படி சாபம் கொடுத்தார். உடனே இவர்களுக்கு ஸுகவெறி நீங்க, இவர்கள் நாரதருக்கு வந்தனை வழிபாடுகள் செய்தனர். அப்பொழுது அவர் 'நீங்கள்

கோகுலத்தில் நந்தகோபர் வீட்டின் பின்புறத்தில் மரங்களாக வளருங்கள். பகவான் கிருஷ்ணுவதாரத்தில் குழந்தையாகி விளையாடுங்கால் உங்கள் சாபத்தைத் தீர்ப்பார்!' என்று உத்தரவுசெய்து மறைந்தார். அதுமுதல் இவர்கள் கோகுலத்தில் இரட்டை மரங்களாக வளர்ந்தார்கள்.

வினு **32.**—மரம் முறிந்து விழுந்ததும் கோகுலத்தில் என்ன நடந்தது?

விடை.—இடி முழக்கம்போல சப்தத்தை உண்டாக்கிக் கொண்டு இம்மரங்கள் விழுந்ததும் ஓடிவந்து யசோதை முதலியோர் பார்க்கப் பகவானைக் காணுததால் இம்மரத்தில் அகப்பட்டுக் கொண்டாரோ? இம்மரம் விழக் காரணம் என்ன? என்று இவ்விதமான சங்கைகளுக்கு ஆளாகி வருந்தினர். அங்கிருந்த கோபாலர்கள் பகவான் உரலை இழுக்க, மரம் முறிந்ததைத் தாம் கண்டதாகவும், அப்பொழுது மரத்திலிருந்து இரண்டு புருஷர்கள் தோன்றி மறைந்தனர் என்பதாகவும் சொல்ல, அவர்களை ஒருவரும் நம்பவில்லை. ஆகவே முடிவில் இதுவும் கம்ஸனுல் ஏவப்பட்ட ராக்ஷஸர்கள் காரியம் எனத் தீர்மானித்துப் பகவானுக்கு ரக்ஷா பந்தனம் முதலியன செய்தார்கள். இதன்பின் கோபாலர்களுள் வயது முதிர்ந்தவனுன உபநந்தன் எழுந்து, 'கோகுலத்தில் இம்மாதிரி பூதனைமுதல் மரம் முறிந்து விழுந்தது வரையில் நடந்துள்ள காரியங்களை நோக்கில் நாம் இங்கிருப்பது தகுதியல்ல. நமது குழந்தைகளுக்கு அபாயம்வரும். ஆதலால் எல்லோரும் கோகுலம் விட்டு அருகாமையிலுள்ள பிருந்தாவனம் போவோம்!' என அதுவே ஸரி என்று நல்ல நாழிகையில் கோபாலர்

கள் எல்லோரும் கோகுலம்விட்டுப்போய் பிருந்தா வனம் புகுந்தனர்.

வி 33.—பிருந்தாவனம் வந்ததும் குழந்தைகள் எவ்வாறு வளர்ந்து வந்தனர்?

விடை.—வயது வரும் வரையில் வீட்டின் உள்ளே இருந்து எல்லோருக்கும் ஸந்தோஷம் உண்டாகும்படியான விளையாட்டுக்களை விளையாடிக்கொண்டிருந்து, கிருஷ்ண ராமர்கள் தமக்கு ஓடியாடும் சக்திவந்ததும் கோபாலர்களுடன் சேர்ந்து பசுமாடுகளை மேய்க்கத் தலைப்பட்டனர்.

வி 34—இவ்வாறு பசுமாடுகளை மேய்க்கும் நாளில் பகவானுக்கு என்னென்ன ஆபத்துகள் வந்தன? அவர் இவைகளை எவ்வாறு தீர்த்தார்?

விடை.—அவர்கள் ஒருநாள் மாடு மேய்க்கப் போய்க் கொண்டிருந்தனர். அப்பொழுது இவர்களைக் கொல்ல கம்ஸன் ஏவலால் வந்த ராக்ஷஸன் ஒருவன் கன்று உருவம்கொண்டு மாட்டு மந்தையோடு சேர்ந்துகொண்டான். இதை அறிந்த கிருஷ்ணன் இந்த ராக்ஷஸக் கன்றைப் பலராமருக்குக் காட்டிவிட்டார். அவர்கள் ஒரு தோப்பின் வழியாகப் போகவேண்டிவந்தது. அப்பொழுது நன்ருகப் பழுத்த பழங்கள் நிறைந்திருந்த விளாமரத்தைப் பகவான் கண்டு அதன்மேல் புதிய கன்றைப்பிடித்துச் சுழற்றி எறிந்தார். விளா மரம் முறிந்து கீழேவிழ ராக்ஷஸனும் இறந்தான். கோபாலர்களும் மிகுந்த ஆவலுடன் விளாம்பழங்களை உண்டனர். தேவர்கள் பூமாரி பொழிந்தனர்.

15

இப்படி இருக்கையில் ஒருநாள் கோபாலர்கள் தமது மாடுகளுக்குத் தண்ணீர்காட்ட ஒரு குளக்கரை சென்றனர். அங்கு மலைபோன்ற பெரிய கொக்கு உட்கார்ந்திருப்பதை அவர்கள் கண்டார்கள். இந்த உருவோடு கம்ஸன் ஸ்நேகிதனான பகாஸுரன் கிருஷ்ண ராமர்களைக் கொல்ல அங்குக் காத்திருந்தான்: கிருஷ்ணனைக் கண்டதும் அவன் அவரை வந்து விழுங்கிவிட்டான். இதைக்கண்ட ராமர் கோபாலர் முதலியோர் மூச்சைபோய் விழுந்துவிட்டனர். உள்ளே சென்ற பகவான் நெருப்புப்போன்ற அவன் தொண்டையைச் சுட அவன் அவரைக் கக்கிவிட்டான்! கிருஷ்ணனுக்கு யாதொரு கஷ்டமும் இல்லாததைக் கண்டு, அவ்ன் பகவானைத் தனது மூக்கால் குத்திக் கொலலவந்தான். அவன் மூக்கைப் பகவான் விளையாட்டாகப் பிளந்து கொன்றார். இந்த ஸங்கதிகளைக் கேள்விப்பட்ட பெரிய் கோபாலர்கள் எல்லோரும், இக் குழந்தையை எந்த அஸுரனாலும் பிடிக்கமுடியாது' என்று கார்க்கர் கூறியது பலித்துவருகிறதே என்று ஆனந்தித்தனர்.

வினா 35.—இப்படி இருக்கையில் பகவான் என்ன விளையாட்டு விளையாடினார்? அப்பொழுது வந்த ஆபத்தை அவர் எவ்வாறு நீக்கினார்?

விடை.—காட்டில் சென்று, காலையில் புஜித்து வேடிக்கையாக இருக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் பகவானும் மற்றையோரும் கட்டுசோறு தயார் செய்துகொள்ள, பகவான் தமது வேணுவை (புல்லாங்குழலை) கையில் எடுத்துக்கொண்டு புறப்பட்டார். மாடுகளை ஓட்டிக்கொண்டு காடு சென்றதும், பகவான் அவைகளை

மேய விட்டுவிட்டுத் தாம் கோபாலர்களோடு போஜனம் செய்யத் தொடங்கினார். சிலர் ஓடிக்கொண்டும், சிலர் ஓட சிலர் துரத்தியும், சிலர் பாடிக்கொண்டும், சிலர் அங்குலாவிய தென்றலோடு வாயைத் திறந்து கொண்டு மெய்ம்மறந்து ஓடிக்கொண்டும், சிலர் கோகிலத்தின் சப்தத்தில் ஈடுப்பட்டும், சிலர் பட்சிகளைத் துரத்தி ஓடிக்கொண்டும், சிலர் மரத்திலிருந்து தொங்கும் குரங்கின் வால்களை வெடுக்கென இழுத்து விளையாடிக்கொண்டும், வேடிக்கையாகப் போஜனம் செய்தனர். இப்படி இருக்கையில் கம்ஸனால் ஏவப்பட்டவனாயும், பூதனை, பகாஸுரன் முதலியோரது தம்பியாயும் உள்ள அகாஸுரன் மிகுந்த கோபத்துடன் அங்கு வந்து விட்டான். அவன் அப்பொழுது ஒருபெரிய பாம்பு உருவுடன் தனது மேல்வாயை ஆகாயத்திலும், கீழ் வாயைப் பூமி மட்டத்திலும வைத்துக்கொண்டு காத்திருந்தான். விளையாடிக்கொண்டு வந்த கோபாலர்கள், இந்தப் பாம்பின் வாயைக் குகை என்று எண்ணி அதன் உட்சென்றனர். பகவான் வரவை எதிர் பார்த்திருந்த அகாஸுரன், அவரும் உள்ளே சென்றதும் தன்வாயை மூடிக் கொண்டு விட்டான்! இதுவரையில் சும்மாவிருந்த பகவான் தமது உருவத்தை வரவரப் பெரிதாக்கிக் கொள்ள, அவனுக்குத் தொண்டை கிழிந்துவிடும் போலத்தோன்றியது. அகாஸுரன் அங்குமிங்கும் ஓடிப் பார்த்தான். ஒன்றும் பயன்பட வில்லை. அவன் நெஞ்சு அடைத்துப்போக கண்பிதுங்கி மண்டைபிளந்து அவன் இறந்தான். பினனர் பகவான் வெளிவந்து அசைவற்றுக்கிடந்த கோபாலர் முதலியோரை உயிர்த்து எழும்படி செய்தார். அகாஸுரன் பகவத் ஸம்பந்தத்தால் இறந்தது பற்றிப் பரமபதம் அடைந்தான்.

**விஞ 36.**—இந்த அகாஸுரவத விஷயமாக என்ன வேடிக்கை நடந்தது? ஏன்?

**விடை.**—இந்த அகாஸுரன் வதம், பகவானது 5-வது வயதில் நடந்தது. கோபாலர்கள் அடுத்தவருஷம் மிகுந்த ஆச்சர்யத்துடன் 'எங்களை கிருஷ்ணன் பெரிய பாம்பினிடமிருந்து இப்பொழுது தான் விடுவித்தார். என்ன அற்புதம்!' என்று ஆருவது வயதில் பகவான் இந்த லீலையைச் செய்ததாகத் தமது தாய் தந்தையர்களுக்குக்கூறி ஆனந்தித்தார்கள். அகாஸுரவதம் ஆனதும் இவர்கள் தமது வீடு செல்லாவண்ணம் ஒருதடை இவர்களுக்கு ஏற்பட இவர்கள் ஒருவருஷம் வீடுபோகாமலே இருந்து விட்டனர். வீடு சென்றதும் ஒருவருஷம் போய்விட்டது தெரியாது, இந்த விருத்தாந்தத்தை அப்பொழுது தான் நடந்ததாகச்சொல்லி மகிழ்ந்தனர்.

**விஞ 37.**—கோபாலர்களை வீடுபோக வொட்டாமல் செய்த தடை யாது? அது யாரால் எவ்வாறு உண்டாகப் பட்டது?

**விடை.**—அகாஸுரன்வதை முடிந்ததும் முன்போல கோபாலர்கள் வேடிக்கையாகப் புசிக்கத்தொடங்கினர். மாடுகளும் மேயத் தொடங்கின. பகவான் வேணு முதலியவற்றை வைத்துக்கொண்டு உண்ணும்அவஸரத்தை இவர்கள் கண்ணாரக் கண்டு களித்துக் கொண்டிருக்கையில் மாடுகள் மேய்ந்துகொண்டே மறைந்துவிட்டன. கோபாலர்கள் திரும்பிப்பார்த்து மாடுகளைக் காணாது தயங்கி நின்றனர். பகவான் மாடுகளைத் திருப்பிவருவதாக அவர்களுக்குத் தைரியம் சொல்லிவிட்டு மாடுகளைத் தேடப் புறப்பட்டார். மாடுகள் அவருக்கு

அகப்படவில்லை. திரும்பி முன் இருந்த இடம் வந்தார். கோபாலர்களையும் காணோம். *கொஞ்சகாலம் காடெங்குந்தேடி ஒன்றும் அகப்படாதுபோக, பகவான் தமது சக்தியால் இவ்வாறு மாடுகளும் கோபாலர்களும் மறைந்த காரணத்தைத் தெரிந்துகொண்டார். அகாஸுரவதத்தைக் கண்ணுற்ற பிரம்மா, பகவானது லீலையைக்கண்டு மகிழ்ந்துஇதைவிடச் சிறந்த லீலையைக் கண்டு ஆனந்திக்க மாடுகளையும் கோபாலர்களையும் ஒளித்து விட்டார். இதனால் கோபாலர்களுக்கும் மாடுகளுக்கும் ஒரு வருஷம் வீடுபோக முடியாமல் போய்விட்டது.

வினு **38.**—ஒருவருஷம் கோபாலர்கள் இவ்வாறு அடைபட்டுப் போய்விட இந்தவருஷம் நந்தகோபர், கோபாலர்களது தாய் தந்தையர் முதலியோருக்குத் தெரியாதிருக்கப் பகவான் என்ன ஏற்பாடு செய்தார்? அப்பொழுது எல்லாம் எவ்வாறு தொழிற்பட்டன?

விடை.—கோபாலர்கள் மாடுகள் முதலியன மறைந்ததின் காரணத்தை உணர்ந்த பகவான் தாமே அவர்களைப் போன்ற உருவங்களை எடுத்துக்கொண்டு அவரவர்கள் வீடுசென்று முன்போல இருந்துகொண்டு இந்த ஒரு வருஷத்தையும் கழித்துவந்தார். இதனால் தமது பிள்ளைகளும் மாடுகளும் மறைந்த ஸங்கதி பிருந்தாவனத்தி லிருந்தோருக்குத் தெரியவில்லை. பகவான் எங்கும் நிறைந்தவர் என்ற வேத வாக்கியத்தின் பொருள் வெளிவரும்படி பகவான் நடத்திய லீலையால் கோபாலர்கள் தாய் தந்தையர்களுக்கு முன்னிருந்ததைவிட இப்பொழுது தமது பிள்ளைகளிடம் அதிக அன்பும் மாடுகளிடம் மிகுந்த பற்றும் உண்டாயிற்று.

மாடுகள் முன்னைவிட அதிகமாகப் பால் கறந்தன. இதை அவர்கள் ஸஹஜமாக எண்ணி இருந்துவிட்டனர். பகவானே இவைகளாக இருந்தமையால், இவர்களுக்கும் இந்தமாறுதல் உண்டாயது. இந்த ஸமயத்தில் பிருந்தாவனவாஸிகளுக்குப் பகவானைத் தமது பிள்ளையாகச் சீராட்டும்படியான சிறப்பு ஏற்பட்டது.

**வின 39.**—இந்த லீலை எவ்வாறு முடிவுபெற்றது?

**விடை.**—பலராமருக்கு இந்த அன்பின் மிகுதி தெரியவர, பகவானை இதன் காரணத்தைச் சொல்லும்படி வினவி அவர் மூலமாக விஷயங்களைத் தெரிந்துகொண்டு வியந்தார். ஒருவருஷம் முடிந்ததும் ஒருநாள், பிர்ம்மா பிருந்தாவனம் வந்து பார்க்க, பகவான் கோபாலர்கள் முதலியவர்களோடு விளையாடிவருவதைக் கண்டு இவர்கள் நிஜ கோபாலர்களா அல்லவா என்ற ஸந்தேகம்வர தமது சக்தியால் அந்தர்முகமாகி பார்த்தார். எல்லோரும் பகவத்ரூபமாகவே அவருக்குத் தோன்ற, பகவான் ஒருவருஷம் செய்திருந்த லீலையின் வைபவம் வெளிவந்தது. பின்னர் வெளிவந்து முன்போல எல்லாவற்றையும் கண்டார். கோபாலர்கள் மாடுகள் முதலியவற்றைப் பகவான் தேடிச்செல்வதாக அவருக்குத்தோன்ற, தாம் முன்கண்ட திவ்யகாட்சியை மனதில் வைத்தவராய் பிரம்மா கிருஷ்ணன் பாதத்தில் விழுந்தார். வெகு நாழிகை துதிசெய்தார். முன் இருந்ததுபோல கோபாலர்கள் மாடுகள் முதலியவற்றை வெளிப்படுத்தினார். அப்பொழுது அவர்கள் 'மாடுகள் தேடப்போன கிருஷ்ணா! நீ வந்ததும் சாப்பிட நாங்கள் காத்துக்கொண்டிருக்கிறோம்' என்று கூறி, குதித்து விளையாடிக்கொண்டே வந்தனர்.

பிரம்மாவினது சக்தியால் அவர்களுக்கு வருஷம் போனதே தெரியவில்லை. அகாஸுரன் தோலை அவர்களுக்குப் பகவான் காட்ட அவர்கள் 'இன்று எங்களைப் பகவான் பாம்புருபமாக வந்த ராக்ஷஸனிடமிருந்து கிருஷ்ணன் காப்பாற்றினான்' என்று வியந்து கூறிக் கொண்டு தமது வீடுகள் சென்றனர்.

வி௵ **40** —கிருஷ்ணராமாள் இவ்வாறு விளையாடி வருகையில் கோபாலச் சிறுவர்களுக்கு இவர்கள் என்ன ஸௌக்கியத்தை எவ்வாறு செய்தார்கள்?

விடை.—பிருந்தாவனத்திற்கு அருகாமையில் ஓர் பனந்தோப்பு இருந்தது. அதில் பெரிய பழங்கள் பழுத்துத் தொங்கிக்கொண்டும், கீழேவிழுந்து வீணாகிக்கொண்டும் இருந்தன. அதை யாராவது எடுக்கச்சென்றால் அந்தத் தோப்பிலுள்ள தேனுகாஸுரன் என்ற துஷ்டன் கழுதை உருவமாக வந்து அவர்களைக் கொன்று விடுவது வழக்கம். இந்தக் கஷ்டத்தைத் தீர்த்து வைக்க வேண்டும் என்று பகவானைக் கோபாலர்கள் பிரார்தித்தனர். உடனே கிருஷ்ணனும் பலராமரும் கோபாலர்களால் சூழப்பட்டு அந்தப் பனந்தோப்புள் புகுந்தனர். அப்பொழுது பலராமர் அநேக பனமரங்களை அசைக்க, அவைகளிலிருந்து பழங்கள் கீழே உதிர்ந்தன. இந்த சப்தத்தைக் கேட்டதும், தேனுகாஸுரன் கழுதை உருவத்துடன் ஓடிவந்து பலராமரைத் தன் பின் கால்களால் உதைத்தான். இவன் உதைத்தும் பலராமர் இதைக் கவனியாது, பழம் உதிர்க்கும் வேலையில் முனைந்து விட்டார். அஸுரன் மறுபடியும் தன்னை உதைக்க வருவதைக்கண்டு பலராமர் அவன் பின் கால்களைப் பிடித்து அவனை நன்றாக

காலைந்துதரம் சுழற்றிப் பனைமரம் ஒன்றை நோக்கி எறிந்து அவனைக் கொன்றதும் அல்லாமல் பனம்பழங் களையும் கீழே விழும்படியும் செய்தார். இந்த வேகத் தால் சில பனைமரங்கள் முறிந்தும் விழுந்தன. தேனு கன் இறந்ததைக் கேள்விப்பட்டு அவன் உறவினரும் கழுதைகள் உருவங்களோடு இவர்களை வந்துதாக்க இவர்களே அவர்களைப் பனம்பழம் அடிக்க உபயோகப் படுத்தி அவர்களை எளிதில் கொன்று கோபாலர்களுக்கு இருந்த கஷ்டத்தை நிவர்த்தி செய்தார்கள்.

**வின 41.**—இம்மாதிரி கோபாலர்கள் ஸுகம் அடைந்ததும், அவர்களுக்கு வேறு என்ன ஆபத்து எவ்வாறு வந்தது? மேல் என்ன நடந்தது?

**விடை.**—பகவானோடு கோபாலச் சிறுவர்கள் மாடு மேய்த் துக்கொண்டு வருகையில் கங்கையிலிருந்த காளிந்தி மடுவின் அருகில் வந்தனர். அங்கு வந்ததும் ஸூர்ய வெப்பத்தால் எழுந்த தாகம் அவர்களுக்கு அதிகரிக்க, மாடுகள் உள்பட எல்லோரும் அந்த மடுவின் தண்ணீ ரைக்குடித்து, அதன் விஷத்தால இறந்து கரையில் விழுந்தனர். இதைக் கண்ணுற்ற பகவான் தமது அமிர்தநோக்கால் அவர்களைக் கடாக்ஷிக்க அவர்கள் தூங்கி எழுந்தவர்கள் போல எழுந்தனர்.

**வின 42.**—இந்த மடு விஷக்குள மாவானேன்?

**விடை.**—இந்த மடுவின் மத்தியில் ஒரு சிறு குளம் உண்டு. அதில் காளிங்கன் என்ற பாம்பு வஸித்துக்கொண்டிருந் தது. இதன் விஷாக்கினியால் அந்த சிறு குளத்து நீர் கொதித்துக் கொண்டிருந்தது. இதன் உஷ்ணத்தால் ஒரு ஜந்துவும் அதற்குமேல் ஆகாயத்தில் பறந்துபோக

முடியாது. அப்படிப்போனால் இறந்து குளத்தில் விழ வேண்டியதுதான. இந்த விஷத்தால் காளிந்திமடு முழுவதும் விஷமாக அது ஜனங்களுக்குப் பெருங் கேட்டை விளைவித்தது.

வி 43.—இந்தக் கஷ்டத்திலிருந்து பகவான் ஜனங்களை எப்படி விடுவிக்க யத்தனித்தார்.

விடை.—கோபாலர்களை எழுப்பிவிட்டபின்னர், கிருஷ்ணன் அருகிலிருந்த கதம்ப மரத்திலேறிக் கர்ச்சித்துக் கொண்டு அந்த மடுவிலிருக்கும் சிறு குளத்துள் குதித்து கலக்கத் தொடங்கினர். இந்தக் குழப்பத்தைக் கண்ட காளிங்கன் என்ற ஐந்து தலை நாகம் வந்து பகவானை மிகுந்த கோபத்துடன் சுற்றிக்கொண்டது. பகவான் கட்டுப்படுபவர்போலப் பாசாங்கு செய்து சற்று அசைவற்று நின்றுவிட்டார்.

வி 44—இதற்குள் என்ன பிரமாதங்கள் விளைய, என்ன நடந்தது ?

விடை.—இதைக்கண்ட கரையிலிருந்த சிறுவர்கள் கதறிக் கொண்டு மூர்ச்சைபோட்டு விழுந்து புரண்டனர். பிருந்தாவனத்தில் பெரிய அபசகுனங்கள் உண்டாக, கிருஷ்ணனுக்கு என்ன ஆபத்து வந்துவிட்டதோ என்று நந்தகோபர் முதலியோர் பயந்து கிருஷ்ணனைத் தேடிக்கொண்டு புறப்பட்டனர். அன்று பகவானேடு மாடு மேய்க்கப்போகாத பலராமர், எவ்வளவுதான் கிருஷ்ணனது சக்தியைக் கூறித்தடுத்தும் அவர்கள் அன்புமிகுதியால் அவர் சொன்னதைக் கேட்காது, பகவானைத் தேடிக்கொண்டே காளிந்தி மடுவிற்கு வந்துவிட்டனர். பகவான் இருந்த நிலையைக்கண்டு எல்

லோரும் வெகுவாகப் பிரலாபித்தனர். பலராமர் இவர்கள் மூடத்தனத்தால் கதறுவதைக்கண்டு சிரிக்கத் தொடங்கினர்.

வி 45—இதற்குள் பகவான் எவ்வாறு பாம்பின் சுற்றிலிருந்த தம்மை விடுவித்துக்கொண்டு என்ன செய்தார்?

விடை.—இப்படி இருக்கையில் லீலைபோதும் என்று பகவானுக்குத்தோன்ற, பாம்பின் சுற்றினுள்ளே தமது ரூபத்தைப் பெரிதாக்கினர். இதனால் பாம்பிற்கு மிகுந்த கஷ்டம் உண்டாக அதன்கட்டு தளர்ந்து விட்டது. அப்பொழுது அந்தப்பாம்பு படத்தை உயர்த்திக்கொண்டு, வாயால் ரத்தம் விஷம் முதலியவைகளைக் கக்கிக்கொண்டு பகவானைக் கடிக்க வந்தது. இதைக்கண்ட பகவான் அங்கும் இங்கும் அசைந்து கொடுத்து காளிங்கனுக்கு மிகுந்த சிரமத்தை உண்டாக்கிவிட்டுப் பின்னர் அதன் படத்தைத் தமது கையால் அழுத்திக்கொண்டு அதன்மேல் பகவான்ஏறி நர்த்தனம்செய்யத் தொடங்கினர். தேவதைகள் தாளம்போடத் தொடங்க (ஆலங்காட்டார் அற்புத நடனம்போன்ற) ஆனந்த நடனம் தொடங்கியது. சுற்றியிருந்த எல்லோரும் துக்கம் நீங்கி ஆனந்த பரவசமாயினர்.

வி 46—காளிங்கன் கதி எவ்வாருயிற்று? அப்பொழுது அவன் எவ்வாறு காப்பாற்றப் பட்டான்?

விடை.—பகவான் நர்த்தனம் ஆட ஆட, காளிங்கனுக்கு அவரது கனத்தையும் அவரதுவேகத்தையும் பொறுக்க முடியாமல் போயிற்று. மிகுந்த சிரமம் உண்டாக, அவன் கொத்துயிரும் கொலையுயிருமானன். இந்த அபாய ஸமயத்தில் காளிங்கனது பெண்சாதிகள்வந்து



காளிங்க மர்த்தனம்.

பகவானை மாங்கல்ய பிக்ஷை கேட்க அதற்கு அவர் காளிங்கனை விட்டுவிட்டு 'நீ இந்தக்ஷணமே இம்மடுவை விட்டு முன்னிருந்த ரமணகம் என்ற தீவைச் சென்றடை! இனிமேல் உனக்கு முன் உண்டான அபாயம் அங்கு இப்பொழுது உண்டாகாது' என்று கட்டளையிட்டு 'இந்தமடுவில் யார் ஸ்நானுதிகளைச் செய்கிறார்களோ அவர்கள் கிருதார்த்தர்களாகட்டும்' என்றும் அனுக்கிரஹித்தார்.

வி௲ **47**.—காளிங்கன் எந்த அபாயத்திற்கு பயந்து காளிந்தி மடுவிற்கு ஓடி வந்தான்? அது என் இப்பொழுது அணுகாதிருக்க வேண்டும்?

விடை.—ரமணகத் தீவிருந்த நாகர்கள், கருடனுக்குப்பயந்து ஒவ்வொரு பக்ஷத்திற்கு ஒருதரம் ஓர் மரத்து அடியில் உணவுகள் படைத்து வைப்பது வழக்கம். காளிங்கன் மிகுந்த கர்வத்தால் அந்த உணவை ஒருதரம் புசித்துவிட்டான். உடனே கருடனுக்குக் கோபம் உண்டாகி காளிங்கனை அவன் துரத்த, அவன் பயந்துகொண்டு காளிந்திமடுவில் வந்து ஒளித்துக் கொண்டான். இப்பொழுது பகவானது பாதம் இவன் படத்தில் பதிந்திருப்பதாலும், கருடன் பகவானது வாஹனமாதலாலும் கருடன் ஒன்றும் செய்ய முடியாமல்போக இந்த ஆபத்து காளிங்கனைவிட்டு நீங்கி விட்டது.

வி௲ **48**.—காளிந்தி மடுவில் மாத்திரம் ஏன் கருடன் வந்து காளிங்கனைக் கஷ்டபடுத்த வில்லை?

விடை.—ஒருநாள் இந்த காளிந்தி மடுவில் ஓர் மீனை தின்ன வேண்டும் என்ற ஆவலுடன் கருடன் துரத்தி வருவதைக் கண்ட ஸௌபரி ரிஷி, அங்குள்ள மீன்களை

கொல்லக் கூடாது என்று தடுத்தார். இதைக் கவனியாது பசி மிகுதியால் கருடன் அந்தமீனைத் திருடி விட்டான். இதை அறிந்த ரிஷி ' இங்கு கருடன்வந்து எந்த ஜீவஜந்துவைப் பிடித்தாலும், அவன் இறக்கட்டும்!' என்று சபித்தார். இதனால் கருடன், இந்த மடுவை அண்ட முடியவில்லை. இது காளிங்கனுக்கு மாத்திரம் தான் தெரியும். தனக்குக் கஷ்டம் வந்ததும், அவன் இந்த மடுவில் வந்து ஒளித்துக் கொண்டான்.

வின **49**.—இவ்வாறு காளிங்கனைத் துரத்தியும் கோபாலர்களுக்கு என்ன ஆபத்து வந்தது? அதைப் பகவான் எவ்வாறு தீர்த்தார்?

விடை.—இதற்குள் ஸாயங்கால ஸமயம்வர, பசியோடிருந்த போதிலும் எல்லோரும் காளிந்தியின் கரையிலேயே அன்றிரவு தங்கி விட்டனர். அன்றிரவு ஒரு பெரிய காட்டுத்தீ அவர்களைச் சூழ்ந்துவர எல்லோரும் பயந்து நடுங்கினர். உடனே பகவானை வந்து அவர்கள் சரணம் அடைய அவர் அந்தத் தீயைக்குடித்து எல்லோரையும் காப்பாற்றினர்.

வின **50**.—இதுமுடிந்து கொஞ்சநாளைக்கெல்லாம், கம்ஸன் மூலமாகக் கிருஷ்ண ராமாளுக்கு என்ன ஆபத்து வந்தது? அது எவ்வாறு தடுக்கப்பட்டது?

விடை.—கம்ஸனால் அனுப்பப்பட்ட பிரலம்பன் என்ற அஸுரன் பகவானைக் கொல்ல ஒருகோபாலன் உருக் கொண்டு, மாடு மேய்த்துக்கொண்டிருந்த கோபாலர்களுடன் கலந்து அவர்கள் விளையாட்டில் சேர்ந்துவிட்டான். இதை அறிந்த பகவான் குதிரைகொடுக்கும் விளையாட்டைத் தொடங்கினர். பிரலம்பன் பலராம

ருக்குக் குதிரை கொடுக்கவேண்டிவர அவர் அவன் மேல் ஏறிக்கொண்டார். இதுதான் நல்லஸமயம் என்று பிரலம்பன் பலராமரைக் கொஞ்சதூரம் எடுத்துச் சென்றுவிட யத்தனித்தான். இவன் ஒதுங்குவதைக் கண்ட பலராமர், வரவரத் தமது கனத்தை அதிகமாக்க, அஸுரன் தாங்கமுடியாமல் தனது ஸொந்த ரூபத்தை எடுத்துவிட்டான். இதைக்கண்ட பலராமர், பலமாக அவன் தலையில் ஒரு குத்துகுத்த, அவன் பெருங் கூக்குரலிட்டுக்கொண்டு விழுந்திறந்தான். இதைக்கண்ட கோபாலர்கள் எல்லோரும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனர்.

வினு **51**.—இதன் பின்பு கோபாலர்களுக்கு என்ன ஆபத்து வந்தது? அதைப் பகவான் எவ்வாறு தடுத்தார்?

விடை.—ஒருநாள் நடுப்பகலில் கோபாலச் சிறுவர்கள் நாணல் புதர்களுள் புகுந்துவிட்டனர். அங்கு அவர்களைக் காட்டுத்தீ சூழ்ந்துகொண்டது. அவர்கள் பகவானிடம் வந்து சரணம் அடைய, அவர் அவர்களைக் கண்ணை மூடிக்கொள்ளும்படி கட்டளையிட்டார். அவர்கள் கண்ணைத் திறப்பதற்குள் பகவான் காட்டுத்தீயைக் குடித்துவிட்டார். கண் திறந்ததும் காட்டுத்தீ மறைந்ததைக்கண்டு அவர்கள் களித்தனர்.

வினு **52**.—இவ்வாறு பகவான் கோபாலர்களது மனதை வசப்படுத்திக்கொண்டு வருகையில் வேறு யார் மனம் பகவானை நோக்கிப் பாய்ந்தது? எவ்வாறு?

விடை.—இவ்வாறு பகவான் லீலைகள் செய்து வருகையில் பிருந்தாவனத்திலுள்ள கோபிகைகள் மனம் பகவானது திவ்யமங்கள விக்கிரஹத்தில் ஈடுபட்டது. இவர்

கள் அப்பொழுது ஒருவருக்கு ஒருவர் பகவானது திவ்யமங்கள விக்கிரஹத்தை ஆனந்த பரவசமாக வர்ணித்துக்கொண்டு தமது காலத்தைக் கழித்து வந்தனர். பகவான் பிருந்தாவனத்தில் இருக்கையில் அவரைக்கண்டு களிப்பதும், அவர் மாடுமேய்க்கப் போனவிடத்து அவரைப்பற்றி நினைப்பதும் பேசுவதுமே கோபிகள் தொழிலாகிவிட்டன. (கோபிகள், பகவானை வர்ணித்து ஆனந்த பரவசமாகும் பாகமாகிய 10-வது ஸ்கந்தம், 21 அத்தியாயத்திற்கு கோபிகீதை என்று பெயர்.) வரவர இவர்களது பற்று முதிர்ந்துகொண்டே வந்தது.

வினா 53 —கோபிகளுக்குப் பகவானிடம் பற்று அதிகரிக்க, அவர்கள் என்ன செய்தனர்?

விடை.—பனிகாலம் வரக் கோபிகள் காத்யாயனீ விரு தத்தை அனுஷ்டித்தனர். இதில் அவர்கள் தமக்குக் கிருஷ்ண பரமாத்மா புருஷனாகவேண்டும் என்று எல்லோரும் பிரார்த்தித்தனர். இந்த விருதகாலத்தில் ஒரு நாள் அதிகாலை கோபிகள் எழுந்து யமுனைக்கு ஸ்நானத்திற்குச் சென்றனர். அங்கு சென்றதும், தமது வஸ்திரங்களைக் கரையில் வைத்துவிட்டு அவர்கள் தண்ணீரில் இறங்கிவிட்டனர். தண்ணீரில் நிர்வாணமாக இறங்கலாகாது என்ற விதியைக் கவனியாது உத்ஸாஹத்தோடு இக்காரியத்தைச் செய்துவிட்டனர்.

வினா 54.—இந்த அபராதத்திற்கு இவர்களுக்கு என்ன தண்டனை ஏற்பட்டது? இதிலிருந்து இவர்களுக்கு என்ன நன்மை உண்டாயிற்று?

விடை.—இவர்கள் இவ்வாறு செய்ததும் கிருஷ்ணன் தனது கோபாலர்களோடு அங்குவந்து கரையிலிருக்கும் கோபிகைகளின் துணியை எடுத்துச்சென்று அருகிலிருந்த நீப மரத்தின்மேல் ஏறிவிட்டார். அங்குசென்று பகவான் சிரித்துக்கொண்டு கோபிகளை நோக்கி ‘அடாது செய்தவர் படாது படுவர். தண்ணீரில் உங்கள் விருத மத்தியில் இறங்கியதற்காக, நீங்கள் வெளியில்வந்து இரண்டு கைகளையும் தூக்கிக்கொண்டு தலைகளைக் குனிந்துகொண்டு நான் கொடுக்கும் வஸ்திரத்தை வாங்கிக்கொள்ள வேண்டும். இதற்கு என் தோழர்கள் ஸாக்ஷி! என்று உத்தரவு செய்தார். முதலில் வெட்கத்தால் கொஞ்ச நாழிகை ஜலத்திலேயே இருந்தனர். அவர்களால் குளிர் தாங்க முடியாமல்போக வெளியேவந்து பகவான் கூறியபடி தமது வஸ்திரங்களைப் பெற்றுக்கொண்டனர். அப்பொழுது பகவான் அவர்களை நோக்கி ‘கோபிகைகளே! உங்கள் மனம் திரும்பியிருக்கிறதுபோலத் தோற்றுகிறது. எப்படி வறுப்பட்ட விதைமறுபடி முளையாதோ, அதுபோல என்னை நோக்கியவர் மனம் சிற்றின்பங்களை நாடவே நாடாது. நீங்கள் சீக்கிரம் திருப்தி அடைவீர்கள்! இப்பொழுது போகலாம்!’ என்று சொல்ல, மிகுந்த ஸந்தோஷத்தோடு கிருஷ்ணனைவிட்டுப் பிரிய மனமில்லாது தயங்கிக்கொண்டு அவர்கள் தமது வீடு சென்றனர்.

வின 55.—அதன் பின்பு பகவான் என்ன செய்தார்?

விடை.—இது முடிந்ததும் தமது தோழர்களோடு மாடு மேய்க்கப் புறப்பட்டார். போகும் வழியில் உள்ள மரங்களைநோக்கிப், ‘பாருங்கள்! இந்த மரஜன்மம் எவ்வளவு மேன்மையானது. தாம் காற்று மழைகளால் வருந்திக்

கொண்டிருந்தும், தம்மை அண்டினவர்கள் துன்பத்தை இவைகள் நீக்குகின்றன. இவைகள் மனிதனுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைக் கொடுக்கின்றன. இவைகளை அண்டினவன் ஒன்றையும் அடையாது வெறுங் கையாகத் திரும்புவதில்லை. மரங்கள் பரோபகாரத்தையே தமது விருதமாகக்கொண்டு வேர், தண்டு, அடி, கிளை, இலை, பூ, காய், கனி, இவைகள்போன்ற தமது ஒவ்வொரு பாகத்தாலும் பரோபகாரமே புரிகின்றன. இந்தப் பரோபகாரமே மனிதனது வாழ்நாளை வீணாள் ஆகாமலிருக்கும்படி செய்வது!' என்று உல்லாஸமாகப் பேசிக்கொண்டு போனார். இவர்கள் நடுப்பகல்வரை மாடு மேய்க்க, இவர்களுக்குப் பசி உண்டாய்விட்டது.

வின 56.—இவர்களது பசியைத்தீர்க்கப் பகவான் என்ன ஏற்பாடு செய்தார்? அது எவ்வாறு முடிவுபெற்றது?

விடை.—கோபாலச் சிறுவர்கள் பசியால் வருந்துவதைக் கண்டு, 'அருகாமையில் சில பிராம்மணர்கள் ஸ்வர்க்க இச்சையால் வேதவிதிப்படி ஆங்கீரஸ யஞ்ஞத்தைச் செய்கிறார்கள்; அவர்களிடம் சென்று நாங்கள் கேட்டதாக எங்கள் பெயரைச்சொல்லி அன்னம் யாசித்து வாங்கிவந்து புஜியுங்கள்!' என்று கட்டளையிட, கோபாலச் சிறுவர்கள் அவ்வாறே செய்தனர். பிராம்மணர்கள் கேவலம் கர்மகாண்டிகளாக இருந்தமையாலும், கிருஷ்ணராமரை ஸாதாரண புருஷர்கள் என்றிருந்தமையாலும் ஒன்றும் பதில்சொல்லாது அலக்ஷியமாக இருந்து விட்டனர். இதைக் கோபாலச் சிறுவர்கள், பகவானிடம்சென்று தெரிவித்தனர்.

வின 57.—இதற்குமேல் பகவான் என்ன ஏற்பாடு செய்தார்? மேல் என்ன நடந்தது?

விடை.—இது போகட்டும்! யாகசாலைக்கு அருகாமையி லிருக்கும் பிராம்மணப் பத்னிகளிடம் சென்று எங்கள் பெயரைச்சொல்லி அன்னம் யாசியுங்கள்!' என்று கட்டளையிட கோபாலர்கள் அவ்வாறே செய்தனர். ஸங்கதி கேள்விப்பட்டதும் பிராம்மணப் பத்னிகள் தமது வேலைகளை எல்லாம் விட்டுவிட்டு யார் தடுத்தும் நிற்காது நல்லபோஜன பதார்த்தங்களுடன் புறப்பட்டு விட்டனர். காடுவந்து பகவானது பாதாரவிந்தங்களில் ஈடுபட்டுத் தாம் கொண்டுவந்ததை ஸமர்ப்பிக்க, அவர் அந்த ஸ்திரீகளுக்கு ' ஆத்மாவே எல்லா உலகவிஷயங்களைவிட எவனுக்கும் சிறந்த பிரீதிகரமான வஸ்து. நீங்கள் என்னைப் பார்க்கவந்தது உங்கள் மேன்மையைக் காட்டுகின்றது. உங்கள் ஸஹாயத்தால் உங்கள் புருஷர்கள் தமது யாகத்தைச் சிறப்பாக முடித்துவிடுவார்கள்' என, அவர்கள் ' நாங்கள் யார் தடுத்தும் நிற்காது இங்கு வந்து விட்டோம். எங்கள் புருஷர்கள் எங்களை அண்டவிட மாட்டார்களே!' என்றனர். ' அவர்களுக்கு உங்கள்மேல் கோபமே வராது. தைரியமாக நீங்கள் போங்கள்!' என்று பகவான் அனுக்கிரஹிக்க, அவர்கள் தமது வீடு சென்றனர்.

வினா 58.—இவர்கள் வீடு சென்றதும் அங்கு என்ன விசேஷங்கள் நடந்தன?

விடை.—இவர்கள் வீடுசென்றதும், யாகத்தைப் பூர்த்தி செய்து விட்டுவந்த இவர்கள் புருஷர்களுக்கு இவர்கள் செய்த காரியம் தெரிந்தபின்பும்கூட கோபம் உண்டாக வில்லை. அவர்கள் தாம் மூடத்தனமாகப் பகவானுக்குத் தமது திரவ்யங்களை ஸமர்ப்பிக்காமல் ஏமாந்தோமே என்ற துக்கம் அவர்களை மிக வருத்தியது.

இவர்கள், பகவானைப் பிருந்தாவனம் சென்று தரிசிக்கலாம் என்று எண்ணினார்கள். ஆனால் கம்ஸனுக்குப் பயந்து அவர்களால் அவ்வாறு செய்ய முடியாமல் போய்விட்டது. இது இப்படி இருக்கையில் ஒரு பிராம்மணன் வீட்டில் ஓர் அற்புதம் நடந்திருந்தது. இந்தப் பிராம்மணர் யாகத்திற்குப்போகாது வீட்டிலிருந்தார். இவர்மாத்திரம் இவர் பெண்சாதியை வெளியே போகவொட்டாது தடுத்துவிட, அவள் தனக்குப் பகவானைப் பார்க்க முடியவில்லையே என்ற துக்கத்தால் மனதிலேயே பகவானை இடைவிடாது தியானம் செய்துகொண்டு தனது தேகத்தை நழுவவிட்டாள். (பிராம்மணப் பத்னிகளின் அன்புமிகுதியை, இந்த அற்புத ஸங்கதி நன்ருக வெளிப்படுத்துகின்றது. இந்தப் பக்தியின் சிறப்பைத்தான் நாரதர் தமது பக்தி ஸூத்திரத்தில் நிஜபக்திக்கு உதாரணமாக எடுத்துக்கொள்ளுகிருர்.)

**வின 59.**—பகவான் ஆராதன விஷயத்தில், எந்த ஸமயத்தில் என்ன ஏற்பாடு செய்தார்?

**விடை.**—பிருந்தாவனத்தில் நந்தகோபர் முதலியோர் இந்திரனுக்குத் திருப்திகரமான ஒரு யாகத்தைச் செய்ய மிகுந்த கோலாஹலத்துடன் ஏற்பாடுகள் செய்துகொண்டிருந்தனர். இதைக்கண்ட கிருஷ்ணன் ஒன்றும் தெரியாதவர்போல இவர்கள் நோக்கத்தை நந்தகோபரிடம் இருந்து கேட்டறிந்து பகவான் அவர்களை நோக்கி, 'இந்திரன் முதலிய தேவதைகளை ஆராதிப்பதால் யாது பயன்? மனிதர்கள் தமது கர்மங்களுக்குத் தக்கவாறு ஸுகதுக்கங்களை அனுபவிக்கிருர்களே ஒழிய, இந்திரன் முதலிய தேவதைகளுக்கும் இவ்

வனுபவங்களுக்கும் யாதொரு ஸம்பந்தமும் இல்லே. ஆதலால் ஒவ்வொருவனுக்கும் தகுந்த ஜாதியாசாரம் எதுவோ, அதை ஒழுங்காகப் பின்பற்றுவதே சிறந்த ஆராதனம். வேறு ஆராதனம் வேண்டுமாகில் நமக்கு உயிர்தரிக்க உபயோகமாயும், அவசியமானதாயும், இருப்பவைகளைக் கடவுளது ரூபாந்திரங்களாகக் கொண்டு ஆராதிக்கலாம். நாமோ காட்டில் வசிப்பவர்கள், மாடு முதலியவர்களாலும், பிராம்மணர்களது ஸஹாயத்தாலும் ஸுகமாக இருப்பவர்கள். ஆகையால் நம்மருகாமையில் உள்ளே கோவர்த்தனமலையையும், பிராம்மணர்களையும், பசுக்களையும் கடவுள் மூர்த்தங்களாக எண்ணிப் பூஜிப்போம். தோன்ருத் தெய்வங்களைத் தொழுவது எனக்கு ருசிக்கவில்லே!' என்று மிகுந்த நயமாகச்சொல்லி அவர்களைக் கோவர்த்தன மலைக்குப் பூஜை செய்வதே நலம் என்று அங்கீகரிக்கும்படி செய்தார்.

**வி௵ 60.**—இதன்மேல் என்ன நடந்தது ? இதனுல் கோபாலர்களுக்கு என்ன ஆபத்து உண்டாயிற்று ?

**விடை.**—கோபாலர்கள் எல்லோரும் பகவான் கூறியபடி கோவர்த்தன மலைக்குப் பூஜைசெய்ய, பகவான் கோவர்த்தனத்தில் இருந்தபடி இந்தப் பூஜைகளை அங்கீகரித்து தமது திருப்தியை வெளியிட்டு அவர்களுக்கு இந்தப் பூஜையில் நம்பிக்கை வரும்படி செய்தார். பிராம்மணர்கள் பசுமாடுகள் முதலியவைகளைத் தகுந்தபடி ஆராதித்துவிட்டு பகவானும் மற்றையவரும் தமது இருப்பிடம் வந்து சேர்ந்தனர். இதைக்கண்டு தனக்கு ஏற்பட்ட நஷ்டத்தால் மிகுந்த கோபங் கொண்ட இந்திரன், தனது பிரளய மேகங்களைவிட்டு ஓயாது

ஏழுநாள் பிருந்தாவனத்தில் கல்மழை பெய்யும்படி செய்தான்.

**விஞ 61.**—இந்தச் சமயத்தில் பகவான் கோபாலர்களை எவ்வாறு காப்பாற்றினர்? இது எவ்வாறு முடிவுபெற்றது?

**விடை.**—இந்தக் கல்மழை தொடங்கியதும் கோபாலர்கள் எல்லோரும் பகவானைச் சரணம் என்று வந்து அடைய, அவர் பெரிய உருவுடன் கோவர்த்தன மலையை வேருடன் பெயர்த்து ஒரு கையில் குடை போலத் தாங்கிநிற்க எல்லோரும் அதன் அடியில் ஒதுங்கி ஸுகமாக இருந்தனர். இந்திரன் விடாது ஏழு நாள் மழை பொழிந்தும் ஒன்றும் பயன்படவில்லை. இந்திரனுக்குக் கர்வம் அடங்க மழைநின்றது. எல்லோரும் பகவான் அன்ன ஆஹாரமின்றி ஏழுநாளாகச் செய்த அற்புதத்தையும் மற்றை அற்புதச் செயல்களையும் மிகுந்த உத்ஸாஹத்தோடு சொல்லிக்கொண்டு தமது ஊருக்குள் புகுந்தனர். அப்பொழுது நந்த கோபருக்குக் கார்கர் முன்பு கூறிப்போன மொழிகள் ஞாபகத்திற்குவர அவர் அவர்களைக் கோபாலர்களுக்கு எடுத்துக்கூறித் தாம் கிருஷ்ணனைப் பகவானுகவே எண்ணியிருப்பதாகச் சொன்னர்.

**விஞ 62.**—இந்திரன் கர்வம் அடங்கியதும் என்ன செய்தான்?

**விடை.**—ஏகாந்த ஸமயத்தில் பகவானிடம் மிகுந்த வெட்கத்துடன் வந்து நின்றான். அவன் வரும்பொழுது காமதேனுவையும் அழைத்து வந்திருந்தான். அவன் பகவானை நன்றாகத் துதித்துவிட்டு மௌனமானன். அப்பொழுது பகவான் அவனைநோக்கி, 'இதுதான் என்

பக்தர்களை நான் காப்பாற்றும் வழி. அவர்கள் கர்வத்தால் மூடப்படுகையில் அவர்கள் செல்வம் முதலியவற்றை நீக்கி நான் அவர்களைக் கஷ்டப்படுத்தி என் ஞாபகம் அவர்களிடம் மாறாதிருக்கும்படி செய்வேன். கர்வம்நீங்கி நீ ஸுகம் அடைவாய்! என்று வாழ்த்தினார். காமதேனுவின் பாலாலும், தன் ஐராவதத்தால் கொண்டுவரப்பட்ட ஆகாச கங்கா ஜலத்தாலும் கிருஷ்ணனுக்கு இந்திரன் பட்டாபிஷேகம் செய்ய அவருக்குக் கோவிந்தன் என்ற பெயரும் கொடுக்கப்பட்டது. இந்த ஸமயத்தில் பிரபஞ்சம் முழுவதும் தழைத்து ஓங்கித் தனது ஸந்தோஷத்தை வெளிப்படுத்தியது. இந்திரன் தனது மனதின் அடக்கத்தை இவ்வாறு காட்டிவிட்டுத் தன் பரிவாரத்தோடு தன் லோகம் புகுந்தான்.

வினா 63.—இப்படி யிருக்கையில் நந்தகோபருக்கு என்ன ஆபத்து வந்தது? அதை எவ்வாறு பகவான் நீக்கினார்? மேல் என்ன நடந்தது?

விடை.—ஒரு ஸமயம் ஏகாதசி, துவாதசி விரதங்கள் முடிந்ததும் இரவு அஸுர ஸமயத்தில் லக்ஷ்யம் செய்யாது நந்தகோபர் காளிந்தியில் அனுஷ்டானத்திற்காக ஸ்நானம்செய்ய இறங்கினார். அந்த ஸமயத்தில் அங்கு வந்திருந்த வருணஸேவகனான ஓர் அஸுரன் நந்தகோபரைப் பிடித்துப்போய் வருணன் முன் கொண்டுபோய் நிறுத்தினான். இதற்குள் நந்தகோபரைக் காணாது கோபாலர்கள் எல்லோரும் பரிதவிக்க பகவான் அவர்களைத் தேற்றிவிட்டு வருணலோகம் சென்றார். அங்கு வருணன் இவரைத் துதித்து, இவர் தகப்பனான நந்தகோபரையும் இவருடன் சேர்த்து

அனுப்பினார். இவர் கோபாலர்களைக் கண்டதும் தாம் வருணலோகத்தில் கண்ட சிறப்புக்களையும் அங்கு கிருஷ்ணனுக்கு நடந்த மரியாதைகளையும் விஸ்தாரமாக அவர்களிடம் சொல்ல, அவர்களுக்குப் பகவானது உண்மை உருவைக் காணவேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று. இவர்களைத் திருப்திப்படுத்த பகவான் யோகிகள் நிஷ்டா ஸமயத்தில் கஷ்டத்தின்மேல் காணும் தமது பிரகிருதிக் கப்பாற்பட்ட ரூபத்தை இவர்கள் காணும்படி காட்ட அவர்களை யமுனாநதியில் பிரம்மகிதை என்ற மடுவில் முழுகும்படிசெய்து அதனால் தமது தேஜோ ரூபம் முதலியவற்றை அவர்களுக்கு வெளிப்படுத்தினார். எல்லோரும் அங்கு பகவானைத் துதித்து அவரால் எழுப்பப்பட்டு பிருந்தாவனம் வந்து தாம் கண்ட காட்சியை வியந்துகூறி ஸத்காலக்ஷேபம் செய்துவந்தனர்.

**வி 64.**—இவ்வாறு கோபாலர்களைத் திருப்திப்படுத்திய பகவான் தம்மிடம் பக்தியுடன் இருந்த கோபிகைகளை எவ்வாறு திருப்திபடுத்த முயன்றார்?

**விடை.**—ஓர் சரத்கால இரவில், சந்திரன் அழகாகப் பிரகாசிக்க, சுற்றிலும் மிகுந்த அழகிய காட்சிகள் நிறைந்திருக்கையில் தமது யோகமஹிமையால் தாம் நடுநிலையிலிருந்துகொண்டே கோபிகளுக்கு ஆனந்தம் விளைவிக்கப் பிருந்தாவனத்தருகிலுள்ள சோலைகளுள் புகுந்து மிகுந்த ஆனந்தமாக வேணுகானம் செய்யத் தொடங்கினர். அந்த ரமணீயமான இரவில் மனதைக் கொள்ளைகொள்ளும் வேணுவின் சப்தம் கோபிகைகள் காதில் விழுந்ததும் எல்லோரும் பகவான் மேலிருந்த அன்பால் தூண்டப்பட்டு தாம் செய்துகொண்டிருந்த

வேலைகளை அரைகுறையாக விட்டுவிட்டு வேணு கானம் நடக்கும் இடம் வந்துவிட்டனர். பகவானை அவர்கள் அப்பொழுது தமது நாயகனாக நினைத்து மிகுந்த அன்பு பாராட்டியதாற் தமது முதல் எண்ணங்களிலிருந்து விடுபட்டுக் கர்மபந்தம் நிவர்த்தியாகி மேன்மையை அடைந்தனர். அந்த ஸமயத்தில் பகவான் கோபிகைகளை நோக்கி, 'ஏன் இவ்வளவு அவஸரப்பட்டு இந்த இரவு வேளையில் நீங்கள் இங்கு வந்தீர்கள்? உங்களை உங்கள் உறவினர்கள் தேடமாட்டார்களா? இங்கிருக்கும் காட்சியைத்தான் நீங்கள் பார்த்தாய்விட்டதே! இனிமேல் இங்கு என்னவேலை? எல்லோருக்கும் அதிகப் பிரீதியான வஸ்துவாக நான் இருப்பதால் நீங்கள் என்பேரில் அன்புபெருக இங்கு வந்தது நியாயமே. இனிமேல் உங்கள் புருஷர்களிடம் செல்லலாம். நீங்கள் ஒரு புருஷனோடு இங்கு இரவில் இருப்பது நியாயமன்று. என் அருகிலிருந்து என் பக்தி மறவாதிருத்தல் மிகக் கடினம். என்னைவிட்டுப் பிரிந்திருந்து என் லீலைகளைக் கேட்டு ஈடுபடுவதாலும், என்னைத் தியானம் செய்வதாலும், என் நாம ஸங்கீர்த்தனத்தாலும் நீங்கள் என்னை எளிதில் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளலாம். ஆகையால் இந்தக்ஷணமே நீங்கள் உங்கள் வீடு செல்லவேண்டும்!' என்று கூறி முதலில் அவர்கள் மனதைப் பரீக்ஷித்தார்.

வினா 65.—இதன் பின்பு கோபிகைகள் என்ன செய்தார்கள்? மேல் என்ன நடந்தது?

விடை.—இதைக்கேட்டதும் கோபிகைகள் மிகுந்த துக்கத்தை அடைந்து பகவானை நோக்கி, 'இவ்வாறு பக்தர்களாகிய எங்களை நிராகரிக்கவேகூடாது. கோபாலச் சிறுவர்

கள் முதலியோருக்குத் தங்களால் ஆனந்தம் அடையும் அதிர்ஷ்டம், இருக்க எங்களுக்குத்தானா இல்லாமல் போய்விட்டது? உங்களிடம் பக்திவந்து உங்கள்வேணு கானத்தைக் கேட்ட பின்புங்கூட எங்களுக்கு எவ்வாறு எங்கள் உறவினர்களைக் கவனிக்கும் எண்ணம் உண்டாகும்? நாங்கள் உம்மை பக்திசெய்து உம்மையே சரணம் அடைந்தோம். எங்களை ஆசீர்வதித்து திருப்திப் படுத்த வேண்டியது உங்கள் கடமை!' என்றார்கள்.— இதைக் கேட்டதும் பகவான் கோபிகைகளின் வேண்டுகோளிற்கு இசைந்து அன்றிரவு கொஞ்சகாலம் எல்லோரோடும் ஏககாலத்தில் உல்லாஸமாக விளையாடி அவர்களைத் திருப்திப்படுத்த, அவர்களுக்குத் தம்மை விடச் சிறந்தவர்கள் இல்லை என்ற கர்வம் வந்து விட்டது.

**வி. 66.**—இப்படி அவர்களுக்குக் கர்வம் வந்ததும் பகவான் அவர்களை-எவ்வாறு காப்பாற்றினார்?

விடை.—இந்த ஸமயத்தில் நடு இரவில் பகவான் திடீரென மறைந்தார். கோபிகைகளுக்கு மிகுந்த துக்கம் வந்து விட்டது. முன் இருந்த கர்வம் இருந்தவிடம் தெரியாமல் போகச் சுற்றும் உள்ளவைகளைப் 'பகவானைக் கண்டதுண்டா' என்று வெறிபிடித்தவர்போல் கேட்டுக் கொண்டு காட்டுவழியாகப் புறப்பட்டனர். போகும் வழியில் பகவானும், ஓர் கோபிகையும் தனிமையாக அங்கு போனதாக அங்கிருந்த அடிச் சுவடுகளால் தெரியவந்தது. இதைக்கண்டதும், 'இந்தக் கோபிகையைப்போல நாமும் பகவத்கிருபைக்குப் பாத்திரமாகாமல் போய் விட்டோமே என்ற துக்கம் வந்து, மிஞ்சியிருந்த கர்வத்தைப்பறக்க அடித்து விட்டது. உடனே

அவர்களுக்கு உண்டான ஸுகத்திற்கு அளவே இல்லை! அவர்களில் சிலர் தாமே கிருஷ்ணனாகவும் எண்ணி ஒழுங்காகக் கிருஷ்ணன் செய்த லீலைகளை எல்லாம் நடித்துக் காட்டித் தம் காலத்தைப் போக்கிக்கொண்டு சென்றனர். கொஞ்சதூரம் சென்றதும், அங்கு முற்கூறிய கோபிகை விழுந்து கிடப்பதைக் கண்டார்கள். அவள் மிகுந்த துக்கத்துடன், "என்னைப் பகவான் இங்கு அழைத்துவந்து புஷ்பங்களால் அலங்கரித்து என்னுடன் வெகு உல்லாஸமாக விளையாடி வந்தார். இப்படி இருக்கையில் மிகுந்த கர்வத்துடன் என்னால் நடக்க முடியவில்லை!' என்று நான் சொன்னேன். பகவான் என்னைத்தோளில் எடுத்துக்கொண்டு சென்றார். வழியில் பகவான் திடீரென்று மறைந்தார். கர்வத்தால் நான் அநியாயமாகப் பகவானை இழந்தேன்!" என்று தன் கதையைச்சொல்ல மற்றையவர்கள் அவள் கதியைக்கண்டு பரிதவித்துக் கர்வத்தால் விளையும் கேடுகளை நன்கு உணர்ந்தவராய் தமது கர்வசேஷத்தையும் அறவிட்டனர்.

வினா 67.—இவ்வாறு கர்வம் நீங்கியதும் இவர்கள் எவ்விதமாக ஸுகித்தனர்?

விடை.—இவ்வாறு கர்வம் நீங்கியதும் கோபிகைகள் எல்லோரும் பகவான் தம்மிடத்திலிருந்த விதத்தையும், அவர் மறைந்ததால் தமக்கு உண்டான கஷ்டத்தையும், தமது சிறுமையையும் பகவானது பெருமையையும், பகவான் அப்பொழுது எங்கிருந்து எவ்வாறிருக்கிறாரோ என்று எண்ணிக்கொண்டும் மெய்மறந்து கருதி வாய்விட்டுப் பாடி ஆனந்தித்தனர். (இதற்கு வணகீதை என்று பெயர்.) இதன் முடிவில் பகவான்

அவர்களுக்குப் பிரத்யக்ஷமானார். கோபிகைகளோடு பகவான் யமுனைக் கரை சென்று அங்கு அவர்கள் மத்தியில் உட்கார்ந்து வேடிக்கையாகக் கொஞ்சநாழிகை, பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுது 'உங்களுக்கு என்னிடம் உள்ள பக்தி சுத்தமானதாகவும், நிஜமான தாகவும், மாறாதிருப்பதாகவும், அதிகமாகவும் இருக்கும் படி செய்ய நான் மறைந்தேனே யொழிய வேறில்லை என்பேரில் கோபிக்கக்கூடாது!' என்று கூறி அவர்கள் மனதைச் சுத்தப்படுத்தினார். கோபிகைகள் எல்லோரும் துக்கம் நீங்கி ஆனந்தித்தனர்.

வின **68**.—கோபிகைகள் ஆனந்தத்தைப் பூர்ணம் செய்ய பகவான் அப்பொழுது என்ன செய்தார் ?

விடை.—அப்பொழுது பகவான் ராஸக்ரீடை என்ற ஒரு விளையாட்டை ஏற்படுத்தி அதில் அவர் கோபிகைகளை வட்டமாக நிற்கும்படி செய்து அவர்களில் இவ்விருவர் மத்தியில் பகவான் தாம் ஒவ்வொரு உருவத்தோடு நின்றுகொண்டு, அவர்களைப் பாட்டுகள் பாடும்படி செய்து அவைகளுக்குத் தக்கபடி ஆட்டம் ஆடிக் கொண்டு சுற்றுவந்து விளையாடினார். கோபிகைகள் எல்லோரும் அந்தப் பாட்டுப்போல் நிலவு அடிக்கும் இரவில் தங்கு தடையின்றி ஆடிப்பாடி மெய்மறந்து பகவத் ஸந்நிதானத்தில் எல்லா உலக விஷயங்களையும் மறந்து பகவானிடமே ஈடுபட்டு ஆனந்தம் அடைந் தனர். அவர்களுக்கு அப்பொழுது தேகசிரமம் உண் டாவதைக்கண்டு பகவான் அது தீருவதற்காக ஜலக் கிரீடை செய்ய யமுனையில் இறங்கிவிட்டனர்; அங்கு கொஞ்சநாழிகை விளையாடிவிட்டு பொழுது விடி வதைக் கண்ணுற்ற கோபிகைகள் மிகுந்த துக்கத்

துடன் பகவானை விட்டுப்பிரிந்து தமது வீடு சென்றனர்.

**வினா 69.**—கோபிகைகளோடு இவ்வாறு பகவான் விளையாடியது நியாயமா? கோபிகைகளுக்கு இழிவு உண்டாக வேண்டியதிருக்க ஏன் மேன்மை வந்தது?

**விடை.**—இந்த விஷயமாகத்தான் மேலெழுந்த வாரியாகப் பாகவதம் வாசிப்போர் பகவானைக் குற்றம் கூறுவது. இது பற்றியே வயது அல்லது உலக அனுபவம் முதிர்ந்த பிறகுதான் பாகவதம் வாசிக்க வேண்டும் எனப் பெரியோர் கூறுவர். அவ்வாறின்றி இளமை அல்லது குற்றங் கூறவேண்டும் என்ற நோக்கத்துடனுவது இதை வாசிப்பவர்களுக்கு கெடுதியே ஒழிய நன்மை வராது. ஸாதாரணமாகச் சிறுவர்கள் எளிதில் உணரக்கூடிய நியாயங்களை இங்கு எடுத்துக் காட்டுவோம்.

**1.** கிருஷ்ணன் பகவத் அவதாரம் ஆகையால் கோபிகைகளுடன் விளையாடியபோதிலும் அவர்களுக்கு மாத்திரம் திருப்தி உண்டாக்கினுரே ஒழிய, தாம் அதனுல் திருப்தி அடைய எண்ணவில்லை. அவர் நித்ய திருப்தர், என்பது பகவான் கோபிகைகளின் கர்வத்தை அடக்கிய விதத்தால் விளங்கும்.

**2.** கிருஷ்ணன் பகவான் மேல் செலுத்தப்பட்ட கோபிகைகளது ஆசை, வரவரப் பக்தியாகவே மாறிவிட்டதால் அது அவர்களுக்கு மேன்மையைக் கொடுத்ததே ஒழிய இழிவு உண்டாகும்படி செய்யவில்லை.

**3.** கிருஷ்ணன் பகவானுகையாலும், கோபிகைகளது ஆசை பக்தியாக மாறிவிட்டபடியாலும் தான் ராஜக்

கிரீடையில் பகவான் ஒவ்வொருவர் அருகிலும் ஒவ்வொரு கிருஷ்ணனாக இருந்து திருப்திபடுத்தினார். இதனாலேதான் கோபிகைகள் காலையில் தமது வீட்டிற்குச் சென்றதும் அவரது புருஷர்களுக்கு (பகவத் மாயையால் இரவு முழுதும் தமது பெண்சாதிகள் தமது அருகில் இருந்ததாகத் தோன்றியபடியால்) தமது பெண்சாதிகளிடம் கோபம் முதலியன வரவில்லை. இதனால் எந்த ஆசையும் பகவத் விஷயமாகத் திருப்பிவிட்டால், அது பல் இழந்த பாம்புபோலாக முடிவில் நிஜபக்தி யாகிவிடும் என்பது விளங்கும்.

**4.** பகவான் இந்த லீலைகளைச்செய்து பக்தர்களைத் திருப்தி படுத்துங்கால் சிறு குழந்தைப் பருவத்திலிருந்து கொண்டிருக்கிறார்.

**5.** பிறவி ஞானியாம் சுகப்பிரம்மம் வாக்கிலிருந்து சாகும் தருணத்திலிருக்கும் பரீக்ஷித்திற்கு இந்த விஷயம் கூறப்பட்டமையால் இது சிறப்பான விஷயமாகத் தான் இருக்கவேண்டும்.

**6.** பகவத் பக்தர்களே கோபிகைகளாகப் பிறந்து பகவத் கிருபைக்குப் பாத்திரமானார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**7.** சில கோபிகைகளை அவர்கள் புருஷர்கள் அன்று வெளியே போகவிட வில்லையாம். அவர்கள் பகவானைத் தியானம் செய்யத் தொடங்கி விட்டனர். பகவானை நேரிடக்கண்டு ஆனந்திப்பதற்கு இல்லையே என்ற துக்கத்தால் அவரது பாபங்கள் அழிந்தன. அவர்கள் தியான மூர்த்தியை மனஸார அணுகி ஸ்பர்சித்ததால் அவர்களது புண்யங்களும் க்ஷீணித்தன. இம்மாதிரியாகப்

பகவானைத் தமது நாயகனாக எண்ணித் தமது கர்மபந்தம் நழுவத் தேகம் நீங்கி அவர்கள் பரமபதம் பெற்றனராம். இதுவே கோபிகைகளது பற்றின் நிலை. இதனால் தான் அவர்களுக்கு மேன்மை உண்டாயிற்று.

8. பகவானைப்போன்ற சிறந்தோர் வாக்கியங்களை நம்போன்றவர் பின்பற்றவேண்டும். அவர்கள் எந்த நோக்கத்துடனேயோ சிற்சில காரியங்களைச் செய்து அதைச்செய்யும் விதத்தால் அதிலிருந்து வரும் பாப புண்யங்களுக்கு ஆளாகாமலே எப்பொழுதும் இருப்பர். அவ்வாறிருக்கத் தெரியாத நாம் பகவானைப்போல நடத்தப் புகுந்தால், நம்மால் முதலில் அம்மாதிரி காரியங்களை நடத்தவும் முடியாது, அப்படி முடிந்தபோதிலும் நாம் எளிதில் அவைகளிலிருந்து வரும் பாபங்களுக்கு ஆளாவோம்.

9. இவைக்ள் தவிர இன்னும் சில விஷயங்கள் இருக்கின்றன. அவைகள் மூலமாகப் பகவானுக்கும் கோபிகைகளுக்கும் உள்ள ஸம்பந்தத்தின் சிறப்பு நன்கு விளங்கும். ஆனால் அவை சிறுவருக்கு விளங்காது. ஆகையால் இங்கு சொல்லாமல் விடப்பட்டன.

முற்கூறிய முகாந்திரங்களிலிருந்து இந்தப் பாகத்தில் பகவானது ஸர்வந்தர்யாமித்வம், பக்த ரக்ஷணம் முதலிய கல்யாண குணங்களைக்கண்டு வியந்து நாமும் அவரைப் பக்திபண்ண முயன்றால், மேன்மை அடைவோமே ஒழிய, அவ்வாறின்றிப் பகவானைக் குற்றங் கூறல் அவரைப்போல நாமும் ஸ்திரீகளுடன் பழகல் ஆகிய கார்யங்களைச் செய்வோமாகில் நாம் அதோ கதியை அடையவேண்டியது தான். இம்மாதிரி செய்

யப் புகுந்தே சில கூட்டத்தார் கேவலஸ்திதிக்கு வந்து விட்டனர். இவர்களைக் கண்டே மற்றைய மதத்தோர்கள் நமது பகவானை வாய் கூசாது குற்றங்கூறுகின்றனர். இதற்கு இடங்கொடாமல், பகவானது இல்லீலைகளை உள்ளவாறு உணர்ந்து நாம் நடந்து கொள்ளுதல் வேண்டும்.

விஞ 70.—ராஸலீலை முடிந்ததும் நந்தகோபருக்கு எப்பொழுது, எம்மாதிரி, என்ன ஆபத்து வந்தது? அதைப் பகவான் எவ்வாறு நீக்கினார்?

விடை.—ஒருநாள் பரமசிவத்தைக் குறித்து கோபாலர்கள் ஓர் விரதத்தை ஸரஸ்வதிக் கரையில் அனுஷ்டித்தார்கள். அன்றிரவு ஒருவருக்கும் தெரியாது ஒரு பெரிய பாம்பு வந்து நந்தகோபரை விழுங்கத் தொடங்கியது. அப்பொழுது நந்தகோபர் இட்ட கூக்குரலால் கோபாலர்கள் எழுந்து கொள்ளிக்கட்டைகளால் பாம்பை அடித்தும் அந்த நந்தகோபரை விடவில்லை. அவரோ 'கிருஷ்ண!' கிருஷ்ண!' என்றே சொல்லிக் கொண்டிருந்தார். அப்பொழுது பகவான் ஓடோடியும் வந்து பாம்பை தமது காலால் தொட்டார். அது உடனே வித்யாதர ரூபம் தரித்தது. நந்தகோபர் பிழைத்தார். வித்யாதரன், 'நான் முன்னர் எனக்கு உண்டான தனரூப மதங்களால் சில ரிஷிகளைப் பரிஹாஸம் பண்ணின பாபத்திற்காக எனக்கு இந்தத் தாழ்ந்த ஜன்மம் வந்தது' என்று கூறிப் பகவானைத் துதிசெய்து அவர் உத்தரவின்பேரில் மறைந்தார்.

விஞ 71.—பகவானோடு கோபிகைகள் விளையாடிக்கொண்டிருந்த காலத்தில் அவர்களுக்கு என்ன ஆபத்து

வந்தது ? அதைப் பகவான் எவ்வாறு தீர்த்து வைத்தார் ?

விடை.—ஒருநாள் காட்டில் கோபிகைகள் பகவான் ஸந்நிதானத்தில் மெய்மறந்து ஆனந்தித்துக் கொண்டிருக்கையில் குபேரன் பரிவாரங்களுள் ஒருவனான குஹ்யகன் ஒருவன் வனம் வந்து கோபிகைகளைத் துரத்தி அடித்தான். அப்பொழுது கோபிகைகள் மிகுந்த பயத்துடன் பகவானிடம் சரணம் அடைந்து அவர் பெயரைச் சொல்லிக் கூக்குரலிட, பகவான் அவர்களுக்குத் தைரியம்சொல்லித் தாமும் பலராமரும், கையில் பனைமரம் ஒவ்வொன்றை எடுத்துக்கொண்டு ஓடிவந்தார்கள். குஹ்யகன் ஓடத் தலைப்பட்டான். அப்பொழுது பலராமர் கோபிகைகளுக்குக் காவலாக இருந்தார். பகவான் குஹ்யகனைத் துரத்திச்சென்று அவனை அடித்துக்கொன்று அவன் தலையிலிருந்த ரத்தினத்தைப் பிடுங்கிக் கொண்டுவந்து கோபிகைகள் முன்னிலையில் பலராமருக்குக் கொடுத்தார்.

வி௵ **72.**—இதன் பின்பு கோகுலத்தில் நடந்தவிஷயங்கள் என்ன ?

விடை.— பகவான் பகலில் மாடுகளை ஓட்டிக்கொண்டு காடு சென்ற சமயங்களில் கோபிகைகள் பகவான் செய்த வேணுகானத்தில் ஈடுபட்டவராய் அவரைப் பற்றிப் பேசிக்கொண்டே தமது பொழுதைப் போக்கினார்கள். இவர்கள் கூறியவைகளுக்குப் பாகவதத்தில் வேணுகீதை என்று பெயர். இவ்வாறிருக்கையில் காட்டில் ஒருநாள் பெரிய காளை உருவுடன் கம்ஸனால் ஏவப்பட்ட அரிஷ்டாஸுரன் என்பவன் வந்து பசுமாடுகளை வெருண்டு ஓடும்படி செய்தான். இந்த ரஹஸ்

யத்தை அறிந்த பகவான், அரிஷ்டாஸுரனோடு போர் செய்து முடிவில் அவன் கொம்பைப்பிடித்து முன்னும் பின்னுமாக மிகுந்த பலத்துடன் இழுத்தார். பின்பு அவனைக் காலால் உதைத்துத்தள்ளி அவன் கொம்பை முறுக்கி எடுத்து அதனால் அவனைக் குத்திக் கொன்றார்.

வின 73.—இப்படி இருக்கையில் கம்ஸ சபையில் என்ன விசேஷம் நடந்தது ?

விடை. — அரிஷ்டாஸுரவதமானது, நாரதர் கம்ஸ ஸபைக்கு வந்து, வஸுதேவர் பகவானைக் கோகுலம் கொண்டுபோய் விட்டது, அவர் யசோதை பிள்ளையாக வளருவது முதலிய ரஹஸ்யங்களை எடுத்து உரைத்தார். அப்பொழுது கம்ஸன் வஸுதேவரைக் கொல்லப் புறப்பட, நாரதர் அவனைத் தடுத்தார். அவன் தேவகீ வசுதேவரை சிறையி விட்டுவிட்டுத் தன் சபை வந்து பகவானைக் கொன்று வரும்படி கேசி என்ற அஸுரனை ஏவினான். இதன் பின்பு தன் துர்மந்திரிகளோடு யோசனை செய்து அப்பொழுது தொடங்கவேண்டிய தநுஸ்பூஜையில் மல்லக ஜெட்டி யுத்தம் முதலியவைகள் ஏற்படுத்தி, அதற்காகப் பகவானையும் பலராமரையும் அழைத்து, அவர்களைத் தனது யானை குவலயாபீடம், அல்லது தனது மல்லக ஜெட்டிகள் ஆகிய இவர்கள் மூலமாகவாவது கொன்றுவிடலாம் என்று தீர்மானித்தான். உடனே இவைகளுக்குவேண்டிய ஏற்பாடுகள்செய்ய உத்தரவு கொடுத்துவிட்டு, யாதவ சிரேஷ்டரான அக்ரூரரை அழைத்துத் தன் கொடிய எண்ணங்களை வெளியிட்டு கிருஷ்ண ராமரை அழைத்துவரும்படி அவரை ஏவினான். அதற்கு அவர்

'இப்பொழுது பகவான் இங்குவந்தால் அவர் உன் கையில் அகப்படாத நீ அவருக்கு இரையாகிவிடலாம். ஆதலால் அபஜெயத்திற்கும் தயாராக இரு. எப்படி முடியுமோ? ஜாக்கிரதை! ஆயினும் நான் போய் அழைத்துவருகிறேன்!' என்று மறுமொழி கூறி, பிருந்தாவனம் நோக்கிப் புறப்பட்டார்.

**வி 74.**—*அக்ரூரர் பிருந்தாவனம் வருவதற்கு முன் அங்கு என்னென்ன நடந்திருந்தன?*

**விடை.**—இதற்குள் கம்ஸனால் ஏவப்பட்ட கேசி என்ற அஸுரன் குதிரை உருவத்துடன் வந்து பகவானைத் தனது காலால் உதைத்தான். இருவருக்கும் போர் உண்டாயிற்று. அதன் முடிவில் பகவான் அவன் காலைப் பிடித்துச் சுழற்றி எறிந்து விட்டு அவன் வாயுள் தமது கையைவிட்டார். அவன் மூச்சுத்திணறி உயிரிழந்து விழுந்தான். இதன் பின்பு கோபாலர்கள் திருடர் விளையாட்டு விளையாடினார்கள். அதில் சிலர் திருடர் போலவும், சிலர் ஸேவகர்கள்போலவும், சிலர் ஆட்டுக் குட்டிகள்போலவும் நடித்தார்கள். அப்பொழுது வியோமாஸுரன் என்பவன் ஒருவன் திருடன்போல நடித்துக்கொண்டு ஆட்டுக்குட்டிகள்போல நடிக்கும் கோபாலச்சிறுவர்களைக் கொஞ்சதூரம் அழைத்துச் சென்று அவர்களை ஓர் மலைக்குகையுள் அடைத்து ஒரு கற்பாறையால் குகை வாயிலை மூடிவிட்டான். இதை அறிந்த பகவான் அவனைக் கட்டிப்பிடித்துப் பூமியில் உருட்டிவிட்டார். பின்பு அவனை யாகபசுவைக் கொல்வது போலக் கொன்றார். உடனே கோபாலச் சிறுவர்கள் இருக்கும் குகைவாயிலிலிருந்த கல்லைப் புரட்டித் தள்ளிவிட்டு அவர்களைக் காப்பாற்றினார்.

வினு **75.**—கம்ஸனுல் ஏவப்பட்ட அக்ரூரர் என்ன செய்தார்?

விடை.—அன்று இரவு முடியும்வரையில் மதுராபுரியாகிய கம்ஸன் பட்டணத்தில் பகவானைத் தாம் பார்க்கும்படி நேர்ந்ததைப் பற்றி எண்ணி ஆனந்தித்துக்கொண்டு பரவசமாகி இருந்துவிட்டு, பொழுது விடிந்ததும் மிகுந்த சிரத்தையோடு கோகுலத்திற்குப் புறப்பட்டார். பகவானைத் தியானம் செய்துகொண்டு ஆனந்தக் கடலில் மூழ்கி இருந்தமையால் அக்ரூரர் பிரயாணத்தின் கஷ்டத்தைப் பாராட்டாமலே இருந்துகொண்டு சாயங்காலம் கோகுலம் வந்தார். அங்கு பகவான் அடிச்சுவடுகள் மண்ணில் பதிந்திருப்பதைக் கண்டு அக்ரூரர் பக்தி மேலிட்டதால் ஓயாது கொஞ்ச நாழிகை அவைகள்மேல் புரண்டு பகவத்பத் தூளியைச்சிரமேல்கண்டு மிகுந்த வணக்கத்துடன் நந்தகோபர் வீடுவந்து பால் கறக்கும் இடத்தில் கிருஷ்ண ராமானைக் கண்டார்! அவர்களது திவ்யமங்கள விக்கிரஹத்தில் ஈடுபட்டுப்பரவசமானுர்! ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார்! பகவான் அவரை மார்புறத் தழுவினுர். பலராமர் அவரை அழைத்துக்கொண்டு தமது இருப்பிடம் சென்றூர். தகுந்த மரியாதைகள் செய்தார்.

வினு **76.**—அப்பொழுது அக்ரூரருக்கும், கிருஷ்ணராமாள் முதலியோருக்கும், என்ன ஸம்பாஷணை நடந்தது? பின்னர் என்ன நடந்து எவ்வாறு முடிவுபெற்றது?

விடை.—இரவுபோஜனம் முடிந்ததும் நந்தகோபர் முதலியோர் மதுராபுரி யோக க்ஷேமங்களை விசாரிக்க, அங்கு கம்ஸனுல் நடத்தப்பட்ட அநியாயங்களை விஸ்தார

மாக எடுத்துச்சொல்லி முடிவில் வஸுதேவ தேவகீ களுக்கு வந்த ஆபத்தை சொன்னார். பின்னர் தான் வந்திருக்கும் காரியத்தையும், கம்ஸன் சதியாலோசனை யையும் பகவான் முதலியோர்க்கு எடுத்துரைத்து அவர்களை மதுராபுரிவந்து தநுஸ்பூஜையைப் பார்க்கும் படி அழைத்தார். இதை அறிந்த கோபிகைகள் பக வான் பிரிந்து போவதை ஸஹியாது வெகுவாகப் பிர லாபித்தார்கள். மறுநாட்காலையில் பகவான் அவர்களைத் தேற்றிவிட்டு அக்ரூரர் கூடவே புறப்பட்டு விட்டார். இவர்களது கொடி மறையும் வரையில கண்கொட்டாது பார்த்துவந்த கோபஸ்திரீகள், பின்னர் மிகுந்த துக் கத்தை அடைந்து பகவானது லீலைகளைச் சொல்லிக் கொண்டு காலங்கழித்தனர்.

வினா **77.**—இவ்வாறு பகவானையும் பலராமரையும் அழைத்துக்கொண்டு போகையில் அக்ரூரர் எங்கு முத லில் தங்கினார்? அங்கு என்ன விசேஷம் நடந்தது?

விடை.—முதலில இவர்கள் காளிந்தியின் கரையில் தங்கி னார்கள். அங்கு கிருஷ்ணராமாள் முதலில் இறங்கி தமது அனுஷ்டானங்களைச் செய்துவிட்டு அதன் தீர்த்தத்தை உட்கொண்ட பின்னர், ரதத்தில்வந்து ஏறிக்கொண்டனர். பின்பு அக்ரூரர் நதியண்டைவந்து ஸ்நாநனம்செய்ய அதனுள் மூழ்கினார். அப்பொழுது நதியுள் கிருஷ்ணராமாளைக் கண்டார்! 'ரதத்திலிருந்த வர் எவ்வாறு இங்கு வந்துவிட்டனர்!' என்று வியந் தார்! தமது தலையைத் தூக்கினார். ரதத்தில் அவர்கள் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். மறுபடியும் தண்ணீ ருள் மூழ்கினார்! உள்ளே கிருஷ்ணராமாள் இருப் பதைக் கண்டார்! கனவோ நனவோ என ஸந்தே

கித்தார்! உடனே பகவான் சேஷசாயியாக திருப்பாற் கடலில் இருக்கும் தமது திவ்யமங்களரூபத்துடன் தமது கண் முன்னே ஆனந்தசேவை யளித்ததைக் கண்டு மெய்மறந்து தண்ணீரில் வெகுநாழிகை முழுகி இருந்தார். அக்ரூரர் துதிசெய்துகொண்டிருக்கும் பொழுதே பகவான் தமது ரூபத்தைத் தண்ணீருள் இருந்து மறைந்தார். உடனே அக்ரூரர் தண்ணீரை விட்டு எழுந்து கிருஷ்ணராமனை மனம் உருகி 'கண்டேன்! கண்டேன்!! கண்கொள்ளாக் காட்சியை!!' என்று வாய்விட்டுப் புலம்பித் துதித்துவிட்டு தமது ரதத்தை மதுரைநோக்கி நடத்தினார்.

**வினா 78.**—மதுராபுரியை அடைந்ததும் பகவான் என்ன செய்தார்? மேல் என்ன நடந்தது?

**விடை.**—மதுராபுரி யடைந்ததும் அங்கு பிருந்தாவனத்திலுள்ள தமது உறவினர்கள் எல்லோரும் நந்தகோபரை முன்னிட்டுக்கொண்டுவந்து சேர்ந்திருப்பதைக்கண்டு, அக்ரூரரை முன்னாலே பட்டணத்துள் போகும்படி உத்தரவு செய்துவிட்டு தான் பின்னே தமது உறவினரோடு வருவதாகப் பகவான் சொன்னார். அக்ரூரர் பகவானைவிட்டுப் பிரிய மனம்வராது தத்தளித்தார். இதைக்கண்ட பகவான் அக்ரூரர் வீட்டிற்குப் பலராமரோடுவந்து தங்குவதாக வாக்களிக்க அக்ரூரர் தேறி நகரம் புகுந்தார்.

**வினா 79.**—பகவான் நகரப்பிரவேசம் செய்ததும் அங்கு எல்லாம் எவ்வாறிருந்தது? யார் யார் எவ்வெக் காரணத்தால் எந்த கதியை அப்பொழுது அடைந்தனர்?

விடை.—பகவான் நகரப்பிரவேசம் செய்ததும் எல்லோரும் அவர்மேல் புஷ்பங்களைத் தூவி ஆனந்தித்தனர். மதுரா புரியில் அன்று பெரிய உத்ஸவம்போல எல்லாம் விமரிசையாய் நடந்தது. இப்படி எல்லோரும் ஆனந்தித்துக்கொண்டிருக்கையில் கம்ஸனது வண்ணான் பகவான் வேண்டுகோளின்படி அவருக்குத் தகுந்த ஆடை முதலியன கொடுக்காது, அவரை நாவில் நரம்பின்றி கர்வத்தாலும் மூடத்தனத்தாலும் திட்ட, பகவானால் உறவினர் ஸஹிதமாக அடிபட்டு விழுந்தான். பகவானும் பலராமரும் வண்ணான் கொண்டு வந்த ஆடைகளைத் தமது இஷ்டப்படி அணிந்துகொண்டார்கள். இதன் பின்பு ஸுதாமா என்ற புஷ்பக்காரன் மிகுந்த பக்தியுடன் பகவானைப் புஷ்பங்களால் அலங்கரிக்க, அவன் தன் உண்மையான எண்ணப்படி மாறாத பகவத்பக்தியைப் பகவானால் அடைந்து கிருதார்த்தனானான். இதன் இடையில் போய்க்கொண்டிருந்த கம்ஸனது ஸைரந்திரியாகிய கூனி (திரிவக்ரை, மூன்று கோணலை உடையவள்) தான் கம்ஸனுக்காகக் கொண்டுபோன சந்தனம் முதலியவைகளைப் பகவானுக்கு அற்பிதம்செய்து அவர் அநுக்கிரஹத்தால் கோணல்கள் மாறி மிகுந்த அழகுடையவளானாள். (கோபிகைகளைத் திருப்திப்படுத்தியதுபோல) அவளையும் திருப்திப்படுத்துவதாகப் பகவான் வாக்களிக்க, அவள் ஆனந்தபரவசமானாள். இவ்வாறு சிலர் பகவத் அநுக்கிரஹத்திற்கும் சிலர் பகவத் தண்டனைக்கும் தமது குணத்திற்குத் தகுந்தபடி ஆளானார்கள்.

வினா 80.— இதன் பின்னர் கிருஷ்ணராமாள் என்ன செய்தார்கள்?

விடை.—இதன் பின்பு கிருஷ்ணராமாள் தநுஸ்பூஜை நடக்குமிடஞ்சென்று அங்கு ஒரு பெரிய தநுஸ் அலங்கரித்து வைத்திருப்பதைக் கண்டார்கள். அங்குள்ளோர் என்ன சொல்லியும் கேட்காது பகவான் அலக்ஷ்யமாக 'அந்த தநுஸை எடுத்து இடதுகையால் நாண் ஏற்றினர்! அப்பொழுது மதுராபுரியையே நடுங்கும்படியான சப்தத்தை உண்டாக்கிக்கொண்டு அந்த தநுஸ் ஒடிந்தது! இந்த சப்தம் கம்ஸனுக்கு மிகுந்த பயத்தை உண்டாக்கியது. தநுஸைக் காத்துக்கொண்டிருந்தவர்கள் எல்லோரும் ஒன்ருகச் சேர்ந்து மிகுந்த கோபத்துடன் பகவானை வந்து தாக்கினர். அவர்களைக் கிருஷ்ணராமாள் வில்லின் ஒவ்வொரு பாகத்தை ஆதாரமாகக் கொண்டு வெகு ஸாதாரணமாகத் தடுத்து எல்லோரையும் மடித்தார்கள். பின்பு பகவான் வெளிவந்து பட்டணத்தில் உலாவி வருகையில் அந்நகரவாஸிகள் எல்லோரும் கோபாலர்கள் அடைந்த ஆனந்தத்தை அடைந்து பரவசமாயினர். இதற்குள் சாயங்கால சமயம் வந்தது.

விஞ 81.—மறுநாள் கம்ஸன் ஸபையில் என்னென்ன ஏற்பாடுகள் நடந்தன?

விடை.—கம்ஸ ஸபையில் சண்டைக்கூடம் முதலியன ஏற்பாடு செய்யப்பட, கம்ஸன், நந்தகோபர் முதலியோர் அங்கு வந்து தமக்கேற்பட்ட தகுந்த விடங்களில் தகுந்த ஆஸனத்தில் உட்கார்ந்தனர். முன் ஏற்பாட்டின்படி சாணூரன் முஷ்டிகன் முதலிய மல்லகஜெட்டிகள் சண்டைக்கூடம் புகுந்தனர். குவலயாபீடம் என்ற யானைச் சண்டைக்கூட வாயிலில் நிறுத்தப்பட்டது. இவ்வாறு எல்லாம் தயாரானதும் பகவான் பலராமருடன் வந்து சேர்ந்தார்.

விஞ 82.—பகவான் வந்ததும் அங்கு என்ன பிரமாதம் விளைந்தது? அது எவ்வாறு முடிந்தது?

விடை.—பகவான் சண்டைக்கூட வாயிலில் வந்ததும் யானை அதை மறைத்துக் கொண்டிருப்பதைக் கண்டு யானைப் பாகனை அழைத்து யானையை ஒதுக்கும்படி பகவான் கேட்டார். அவன் கம்ஸனால் ஏவப்பட்ட வனுகையால் யானையைக் கிருஷ்ணராமாள்மேல் ஏவி விட்டான். யானை தாக்குவதைக் கண்ட பகவான் அதனுடன் கொஞ்சநாழிகை யுத்தம் செய்து முடிவில் அதன் கொம்பைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளிக் காலால் தேய்த்துவிட்டார். பின்னர் அதன் கொம்புகளைப் பிடுங்கி தாம் ஒன்றும் பலராமர் ஒன்றுமாக எடுத்துக்கொண்டு யானைப்பாகனைக் கொன்றுவிட்டு, சண்டைக்கூடத்துள் புகுந்தனர்.

விஞ 83.—இவர்கள் சண்டைக்கூடத்துள் புகுந்த சிறப்பு எவ்வாறிருந்தது?

விடை.—இவர்கள் சண்டைக்கூடம் புகும்பொழுது, மல்லக ஜெட்டிகளுக்கு இடிபோலவும், ஜனங்களுக்குப் புருஷோத்தமர் போலவும், ஸ்திரீகளுக்கு அவர்கள் மனத்தைப் பறிக்கும் கோடி மன்மதன் போலவும், கோபாலர்களுக்கு உறவினர்களாகவும், கொடுங்கோன் மன்னருக்குத் தம்மைப் பிளக்கும் கோடரியாகவும், நந்தகோபர் முதலியோருக்கு அருமைப் பிள்ளையாகவும், கம்ஸனுக்கு யமன்போலவும், யோகிகளுக்குப் பரம் பொருளாகவும், விருஷ்ணி முதலிய தமது குலத்திற்குக் குலதெய்வமாகவும் ஏக காலத்தில் தோன்றினர். அப்பொழுது எல்லோரும் பகவானது பிறப்பு

பால்ய லீலைகள் முதலியவைகளை ஒருவருக்கு ஒருவர் சொல்லிக்கொண்டு ஆனந்த பரவசராயினர்.

விஞ 84.—சண்டைக்கூடத்தில் நடந்த விஷயங்கள் என்ன?

விடை.—பகவானும் பலராமரும் சண்டைக்கூடம் புகுந்ததும், சாணூரன் முஷ்டிகன் முதலியோர் இருவரை கம்ஸன் முதலியோரைத் திருப்தி செய்வதற்காக மல்ல யுத்தத்திற்கு அழைத்தனர். அப்பொழுது பகவான் 'நாங்களோ சிறுவர்கள்! எங்களைப்போன்றவரோடு சண்டையிட்டு எமது ராஜனை திருப்திசெய்யுங்கள். நீங்களோ பெரிய பலசாலிகள்!' என்றார். அதற்கு சாணூர முஷ்டிகர்கள், 'நீங்களா சிறுவர்கள்? கோகுலத்தில் நீங்கள் என்னென்ன செய்திருக்கிறீர்கள்? நீங்கள் எங்களோடுதான் சண்டையிடவேண்டும்!' என்று போருக்கழைக்க அவர்கள் இஷ்டப்படி பகவான் சாணூரனோடும், பலராமர் முஷ்டிகனோடும் மல்ல யுத்தம் தொடங்கினர். இதில் பகவான் முதலில் செய்த சண்டையைக் கண்டு 'பாவியான கம்ஸன் இந்த அதர்மமான மல்ல யுத்தத்தை அங்கீகரிக்கிறான்" என்று பலர் முறுமுறுத்தனர். இந்த யுத்தத்தில் சாணூர முஷ்டிகர்கள் கிருஷ்ணராமாளைக் கொன்று கம்ஸனைத் திருப்திசெய்ய எவ்வளவோ முயன்றனர். கொஞ்ச நாழிகை விளையாட்டாக இவர்களோடு கிருஷ்ண ராமாள் யுத்தம் செய்துவிட்டு முடிவில் சாணூர முஷ்டிகர்களைக் கொன்று தள்ளினர். இதைக் கண்டு அவர்களுக்கு ஸஹாயமாக இருந்த மல்லகஜெட்டிகள் இவர்கள் பகவானையும் பலராமரையும் எதிர்த்து கூடிய சீக்கிரத்தில் மாண்டு விழுந்தனர்.

வி**ஞ 85.**—இவ்வாறு தனது தந்திரமெல்லாம் வீணானது கண்டு கம்ஸன் என்ன செய்தான்? மேல் அவன் கதி எவ்வாறாயிற்று?

விடை.—பகவானைக் கொல்லத் தான் செய்த பிரயத்னங்கள் எல்லாம் வீணானது கண்டு மிகுந்த கோபங் கொண்டு, பயத்தால் படபடப்பு அதிகமாக 'கோலாஹலத்தை நிறுத்துங்கள்! இந்தக் கிருஷ்ண ராமானை மதுராபுரியைவிட்டு ஓட்டிவிடுங்கள்; வஸுதேவ தேவகிகளைக் கொன்றுவிடுங்கள். என் தகப்பன் முதலிய என் விரோதிகள் எல்லோரையும் மிகுதியாக விடாது கொன்று சாயுங்கள்!' என்று பிதற்றத் தொடங்கினான். இது கொடியோர் முடிவான நிலை. இது வந்ததைக்கண்ட பகவான் கோபங்கொண்டு அவன் இருந்த மேடையின் மேல் ஏறி, அவன் கத்தி முதலியவைகளை லக்ஷ்யம் செய்யாது அவன் கிரீடத்தைத் தள்ளி அவன் தலைமயிரைப் பற்றி இழுத்துக் கீழே தள்ளி அவனைக் கரகரவென்று இழுத்துக்கொன்றார். பயத்தால் ஸதா இதுவரையில் பகவானது திவ்ய மங்கள விக்ரஹத்தைத் தன் முன் கண்டு வெருண்டு அதிலே மனது செல்லப் பெற்றவனான கம்ஸன் தான் இறந்ததும் ஸாரூப்பிய பதவியை (பகவானைப்போன்ற ரூபத்தை) அடைந்தான்.

வி**ஞ 86.**—இவ்வாறு கம்ஸன் இறந்ததும் பகவான் அந்த ஸபையில் என்னென்ன செய்தார்?

விடை.—முதலில் கம்ஸனுக்கு ஸஹாயமாக வந்த அவன் தம்பிகளைப் பலராமரால் எளிதில் கொல்லுவித்தார். இறந்தவரது பெண்சாதிமார்கள் அங்கு வந்து பிரலாபிக்கத் தொடங்கினர். இதற்குமேல் பகவான் கம்ஸன்

முதலியோராது ஈமக்கடன்களை நடத்தவேண்டிய ஏற்பாடுகள் செய்துவிட்டு, வஸுதேவ தேவகிகளைச் சிறையிலிருந்து விடுவித்தார். அவர்கள் தம்மைப் பரம்பொருளாக எண்ணிப் பரவசமாயிருப்பதைக் கண்டு, நயவார்த்தைகளால் அதை மறக்கடிக்க அவர்களுக்குப் பகவானிடம் பிள்ளை என்ற அஞ்ஞானம் வந்தது. அங்கிருந்து உக்கிரஸேனனிடம் வந்து அவ்வரை மதுராபுரி அரசனாக்கி அவர் ஆக்ஞைக்குத் தாங்கள் உட்பட்டு நின்றனர். அப்பொழுது கம்ஸனுக்குப் பயந்து ஓடி இருந்த தமது பந்து வர்க்கங்களாகி, யாதவாள், விருஷ்ணிகள், அந்தகாள், தசார்ஹாள் முதலியோரை மதுராபுரிக்கு வரவழைத்து அவர்கள் நிலம் முதலிய ஸொத்துக்களை அவர்களுக்குப் பகவான் கொடுத்தார். இவை எல்லாம் முடிந்ததும் நந்தகோபரிடம் பகவான் வந்து மிகுந்த அன்புடன் தாம் மேல் மதுராபுரியில் இருக்கவேண்டும் என்பதாகவும், வேறுகாலங்களில் கோகுலம்வந்து அவர்களைப் பார்ப்பதாகவும் சொல்லி, நந்தகோபர் முதலியோருக்குச் செலவு கொடுத்தனுப்பினார்.

வின 87.—இதன் பின்பு வஸுதேவர் கிருஷ்ணராமாள் விஷயத்தில் என்ன செய்தார்?

விடை.—வஸுதேவர் மிகுந்த ஸந்தோஷத்துடன் கிருஷ்ணராமாளுக்கு உபநயனம் செய்தார். பகவான் பிறந்தபொழுது மனஸால் தாம் செய்திருந்த கோதானங்களை இந்தத் தருணத்தில் பசுமாட்டை நேராகத் தானம்செய்து நடத்திக்கொண்டார். யாதவர்களது புரோஹிதராகிய கார்க்கரிடமிருந்து உபதேசம் பெற்று பிரம்மசாரிகளாகிய கிருஷ்ணராமாள் கர்சியில் பிறந்து



...தேவ தேவகிகளைச் சிறையிலிருந்து விடுத்தல்.

அவந்தீபுரத்தில் ? வாஸம் செய்துகொண்டிருந்த ஸாந்திபனி மஹரிஷியிடம் குருகுலவாஸத்திற்குப் போய் அவர் முன்னிலையில் வேதம், வேதாங்கங்கள், கலைஞானங்கள் எல்லாவற்றையும் இரண்டுமாஸ காலத்திற்குள் கற்றுத் தேர்ந்தனர். இதன் குருதக்ஷிணை விஷயமாகத், தமது குருவின் அபிப்பிராயத்தைப் பகவான் கேட்டார்.

வி௵ 88—ஸாந்தீபனி என்ன குருதக்ஷிணை கேட்டார்? பகவான் அதை எவ்வாறு கொடுத்தார்?

விடை.—ஸாந்தீபனி கிருஷ்ணராமாளது புத்திசக்திகளை நோக்கி, தமது பெண்சாதியிடம் கலந்துபேசி கொஞ்சநாளைக்கு முன்பு பிரபாஸ தீர்த்தத்தில் ஸமுத்திரத்தில் சிக்கிக்கொண்டு மாண்ட தமது குழந்தையைத் தம்மிடங்கொண்டு சேர்ப்பதே தமக்கு வேண்டிய குருதக்ஷிணை என்று கூறினர். அதற்குப்பகவான் இசைந்து பிரபாஸ தீர்த்தம்வந்து ஸமுத்திர ராஜனை அழைக்க அவன் மிகுந்த விநயத்துடன் பகவானுக்கு வேண்டிய மரியாதைகளைச் செய்தான். அப்பொழுது அவனிடமிருந்து ஸாந்தீபனி குழந்தையை அவன் எடுத்துச் செல்லவில்லை என்றும், ஒருவேளை குழந்தை தன்னிடம் சங்குப்பூச்சி ரூபமாக இருக்கும் பஞ்சஜனன் என்ற அஸுரனிடம் இருக்கலாம் என்றும் தெரிந்து கொண்டார்கள். உடனே பகவான் ஸமுத்திரத்துள் அந்த அஸுரனைக் கொன்று சங்குள் பார்க்கையில் குழந்தை காணவில்லை. அந்த சங்கை தம் உபயோகத்திற்காகப் பகவான் எடுத்துக்கொண்டார். இதுதான் பாஞ்சஜன்யம் என்ற சங்கு. சீக்கிரத்தில் பகவான் யமபட்டணம் வந்து பாஞ்சஜன்யத்தை ஊத, யமன் மரி

யர்தைசெய்து அவர் வேண்டுகோளின்படி ஸாந்தீபனி பிள்ளையைக் கொடுத்தான். அந்தக் குழந்தையை தமது குருவிடம் ஒப்புவித்து அவரைத்திருப்தி செய்துவிட்டு அவரிடமிருந்து ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு தமது வீடுவந்து சேர்ந்தனர்.

வின 89—.மதுராபுரி வந்ததும் பகவான் முதலில் என்ன செய்தார் ?

விடை.—விருஷ்ணி சிரேஷ்டராயும், பகவத்பக்தராயும் உள்ள உத்தவரை ஏகாந்தமாக அழைத்து நந்தகோகுலம்போய் தமது பிரிவாற்ருமையால் வருந்தும் கோபாலர்கள் கோபிகைகள் முதலியோரை ஞானேபதேசம் செய்து தேற்றிவரும்படி உத்தரவு செய்தார். உத்தவர் பகவத்பக்தர்களான கோகுலவாஸிகளைக் காணும் பாக்கியம் தமக்கு வந்ததை எண்ணி ஆனந்த பரவசமாய் பகவான் உத்தரவைச் சிரமேல்தாங்கி மிகுந்த சிரத்தையுடன் புறப்பட்டு ஒரு ஸாயங்காலம் கோகுலம் வந்து சேர்ந்தார்.

வின 90—கோகுலவாஸிகள் உத்தவரைக் கண்டதும் என்னசெய்தார்கள் ? அவர் என்னசெய்தார் ?

விடை.—நந்தகோபர் வீட்டில் உத்தவர் தகுந்த மரியாதைகளை அடைந்து அன்றிரவு தங்கினர். அப்பொழுது அங்கிருந்தோர் எல்லோரும் பகவானிடம் ஈடுபட்டு அவரது லீலைகளை விடாது சொல்லிக்கொண்டு பொழுது போக்குவதைக்கண்டு ஆனந்தித்தார். நந்தகோபர் யசோதை முதலியவர்கள் பகவானைப் பிரிந்து நிற்கமுடியாது அவரை எண்ணித் துக்கிக்கத் திவ்யதரிசனம் தருவார். உங்கள் அருகாமையிலேயே ஸதா

இருப்பார். சற்றுப் பொறுங்கள். உங்கள் பிள்ளையாகிய கிருஷ்ணன் உங்கள் பிள்ளைமாத்திரம் அல்ல. அவர் ஸகல புவனங்களிலும் கலந்திருப்பவர். எல்லோருக்கும் பிரியமானவர். அவரைத்தவிர ரஸமான வஸ்து வேறொன்றுமில்லை!' என்று சற்று ஞானோபதேசம் செய்து அவர்களை ஸமாதானப் படுத்தினார். இவரால் பகவத்விஷயமாகவே அன்றிரவு முழுவதும் கழிந்தது. பொழுதுவிடிந்ததும் நந்தகோபர் வீட்டுவாயிலில் ரதம் வந்திருப்பதைக்கண்டு கோபிகள் எல்லோரும் கிருஷ்ணன்தான் வந்திருப்பதாக எண்ணி ரதத்தண்டை கூடினர்.

**வினா 91**—கோபிகைகள் மனம் உத்தவரைக் கண்டதும் என்னமாக இருந்தது? அவர்களை உத்தவர் எவ்வாறு தேற்றினார்?

**விடை.**—கோபிகைகள் உத்தவரைக் கண்டதும் பகவான் தானோ என்று முதலில் ஸந்தேஹித்துப் பின்பு தம் எண்ணப்படி இல்லாததால் மிகுந்த துக்கத்தை அடைந்து பகவான் லீலைகளை எடுத்துரைத்து புலம்பினர். அப்பொழுது உத்தவரை ஸுகானுபவத்தை இச்சிக்கும் வண்டாகக் கோபிகைகள் எண்ணித் தமக்குப் பகவான்மேல் உள்ள அன்பையும், அவர் பிரிவு ஆற்றாமையால் உண்டாகும் துன்பத்தையும் வெகு உருக்கத்துடன் வெளியிட்டனர் (இதற்கு பிரமரகீதை என்று பெயர்). இப்படி பக்தி பரவசராக இருந்து கஷ்டப்படும் கோபிகைகளைத் தேற்றி ஸுகம் அடையும்படி செய்யப் பகவான் தம்மிடம் சொல்லியனுப்பிய ஞானத்தைப் பின் வருமாறு உத்தவர் புகட்டத் தொடங்கினார்; "பகவத்பக்தி பூர்ணமாக வந்திருக்கும்

நீங்களே பெரியவர்கள். இந்த பக்தி உள்ளபடி வருவதற்குத்தான் தானம், விரதம், தபஸ், அத்யயனம், யாகம் முதலியவை எல்லாம் ஏற்பட்டது. உலகவிஷயப் பற்றுக்கள் நீங்கி உங்களுக்கு இப்பற்று உண்டானது பெரிய காரியம். பகவான் உங்களை நோக்கி 'எங்குமிருக்கும் என்னிடமிருந்து உங்களால் எப்படிப் பிரிய முடியும்? எனது சக்தியாலேயே என் ஸந்நிதானத்தில் உலகம் சேஷ்டிக்கின்றது. ஆத்மாவோ சித்ஸ்வரூபன். சுத்தன். இப்படி இருப்பதால் மனிதன் 'பொறி வழி சென்று போகம் புஜித்திடா திருக்கவேண்டும்.' இதுவே வேதஸாரம். நான் இப்பொழுது உங்களைவிட்டுப் பிரிந்து மதுரையில் இருப்பதால் தான் உங்கள் பக்தி அதிகமாயும், ஸதா மாறுததாயும் இருக்கும் இதற்குத் திருஷ்டாந்தமாக ராஸலீலா காலத்தில் என்னிடம் வந்து சேரமுடியாது வீட்டில் தமது நாயகர்களால் தடுக்கப்பட்ட கோபிகைகளே எளிதில் மேலான பதவியை அடைந்ததைப் பாருங்கள்! என்று சொல்லச் சொன்னார். இதன் பின்பு கோபிகைகளுக்குப் பிரிவாற்றாமையால் உண்டாகும் கஷ்டம் தீர அவர்கள் மனதில் சாந்தி குடிகொண்டது.

வின 92.—பின்பு உத்தவர் என்ன செய்தார்?

விடை.—இதன் பின்பு பகவானைப்பற்றிச் சில விஷயங்களை விசாரித்துவிட்டு கோபிகைகள் மௌனமாக, உத்தவர் கொஞ்ச காலம் கோகுலத்தில் இருந்து கிருஷ்ணகதைகளை அங்குள்ளவருக்குச் சொல்லியும், அவர்கள் சொல்லத் தான் கேட்டும் ஆனந்தித்துக் கொண்டிருந்தார். இப்படி இருக்கையில் 'பகவத்பக்தர்களாகி உங்கள் பாத ஸேவைக்காக நான் இந்த பிருந்தாவனத்தில் புல் பூண்

டாகவாவது பிறந்தால் நலமாயிருக்கும்' என்று இது போன்ற பக்திவாக்யங்கள் மூலமாகக் கோபிகள் முதலி யோரிடம் இருந்து விடைபெற்று, மதுராபுரி வந்து நந்தகோகுல வாஸிகளின் பக்தி வைபவத்தை பகவா னுக்குத் தெரிவித்தார்.

வினா **93.**—கோபிகைகளைத் திருப்திசெய்ததும் பகவான் என்னென்ன செய்தார்?

**விடை.**—இதன் பின்பு பகவான் தம்மைத் தரிசிக்கவேண்டும் என்று அடங்கா ஆவல் கொண்டிருந்த கம்ஸன் ஸைரந்திரியாகிய திரிவக்ரை வீட்டிற்கு உத்தவரோடு சென்றார். இவரைக் கண்டதும் அவள் மோக்ஷம் வேண்டும் என்று கேட்க மனம் வாராது, உலகஸுகம் வேண்டும் என்று கேட்க (அவ்வளவுதான் அவளுக்குத் தோன்றியது) பகவான் அவள் வீட்டிலே கொஞ்சநாள் இருந்து அவளுக்கு வேண்டிய வரன்களைக் கொடுத்து விட்டு தமது இருப்பிடம் வந்து சேர்ந்தார். பின்னர் அக்ரூரரை திருப்தி செய்வதற்காக அவர் வீடுசெல்ல மிகுந்த மன உருக்கத்துடன் பகவானை அவர் ஆரா தித்து விநயத்துடன் அருகே நிற்க, பகவான் அவரை நோக்கி, 'பாண்டவர்களது நன்மைக்காக ஹஸ்தினாபுரி சென்று அவர்கள் தகப்பனை இழந்து கஷ்டப்படும் இக் காலத்தில் அவர்களைத் தேற்றிவாரும். மேலும் திருத ராஷ்டிரன் தன் பிள்ளைகளுக்குக் காட்டும் பக்ஷபாதத் தால் பாண்டவர்களுக்கு மிகுந்த கஷ்டங்கள் உண்டா கின்றனவாம். அதையும் தடுக்கக் கூடியவரையில் பிர யத்தனம் செய்து வாரும்!' என்று உத்தரவு செய்தார்.

வினா **94.**—அப்பொழுது அக்ரூரர் என்ன செய்தார்?

விடை.—பகவான் உத்தரவைச் சிரமேல் தாங்கி ஹஸ்தினா புரி சென்று பீஷ்மத் துரோணாதிகளையும், திருதராஷ்டிரன் முதலியோரையும் கண்டு அவர்களது க்ஷேமத்தை விசாரித்தார். பின்னர் விதுரர் குந்தி இவர்களைக் கண்டு அவர்களிடமிருந்து பாண்டவர்களுக்கு வரும் புதிய கஷ்டங்களைத் தெரிந்துகொண்டு கொஞ்சம் துக்கப்பட்டார். அப்பொழுது குந்தி மிகுந்த மன உருக்கத்துடன் பகவானைப்பற்றி விசாரித்தாள். தாம் வந்த காரியத்தை அவர்களிடம் சொல்லி விட்டு மறுநாள் திருதராஷ்டிரன் ஸபைக்கு வந்து "மஹாராஜாவே! எல்லோரையும் தன்னைப்போல பார்க்கவேண்டியது அரசன் கடமை! இப்படி இருக்க நீர் பாண்டவர்களுக்கும் உமது பிள்ளைகளுக்கும் இவ்வளவு வெவ்வேறு விதமாக இருப்பது நியாயமன்று!" என்று வெகுவாகப் புத்தி கூறினார். அதற்குத் திருதராஷ்டிரன் 'நான் அவ்வளவுதான் கொடுத்து வைத்தது. நீர் சொல்வது நியாயம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் நீர் போய்விட்டால் என் பிள்ளைகளிடம் பக்ஷபாதம் வந்து மூடிக்கொள்கிறதே! நான் என்ன செய்வேன்!' என்று கூறி மௌனமானார். உடனே அக்ரூரர் மதுராபுரி வந்து பகவானிடம் பாண்டவர்கள் படும் கஷ்டத்தையும் திருதராஷ்டிரன் பிடிவாதத்தையும் உள்ளபடி கூறிவிட்டார்.

முற்பாதி

பால்ய லீலைகள்

முடிவு.

---

பிற்பாதி

# ப்ரௌட லீலைகள்.

---

**வினா 95.**—இதற்குள் மதுராபுரி வாஸிகளுக்கு யாது காரணத்தால், என்ன பெரிய ஆபத்து வந்தது? அது முதலில் எவ்வாறு தடுக்கப்பட்டு எவ்வாறு மாறியது?

விடை.—கம்ஸன் பெண்சாதிகள் லோககண்டனான ஜராஸந்தன் (மஹாபாரத வினாவிடை முதல்பாகம் ஸபா பர்வம் பார்க்க.) பெண்கள். தங்கள் கணவன் இறந்ததும் அவர்கள் வேகமாகப் போய் தமது தகப்பன் காலில் விழுந்து அழுதார்கள். உடனே கொஞ்ச நாளில் பெரிய ஸேனையைச் சேர்த்துக்கொண்டு அவன் மதுராபுரியை முற்றுகை போட்டான். மதுராபுரி வாஸிகள் எல்லோரும் மிகுந்த பயத்தை அடைந்தனர். அப்பொழுது துஷ்ட நிக்ரஹத்திற்காக யுத்தம் தொடங்கும் காலமாதலால் ஆகாயத்திலிருந்து இரண்டு ரதம் கீழே இறங்கி வந்தன. அதில் தாருகன் ஸாரதியாயும், கருடத்துவசம் உடையதாயும் உள்ள ரதத்தில் பகவானும் பனைமரக் கொடியுடைய மற்ற ரதத்தில் பலராமரும் ஏறிக்கொண்டு மதுராபுரிக்கு வெளியில் வந்து ஜராஸந்தனை எதிர்த்தனர். அப்பொழுது ஜராஸந்தன் பகவானைச் சிறுபிள்ளை என்று நீக்கிவிட்டுப் பலராமரோடு சண்டையிடத் தொடங்கப் பெரிய யுத்தம் உண்டாயிற்று. முடிவில் ஜராஸந்தனைக் குற்றுயிராகப் பலராமர் தரையில் தள்ள, மற்றையவர்

களை எண்ணி அவனைக் கொல்லாது பிழைத்துப் போகும்படி விட்டார். ஒருவரும் இன்றித் தனிமையாக ஜராஸந்தன் ஊர் வந்து தேறி, இதுபோல பதினேழுதரம் மதுராபுரியை முற்றுகையிட்டுத் தோல்வி அடைந்தான். அப்பொழுதும் 18-ம் தரம் வருவதாக எண்ணியே தன் பட்டணம் சென்றான்.

வி **96.**—இவ்வாறு 18-ம் தரம் மதுராபுரிமேல் படை எடுத்துவர ஜராஸந்தன் ஆயத்தமாகையில் யாதவர்களுக்கு என்ன புதிய ஆபத்து வந்தது? அப்பொழுது பகவான் என்ன தந்திரத்தால் அதை நீக்கினார்?

விடை.—தனக்கு எதிர் நின்று யுத்தம் செய்பவர் யாராவது உண்டாவென்று பிரபஞ்சமெல்லாம் தேடிச்சென்று ஒருவரையும் காணாது ஏங்கி நின்ற காலயவனன் நாரதரால் ஏவப்பட்டுப் பகவான் தான் தனக்கு நிகர் என்றறிந்து மதுராபுரி வந்து தனது கோடி மிலேச்சஸேனையோடு முற்றுகை போட்டான். அப்பொழுது ஜராஸந்தன் வரும் தருணமாகவும் இருந்தது. 'வீணாக நமது உறவினர் இப்படி அடிக்கடிக் கஷ்டத்திற்கு உள்ளாவானேன்' என்று எண்ணமிட்டு தெய்வத்தச்சனைக் கொண்டு மேற்கு ஸமுத்திரத்திலிருந்த ஒரு திட்டில் துவாரகை என்ற ஒரு பட்டணம் ஸகல வைபவங்களுடன் ஏற்படுத்தச் சொல்லி, அன்றிரவிலேயே தமது சக்தியால் மதுராபுரிவாசிகள் எல்லோரையும் துவாரகை கொண்டு சேர்த்துப் பலராமரை அங்கு வைத்துவிட்டு, தாம் மாத்திரம் மதுராபுரி வந்து நிராயுதபாணியாக மறுநாள் காலயவனன் முன்பு புறப்பட்டார்.

விஞ 97.—அப்பொழுது காலயவனன் என்ன செய்தான்? பகவான் அவனை எவ்வாறு ஸம்ஹாரம் செய்தார்?

விடை.—பகவான் ஆயுதம் இன்றி வெளியே புறப்பட்டதைக் கண்ட காலயவனன் நாரதர் முன்னர் கூறியுள்ள லக்ஷணங்களால் அவரே தமக்கு யுத்தம் தரவல்லர் என்று தெரிந்து கொண்டு தனது படை, ஆயுதம் முதலியவைகளைக் கவனியாது தானும் நிராயுத பாணியாகப் புறப்பட்டுப் பகவானிடம் சண்டை செய்யப் போனான். அவர் ஓட ஆரம்பிக்கக் காலயவனன் அவரைத் துரத்தினான். அவர் அகப்படுபவர் போலப் பாசாங்கு செய்துகொண்டு அவன் கையில் அகப்படாமலே ஓர் மலையடிவாரம் அவனை இழுத்துக்கொண்டு வந்தார். காலயவனன் பகவானது பயத்தைப்பற்றி எவ்வளவு பரிஹாஸமாகப் பேசியபோதிலும் பகவான் கவனியாது அங்கிருந்த ஒரு குகையுள் புகுந்தார். அங்கு காலயவனனும் உள்ளே புகுந்து பகவானைத் தேடிவருகையில் அங்கு ஒருவர் படுத்து உறங்குவதை அவன் கண்டான். உடனே அவனுக்கு மாயவியான பகவான் தான் இவ்வாறு ஸாதுவைப் போலத் தூங்குகிறார் என்ற எண்ணம் உண்டாகத் தூங்குபவனை அவன் மிகுந்த கோபத்துடன் உதைத்தான்! தூங்குபவன் காலயவனனை விழித்து நோக்கினான்! அப்பொழுது அவனிடம் உண்டான கோபாக்னியால் காலயவனன் சாம்பலாக விழுந்தான்.

விஞ 98.—இவ்வாறு காலயவனனை எளிதில் கொன்ற இந்த புருஷர் விருத்தாந்தம் என்ன?

விடை.—இவர்தான் மாந்தாதா சக்ரவர்த்தியின் பிள்ளையாகிய முசுகுந்த சக்ரவர்த்தி. இவர் ஒருக்கால் தேவர்

களுக்குத் தம்மால் இயன்றமட்டும் விடாது வெகுநாள் ஸேஞதிபதியாக ஸஹாயம் செய்தார். பின்னர் ஸுப்ரஹ்மண்யர் தேவஸேஞதிபதியானதும் தேவர்கள் முசுகுந்தருக்கு விடை கொடுத்து அனுப்பும்பொழுது அவர் வேண்டுகோளின்படி நல்ல தூக்கத்தையும் அவருக்குக் கொடுத்தார்கள். அந்தக் காலத்தில் (கிருதயுகத்தில்) படுத்தவர் மலைக்குஹையில் தமது சிரமம் தீரத் தூங்கிக்கொண்டிருந்தார். 'உம்மை மத்தியில் எழுப்புகிறவன் எவனே அவன் உமது திருஷ்டியால் சாம்பலாகட்டும்' என்று தேவர்கள் அனுக்கிரஹித்திருந்தபடி அவர் திருஷ்டிபட்டதும் காலயவனன் சாம்பலானன்.

**விஞ 99.**—இவ்வாறு காலயவனன் இறந்ததும் முசுகுந்த சக்ரவர்த்தி என்ன செய்தார்? அவருக்கு என்ன கதி வந்தது?

**விடை.**—காலயவனன் இறந்ததும் பகவான் அவர் கண்முன் தோன்றினர். அவரது திவ்யமங்கள விக்கிரகம் அற்புத அடையாளங்கள் எல்லாவற்றையும் முசுகுந்தர் கண்டார்! தமது சரித்திரம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டுப் பகவான் இன்னர் என்பதை மஹா விநயத்துடன் விசாரணை செய்தார். அதற்குப் பகவான் தமது நிஜஸ்வரூபம், அவதார காரியம் முதலியன எல்லாவற்றையும் விஸ்தாரமாக எடுத்துரைத்தார். அப்பொழுது மெய்ம்மறந்து அவர் பகவானைத் துதி செய்தார். 'என்னைக் கர்ம பந்தத்திலிருந்து விடுவியும்! உமது ஞாபகம் எனக்கு மாருதிருக்கட்டும், எனக்கு யாதொரு வரமும் வேண்டாம்' என்றுர் முசுகுந்தர். அதற்குப் பகவான் 'நீ இந்த ஜன்மத்தில்

என்னை மறவாது பூமியில் வசித்திரு. இதனால் நீ வேட்டையாடி ஜந்துக்களை கொன்ற பாபம் நீங்கும். அடுத்த ஜன்மத்தில் நீ மஹாப் பிராஹ்மணனாகப் பிறந்து பரம பதம் அடைவாய்' என்று அனுக்கிரஹித்து மறைந்தார். முசுகுந்தர் மலைக் குகையைவிட்டு வெளியேறி வடக்கு நோக்கிப் போய் ஹிமயமலையில் பதரிகாசிரமம் அடைந்து தவம்செய்யத் தொடங்கினார்.

வி. **100.**—பகவான் மதுரை வந்து சேர்ந்ததும் என்னென்ன விசித்திரம் நடந்தன? அவை எவ்வாறு முடிவு பெற்றன?

**விடை.**—முசுகுந்த சக்ரவர்த்திக்கு நற்கதி கொடுத்துவிட்டுப் பகவான் மதுரைக்கு வந்து யவனர்கள், மிலேச்சர்கள் முதலிய காலயவனன் படைகளைக் கொன்று அகப்பட்ட ஸொத்துக்களை எல்லாம் துவாரகை கொண்டு சேர்த்தார். துவாரகைக்கு ஸொத்துக்கள் எல்லாம் போய்விட்ட பின்பு ஜராஸந்தன் கடைசித் தடவை மதுரைமேல் படை எடுத்து வந்தான். கொண்டுபோனதுபோக மிகுதியான ஸொத்துக்களை மதுரையிலேயே போட்டுவிட்டுக் கிருஷ்ண ராமாள் பயந்தவர்கள் போல் ஓடத்தலைப்பட்டு வெகுதூரம் போய்விட்டனர். இவர்கள் போவதையும், மதுரையில் ஒருவரும் இல்லாததையும் கண்ட ஜராஸந்தன் இவர்களைத் துரத்தினான். இவர் வெகு தூரம் போய்க் களைத்து, தினம் மழை அதிகம் பெய்து கொண்டிருந்த ப்ரவர்ஷணம் என்ற ஒரு மலைமேல் ஏறி மறைந்தனர். ஜராஸந்தன் மலையண்டை வந்து எவ்வளவு தேடியும் அவர்கள் அகப்படவில்லை. உடனே நெருப்பு மூட்டி மலையை எறித்துவிடும்படி ஜராஸந்தன் உத்தரவு

செய்தான். அவ்வாறே நெருப்புமூட்டபட கிருஷ்ண ராமாள் ஜராஸந்தனுக்குத் தெரியாமல் வேறு பக்கமாகக் குதித்து மலையைவிட்டு வெளியேறி துவாரகை சேர்ந்தனர். ஜராஸந்தனோ கிருஷ்ணராமாள் எரிந்து நீறாய் விட்டனர் என்று மகிழ்ந்துகொண்டு தனது ஊர் போய் சேர்ந்தான்.

**வினா 101.**—கிருஷ்ணராமாளது விவாஹம் எவ்வாறு நடந்தேறியது?

**விடை.**—ஒன்பதாவது ஸ்கந்தம் 8-ம் வினாவில் கூறியபடி ரேவதராஜன் தமது பெண் ரேவதீ தேவியைப் பலராமருக்குப் பிரம்மாவின் உத்தரவுபடி விவாஹம் செய்து கொடுத்தார். மஹா லக்ஷ்மியே ருக்மணியாக அவதரித்துப் பகவானைக் கல்யாணம் செய்துகொள்ளக் காத்திருக்க, அவளை எதிரி அரசர்களை வென்று தூக்கிக்கொண்டு வந்து துவாரகையில் பகவான் விவாஹம் செய்து கொண்டார்.

**வினா 102.**—ருக்மணி யார்? கல்யாண காலத்தில் அவளுக்கு முதலில் என்ன ஆபத்து வந்தது?

**விடை.**—ருக்மணி விதர்ப்ப தேசாதிபதியாகிய பீஷ்மக ராஜனது பெண். அவளுக்கு நான்கு தமையன்மார்கள் உண்டு. எல்லோரும் துராத்மாக்கள். மூத்தவன் பேர் ருக்மி. ருக்மணி பகவானது குணாதிசயங்களைப் பிராம்மணர்கள் மூலமாகக் கேள்விப்பட்டு அவரையே தமது புருஷனாக அடைய வேண்டும் என்று மிகுந்த ஆவலுடன் இருந்தாள். இதேமாதிரி கிருஷ்ணனும் ருக்மணியிடம் ஆவல் கொண்டிருந்தார். இப்படி இருக்கையில் துராத்மாவான ருக்மி பகவானிடம் இருந்த

விரோதத்தால் சேதி தேசாதிபதியின் பிள்ளையான சிசுபாலனுக்குத் தன் தங்கையைக் கொடுப்பதாகத் தீர்மானித்துக் கூடிய சீக்கிரத்தில் முகூர்த்தத்தையும் ஏற்படுத்தி விட்டான். கல்யாணத்திற்கு ஜராஸந்தாதி அரசர்கள் எல்லோரும் வரவும் தொடங்கி விட்டனர். பீஷ்மகருக்கு ருக்மணியின் கருத்துத் தெரிந்திருந்தும் அவர் ஒன்றும் செய்யமுடியாது தத்தளித்துக்கொண்டு மௌனமாக இருந்தார்.

விரு 103.—இப்படி இருக்கையில் ருக்மணி எவ்வாறு தன் கஷ்டத்தைத் தீர்த்துக்கொள்ள முயன்றாள்? அவள் பிரயத்தினம் என்னவாயிற்று?

விடை.—ருக்மணி கொஞ்சம் நிதானித்துப் பார்த்தாள். கல்யாணத்திற்கு இரண்டுநாள் வரையில் அவளைக் கவனிப்பாரே இல்லை. எல்லோரும் கல்யாண தடபுடல்களில் இருந்தார்களே ஒழிய அவள் ஸம்மதத்தைக்கேட்டு அவள் கஷ்டத்தைத் தீர்த்துவைப்பார் ஒருவருமில்லை. இனிமேல் சும்மா விருக்கக்கூடாது என்று தீர்மானித்து அவள் பகவானுக்கு ஒரு கடிதம் எழுதி ஓர் பிராம்மணன் மூலமாக அனுப்பினாள். பிராம்மணன் துவாரகை வந்து பகவானால் ஆதரிக்கப்பெற்று அவரிடம் ருக்மணி கடிதத்தைக் கொடுத்தான். அதில் 'உம்மிடம் என்மனம் ஈடுபட்டுவிட்டது! ஆதலால் என்னை அங்கீகரிக்க வேண்டியது உமதுகடன். வேறெவரும் என்னைத்தொடாது காக்கவேண்டியது உமது பொறுப்பு. இரண்டு நாளில் நடக்கப்போகும் கல்யாணத்தில் நீர் என்னைச் சிசுபாலனுக்கு இரையாக்காது காப்பாற்றவேண்டும். அதற்கு உபாயம் பின் வருமாறு: கல்யாணத்திற்கு முதல்நாள் கௌரி

பூஜைக்கு எங்கள் குலாசாரப் பிரகாரம் நானும் போவேன். நீர் அப்பொழுது வந்து ராக்ஷஸவிவாஹ ஒழுங்குப்படி என்னை அங்கீகரித்து எதிரிகளைச் சின்னா பின்னமாக்கிவிடும். இதுதான் தருணம். இது தவறினால் நான் உயிர் தரிப்பது அரிது! என் தைரியத்தை மன்னிக்கவும்' என்று எழுதியிருந்தது. பகவான் இதைப் பார்த்தார். ருக்மணியிடம் கருணை கூர்ந்தார். தாம் அவ்வாறே செய்வதாகச்சொல்லிப் பிராம்மணனை ருக்மணியிடம் அனுப்பிவிட்டார். தாருகனை ரதம் கொண்டுவரச்சொல்லி அதில் ஏறிக்கொண்டு பீஷ்மக ராஜன் பட்டணம் வந்துசேர்ந்தார். அவருக்கு ஸஹாய மாக பலராமர் யாதவஸேனையோடு அங்குவந்து சேர்ந்துவிட்டார்.

**வினா 104.**—ருக்மணி நிலை எவ்வாறிருந்தது? மேல் என்ன நடந்தது?

**விடை.**—பிராம்மணனை அனுப்பிவிட்டு மிகுந்த ஆவலுடன் ருக்மணி அவரது வரவை எதிர்ப்பார்த்திருந்தாள். அன்று ஸாயங்காலமே பிராம்மணர் வந்து பகவான் கூறியதைச் சொல்லிவிட்டார். கொஞ்ச நாழிகைக்குள் பகவான் பலராம யாதவரோடு வந்து சேர்ந்ததையும் கேள்விப்பட்டு மனம்தேறினாள். விதர்ப்ப தேசத்து ஜனங்கள் பகவானே ருக்மணிக்குத் தகுந்த புருஷர் என்று கூறியது அவள் காதில்விழ அவள் ஆனந்த பரவசமானாள், மறுநாட்காலையில் அவள் தனது பரிவாரங்களுடன் கௌரீ பூஜைக்குப் புறப் பட்டுப்போகக் கல்யாணத்திற்கு வந்த அரசர்கள் எல் லோரும் ஊர்கோலமாகப் பின்னே புறப்பட்டனர். ஸதா அன்று ருக்மணி பகவான் ஞாபகமாகவேதான்

இருந்தாள். 'இன்னும் என்னை ஏன் அங்கீகரிக்கவில்லை ?' என்று அயர்ந்தாள். இவ்வளவு மனக்குழப்பத்துடன் கௌரீபூஜை செய்து அம்பிகையிடம் 'என்னைப் பகவானே விவாஹம் செய்துகொள்ளும்படி அநுக்கிரஹிக்கவேண்டும்!' என்று கேட்டுக்கொண்டு வீட்டிற்குப் புறப்பட்டாள். அவள் திரும்பிவருகையில் வழியில் நின்றுகொண்டிருந்த பகவான் எல்லா அரசர்கள் முன்பாகவும் அவள் கையைப் பிடித்துத் தூக்கித் தமது ரதத்தில் வைத்துக்கொண்டு துவாரகை நோக்கிப் புறப்பட்டார் !

வினா **105**.—இவ்வாறு பகவான் செய்ததும் அங்கு என்ன நடந்தது ?

விடை.—பகவான் இவ்வாறு புறப்பட்டதும் அங்கு கூடியிருந்த ஜராஸந்தாதி ராஜாக்கள் போருக்குத் தயாராக, அவர்களுக்கும் பலராமரால் நடத்தப்பெற்ற யாதவர்களுக்கும் பெரிய சண்டை யுண்டாயிற்று. யாதவர்கள் முடிவில் ஜயம் அடைய ஜராஸந்தன் முதலியோர் போர்க்களம் விட்டுத் தோற்று ஓடிப்போய் சிசுபாலனை ஒருவாறு தேற்றினர். அப்பொழுது தன் எண்ணத்திற்கு விரோதமாக எல்லாம் நடந்தேறியதால் மிகுந்த கோபங்கொண்ட ருக்மிமாத்திரம் அடங்கி இராது 'நான் பகவானைக் கொன்றுவிட்டாவது அல்லது என் அருமைத் தங்கை ருக்மணியை மீட்டுக்கொண்டாவது தான் இங்கு வருவது. இல்லாவிடில் என் பட்டணத்துக்கு வருவதில்லை.' என்று பிரதிக்ஞை செய்துகொண்டு புறப்பட்டான்.

வினா **106**.—இவ்வாறு புறப்பட்ட ருக்மி கதி என்னவாயிற்று ?

விடை.—பகவானைத் தூரத்திச்சென்று ருக்மி அவரைக் கண்டு பிடித்து அவருடன் வெகுநாழிகை போர்செய்தான். முடிவில் பகவானைக் கொல்லவேண்டும் என்ற எண்ணத்துடன் ருக்மி கையில் வாளை எடுத்துக் கொண்டு தேரிலிருந்து கீழேகுதித்துப் பகவானை நோக்கி ஓடிவந்தான். அவன் கத்தியைப் பகவான் சின்ன பின்னமாக்கிவிட்டு அவனைக்கொல்ல ஓர் அம்பை எடுத்து விட்டார். அப்பொழுது ருக்மணி கேட்டுக் கொண்டபடி அவனைக் கொல்லாமல் நிறுத்திவிட்டு, அவனைப் பிடித்துப் பகவான் தமது தேர்க்காலோடு கட்டி ஐங்குடுமி வைத்து அவனை அவலக்ஷணமாக்கி விட்டார். இந்த ஸமயத்தில் பலராமர் ஜராஸந்தன் முதலியோரைத் தூரத்திவிட்டுப் பகவானிடம் வந்து சேர்ந்தார். ருக்மியை விட்டுவிடும்படி பகவானை அவர் வேண்டிக்கொள்ள அவரும் அப்படியே செய்தார். ருக்மிணிக்குப் பலராமர் 'இதுதான் க்ஷத்திரிய தர்மம், பயப்படவேண்டாம்' என்று தேறுதல் சொன்னார். கட்டிவிருந்து விடுபட்ட ருக்மி மிகுந்த வெட்கத்துடன் ஊருக்குத் திரும்பிப் போகாது தன் பட்டணத்திற்கு அருகாமையிலிருந்த போஜகடம் என்ற பட்டணத்திலிருந்து அரசாண்டு வந்தான்.

வினா 107.—இதன்மேல் பகவான் என்னசெய்தார்? மேல் என்ன நடந்தது?

விடை.—பகவான் ருக்மணியைத் துவாரகைக்குக் கொண்டு போய் நல்ல சுபலக்னத்தில் வேதவிதிப்படி கோலாஹலமாக அவளை விவாஹம் செய்துகொண்டார். அவளிடம் பகவானுக்குப் பிரத்யும்னன் என்ற பிள்ளை உண்டா

னன். இவன்தான் பரமசிவன் கோபாக்நியால் தேக மிழந்த மன்மதன்.

**வி 108.**—பிரத்யும்னன் கல்யாணமாகும் வரையில் என்ன பாடுபட்டான்?

**விடை.**—இவன் குழந்தையாக விருக்கையில் சம்பரன் என்ற அஸுரன் இவனை எடுத்துக்கடலில் எறிந்து விட்டான். இவனை ஒரு பெரிய மீன் விழுங்கிவிட்டது. இந்த மீன் செம்படவர்கள் வலைகளில் சிக்கிக்கொள்ள, அதை அவர்கள் சம்பராஸுரனுக்கு இனாமாகக் கொடுத்தனர். இதைப் பிளக்கையில் உள்ளே குழந்தை ஒன்று இருக்கக்கண்டு சமையல்காரர்கள் முக்கிய வேலைக்காரியாகிய மாயவதியிடம் அதை ஒப்புவித்தார்கள். உடனே நாரதர்வந்து மாயவதிக்கு, அவள் பூர்வஜன்மத்தில் ரதி என்றும், கிடைத்திருக்கும் குழந்தையே அவள் புருஷன் மன்மதன் என்றும், அவன் பட்டபாடு இன்னவை என்றும் கூறி அவளுக்குண்டான பயத்தை தெளிவித்தார். பிரத்யும்னனுக்கு வயது முதிர்ந்ததும் மாயவதியிடம் இருந்து எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டான். மாயவதி பிரத்யும்னனுக்கு அஸுரமாயைகளைத் தடுக்கும் விதத்தைச் சொல்லிக் கொடுத்தாள். இந்த சக்தியுடன் பிரத்யுமனன் சம்பராஸுரனை வென்று, தனது பெண்சாதியுடன் துவாரகையடைந்து அந்தப்புரத்துள் புகுந்தான்.

**வி 109.**—துவாரகை வந்ததும் பிரத்யும்னன் விஷயமாக மேல் என்ன நடந்தது?

**விடை.**—பிரத்யும்னன் பகவான் போலிருந்ததால் அவனைக் கண்டு பகவானது ஸ்திரீகள் எல்லோரும் மிகுந்த வெட்

கத்தோடு ஓடி ஒளித்துக் கொண்டனர். ருக்மணிக்கு மாத்திரம் வெட்கம் வரவில்லை. மிகுந்த அன்பு ஜனித்தது. இவன்யாரோ என்று திகைத்தாள். அப்பொழுது பகவான் தேவகீ, வஸுதேவாளோடு அங்கு வந்தார். நாரதரும் வந்து சேர்ந்தார். அவர் பிரத்யும்னனது கதையை விஸ்தாரமாக எடுத்துரைத்தார். எல்லோரும் பிரத்யும்ன மாயவதிகளை ஆசீர்வதித்து ஸந்தோஷமடைந்தனர். துவாரகையே மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தது. இவர்களிருவருக்கும் விவாஹம் நடந்தது. எல்லோரும் ஸுகமாக இருந்தனர். பிரத்யும்னனுக்கு மாயவதியிடம் அனிருத்தன் என்ற ஒரு பிள்ளை உண்டானுன்.

**விஞ 110.**—பகவானுக்கு எவ்வளவு ஸ்திரீகள் பெண்சாதிகளாக அமைந்தனர்? இவ்வாறு பகவான் அநேகரை விவாஹம் செய்துகொண்டது நியாயமா?

**விடை.**—பகவானுக்கு எட்டு பட்டமஹிஷிகள் உண்டு. அவர்களுக்கு முறையே ருக்மணி, ஜாம்பவதி, ஸத்யபாமை, காளிந்திதேவி, மித்தரவிந்தாதேவி, ஸத்யவதீதேவி, சுருதகீர்த்திதேவி, பிரஹத்ஸேனை, என்று பெயர். இதுவும் அல்லாமல் இவர் வேறு 16,100 ஸ்திரீகளையும் விவாஹம் செய்து கொள்ளவேண்டி வந்தது. ஆக பகவானுக்கு 16,108 ஸ்திரீகள் இவர்களது மனதை ஏககாலத்தில் பகவான் திருப்தி செய்து தம்மை மறவாது பக்தி செய்துகொண்டிருக்கும்படி செய்த பரம்பொருளுக்கு 16,108 ஸ்திரீகளைத் திருப்தி செய்வது அஸாத்யமா. மேலும் இன்னும் யார் அவரை அடைய விரும்புகிறுர்களோ அவர்கள் எல்லோரையும் திருப்திபடுத்தும் திறன் பகவானுக்கு இருக்கவே

இருக்கிறது. இது நியாயமா என்று யோசிக்கின் நம் போன்ற ஸாதாரண ஜனங்களுக்கு இவ்வாறிருக்க முடியாது. ஆகையால் நியாயமல்ல என்று தோற்றலாம். சாஸ்திரப்படி புருஷன் எவ்வளவு விவாஹம் வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். ஆனால் அவன் அநேக பெண்சாதிகளைச் சண்டையிட்டுக்கொள்ளாது அடக்கி யாள்வது மிகக் கஷ்டம். இந்தச் சக்தி வந்த பின் அல்லவா ஒருவன் பகவானைப்போல எல்லோரையும் திருப்தி செய்துதான் அதிலிருந்து ஒன்றும் எதிர்பாராத தன்மையை அடைய முடியும். ஆகையால் பகவான் வரையில் அவர் செய்தது நியாயம். நாம் அவ்வாறு நடத்த முயலுவது அநியாயம். நடத்த முயன்றால் நம்மால் முடியாது. அளவற்ற துன்பத்திற்கும் ஆளாவோம். (அனுபந்தத்தில் காட்டியிருக்கும் அந்தரார்த்தப்படி நோக்கிலோ இதில் ஒரு விரோதமும் காணப்படாது).

வினா **111.**—ஜாம்பவதீ தேவியைப் பகவான் விவாஹம் எவ்வாறு செய்துகொண்டார்?

விடை.—பகவான் தம்பேரில் வந்த பழியைத் தீர்த்துக் கொள்வதற்காகக் காட்டு மார்க்கமாகப் போகும்படி நேர அங்கு ஒரு குஹையில் ஒரு கிழக்கரடி (ஜாம்பவான்) தமக்கு வந்த பழியைத் தீர்க்கும்படியான வஸ்துவை வைத்திருக்கக் கண்டு அதனுடன் பகவான் விடாது 18 நாள் போர்செய்யும்படி நேர்ந்தது. இதன் முடிவில் கிழக்கரடியின் தேகத்திலுள்ள எலும்புகள் எல்லாம் முறிந்து கட்டு தளர்ந்துபோக அதற்கு அப்பொழுது தான் தன்னை ஆண்டு, ஸமுத்திர சோஷணம் முதலிய அற்புதச் செய்கைகளைச் செய்த ஸ்ரீ இராமச்சந்திர

மூர்த்தியே பகவானாக வந்திருப்பது என்று தெரிய வந்தது. பகவானை வாயாரத் துதித்துவிட்டு தம்மிடம் இருந்த மணியைப் பகவானிடம் கொடுத்து அத்துடன் தன் பெண்ணாகிய ஜாம்பவதீ தேவியையும் பகவானுக்கு அற்பிதம் செய்தது. பகவான் மணியின் மூலமாகத் தமது பழியைத் தீர்த்துக்கொண்டு ஜாம்பவதியையும் விவாஹம் செய்து கொண்டார்.

வின **112.**—பகவானுக்கு யாது காரணத்தால் பழி வந்தது?

விடை.—ஸத்ராஜித் என்று துவாரகாபுரிக் கருகில் ஓர் அரசன் இருந்தான். அவன் மஹா ஸூர்யபக்தன். அவனுக்கு ஸூர்யன் வியாதிகளைத் தடுக்கக் கூடியதாயும், ஒருநாளுக்கு 8-பாரம் தங்கம் உண்டாகும் திறனுடையதாயும் உள்ள பிரகாசமான ஸ்யமந்தகம் என்ற மணியைக் கொடுத்தார். அதை அவன் கழுத்தில் அணிந்துகொண்டு பகவானிடம் வந்தான். அந்த மணியின் பிரகாசத்தால் ஸூர்யனே பூமியில் குதித்துவிட்டாரோ என்று எல்லோரும் திகைத்தனர். பகவான் அந்த மணி தமக்கு வேண்டும் என்று ஸத்ராஜித்தினிடம் கேட்டிருந்தார். அவன் 'கொடுக்க மாட்டேன்' என்றான். இப்படி இருக்கையில் ஒரு நாள் அந்த மணியைக் கழுத்தில் போட்டுக்கொண்டு ஸத்ராஜித்தின் தம்பி வேட்டைக்குப் போனான். அங்கு அவனை ஒரு சிங்கம் கொன்று அந்த மணியை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டது. வழியில் அதை ஜாம்பவான் மடக்கிக் கொன்று அந்த மணியை எடுத்துப் போய்த் தன் பெண்ணுக்கு ஆபரணமாக்கி விட்டது. தம்பி இறந்ததையும் மணி காணாமல் போனதையும்

அறிந்த ஸத்ராஜித்து, 'பகவான் தான் தன் தம்பியைக் கொன்று மணியை எடுத்துக்கொண்டு விட்டார். நானே கொடுத்து விடாததால் அவர் இவ்வாறு செய்தார் போலும்' என்று சொல்ல, பகவான் மணி திருடினார் என்ற அபவாதம் மெதுவாகக் கிளம்பிவிட்டது. இது பகவான் காதிற்கு எட்டியது.

வினா **113.**—பகவான் இந்த அபவாதத்தை எவ்வாறு தீர்த்துக் கொண்டார்?

விடை.—இதைக் கேட்டதும் பகவான் மிகுந்த பரபரப்புடன் தமது பரிவாரங்களோடு பிரஸேனன் செத்த விடம் போய்ச்சேர்ந்தார். அங்கு அவன்குதிரை இறந்து கிடப்பதைக் கண்டார். கொஞ்ச தூரத்தில் ஒரு சிங்கம் இறந்துகிடப்பதையும் கண்டார். அங்கிருந்து அடிச்சுவடு, ரத்தம் முதலியவைகளைப் பிடித்துக்கொண்டு ஒருமலைக் குகைவாயிலில் வந்து சேர்ந்து பரிவாரங்களை வெளியே நிறுத்திவிட்டு உள்ளே சென்றார். போனவர் வெளியே வராதது கண்டு வெளியிலிருந்தோர் துவாரகைபோய் பகவான் காணுமல்போனதைக் கூற எல்லோரும் ஸத்ராஜித்தை வைது பகவான் க்ஷேமமாகத் திரும்பி வரவேண்டும் என்று பூஜைமுதலியன செய்தனர். 18 நாள் கழிந்ததும் பகவான் துவாரகைவந்து மணியை ஸத்ராஜித்திடம் கொடுத்து உண்மையாக நடந்தவைகளைச் சொல்லித் தமது பழியை நீக்கிக்கொண்டு, தம் கூடக் கொண்டுவந்திருந்த ஜாம்பவதியைக் கோலாஹலமாகக் கல்யாணம் செய்து கொண்டார்.

வினா **114.**—ஸத்ராஜித்தின் மனோநிலை அப்பொழுது எவ்வாறிருந்தது? அது எவ்வாறு முடிவில் ஸமாதானப்பட்டது?

விடை.—'நாம் அநியாயமாக நல்ல புருஷர்மேல் அடாப் பழி சுமத்தி விட்டோமே! மேலும் கிருஷ்ணன் நம்மிடம் விரோதியாகி விட்டால் நமது கதி என்னவாகும்?' என்றிம்மாதிரியான எண்ணங்கள் ஸத்ராஜித்திற்குக் குழப்பத்தை உண்டாக்கியது. கொஞ்ச நாழிகை தத்தளித்ததின்பேரில் ஜாம்பவதியின் கல்யாணத்தின் பின், தன்பெண் ஸத்யபாமாவைப் பகவானுக்குக் கல்யாணம் செய்துகொடுத்து அந்த ஸ்யமந்தகமணியையும் இனாமாகக் கொடுத்தால் தான் தன் மனக்குழப்பம் அடங்கும் என்று அவனுக்குத் தோன்றிற்று. உடனே அவன் அவ்வாறுசெய்ய பகவான் அவைகளை ஒப்புக்கொண்டு அவன் மனதைத் திருப்தி செய்தார்.

வினா 115.—இப்படி இருக்கையில் ஸத்ராஜித் எவ்வாறு இறக்கும்படி நேர்ந்தது? ஏன்? பின்னர் என்ன நடந்தது?

விடை.—பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் இறந்தார்கள் என்பதைக் கேள்விப்பட்டுப் பகவானும் பலராமரும் ஹஸ்தினாபுரிசென்று பீஷ்மர், விதுரர் முதலியோரைத் தேற்றி வரப்போயினர். இந்த ஸமயத்தில் அக்ரூரர், கிருதவர்மா இவர்களால் தூண்டப்பட்டு சததன்வா என்பவன் ஸ்யமந்தகமணியை அடைய ஸத்ராஜித்தை இரவில் கொன்றுவிட்டான். உடனே இவன் மணியை எடுத்துக்கொண்டு விட்டான். மிகுந்த துக்கத்துடன் ஸத்யபாமை தன் தகப்பன் தேஹத்தை எண்ணெய்க் கொப்பரையிலிட்டு வைத்துவிட்டு ஹஸ்தினாபுரி வந்து நடந்தவைகளைப் பகவானிடம் தெரிவித்தாள். அவர் பலராமருடன்வந்து சததன்வாவைக் கொல்லப்

புறப்பட்டார். அவன் தன்னைத் தூண்டியவர்களிடம் முறையே சரணமடைய இருவரும், அவர்களால் ஒன்றும் முடியாதென்று மறுத்துவிட்டனர். உடனே சததன்வா அக்ரூரரிடம் மணியைக் கொடுத்துவிட்டு உயிர் பிழைக்க ஓடிவிட்டான்.

வி 116.—ஓடின் சததன்வாவின் கதி என்னமாக முடிந்தது? மேல் என்ன நடந்தது?

விடை.—சததன்வா ஓடிவிட்டதை அறிந்த பகவான் பலராமருடன் ரதத்தில் ஏறிக்கொண்டு அவனைத் துரத்தினார். மிதிலா ராஜ்யத்தருகிலிருந்த காட்டில் தன் குதிரை களைத்துப்போக சததன்வா கால்நடையாக ஓடத் தலைப்பட்டான். அவனைப் பகவான் பின் தொடர்ந்து கொன்று அவன் தேகமெல்லாம் தேடிப் பார்த்தார். மணி அகப்படவில்லை. இவனைக் கொன்றிருக்க வேண்டியதில்லை என்று பகவான் சொல்லிக் கொண்டு துவாரகை நோக்கித் திரும்பினார். பலராமர் மிதிலை ராஜனைக் காணப்போவதாகச் சொல்லிவிட்டு மிதிலை நோக்கிப் புறப்பட்டனர். சிலவருஷங்கள் மிதிலையிலேயே பலராமர் தங்கியிருந்தார். அப்பொழுதுதான் துரியோதனன் அவரிடம் கதாயுத்தம் செய்யக் கற்றுக் கொண்டான். துவாரகை நோக்கிச்சென்று பகவான் நடந்தவைகளைச் சொல்லிவிட்டு ஸத்ராஜித்திற்கு ஈமக்கடன்களைச்செய்து முடித்தனர்.

வி 117.—அப்பொழுது அக்ரூரர் முதலியோர் என்ன செய்தார்கள்? மேல் என்ன உண்டாயிற்று? பகவான் அவர்களை என்ன செய்தார்?

விடை.—சததன்வா இறந்ததைக்கேட்ட அக்ரூரரும், கிருதவர்மாவும் பயந்து துவாரகையைவிட்டு ஓடிப்போய்

விட்டனர். அக்ரூரர் ஓடிப்போனதும் துவாரகையில் மழை நின்றுவிட்டது. ஜனங்களுக்கு ஸௌக்யமே இல்லாமல் போய்விட்டது. அக்ரூரர் தகப்பனுரான ஸாபல்யர் காசிராஜன் பெண்ணுகிய அவர் தாயைக் கலியாணம் செய்துகொள்ள காசியில் மழை பெய்து எல்லாம் செழிப்பானது. தகப்பன் சக்தி, பிள்ளைக்கும் கொஞ்சம் இருந்தபடியால் அவன் ஓடியதும் துவாரகைக்குக் கெடுதிகள் உண்டாயின. இதை அறிந்த பகவான் அக்ரூரரை அழைப்பித்து அவரிடம் நயமாகப் பேசி அவரையே ஸ்யமந்தக மணியைக் காட்டும்படிசெய்து அந்தமணியை அவரிடமே ஒப்புவித்துவிட்டார்.

வினு **118.**—மற்றைய மஹிஷிகளைப் பகவான் எவ்வாறு விவாஹம் செய்துகொண்டார்?

விடை.—காளிந்தீதேவி:—பகவான் ஒருகால் பாண்டவர்களைப் பார்க்க இந்திரப்பிரஸ்தம் போயிருக்கையில் ஒருநாள் அர்ச்சுனனேடு வேட்டையாடிக் களைத்து யமுனையில் இறங்கித் தண்ணீர்குடித்துக் கரையில் களைப்பாறினர். அப்பொழுது அங்கு அழகிய பெண்ணைக் காணப் பகவான் வேண்டுகோளின்படி அர்ச்சுனன் அவளை இன்னுர் என்றறிய அவளைச் சில கேள்விகள் கேட்டான். அதற்கு அவள் 'நான் காளிந்தீ என்ற ஒருஸ்திரீ. பகவானைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் பூர்த்தியாகும் வரையில் நான் யமுனையுள் என் தகப்பனுல் கட்டப்பட்ட பட்டினத்திலேயேதான் இருப்பேன்' என்றுள். இதை அர்ச்சுனன் பகவானுக்குத் தெரிவிக்க அவர் அவளைத் தம் தேர்மேல் ஏற்றிக்கொண்டு தர்மபுத்திரரிடம்

வந்து மயனால் அவருக்கு ஸபைமுதலியன கட்டி வைத்துவிட்டுத் துவாரகைசென்று காளிந்தீதேவியை விவாஹம் செய்துகொண்டார்.

மித்ரவிந்தா தேவி:—இவள் பகவானை ஸ்வயம்வரத்தில் மாலையிட்டிருந்தாள். இவள் பகவானது அத்தைப் பெண். இவள் ஸஹோதரர்கள் துரியோதனனிடமிருந்த பயத்தால் இவளைப் பகவானுக்குக் கொடுக்காது வைத்திருந்தார்கள். பகவான் அவளைப் பலாத்காரமாக எடுத்துக்கொண்டு வந்து விவாஹஞ் செய்துகொண்டார்.

ஸத்யவதீ தேவி:—இவள் அயோத்திராஜன் நக்னஜித்தின் பெண். அவனிடமிருந்த ஏழு கொழுத்த எருதுகளைக் கொல்பவருக்குத் தன் பெண்ணைக் கொடுப்பதாக அவன் தீர்மானம் செய்திருந்தான். பகவான் ஏழு உருவத்துடன் அவைகளைப் பிடித்து அடக்கி மூக்குசரடு போட்டு இழுத்துக்கொண்டுவந்த பின்னர் ஸத்யவதீதேவியை விவாஹம் செய்துகொண்டார்.

சுருதகீர்த்தி தேவி:—இவள் கேகயராஜன் பெண். பகவானது அத்தையின் பெண். அவரது அத்தான்மார்களே இப்பெண்ணை அவருக்கு விவாஹம் செய்து கொடுத்தார்கள்.

பிருஹத்ஸேனை:—இவள் மத்திர தேசாதிபதியின் பெண். இவளை ஸ்வயம்வரத்தில பகவான் தூக்கிவந்து விவாஹம் செய்துகொண்டார்.

ஆகவே பகவானுக்கு இவ்விதமாக அஷ்ட மஹிஷிகள் அமைந்தனர்.

வி **119**.—பகவானுக்கு 16,100 பெண்சாதிமார்கள் எவ்வாறு ஏற்பட்டனர்?

விடை.—பிராக்ஜ்யோதிஷம் என்ற பட்டணத்தின் அரசனாகிய நரகாஸுரனுடன் பகவான் சண்டைசெய்யும்படி நேரிட, அவர் கருடன்மேல் தன் பெண்சாதி ஸத்யபாமையுடன் ஏறிக்கொண்டு பிராக்ஜ்யோதிஷம் போய்ச் சேர்ந்தார். அங்கு நரகாஸுரன் ஸேனாதிபதிகளை எல்லாம் அவர் எளிதில் கொன்று சங்கை ஊத நரகாஸுரன் சண்டைக்கு வந்தான். அவனுடன் பகவான் கொஞ்சநாழிகை போர்செய்தார். அப்பொழுது கருடன் தமது இறகால் நரகாஸுரனது யானைக் கூட்டங்களைக் கொன்று தள்ளி, நரகாஸுரன்விட்ட சக்தி ஆயுதத்தையும் அலக்ஷ்யமாகத் தாங்கினார். முடிவில் பகவான் நரகாஸுரன் தலையைச் சக்ராயுதத்தால் அறுத்துவிட்டு அவன் பட்டணத்துள் புகுந்தார். அங்கு நரகாஸுரன் பல அரசர்களை வென்று அவர்களிடமிருந்து 16,100 இராஜ கன்னிகைகளைக் கல்யாணம் செய்துகொள்வதற்காக அவர்கள் இஷ்டத்திற்கு விரோதமாக வைத்திருந்தான். அவர்கள் பகவானைக் கண்டதும் ஏககாலத்தில் அவரே தமக்குப் புருஷன் என்று எண்ணிவிட அவர்களையும் பகவான் அங்கீகரித்தார்.

வி **120**.—நரகாஸுரனோடு பகவான் யுத்தம்செய்ய ஏற்பட்ட காரணம் என்ன? நரகாஸுரன் இறந்ததும் யுத்தகளத்தில் என்ன நடந்தது?

விடை.—நரகாஸுரன் இந்திரனது குடையையும், இந்திரன் தாயாகிய அதிதிதேவியின் கர்ணகுண்டலங்களையுந் திருடிக்கொண்டு போய்விட்டான். இதைச் சாக்காகக்

கொண்டு பகவான் நரகாஸுரனேடு யுத்தத்திற்குப் போனர். நரகாஸுரனை வெட்டிச் சாய்த்ததும் யுத்த களத்தில் பூதேவிவந்து நரகாஸுரன் பிள்ளையாகிய பகதத்தனைப் பகவானிடம் ஸமர்ப்பித்து அவனுக்கு அபயப்பிரதானம் வாங்கிக்கொடுத்தாள். நரகாஸுரன் இறந்தபின்பு அவனிடமிருந்த கர்ணகுண்டலங்கள், இந்திரன் குடை எல்லாவற்றையும் பகவானிடம் கொண்டு ஸமர்ப்பித்தாள். இதன் பின்பு தமது 16,100 ஸ்திரீகளையும் துவாரகைக்கு அனுப்பிவிட்டு, தேவதைகள் ஸொத்தைக்கொடுக்க இந்திரலோகம் சென்றர்.

வின 121.—இந்திரலோகத்தில் என்ன பிரமாதம்விளைந்தது? எவ்வாறு முடிந்தது?

விடை.—இந்திரலோகம் சென்று பகவான் இந்திரனுக்குக் குடையையும், அதிதிதேவிக்கு கர்ணகுண்டலங்களையும் கொடுத்து விட்டு இந்திரனல் நல்லமரியாதை செய்யப்பெற்றனர். அங்கு புஷ்பித்துக்கொண்டு வெகு அழகாக இருந்த பாரிஜாதமரம் தன் வீட்டுக் கொல்லையிலிருந்தால் நலமாக இருக்கும் என்று ஸத்யபாமை ஆசைப்பட பகவான் பாரிஜாத மரத்தை வேரோடு பெயர்த்து கருடன்மீது ஏற்றிக்கொண்டார். இந்திரன் முதலியோர் தேவலோகவிருக்ஷம் பூலோகத்திற்கும் போவது நியாயமல்ல என்று தடுத்துச் சண்டையிட அவர்களை எல்லாம் தோல்வி அடையும்படி செய்துவிட்டு ஸத்யபாமை வீட்டுப் புறக்கடையில் அந்த மரத்தைப் பகவான் நாட்டிவிட்டார். பின்னர் தமது 16,108 ஸ்திரீகளிடத்தும் ஒவ்வொருவரிடம் ஒவ்வொரு ரூபமாக இருந்துகொண்டு அவர்கள் எல்

லோரையும் ஏககாலத்தில் திருப்திசெய்துகொண்டு வந்தார். (உட்பொருளை மறவாதிருக்கவேண்டும்.)

**வி௵ 122.**—இதன்பின்னர் பகவான் குடும்பவிஷயம் எவ்வாறிருந்தது?

**விடை.**—தமது பெண்சாதிகளுள் ருக்மணியே சிறந்தபக்தி உடையவளாகையால் அவளிடம் பகவான் பிரீதியாக இருப்பதாக மற்றைய ஸ்திரீகளது அபிப்பிராயம். ஆனால் பகவான் ருக்மணியைத்தான் அதிகமாகப் பரிசோதனை பரிஹாஸம் முதலியன செய்வது வழக்கம். ஒருநாள் ருக்மணி ஏகாந்தமாக இருக்கையில் 'நானோ ராஜாவாக யோக்யனல்லன். ஸமமானவர்களோடு தான் ஸ்நேகம், கல்யாணம் முதலியன செய்து கொள்ளவேண்டும். அப்படி இருக்க பெரிய அரசர்களைக் கவனியாது என்னை நீ தேடி எடுத்தது உன் மூடத்தன மல்லவா?' என்று அவளைப் பரிஹாஸம் செய்தார். ருக்மணி இதைக்கேட்டதும் மனங்கலங்கினாள். பகவான் இப்படிச் சொல்லும்படி எந்த குற்றத்தை நாம் செயதுவிட்டோம் என்று பதறினாள், அழத் தொடங்கினாள். பகவான் இவள் பரிசுத்த மனதை அறிந்தவராகையால் இவளைத் தேற்றினார். உடனே ருக்மணி பகவானைத் துதிசெய்தாள். பின்னர் அவரை நோக்கி 'நீங்கள் சொல்லியது உண்மைதான். பெண்களிடம் ஸாதாரணமாக இருக்கும் குற்றத்தை என்பேரில் ஏற்றிச் சொல்லிவிட்டீர்கள்' என்று கூறினாள். அப்பொழுது பகவான் அவளைநோக்கி, 'எந்த நோக்கங்களோடிருந்த போதிலும் எவர்கள் என்னைப் பக்திசெய்யத் திரும்பிவிடுவார்களோ அவர்களே அதிர்ஷ்டவான்கள்' என்றார். பகவான் மற்ற ஸ்திரீ

களிடத்தும் ஸரிவரவே நடந்துகொண்டார் அவருக்குப் பிள்ளைகள் அநேகர். ஒவ்வொரு ஸ்திரீயிடத்தும் அவருக்குப் பிள்ளைகள் உண்டு. ருக்மணி பிள்ளையாகிய பிரத்யும்னன் ருக்மியின் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டான்.

வினு **123.**—கிருஷ்ணன்மேல் தீராவிரோதம் கொண்டிருந்த ருக்மி, பிரத்யும்னனுக்கு எவ்வாறு தன் பெண்ணைக்கொடுக்க இசைந்தான் ?

விடை.—ருக்மிக்குப் பகவானிடம் விரோதம் இருந்த போதிலும் தன் பெண் ருக்மாவதி ஸ்வயம்வரத்தில் பிரத்யும்னனுக்கு மாலையிட ருக்மிணியைத் திருப்திப் படுத்துவதற்காக, அவனுக்கே அவளைக் கொடுத்தான். மேலும் இதே காரணத்திற்காக அவன் தனது பேத்தியாகிய ரோசனையைப் பிரத்யும்னன் பிள்ளை அனிருத்தனுக்குக் கொடுத்தான்.

வினு **124.**—அநிருத்தன் கல்யாணத்தில் என்ன பிரமாதம் விளைந்தது? ஏன்?

விடை.—இந்தக் கல்யாண ஸமயத்தில் ருக்மி, பலராமரால் அடிபட்டு இறக்கும்படி நேரிட்டது. இந்த கல்யாண மானது ருக்மியையும் பலராமரையும் சூதாடும்படி ஏற்பாடு செய்துவிட்டனர். சூதாட்டம் வெகு உத்ஸாக மாக நடந்தது. அதில் முதல் இரண்டுதரம் ருக்மி ஜயித்தான். அவன் சிரித்த சிரிப்பு பலராமருக்குப் பிடிக்கவேயில்லை. அவருக்குக்கோபம் அதிகரித்துக் கொண்டே வந்தது. பின் இரண்டு ஆட்டத்தில் பலராமர் ஜயித்தார். அதை மறைத்து ருக்மி தான் ஜயித்துவிட்டதாகப் பெருமை பேசினுன். பலராம

ருக்கு ஒன்றும் தெரியாததால் கோபத்தைக் காட்டாது இருந்துவிட்டார். நான்காம் ஆட்டம் முடிந்ததும் 'பலராமர்தான் ஜயித்தது. ருக்மி மோசம் செய்து விட்டான்' என்ற அசரீரி வாக்குப்பிறந்தது, பலராமர் கோபம் அடங்கிநிற்காது கிளம்பிவிட்டது. அப்பொழுது அவர் ருக்மியை அடித்துக் கொன்றுவிட்டு மற்றையவர்கள் பற்களைத் தகர்த்து அவர்களை அவமானம் செய்துவிட்டார்;

விஞ 125.—இப்படி இருக்கையில் அநிருத்தன் விஷயமாக என்ன கஷ்டம் யாதவாளுக்கு வந்தது ?

விடை.—திடீரென்று அநிருத்தன் காணுமல் போய்விட்டான். அவனை எங்குதேடியும் அகப்படவில்லை. எல்லோரும் மிகுந்த துக்கத்தை அடைந்திருக்கையில் நாரதர் வந்து அநிருத்தன் பாணுஸுரனுல் சிறைபடுத்தப் பட்டிருக்கிறுன் என்று தெரிவிக்க, பகவான் தமது யாதவ ஸேனையோடு பாணுஸுரன் பட்டணம் போய்ச்சேர்ந்தார்.

விஞ 126.—பாணுஸுரன் யார் ? அவன் அநிருத்தனைச் சிறைபிடிக்கக் காரணம் என்ன ?

விடை பாணுஸுரன் மஹாபலியின் முதல்பிள்ளை, அவனுக்கு 99-தம்பிகள் உண்டு. அவன் பெரிய சிவபக்தன். பரமசிவன் அனுக்கிரஹத்தால் ஆயிரம் கைகளைப் பெற்றவன். பரமசிவன் அவன் பட்டணமாகிய சோணிதபுரத்திலே காவலாக நின்றுவிட்டார். இப்படி இருக்கையில் ஒருநாள் பாணன் பரமசிவத்தை நோக்கி 'தாங்கள் கொடுத்த ஆயிரம்கைகள் எனக்குப் பாரமாகி விட்டன. மேலும் சண்டையிடாது என் கைகள் குறு

குறுக்கின்றன. நான் உமக்கு ஸமம் ஆகையால் என்னை எதிர்க்கவல்லார் யார்?' என்று கர்வப்பட்டான். அதற்குப் பரமசிவம் என்னைப்போன்றவர் ஒருவர்வந்து உன் கர்வத்தை அடக்குவார் பொறுத்துக்கொள்' என்றார். இவனுக்கு உஷை என்ற ஒரு பெண் உண்டு. அவளைத் தனக்குத் தெரியாது அநிருத்தன் பெண்சாதியாக்க முயலுகிறான் என்று கேள்விபட்டுப் பாணன் அநிருத்தனைப்பிடித்துச் சிறையிலிட்டான்.

வி **127**.—உஷைக்கும் அநிருத்தனுக்கும் எவ்வாறு பழக்கம் ஏற்பட்டது? அநிருத்தன் அங்கு எவ்வாறு வந்து சேர்ந்தான்?

விடை.—உஷை தூங்குங்கால் சில காலமாக ஒரு புருஷன் கனவில்வந்து தன்னிடம் இருந்து போவதாகக் கண்டு கொண்டிருந்தாள். அவனிடமே அவளுக்குப் பற்று உண்டாகிவிட்டது. அவளுக்குச் சித்திரலேகை என்ற தோழி ஒருவள் உண்டு. இவள் எல்லோருடைய சித்திரங்களையும் எழுதும் வல்லமை உடையவள். உஷைக்கு ஏற்பட்ட குறிகளைக்கண்டு அவள் யாரோ ஒரு புருஷனிடம் பற்று வைத்துவிட்டாள் என்று தெரிந்துகொண்டு ரகஸியத்தைத் தன்னிடம் வெளிப்படுத்தும்படி கேட்டாள். உஷை உண்மையைச் சொல்லிக் கனவில்வரும் புருஷன் இன்னார் என்று தன்னால் சொல்ல முடியாதென்றும் கூறினாள். உடனே சித்திரலேகை அரசர்கள் படங்களை எழுதிக்கொண்டு வர, அநிருத்தன் படம் வந்ததும் உஷை வெட்கி மௌனமானாள். உடனே சித்திரலேகை தனது மாயாசக்தியால் ஆகாயமார்க்கமாகத் துவாரகை வந்து தூங்கிக்கொண்டிருந்த அநிருத்தனை உஷையிடம்

கொண்டுவந்து விட்டாள். இவர்கள் இருவரும் ஸுக மாக இருக்கையில் இந்த ஸங்கதி பாணனுக்குத் தெரிய வர அவன் அநிருத்தனை சிறையிலிட்டான். உஷைக்கு மிகுந்த துக்கம் உண்டாயிற்று. அவளால் என்னசெய்ய முடியும்?

வினா 128.—பாணாஸுரயுத்தம் எவ்வாறு நடந்து முடிவு பெற்றது?

விடை.—அநிருத்தனுக்காகப் பகவான் ஸேனைகளோடு தன் பட்டணத்தை வளைந்து கொண்டதைக்கண்ட பாணா ஸுரன் தானும் அநேக ஸேனைகளோடு சண்டைக்குப் புறப்பட்டான். அப்பொழுது சிவபெருமானும் பாணா ஸுரனுக்கு ஸஹாயமாகத் தமது கணங்களோடு சண் டைக்குப் புறப்பட்டார். சிவபிரான் தாம் முன் பாணன்கர்வத்தை அடக்கும் விஷயத்தில் சொன்ன வைகளை எண்ணித்தோல்வி அடைந்தவர் போலானார். பகவான் தம்மோடு முடிவில் போர்செய்யவந்த பாண னது கைகளை வெட்டித்தள்ளி அவனைக் கொல்ல யத் தனித்தார். அந்தத் தருணத்தில் பாணன் தாய் கோட் டாரி என்பவள் பகவானிடம் பாணனைத் தப்புவிக்க அவன் தன் பட்டணத்துள் புகுந்துகொண்டான். பின் னர் பரமசிவத்தின் வார்த்தைக்குத் தக்கபடி பகவான் பாணனைக்கொல்லாது அவன் பலத்தையும் நான்கு கைகள்தவிர மற்றைய கைகளையும் மாத்திரம் எடுத்து விட்டார். பின்பு பாணன் அநிருத்தனையும் உஷையை யும் கொண்டுவந்து பகவானிடம்விட எல்லோரும் துவாரகை சேர்ந்தனர்.

வினா 129.—இதன் பிறகு என்ன தர்மத்தைப் பகவான் யாதவர்களுக்கு உபதேசிக்கும்படி நேர்ந்தது?

**விடை.**—'பிராம்மணர்கள் ஸொத்தையே ஒருபொழுதும் அபஹரிக்கக் கூடாது. அப்படிச் செய்தால் மிகுந்த பாபம் ஸம்பவிக்கும்' என்ற விஷயத்தைப் பகவான் யாதவாளுக்கு உபதேசிக்கும்படி நேரிட்டது. அப்பொழுது பகவான், 'பிராம்மணன் ஸொத்து விஷத்தை விட மிகக்கொடியது. விஷத்தின் வேகத்தைத்தீர்க்க மருந்துஉண்டு. பிராம்மணஸொத்தை அபஹரிப்பதால் உண்டாகும் பாபத்தை நீக்கவல்ல பிராயச்சித்தமே இல்லை. பிராம்மணர்களிடம் ஒன்றும் வாங்கித் தின்று விடக்கூடாது. அப்படி இருக்க அவர்கள் ஸொத்தை எப்படித் திருடலாம்? பிராம்மணர்கள் தமக்கென்று அதிக ஸொத்தைசேர்க்கும் குணமுடையவர்கள் அல்லர். ஆதலால் அவர்களிடம் ஏதோ அவஸரத்திற்கு வைத்திருக்கும் ஸொல்பஸொத்தை திருடுதல் ஆகிய அகாரியம் செய்பவனுக்குத் தாழ்ந்த ஜன்மங்கள் உண்டாகும் என்பதற்கு ஸந்தேகமில்லை' என்று இந்த விஷயத்தை விஸ்தரித்துப் பேசினார்.

**வினா 130.**—இம்மாதிரி பகவான் உபதேசிக்க என்ன ஸந்தர்ப்பம் நேர்ந்தது?

**விடை.**—ஒருநாள் பிரத்யும்னன் முதலியோர் தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களுக்குத் தாகம் உண்டாக அருகிலிருந்த கிணற்றண்டை போனார்கள். அதில் தண்ணீரே இல்லை. அதில் மலை போன்ற பெரியதாகிய ஓணான் ஒன்றிருக்கக் கண்டார்கள். அது வெளிவரமாட்டாது படும் கஷ்டத்தைக் கண்டு இவர்களுக்கு இரக்கம் வந்துவிட்டது. அதைக் கயிறுகளால் கட்டி வெளியில் இழுக்க அவர்கள் எவ்வளவோ முயன்றார்கள். அவர்களால் ஒன்றும் முடிய

வில்லை. இதை பகவானுக்குத் தெரிவிக்க, அவர்வந்து அதை இடதுகையால் எளிதாகத் தூக்கிவிட்டார். பகவான் கைபட்டதும் அந்தஓணன் உருமாறி ஓர் திவ்ய புருஷனுகிவிட்டது. பகவான் வேண்டுகோளின் பேரில் அந்தப் புருஷன் தான் இக்ஷ்வாகு வம்சத்தி லுதித்த நிருக சக்ரவர்த்தி என்றும், தான் கோதானம் அநேகம் செய்துவந்ததாகவும், அதில் ஒரு பிராம்மண னுக்குக் கொடுத்த பசு தன் வீடுவந்து சேர்ந்துவிட அதை உணராது அதையும் சேர்த்து வேறோர் பிராம் மணருக்குக் கொடுத்து விட்டதாகவும், அப்பொழுது முன்தானம் வாங்கியவரும், பின்தானம் வாங்கியவரும் வழக்கிட்டுக்கொண்டு தன்னிடமே வந்ததாகவும், தனக்கு இருவருக்கும் திருப்தி உண்டாகும்படி நடந்து கொள்ளமுடியாமல் போனதாகவும், அதனால் தனக்கு இந்த ஓணன் ஜன்மம் வந்ததென்பதாகவும் கூறிப் பகவானைத் துதி செய்துவிட்டு உத்தரவின்பேரில் நிரு கன் மறைந்தான். இதைச் சாக்கிட்டு முற்கூறிய உப தேசத்தைப் பகவான் யாதவர்களுக்குச் செய்தார்.

**வின 131**—இப்படிப் பகவான் துவாரகையில் வாஸம் செய்து கொண்டு வருகையில் பலராமர் என்ன செய் தார்?

**விடை.**—இப்படி இருக்கையில் பலராமருக்கு கோகுலம் போய் நந்தகோபர் முதலியோரைப் பார்த்துவரவேண் டும் என்ற ஆவல்பிறக்கத் தமது ரதத்தில் ஏறிக் கொண்டு கோகுலம்போய்ச் சேர்ந்தார். நந்தகோபர் கோபிகைகள் முதலியோர் பகவான் யோகக்ஷேமங் களை விசாரித்துவிட்டு அவர் தரிசனம் கிடைக்காத தைப்பற்றி ஏங்கி, பகவான் முன்னர்செய்த லீலைகளை

எண்ணி எண்ணிப் பரிதவிக்கலாயினர். பகவானைப் போல பலராமரும் கோபிகைகள் முதலியோரைத் திருப்தி செய்துகொண்டு அங்கு இரண்டுமாதம் இருந்தார். அப்பொழுது யமுனைநதியைச் சற்று தாம் இருக்குமிடம் வந்து தமது விளையாட்டுக்கு ஸஹாயமாகும்படி கேட்டுக்கொள்ள அவள் அவ்வாறே செய்யாததால் யமுனையைத் தமது கல்பை ஆயுதத்தால் வளைத்துவிட்டார். யமுனை பலராமர் கோபத்தைத் தணியும்படி செய்தாள். முன்போல ஓடும்படி யமுனையை அவர் விட்டுவிட்டார்.

**வி 132.**—பலராமர் கோகுலத்திலிருக்கையில் பகவானுக்கு யாரோடு சண்டையிடும்படி நேர்ந்தது? ஏன்?

விடை.—கருஷதேசத்து அரசனை பௌண்ட்ரிக வாஸுதேவன் என்பவனோடு பகவான் சண்டை செய்யும்படி நேர்ந்தது. இவன் பகவானது சின்னங்களை எல்லாம் வேஷமாகத் தரித்துக்கொண்டு தான் பிரபஞ்சமெங்கும் பரவி இருக்கும் வாஸுதேவன் என்று கர்வம் கொண்டிருந்தான். இதற்கு ஏற்றபடி அவன் ஒரு தூதனை அனுப்பிப் பகவானிடம் 'ஏ கிருஷ்ணா! நான் உண்மையான வாஸுதேவப் பிரம்மமாக இருக்க எனது அடையாளங்களை எல்லாம் போட்டுக்கொண்டு எனதுநிலை உனக்கு வந்துவிட்டதாக நீ வீண்பெருமை பேசி ஜனங்களை மோசம் செய்கிறாயா? என்னுடன் சண்டைசெய்து உன் திறமையைக் காட்டு' என்று சொல்லும்படி செய்து அவரை வலுச்சண்டைக்கு இழுத்தான். இதனால்தான் பௌண்ட்ரிக வாஸுதேவனுடன் பகவான் போர்செய்யும்படி நேர்ந்தது.

வின 133.—பௌண்ட்ரிக வாஸுதேவனோடு ஏற்பட்ட யுத்தம் எவ்வாறு நடந்து முடிவுபெற்றது ?

விடை.—சண்டைக்குப்போய் நின்றதும் தம்மைப்போன்ற உருவம் ஆடை ஆபரணம், அடையாளங்களை உடையவனாகிப் பௌண்ட்ரிக வாஸுதேவன் எதிர்த்துவருவதைப் பகவான் கண்டார். இந்த வேஷத்தைக் கண்டு நகைத்தார். கொஞ்ச நாழிகை விளையாட்டாக அவனுடன் போர் செய்துவிட்டு முடிவில் தமது சக்ராயுதத்தால் பகவான் அவன் சிரத்தைக் கொய்து தள்ளினார். பின் பௌண்ட்ரிகனுக்கு ஸஹாயமாக வந்த காசிராஜன் தலையை வெட்டிக் காசி பட்டணத்துள்ளேயே எறிந்துவிட்டுப் பகவான் துவாரகை நோக்கிப் புறப்பட்டார். இருந்தவரையில் பௌண்ட்ரிகன் பகவானது ஆடையாபரணங்களை வேஷமாகத் தரித்துக் கொண்டு அவரையே எண்ணிக் கொண்டிருந்தமையால் இறந்ததும் பாபங்களிலிருந்தும் விடுபட்டுச் சுத்தனாகிப் பகவானோடு கலந்து விட்டான்.

வின 134.—காசிராஜன் மரணத்தால் மேல்விளைந்த விஷயங்கள் என்ன ? அவைகள் எவ்வாறு முடிவு பெற்றன ?

விடை.—காசி நகரத்துள் காசிராஜன் தலை வந்து விழுந்ததும் எல்லோரும் தமது ராஜன் இறந்ததை உணர்ந்தனர். அப்பொழுது அவன் பிள்ளையாகிய ஸுதீக்ஷணன் தகப்பனுக்குச் செய்ய வேண்டிய கடன்களை முடித்துவிட்டுத் தனது புரோஹிதர்கள் ஸஹாயத்தோடு பரமசிவத்தைக் குறித்துத் தவம் செய்தான். அவர் பிரத்யக்ஷமாகி 'என்ன வரம் வேண்டும்' என்று கேட்டார். 'என் தகப்பனைக் கொன்ற புருஷனைக் கொல்ல உபாயம் சொல்ல வேண்டும்' என்றான்.

ஸுதீக்ஷணன். 'தக்ஷணாக்னியில் தகுந்த ஆகுதிகள் கொடு. அதையே ஏவினால் உன் காரியம் முடியும்' என்று சொல்லி மறைந்தார் பரமசிவன். ஸுதீக்ஷணன் பிராம்மணர்கள் ஸஹாயத்தால் அவ்வாறே செய்ய அக்னி கிளம்பிப் பகவானைத் தகிக்கப் புறப்பட்டு விட்டது. அந்த அக்னியைக் கண்டு யாதவர்கள் சொக்கட்டானாடிக் கொண்டிருந்த பகவானிடம் வந்து சரணம் அடைய அவர் தமது சக்ராயுதத்தால் அக்னியை வந்தவழியே திருப்பி விட்டார். தடைபட்ட அக்னி திரும்பி வந்து ஸுதீக்ஷணனையும், அவன் ரித்விக் பிராம்மணனையும் எரித்துவிட்டது. பின் தொடர்ந்து சென்ற சக்ராயுதம் காசிநகரம் முழுவதையும் சுட்டுக் கொட்டை பரப்பிவிட்டு வந்துவிட்டது.

வி **135.**—இந்த ஸமயத்தில், பலராமர் யாரைக் கொல்லும்படி நேர்ந்தது? ஏன்?

விடை.—ராமவதாரத்தில் மைந்த த்விதன் என்ற இரண்டு குரங்குகள் ஸுக்ரீவனுக்கு ஸ்நேகிதர்களாயிருந்தனர். அவர்கள் ராம ஆஞ்ஞையின்பேரில் உலகத்தில் தங்கினவர். அவர்களுள் த்விதன் பலராமர் காலத்தில் இருந்தான். அவனைப் பலராமர் கொல்லும்படி நேர்ந்தது. இந்தக் குரங்கு நரகாஸுரனுக்கு ஸ்நேகிதன். இதற்குக் கெட்ட குணங்கள் படிந்து விட்டன. பார்ப்பதை யெல்லாம் அசுத்தப்படுத்தி அழிப்பதே இதற்குத் தொழிலாகி விட்டது. இப்படி இருக்கையில் பலராமர் கிரீடித்துக்கொண்டிருந்த ரைவதக பர்வதத்திற்கு இந்தக் குரங்கு வந்து அங்கு பெரிய அட்டஹாஸம் செய்து நாசம் செய்யத் தொடங்கியது. அப்

பொழுது பலராமர் கோபங்கொண்டு சண்டை செய்து முடிவில் துவிதனைக் கொன்றார்.

**வினா 136.**—இப்படி யிருக்கையில் யாது காரணத்தால் யாதவாளுக்கும் கௌரவர்களுக்கும் என்ன சச்சரவு உண்டாகி எவ்வாறு முடிவு பெற்றது ?

**விடை.**—ஜாம்பவதியின் பிள்ளை ஸாம்பன் துரியோதனன் பெண் லக்ஷ்மணையை ஸ்வயம்வரத்தில் அவள் இஷ்டத்தின்படியே எடுத்துச் சென்றான். இதைக் கண்டு பொறுக்காது துரியோதனாதியர் ஸாம்பனைப் பிடித்துச் சிறையிலிட்டனர். இதைக் கேள்விப்பட்டுப் பலராமர் கௌரவர்களுக்கும் யாதவாளுக்கும் சச்சரவு வரக் கூடாதென்ற எண்ணத்துடன் சண்டைக்குச் செய்த ஏற்பாடுகளை நிறுத்திவிட்டு உத்தவருடன் ஹஸ்தினா புரி வந்து துரியோதனாதியரை ஸமாதானம் செய்யப் பார்த்தார். அவரால் முடியவில்லை. உடனே கோபங் கொண்டு தமது ஆயுதத்தால் ஹஸ்தினாபுரியையே கங் கையில் எடுத்து எறிந்து விட்டார். இதைக் கண்ட கௌரவர்கள் ஸாம்பனையும் லக்ஷ்மணையையும் பலராம ரிடம் கொண்டுவந்து ஸமர்ப்பித்தார்கள். சச்சரவு மேல் விருத்தியாகாமல் நின்று விட்டது.

**வினா 137.**—பகவான் தமது பெண்சாதிமார்களுடன் நடந்துகொண்ட விதம் எவ்வாறு வெளிவந்தது ?

**விடை.**—பகவான் 16,108 ஸ்திரீகளை வைத்துக்கொண்டு இல்லறம் ஸரிவர நடத்தி உலகத்தவருக்குக் காட்டு வதைக் கண்டு களிக்க நாரதர் துவாரகை வந்து சேர்ந் தார். விடாது நாரதர் பகவானது ஒவ்வொரு ஸ்திரீ வீட்டிலேயும் நுழைந்து பார்த்தார். ஒவ்வொரு இடத்

திலேயும் பகவான் ஒவ்வொரு ரூபத்தோடு இல்லற தர்மப்படி நடந்துகொண்டிருப்பதைக் கண்டு வியந்தார். ஒருவீட்டில் பகவான் அதிகாலை எழுந்திருப்பதையும், மற்றொரு வீட்டில் ஸ்நானம் அனுஷ்டானம் செய்வதையும், அக்னிஹோத்திரம் செய்வதையும், வேறொரு வீட்டில் பிராம்மண போஜனம் செய்து வைத்துவிட்டு அவர் சாப்பிடுவதையும், வேறோர் வீட்டில் ஸந்த்யாவந்தனம் விதிப்படி செய்வதையும், வேறோர் வீட்டில் உத்தவர் முதலியவர்களோடு ஆலோசனை செய்வதையும், வேறோர் வீட்டில் ஸத் காலக்ஷேபம் செய்வதையும், வேறோர் வீட்டில் தியானம் செய்வதையும், இவ்வாறு தமது யோகபலத்தால் ஒவ்வொரு வீட்டில் ஒவ்வொரு அவஸரத்தில் பகவான் இருந்து உலகத்திற்கு இல்லறம் நடத்திக் காட்டுவதைக் கண்டு ஆனந்த பரவசரானார். ஒரு வீட்டில் புகும்பொழுது பகவான் ஓடோடியும் வந்து நாரதருக்குத் தகுந்த மரியாதைகள் செய்து அவரது க்ஷேமங்களை மிகுந்த அன்புடன் விசாரித்தார். மிகுந்த திருப்தியுடன் நாரதர் பரோபகாரமாகிய தமது தொழிலை நடத்தப் புறப்பட்டு விட்டார்.

வி**ஞ 138.**—இப்படி இருக்கையில் பகவானுக்கு எந்தவிதமாகத் துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனம் செய்யும்படி நேரிட்டது?

விடை.—பகவான் ஒருநாள் தமது காலைக்கடன்களை முடித்துக்கொண்டு ஸுதர்மை என்ற ஸபையில் வந்து உட்கார்ந்த அந்த ஸமயத்தில் ஒரு தூதன் வந்து மிகுந்த பரபரப்புடன் 'நான் கிரிவ்ரஜம் என்ற ஜராஸந்தன் பட்டணத்திலிருந்து வருகிறேன்; அங்கு பிடிபட்டுத்

தமது மரணத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கும் அரசர்கள் எல்லோரும் சேர்ந்து என்னை அனுப்பினார்கள். உம்மை ஜயித்துவிட்டால் தனக்கு நிகர் ஒருவரும் இல்லை என்று ஜராஸந்தன் கர்வங் கொண்டிருக்கிறான். சீக்கிரம் வந்து தாங்கள் அவர்களைக் காப்பாற்றாவிடில் அவர்கள் ஜராஸந்தன் கோபத்திற்கு இரையாவார்கள். அந்த அரசர்கள் உமது ஸஹாயத்தையே எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்' என்று கூறினான். இதைக் கேட்ட பகவான் 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லித் தூதனை அனுப்பி விட்டார்.

வின 139.—ஜராஸந்தனைக் கொல்லும் விஷயத்தில் அனுகூலமாக என்னென்ன நடந்தது?

விடை.—இந்தத் தூதன் போனதும் நாரதர் துவாரகை வந்து 'தர்மபுத்திரர் ராஜஸூய யாகம் செய்வதாகத் தீர்மானித்திருக்கிறார்' என்று தெரிவித்தார். அப்பொழுது பகவான் உத்தவரை அழைத்து ஜராஸந்தனைக் கொல்லும் விதத்தை ஆலோசிக்க அவர் 'ஸ்வாமி! தருமபுத்திரர் ராஜஸூய யாகம் செய்ய வேண்டும் என்கிறார். அதற்கு அவர் பாதகண்ட அரசர்களை எவ்விதத்திலாவது தமது வசப்படுத்த வேண்டும். அப்படிச் செய்ய முடியாதவர்களைக் கொல்ல வேண்டும். ஜராஸந்தன் அப்பொழுது இறந்துதான் தீரவேண்டும். அவனுக்கு ஸமான பலமுடையவன் பீமன். அவர்களைப் பிராம்மண உருவத்துடன் ஜராஸந்தனிடம் சென்று துவந்தயுத்தத்தை யாசிக்கும்படி செய்தால் அவன் ஜராஸந்தனை அவசியம் கொல்வான் இந்த ஒரு காரியத்தால் ஜராஸந்தனையும் கொன்றுவிடலாம். அடைபட்டிருக்கும் அரசர்களையும் விடு

விக்கலாம். தருமபுத்திரர் ராஜஸூய யாகத்தையும் முடித்து வைக்கலாம்!' என்று உபாயம் சொன்னார். [மேல் பகவான் இவைகளை முடித்த விதத்தையும், இராஜஸூய யாக காலத்தில் பகவான் அதிதிகளது கால்களைக் கழுவும் வேலையிலிருந்ததையும், சிசுபால வதம் நடந்ததையும், துரியோதனன் பொறாமை கொண்டதையும் மஹாபாரத வினாவிடை முதல்பாகம் ஸபா பர்வத்தில் காண்க.]

வினா 140.—இராஜஸூய யாகம் முடிந்ததும் துவாரகைக்கு என்ன அவஸர காரியமாகப் பகவான் போக வேண்டி வந்தது?

விடை.—சிசுபாலன் ஸ்நேகிதனான ஸால்வராஜா, தனது தோழன் ருக்மணியை விவாஹம் செய்துகொள்ள வொட்டாது பகவானால் அவமானப் படுத்தப்பட்டதையும், முடிவில் ராஜஸூய யாகஸபையில் பகவானாலேயே கொல்லப்பட்டதையும் எண்ணி மிகுந்த கோபம் அடைந்தான். 'யாதவப்பூண்டே உலகில் இல்லாமல் அடித்துவிடுகிறேன்' என்று சபதம் செய்து கொண்டு பரமசிவத்தினிடமிருந்து தவத்தால் எல்லோரையும் தாக்கிச் செல்லக் கூடியதான ஸௌபம் என்ற இரும்பு விமானத்தைப்பெற்றுப் பகவான் பாண்டவர்களிடம் இருக்கையில் துவாரகைவந்து 27-நாள் யுத்தம்செய்து துவாரகையை அழித்தான். அப்பொழுது சண்டை செய்யவந்த யாதவர்களைக் கொன்றான். இந்தச் சண்டையில் பிரத்யும்னன் அடிபட்டு மூர்ச்சை போனான். முடிவில் யாதவர்கள் சண்டையைத் தாங்கமுடியாமல் போக, ஸால்வராஜா பகவான் வந்து விடுவார் என்ற பயத்தால் விமானத்துடன் தன்

ராஜ்யம் நோக்கிப் புறப்பட்டான். இதற்குள் இந்திரப் பிரஸ்தத்தில் பகவான் அபசகுனங்களைக்கண்டு துவாரகையில் ஏதோ அபாயம் வந்திருக்கவேண்டும் என்று உணர்ந்து தருமபுத்திரரிடம் விடை பெற்றுப் பலராமருடன் துவாரகை சென்று அங்கு நடந்திருக்கும் அலங்கோலத்தைக்கண்டு பலராமரை அங்கு காவல் வைத்துவிட்டு ஸால்வராஜா போன திக்கை நோக்கிப் பகவான் தமது ரதத்தில் ஏறிக்கொண்டு புறப்பட்டார்.

வினா 141.—ஸால்வராஜனுக்கும் பகவானுக்கும் சண்டை எவ்வாறு நடந்து முடிவு பெற்றது?

விடை.—ஸால்வராஜன் ஸௌபவ விமானத்தில் போவதைப் பகவான் கண்டதும், அவனுடன் பெரிய போர் செய்யத் தொடங்கினார். அதில் பகவான் ஸால்வராஜாவைத் தமது கதையால் அடிக்க அவன் அடி பொறுக்க மாட்டாது ரத்தத்தைக் கக்கிக் கொண்டிருந்தான். இப்படி இருந்தவன் திடீரென்று மறைந்தான். கொஞ்ச நாழிகைக்கு எல்லாம் தேவகராஜனிடமிருந்து ஒரு ஆள் மிகுந்த பரபரப்புடன் வந்து மிகுந்த துக்கத்துடன் பகவானை நோக்கி, 'கிருஷ்ணா! உமது தகப்பனாரை ஸால்வராஜா இப்பொழுதுதான் துவாரகையிலிருந்து பிடித்துக்கொண்டு போய்விட்டான்' என்று கூறி மறைந்தான். இந்தக் காரியம் ஸால்வனால் எப்படி முடியும் என்று எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் வஸுதேவரை அழைத்துக்கொண்டு ஸால்வராஜன் பகவானிடம் வந்து அவர் முன்பாக 'இதோ உன் தகப்பனை வெட்டுகிறேன்! உனக்கு ஸாமர்த்திய மிருந்தால் என்னை தடுத்துவிடு!' என்று சொல்லிக்கொண்டு, பகவான் இன்னது செய்வது என்று தீர்மானிக்கும்

முன், வஸுதேவர் தலையை ஸால்வராஜன் வெட்டி அவர் தேஹத்தை அங்கேயே போட்டு விட்டுத் தலையை மாத்திரம் எடுத்துக்கொண்டு மறைந்தான். பகவான் அப்போது கொஞ்சம் பதறியவர்போல் நடித்தார். அங்கு மயன் வந்து இது ஸால்வராஜன் மாயை என்று கூறப் பகவான் தெளிந்து நோக்குகையில் வஸுதேவர் தேகத்தையும் தாதனையும் அங்கு காணோம். வெகு நாழிகை பகவான் ஸால்வராஜாவுடன் போர் செய்து அவன் ஸௌபவ விமானத்தை உடைத்து ஸமுத்திரத்தில் எறிந்து விட்டார். முடிவில் ஸால்வனைப் பகவான் தமது சக்ராயுதத்தால் வெட்டிக் கொன்றார்.

வினு **142**.—இந்த ஸமயத்தில் ஸால்வனுக்காக யார் ஸஹாயமாக வந்தது? அவன் கதி என்னமாயிற்று?

விடை.—தந்தவக்ரன் என்ற அஸுரன் தனது ஸ்நேஹிதர்களான சிசுபாலன், ஸால்வன் முதலியோரைக் கொன்றதால் பகவானிடம் கொடிய கோபங்கொண்டவனாய் 'இதோ பார்! உன்னை இந்த கதைக்கு இரையாக்கிவிட்டு மறுகாரியம் பார்க்கிறேன்!' என்று வீண் பெருமை பேசிக்கொண்டு பகவானிடம் சண்டைக்கு வந்தான். அவன் கதை அடியை லக்ஷ்யம்செய்யாது பகவான் தமது கதையால் அவனை எளிதில் அடித்துக் கொன்றார். இவனிடமிருந்து ஓர் ஜ்யோதி கிளம்பி பகவானுள் பிரவேசித்தது. பின்னர் தந்தவக்ரனது தம்பி விடூரதனைப் பகவான் சக்ராயுதத்தால் கொன்றார். (இந்த ஸமயத்தில் தான் பாண்டவர்களோடு சகுனி மாயச்சூதாடியதும், திரௌபதி மானம் ரக்ஷிக்கப்பட்டதும், பாண்டவர்கள் காட்டிற்

குத். துரத்தப்பட்டதும். பகவான் ஸால்வராஜனோடு சண்டை செய்துகொண்டிருந்தமையால் பாண்டவர்களிடம்போக அவரால் முடியவில்லை. பாண்டவர்கள் காடுசென்ற கொஞ்ச நாளைக்கெல்லாம் அவர்களை யாதவர்களோடு பகவான் சென்று தேற்றினார்.)

**வினா 143.**—இதன்பின்பு பகவான்செய்த விஷயங்கள் என்ன?

**விடை.**—இதன்பின்பு பகவான் செய்தவிஷயங்கள் எல்லாம் மஹாபாரத வினாவிடை ஆரண்யபர்வம் முதல் ஸௌப்திக பர்வம்வரை (முதல் இரண்டாம் பாகங்களில்) விஸ்தாரமாக எடுத்துக்காட்டி இருக்கிறது. அவையாவன:—பாண்டவர்களை அவர்கள் தீர்த்த யாத்திரையில் ஸந்தித்தல், பாண்டவர்களைத் தூர்வாஸ சாபத்திலிருந்து தப்புவித்தல், பாண்டவர்களுக்காகப் பகவான் ஹஸ்தினாபுரிக்குத் தூதுநடந்து அங்கு செய்த விசேஷங்கள், அர்ச்சுனனுக்குப் பகவத்கீதை உபதேசம் செய்தது, பாண்டவர்கள் பக்கம் ஆயுதம் எடுக்காது மஹாபாரத யுத்தத்தில் பகவான் ஸஹாயம் செய்தது ஆகிய இவைகளே.

**வினா 144.**—பாரதயுத்தம் நடக்கப்போகிறதைக் கேள்விப்பட்டுப் பலராமர் என்னசெய்தார்? அப்பொழுது என்ன பாபம் அவர் செய்தார்? அதை எவ்வாறு தீர்த்துக்கொண்டார்?

**விடை.**—இரண்டு பக்கத்தோரையும் கவனியாது பலராமர் தீர்த்த யாத்திரை புறப்பட்டார். (இவர் யாத்திரையின் விரதத்தை மஹாபாரத வினாவிடை 2-ம் பாகம் சல்லியபர்வத்தில் காண்க.) போகும்வழியில் நைமி

சாரண்யத்தில் ஸூதபுராணிகர் உயர்ந்த ஆஸனத்தில் உட்கார்ந்திருப்பதையும் தம்மைக்கண்டு எழுந்திரா திருப்பதையும் கண்டு பலராமர் கோபங்கொண்டு தம் கையிலிருந்த தர்பைப் புல்லால் அவரைக்கொன்றூர். நைமிசாரண்ய ரிஷிகள்தாமே ஸூதரை அவ்வாறு இருக்கும்படி செய்திருப்பதாகவும், அவர் அப்பொழுது பிராம்மணருக்கு ஸமம் ஆதலால் பலராமர் பிரம்ம ஹத்தி தோஷத்திற்கு ஆளாகி விட்டதாகவும் கூறினர். அதற்குப் பலராமர் ரிஷிகள் விதித்த பிராயச்சித்தத் திற்கு உள்ளாவதாக ஒப்புக்கொண்டார். ரிஷிகளின் வேண்டுகோளின்படி ஸூதரைப் பலராமர் பிழைக்கும் படிசெய்து, அவர்களுக்குப் பர்வகாலங்களில் வரும் கஷ்டத்தை, அதற்குக் காரணமாகிய தானவனைப் போரில் கொன்று, தீர்த்துவைத்தார்.

வி॰ 145.—இதன்பின்பு பகவானிடம் யார் எந்த நோக் கத்தோடு அணுகியது? ஏன்?

விடை.—பகவான் ஸாந்தீபனி மஹரிஷியிடம் குருகுல வாசம் செய்யுங்கால் அவரோடுகூடவே வாஸம் செய்த வராகிய குசேலர் தமது பெண்சாதிக்கு ஐசுவரியம் ஸம்பாதித்துக் கொடுக்கவேண்டும் என்ற எண்ணத் துடன் பகவானை அணுகினர். அவர் நிஷ்காம்ய பக்தி செய்தவர். அவர் இவ்வுலக இன்பங்களை ஒரு பொருட் டாக எண்ணினவர் அல்லர். அவரது பெண்சாதியைத் திருப்தி செய்வதற்காக அவள் கருத்தின்படி துவாரகை போவதற்கு இசைந்து, நான்குபிடி அவலை ஒரு துணியில்கட்டிப் பகவானுக்கு அற்பிதம்செய்ய எடுத் துக்கொண்டு ஐசுவரியத்தை ஒரு பொருட்டாக எண்ணுது பகவத் தரிசனத்தையே முக்கியமாக

எண்ணிக்கொண்டு ஆனந்த பரவசமாகித் துவாரகை நோக்கிப் புறப்பட்டார்.

வின 146.—பகவான் இவரைக்கண்டதும் என்னசெய்தார்?

விடை.—குசேலர் துவாரகையுட் சென்று பகவான் கிரஹங்கள் ஒன்றுள் புகுந்தார். இவரைக்கண்டதும் பகவான் 'அண்ணு!' என்று அன்புடன் அழைத்துக்கொண்டு வந்து இவரை ஆலிங்கனம் செய்துகொண்டு, தமது படுக்கையில் உட்காரவைத்து இவருக்குக் கால் கழுவல், கால்பிடித்தல், ஸ்நாநம் செய்வித்தல், போஜனம் செய்வித்தல் ஆகிய உபசாரங்களை மிகுந்த சிரத்தையுடன் செய்தார். வெகு நாளைக்கு முன் பார்த்தவராகையால் பகவான் அவருடன் மிகுந்த அன்புடன் தமது குருகுல வாஸ காலத்தில் நடந்தவைகளைப் பேசிக்கொண்டிருந்து, ஒருதரம் இருவரும் குருவுக்கு ஸமித்து ஒடிக்கப்போய் இரவில் மழைவந்துவிட காட்டில் சிக்கியதையும் அன்றிரவு தமக்காக ஸாந்தீபனி பட்ட துயரத்தையும் எடுத்துப்பேசி ஆனந்தித்தனர்.

வின 147.—இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் பகவான் எவ்வாறு அவருக்கு ஐசுவரியம் கொடுத்தார்? மேல் என்ன நடந்தது? ஏன்?

விடை.—பகவானுக்கு குசேலர் நிஷ்காம்ய பக்தர் என்றும் அவர் நேரிட்டப் பொருளைக் கொடுத்தால் வாங்கார் என்றும் தெரியும்; ஆதலால் அவரை நோக்கி 'எனக்குக் கொடுக்க அன்புடன் ஏதாவது ஒரு வஸ்து கொண்டு வந்திருக்கிறீரா? நான் பொருளின் நயத்தை இச்சிப்பவன் அல்லன்: அது எவ்வாறு கொடுக்கப்படுகிறது என்பதை நோக்குபவன். நீர் என்னிடம் உள்ளன்பு உடைய

வராகையால் நீர் எவ்வளவு இழிவான வஸ்துவைக் கொண்டுவந்திருந்தாலும் 'அது எனக்கு மேலானதாகத் தான் தோன்றும். எடும் பார்ப்போம்!' என்றார். குசேலர் வெட்கத்துடன் தலைகுனிந்து இருக்க, பகவானே அவல் மூட்டையை வெளியிலிழுத்து ஒருபிடி அவலை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு அதன் ருசியை வர்ணித்துக்கொண்டே மற்றொரு பிடியை எடுத்தார்! இதைக்கண்ட ருக்மணிதேவி பகவான் கையைப் பிடித்துக்கொண்டு 'இவ்வளவே போதும்' என்று நிறுத்தி விட்டாள். முன் தின்ற ஒரு பிடியினாலேயே குசேலர் ஊரில் அவருக்கு ஸகல ஐசுவரியங்களும் ஏற்பட்டு விட்டன! மேல் வேண்டியது ஒன்றுமில்லை என்பது ருக்மணியின் கருத்து. இது குசேலருக்குத் தெரிந்தால் நிஜபக்தரான அவருக்கு வீண் மனஸ்தாபம்வரும் என்று பகவான் அவருக்குத் தெரிவியாது அன்றிரவு அவரோடு பழயகதைகளைப் பேசிக்கொண்டு ஸுகமாக இருந்தார். மறுநாள் குசேலர் தமது ஊருக்குப் புறப் பட்டார்.

வினா 148.—குசேலர் ஊர் வந்ததும் என்ன செய்தார்?

விடை.—குசேலர் ஊர் வந்ததும் அவருக்கு தமது வீடே அடையாளம் தெரியவில்லை. அவர் பெண்சாதிவந்து அவரை அரண்மனைபோன்ற தனது வீட்டுள் அழைத்துச்சென்று அவருக்கு உபசாராதிகள் செய்தாள். என்னசெய்தாலும் அவர் மனம் அவைகளில் ஊன்றவே இல்லை. தாம் ஒன்றும் கேட்காதிருக்கையில் வலிய ஐசுவரியத்தைக்கொடுத்த பகவானிடமே அவர் மனம் ஸதா ஈடுபட்டிருந்தது. அவர் முன்போலவே ஒன்றையும் கவனியாது பகவத் தியானத்திலிருந்து விட்டார்.

**வின 149.**—இப்படி இருக்கையில் பகவான் தமது உறவினர்கள் ஸ்நேஹிதர்கள் எல்லோரையும் எவ்வாறு ஸந்திக்கும்படி நேரிட்டது?

**விடை.**—இப்படி இருக்கையில் ஒருதரம் பூர்ண ஸூர்யகிரஹணம் ஒன்றுவந்து அப்பொழுது யாதவர்கள் எல்லோரும் குருக்ஷேத்திரத்தில் பரசுராமரால் ஏற்படுத்தப்பட்ட ஸமந்த பஞ்சகத்திற்கு (பாகவத வினவிடை 1-ம் பாகம் 9-வது ஸ்கந்தம் பார்க்க) ஸ்நானம் செய்யப் போனார்கள். அங்கு பாண்டவர்கள், கோபாலர்கள் இன்னும் மற்றைய ஸ்நேஹிதர்கள் எல்லோரும் ஸ்நானத்திற்காக வந்திருந்தார்கள். இந்த ஸமயத்தில் தான் பகவான் எல்லோரையும் ஸந்தித்தது.

**வின 150.**—அப்பொழுது புருஷர்களும் பெண்டுகளும் எவ்வாறு காலங்கழித்தனர்?

**விடை.**—அந்த ஸமயத்தில் பகவானைப் பார்க்க அநேக ரிஷிகள் வந்துசேர அவர்களை உபசாரம்செய்து அவர்கள் கூறும் விஷயங்களைக் கேட்பதில் புருஷர்கள் தமது காலங்களைப் போக்கினர். பெண்டுகளோ பகவானது பெண்சாதிகளிடம் இருந்து அவரவர்களைப் பகவான் விவாஹம் செய்துகொண்ட திவ்யசரித்திரங்களைக் கேட்டுக்கொண்டு ஸத்காலக்ஷேபம் செய்தனர்.

**வின 151.**—இவ்வாறு எல்லோருக்கும் ஸத்காலக்ஷேபங்கள் நடந்துவருகையில் அங்கு என்னவிசேஷம் நடந்தது?

**விடை.**—இப்படி இருக்கையில் முனிவர்கள் விடைபெற்று தமது ஸ்தானங்களுக்குப்போக யத்தனிக்கையில் வஸுதேவர் அவர்களை நோக்கித் தனக்குப் பரமபதம் ஸித்திக்கத்தக்க ஒரு யாகத்தைச் செய்து வைக்க வேண்டும்,

என்று கேட்டுக்கொண்டார். நாரதர் இதைக்கேட்டு 'ஐயோ! பகவானைத் தம் பிள்ளை என்று எண்ணியல்லவோ இவர் மோசம் போயிருக்கிறார்! அப்படி இல்லாவிடில் மோக்ஷத்தையே அருகில் வைத்துக்கொண்டு இப்படி மோக்ஷோபாயமான யாகத்தைச் செய்துவை என்று இவர் ஏன் கேட்கிறார்? இப்பொழுது உமது பிள்ளையாகிய கிருஷ்ணனே பரமபதம், அவரை தியானம் செய் என்றால் அவர் மனதில் பதியாது. அதிகப் பழக்கமே இவர் அஞ்ஞானத்திற்குக் காரணம்' என்று எண்ணமிட்டுக்கொண்டு ரிஷிகளின் ஸஹாயத்தின்பேரில் அங்கு வஸுதேவருக்கு ஒரு யாகம் செய்து வைத்து, விதிப்படி யாகம் முடிந்ததும் கிருஷ்ணனது உண்மை ஸ்வரூபத்தை வஸுதேவருக்கு உபதேசித்து விட்டுப் போனார். இந்த யாகத்தில் எல்லோரும் சேர்ந்து ஆனந்தத்தை அடைந்து தமது இருப்பிடம் சென்றனர்.

வி 152.—இவ்வாறு பகவானது ஸ்வரூபத்தை அறிந்த பின்னர் தேவகீ என்ன விஷயத்தில் ஆசைகொண்டவள் ஆனாள்? அப்பொழுது பகவான் என்ன செய்தார்? வஸுதேவர் நிலை எவ்வாறிருந்தது?

விடை.—தமது பிள்ளை ஸர்வ வல்லமையுடைய பரம்பொருள் என்று அறிந்ததும் பெண்புத்தியை முன்னிட்டுக்கொண்டு தேவகீ தேவி தன்னிடம் முதலில் பிறந்த ஆறு பிள்ளைகளையும் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டாள். ஸாந்தீபனி ரிஷிக்கு இறந்த பிள்ளையைப் பகவான் திருப்பிக் கொண்டுவந்து கொடுத்திருந்த ஸங்கதி அவளுக்குத் தெரிந்திருந்ததால் அவளுக்கு இந்த ஆசை அதிகரித்தது. பகவான் இதற்கு

இசைந்து பலராமரோடு பாதாளலோகம் சென்று மஹாபலியைக் கண்டு அவரிடம் இருந்து மரியாதை பெற்று, அவரிடம் இருந்த ஆறு பிள்ளையையும் பெற்றுக்கொண்டார். 'இவ்வாறு பிள்ளைகளும் மரீசியின் பிள்ளைகள். பிரம்மா ஆதியில் ஸரஸ்வதியை விவாஹம் செய்துகொண்ட காலத்தில் இவர்கள் நகைத்தார்கள். இதற்காக இவர்கள் முதலில் ஹிரண்யகசிபுவின் பிள்ளைகளாகப் பிறந்தார்கள். பின்னர் இவர்கள் தேவகீ கர்ப்பத்தில் பிறந்து உடனே இறந்து இப்பொழுது தமது பூர்வபதவியால் ஞானிகளாய் இருக்கின்றனர். இவர்களைத் தேவகீ தேவி தன் பிள்ளை என்று எண்ணிப் பார்க்க வேண்டும் என்கின்றுள். அவளுக்கு இவர்களைக் காண்பித்துவிட்டு இவர் இருப்பிடம் அனுப்பிவிடுகிறேன்' என்று பலியிடம் கூறிவிட்டுத் துவாரகை சென்று தேவகீதேவியைத் திருப்தி செய்துவிட்டு இவர்களைப் பகவான் இருப்பிடம் அனுப்பிவிட்டார். வஸுதேவர் பகவானது உண்மை நிலையை அறிந்த பின்னர் பகவானை நிஷ்காம்யமாகத் தியானம்செய்யத் தொடங்கிவிட்டார்.

வி௵ **153**.—இதன்பின்பு சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப்பற்றிப் பேசினுர்?

விடை.—அர்ச்சுனன் எவ்வாறு ஸுபத்ரையைக் கல்யாணம் செய்து கொண்டான் என்று அறியப் பரீக்ஷித்திற்கு ஆவலுண்டாக, சுகப்பிரம்மம் அந்தக் கதையை விஸ்தாரமாகச் சொன்னுர். (மஹாபாரத விஞவிடை முதல் பாகம் ஆதிபர்வம் பார்க்க.) இதன்பின்பு பகவான் மிதிலா நகரம் போய் தமது பக்தரான சுருததேவர் என்ற ஏழைப் பிராம்மணன், மிதிலாபுரி ராஜன் ஆகிய

இவர்களுக்கு இரண்டு உருவத்துடன் தோன்றி ஏக காலத்தில் இருவர் வீட்டிலும் தமது பரிவாரங்களோடு உண்டு திருப்திபடுத்தினதையும், அவர்களுக்கு வேதங்களில் சொல்லியிருக்கும் மோக்ஷபந்தாவை பகவான் உபதேசித்ததையும் சுகப்பிரம்மம் எடுத்துரைத்தார்.

வினு **154**.—இதன்பின்பு சுகப்பிரம்மம் எந்த விஷயத்தைப்பற்றி எவ்வாறு பேசினுர் ?

விடை.—பரீக்ஷித்து நிர்க்குணமாகவிருக்கும் பிரம்மத்திற்குச் சுருதிகள் ஏன் குணங்கள் கற்பிக்கவேண்டும் என்று கேட்க, சுகப்பிரம்மம் முன்னர் இவ்விஷயத்தில் நாரதருக்கும் நாராயண ரிஷிக்கும் பதரிகாசிரமத்தில் நடந்த ஸம்வாதத்தை எடுத்துரைத்தார். அதில் நாராயண ரிஷி நாரதரை நோக்கி முன்னர் ஜனோலோகத்தில் நடந்த யாகத்தில் பிரம்மா மானஸ புத்திரருள் ஒருவரான ஸனந்தனர் அங்கு கூடியிருந்த ரிஷிகளுக்கு, ஒருகல்ப ஆரம்பத்தில் யோகநித்திரையில் இருக்கும் பகவானை வேதங்கள் துதித்து எழுப்பிய விதத்தை, விஸ்தாரமாகக் கூறினர். பகவானை வேதங்கள்செய்த துதிக்கே சுருதிகீதை என்றுபெயர். இதன் ஸாரம் யாதெனில், 'காணப்படும் பிரபஞ்சத்தில் ஸம்பந்தப்பட்டதுபோலத் தோன்றும் வரையில் இதிலிருந்து வேறுபடுத்திச் சிஷ்யன் உணருவதற்காகச் சுருதிகள் பகவான் பிரபஞ்ச ஸ்ருஷ்டி முதலியவைகளுக்குக் காரணன், ஸச்சிதானந்த ஸ்வரூபன் என்று கூறுகின்றன. இவைகளை அறிந்து பகவானிடம் ஈடுபடுபவனுக்கு அது நிர்க்குணமென்றே சுருதிகள் வெளிப்படையாகச் சொல்லாமல் குறிப்பாகச் சொல்லும்' என்பதே. ஆகவே அதிகாரி பேதத்தை உத்தேசித்து

சுருதி நிர்குணவஸ்துவிற்குப் பின்வருவதற்கு அதிக முரணின்றி முதல் குணங்களைக் கற்பிக்கின்றது.*

*(பின்வரும் விஷயம் தக்ஷயாகபாகத்திற்கு விரோதமாயிருப்பதாலும் முதல்பாக அனுபந்தத்தில் கூறப்படும் திரிமூர்த்தி ஸம்ரஸத்தில் கண்டிக்கப் படுவதாலும் அடிக்குறிப்பாக இங்கு காட்டப்பட்டிருக்கிறது. மேலும் இங்குள்ள கதையோடு இவ்விஷயம் ஸம்பந்தப்பட்டதாகக் காணப்படவில்லை.) "சிவனை பக்தி செய்பவர்களுக்கு பலன் எளிதில் வருவானேன், ஹரிபக்தி செய்பவர்களுக்கு அவ்வாறு வராமலிருப்பானேன்" என்று பரீக்ஷித்து கேட்டதற்கு சுகப்பிரம்மம் "சிவனும் பிரம்மாவும் திருப்தியானதும் வரங்கொடுத்துவிடுவார்கள். சிறு குற்றங் கண்டால் கோபித்துக்கொள்வார்கள். பத்மாஸுரன் என்ற அசுரன் சிவனைக்குறித்துக் கோர தவமிருந்து அக்கினியில் தன் தேகத்தின் பாகங்களை ஆஹுதிகொடுத்துக் கொண்டிருந்தான். சிவன் பிரத்யக்ஷமாகி "என்ன வரம் வேண்டும்"? என்று கேட்க அவன் என்கையை யார் தலையில் வைத்தாலும் அவன் எரிந்து விடவேண்டும், இந்தச் சக்தி எனக்கு வேண்டும்!" என்று கேட்டான் சிவன் தந்தேன்' என்றார். அஸுரன் தனக்கு சக்திவந்ததா இல்லையா என்பதைப் பார்க்கச் சிவன் தலையிலேயே கையை வைக்கபோனான்! சிவன் ஓடத்தலைப்பட்டார். அவரை அத்தருணத்தில் விஷ்ணு காப்பாற்றினார். துரத்தும் அஸுரனிடம் விஷ்ணு பிரம்மசாரி உருவுடன் வந்து தந்திரமாக அவன் கொடுத்தவரம் பலிக்கவே இல்லை! "என்றுகூறி அவன் தன் தலையிலேயே கையைவைத்துப் பரீக்ஷை பார்க்கும்படி செய்தார். அஸுரன் மூடத்தனமாக அவ்வாறு செய்யச் சாம்பலானான். இதுபோலப் பிரம்மாவும் நடந்துகொண்டிருக்கிறார்" என்று விடை அளித்தாராம்.

மேலும் சுகப்பிரம்மம் பரீக்ஷித்தை நோக்கிப் பின்வருமாறு கூறினராம்: ஸரஸ்வதீ நதிக்கரையில் ருஷிகள் யாகம் செய்து கொண்டிருக்கையில் அவர்களுக்கு மும்மூர்த்திகளுள் யார்

**வினா 155.**—இதன்பின்னர் பகவான் என்ன அற்புத உபகாரம் செய்தார் ?

**விடை.**—துவாரகையில் ஒரு பிராம்மணன் இருந்தான் அவனுக்குத் தொடர்ச்சியாக ஒன்பது பிள்ளைகள் பிறந்து உடனே இறந்துகொண்டும் வந்தன. இந்த துக்கத்தை ஸஹியாமல் ஒவ்வொருதரமும் பிராம்மணன் பகவான் வீட்டுவாசலில் வந்து முறையிட்டுப் பார்த்தான். இதை ஒருவராலும் கவனிக்கமுடிய

---

சிறந்தவர் என்ற சங்கை பிறந்ததாம். (இது மிகுந்த பாபகரமான எண்ணம். அனுபந்தத்திலுள்ள திரிமூர்த்தி ஸம்ரஸத்தைப் பார்க்க.) அவர்கள் பிருகுமஹருஷியை இந்த விஷயத்தை பரீக்ஷித் தறியும்படி நியமித்தனர். (இவர் செய்த குற்றத்தையும் பட்ட பாட்டையும் நான்காவது ஸ்கந்தம் தக்ஷயாகத்தில் பார்க்க) இவர் பிரம்மலோகம் போனாராம். பிரம்மாவின் குணத்தை அறிய அவரை வணங்காது பிருகு நின்றாராம். பிரம்மா இதைக் கண்டு கோபித்துக் கொண்டாராம். பிரம்மா நல்லமூர்த்தி அல்ல என்று தீர்மானித்துக்கொண்டு பிறகு கைலாஸம் சென்றாராம். அங்கு பரமசிவம் பிருகுவை ஸஹோதரன்போல எண்ணி ஆலிங்கனம் செய்துகொள்ள வந்தாராம். பரமசிவம் நல்ல மூர்த்தி அல்ல என்று எண்ணிக்கொண்டு பிருகு வைகுண்டம் வந்தாராம். அங்கு மஹாவிஷ்ணு யோகநித்திரையில் இருப்பதைக்கண்டு அவரை உதைத்தாராம். அதற்கு அவர் "ஐயோ நீர் பரமபக்தராச்சுதே ! உமது கால் நொந்ததோ! சற்று இளைப்பாறுங்கள் ! நீங்கள் வந்தது எனக்குத் தெரியாது, மன்னிக்கவேண்டும்" என்றாராம். உடனே மஹாவிஷ்ணுவே நல்லமூர்த்தி என்ற தீர்மானத்துடன் வந்து தன் பரீக்ஷையையும் அதன் முடிவையும் ஸரஸ்வதி தீரத்திலிருந்த ரிஷிகளுக்குத் தெரிவிக்க, அவர்களும் விஷ்ணுவே மேலானமூர்த்தி என்று மதித்தனராம்.

வில்லை. பத்தாம் குழந்தை பிறக்கும் தருணம் துவாரகையில் அர்ச்சுனன் இருக்க அவன் இந்த பிராம்மணனை விசாரித்து அவன் குழந்தையைக் காப்பதாகப் பிரதிக்ஞை செய்தான். பத்தாவது குழந்தையும் இறந்துவிட அர்ச்சுனன் வாக்கை உறுதிப்படுத்த அவனோடு பகவான் புறப்பட்டு வைகுண்டம்சென்று அங்கு க்ஷீராப்தி நாதரைக் கண்டார். மஹா விநயத்துடன் வணங்கினார்கள். அவர் இவர்களைநோக்கி 'உங்களை இங்கு வரவழைக்கவே நான் இவ்வாறு பிராம்மணன் பத்துப் பிள்ளையும் இங்கு வந்துசேரும்படி செய்தது. நீங்கள் உலகம்போய் வெகுநாளாகிவிட்டது. இந்தக் குழந்தைகளைப் பிராம்மணனிடம் சேர்த்துவிட்டுக் கூடியசீக்கிரம் இங்குவந்து விடுங்கள்!' என்றார். கிருஷ்ணார்ச்சுனன் குழந்தைகளைப் பிராம்மணனிடம் கொண்டு சேர்த்தனர்.

வி ஞ 156.—அர்ச்சுனன் பத்தாம் குழந்தை விஷயமாக என்ன முயற்சிகள் செய்தான்? எவ்வாறு முடிந்தது? முடிவில் என்ன நடந்தது?

விடை.—அர்ச்சுனன் உதவி செய்வதாகச் சபதம் கூறியதும் பிராம்மணன் 'பகவான் ஒன்றும் செய்யவில்லை! உன்னால் என்னப்பா முடியும்!' என்று கூறினர் உடனே அர்ச்சுனன் பிராம்மணருடன் அவர் வீடுசென்று பிரஸவ அறையைச்சுற்றிச் சரக்கூடுபோட்டு வெகு ஜாக்கிரதையாகப் பாதுகாத்துக் கொண்டிருந்தான். பத்தாம் குழந்தை பிறந்தது. மாயமாக மறைந்து விட்டது. அர்ச்சுனன் வெட்கிப் பகவான் ஸபைக்கு வந்தான். பிராம்மணர் கூடவேவந்து அர்ச்சுனனைப் பரிஹாஸம் செய்தார். அர்ச்சுனன் இவர் பரிஹாஸத்தைக் கவனி

யாது மனதாலேயே யமபட்டணம் முதலிய எல்லா லோகங்களிலும் பிராம்மணரது பத்து குழந்தைகளையும் தேடிப்பார்த்தான். அவ்விடம் எங்கும் குழந்தைகள் இல்லை என்று கண்டுதெளிந்தான். அவைகள் இருக்கும் இடம் தெரியாது மயங்கினான். பகவான் முற்கூறியபடி குழந்தைகளைக் கொண்டுவந்தார். அப்பொழுது அர்ச்சுனன் பிராம்மணருக்கு விஷ்ணுவின் பெருமையை எடுத்துக்கூறி 'அவர் அனுக்கிரஹத்தால் தான் நான்பலவானாக இருப்பது' என்று சொல்லி முடித்தான்.

வி௲ **157.**—இதன் பின்னர் சுகப்பிரம்மம் என்னசெய்தார்?

விடை.—இவ்வாறு சுகப்பிரம்மம் கிருஷ்ண கதையை விஸ்தாரமாகச் சொல்லிப் பின்னர் சுருக்கமாகப் பகவான் தமது செயல்கள் மூலமாக ஸதா தர்மத்தையே பலர் அறிய எடுத்து விளக்கிக் கொண்டிருந்தார் என்று கூறினார். பின்னர் கிருஷ்ண கதையைக் கேட்பவர்கள் மனது பரிசுத்தமாக மோக்ஷமடையும் யோக்யதை அவர்களுக்கு வரும் என்று சொல்லி முடித்தார்.

---

# 11-வது ஸ்கந்தம்.

## ஞானோபதேசம்.

### நாரத வஸுதேவ, கிருஷ்ண உத்தவ ஸம்வாதங்கள்

*சந்ததமும் எனதுசெயல் நினதுசெயல் யானெனும்*
*தன்மைநினை யன்றி யில்லாத்*
*தன்மையால் வேறலேன் வேதாந்த ஸித்தாந்த*
*ஸமரஸ ஸுபாவம் இதுவே!*
*இந்தநிலை தெளியநா னெக்குருகி வாடிய*
*இயற்கைதிரு உளம் அறியுமே!*
*இந்நிலையி லேசற்றிருக்க வென்றால் மடமை*
*ஹிதசத்ரு வாக வந்து*
*சிந்தைகுடி கொள்ளுதே மலமாயை கர்மம்*
*திரும்புமோ தொடு வழக்காய்*
*ஜென்மம் வருமோ எனவும் யோசிக்குதே மனது!*
*சிரத்தை எனும் வாளும் உதவிப்*
*பந்தமற மெய்ஞ்ஞான தீரமும் தந்தெனைப்*
*பாதுகாத் தருள்செய் குவாய்*
*பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற*
*பரிபூரண னந்தமே!*

**வின 1.**—இவ்வாறு பகவான் வாழ்ந்து வருகையில் யாதவ குலத்திற்கே என்ன ஆபத்து வந்தது? ஏன்?

**விடை.**—யாதவ குலத்திலுள்ளோர் தம்முள் உண்டாகும் சண்டையில் ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டு நாசமாக வேண்டியது என்ற ரிஷி சாபம் இந்தக் குலத்திற்கே வந்து விட்டது. இதற்குக் காரணம் பின்வரு



தத்தாத்ரேயர்.

மாறு :—துவாரகைக்கு அருகாமையில் இருக்கும் பிண்டாரக தீர்த்தத்தில் பகவானைப் பார்க்க சில ரிஷிகள் வந்து தங்கி யிருந்தனர். யாதவப் பிள்ளைகள் ஸாம்பனுக்குக் கர்ப்பிணி வேஷம்போட்டு ரிஷிகள் முன் கொண்டு போய் நிறுத்தி மிகுந்த விநயத்துடன் கேட்பவர்போல 'இந்தப் பெண்மணிக்கு என்ன குழந்தை பிறக்கும்?' என்று மிகுந்த ஆவலுடன் கேட்டார்கள். ரிஷிகளுக்கு இவர்களது சூதான விளையாட்டும், முடிவில் தம்மைப் பரிஹாஸம் செய்து சிரிக்க வேண்டும் என்று அவர்கள் கொண்ட எண்ணமும் தெரிந்துவிட, மிகுந்த கோபத்துடன் அவர்கள் 'உமது குலத்தை நிர்மூலமாக்கும் உலக்கையை இவள் பெறுவாள்!' என்று சபித்தனர்.

வினா 2.—அப்பொழுது என்ன நடந்தது? மேல் யாதவர்கள் என்ன செய்தார்கள்?

விடை.—இந்தச் சாபம் பிறந்ததும் நடுநடுங்கி யாதவப் பிள்ளைகள் ஸாம்பன் வேஷத்தைக் கலைத்து உள்ளே பார்க்கையில் ஓர் இரும்பு உலக்கை இருக்கக் கண்டார்கள். உடனே அதை எடுத்துக் கொண்டு துவாரகை வந்து அவர்கள் ரிஷி சாபத்தைத் தெரிவித்தனர். எல்லோரும் மிகப்பயத்தை அடைந்து அந்த உலக்கையைத் தூள்தூளாக ராவிப் பொடியாக்கி ஸமுத்திரத்தில் எறிந்துவிட்டனர். அதில் முடிவிலிருந்த சிறுபாகம் மாத்திரம் என்ன ராவியும் குறையாதது கண்டு அதையும் அவர்கள் ஸமுத்திரத்துள் எறிந்து விட்டனர்.

வினா 3.—உலக்கை என்னமாக மாறியது?

விடை.—உலக்கைப் பொடிகள் எல்லாம் ஸமுத்திரத்தால் கரையில் ஒதுக்கப்பட்டு மண்ணோடு மண்ணாகக்

கலந்து அங்கு வயிரம் பாய்ந்த கோரைப்புற்கள் ஏராளமாக வளரும்படி செய்தன. பொடியாக்க முடியாமல் போடப்பட்ட உலக்கையின் சிறு பாகத்தை ஒரு மீன் விழுங்கி விட்டது. அதை மற்றைய மீன்களோடு செம்படவர்கள் பிடித்துவிட அதன் வயிற்றிலிருந்த இரும்புத் துண்டை எடுத்து ஒரு வேடனுக்குக் கொடுத்தனர். அவன் அதை தன் அம்பு நுனியில் வைத்துக் கொண்டான்.

**வினா 4.**—இந்த சாப விஷயத்தில் பகவான் எவ்வாறு நடந்துகொண்டார்? ஏன்?

**விடை.**—இந்தச் சாபத்தை அவருக்குத் தடுக்கும் சக்தியிருந்தபோதிலும் அவர் இதைத் திருப்தியுடன் அங்கீகரித்தார். அவர் பூபாரம் எல்லாம் மஹாபாரத யுத்தத்தில் நீக்கியாய் விட்டது. யாதவர்கள் மாத்திரம் மிகுதி. தாம் வைகுண்டம் போன பின்பு யாதவர்கள் கொடியவர்களாகி லோககண்டகர் ஆய்விடுவார்கள் என்பது அவருக்குத் தெரியும். யாதவர்களை அழிக்க வல்லவர்கள் ஒருவரும் இல்லை. அவர்கள் அவ்வளவு பலவான்கள். ஆதலால் அவர்களை அழித்துவிட ஸமயம் பார்த்துகொண்டிருந்தார். ரிஷிசாபம் அந்த வேலையை எளிதாக்கிவிட்டது. ஆதலால் பகவான் இந்தச்சாபம் வந்ததாகப் பாராட்டாது முன்போலவே இருந்துவிட்டார்.

**வினா 5.**—இப்படி எல்லாம் நடந்துவருகையில் துவாரகையில் யார் ஸ்திரமாகத் தங்கிவிட்டது? ஏன்?

**விடை.**—அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்தால் பகவானைப் பார்க்காமல் சிலகாலம் கழிய நேரிடுகிறதே

என்ற எண்ணத்துடன் நாரதர் துவாரகையிலே போகாது நின்றுவிட்டார். பகவான் செய்பவைகளைக் கண்டு ஆனந்திப்பதே அவருக்குத் தொழிலாகி விட்டது.

வி 6.—இப்படி இருக்கையில் நாரதரை யார் அடுத்து, என்ன கேட்டது ?

விடை.—நாரதரை ஒருநாள் வஸுதேவர் அடுத்துத் துதி செய்து ஸுகதுக்கம் இரண்டையும் கொடுக்கும் தேவதைகளைவிட ஒன்றையும் அபேக்ஷிக்காது பாமரர்களுக்கும் உதவிபுரியும் மஹான்களே மேல் என்றும், அத்தகையவர் நாரதர் என்றும், சொல்லிப் பகவத் சரித்திரத்தைத் தமக்கு நன்றாகக் கூறவேண்டும் என்று கேட்டுத் தான் பகவானை நேரே கண்டகாலத்து மோக்ஷம்வேண்டும் என்று கேட்காது, அவர் தனக்குப் பிள்ளையாகவேண்டும் என்று கேட்டு மோசம்போனதை எண்ணித் துக்கித்தார். முடிவாக நாரதரை நோக்கித் தனக்கு மோக்ஷப் பிரதமான ஞானோபதேசம் செய்யவேண்டும் என்று வஸுதேவர் கேட்டார்.

வி 7.—அப்பொழுது நாரதர் என்னசெய்தார் ?

விடை —பகவானைப்பற்றி வஸுதேவர் கூறியதும் ஆனந்த பரவசமாகிப் பகவத் அவதாரங்களுள் ஒருவரான ரிஷபயோகியின் பிள்ளைகளுள் பரமஹம்ஸர்களான ஒன்பது யோகிகளுக்கும், இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த நிமி சக்ரவர்த்திக்கும் அவன் யாகசாலையில் நடந்த ஸம்வாதத்தை விஸ்தாரமாக எடுத்துச்சொன்னார். ஒன்பது யோகிகளுக்கும் முறையே, கவி, ஹவி,

அந்தரிக்ஷர், ப்ரபுத்தர், பிப்பிலாயனர், அவிர்ஹோத்ரர் திராவிடர், சமஸர், கரபாஜனர் என்று பெயர். இந்த பாகத்திற்குப் பாகவதத்தில் நவயோகி ஸம்வாதம் என்று பெயர்.

**வி௵ 8.**—நிமி, கவி என்ற யோகியை நோக்கி என்ன கேள்வி கேட்டான்? அதற்கு அவர் என்ன பதில் சொன்னார்?

**விடை.**—பகவானுக்குத் திருப்திகரமானதும், அவரைப் பரமபதம் அளிக்கும்படி தூண்டுவதும் ஆன செயல்கள் என்ன?' என்று நிமி கேட்டான். அதற்குக் கவி 'பகவத் விஷயத்தில் மனப்பற்று உடன் இருத்தலே ஹரிக்குப் பிரீதிகரமானது. வேதங்களில் ஞான ஸம்பாதனத்திற்கு ஏற்பட்ட வழிகளிலேயே எல்லோரும் நடக்கவேண்டும். பயமானது த்வைத்வ புத்தியாலும், இதைப் பலப்படுத்தும் பகவத் மாயையாலும் உண்டாகின்றது. இதிலிருந்து நீங்கிக் கடவுள் கிருபைக்குப் பாத்திரமாவதற்கு, நாம் அவசியம் செய்யவேண்டிய கர்மங்கள் எல்லாவற்றையும் பகவத் அர்ப்பணம்செய்து பகவான், ஆத்மா, ஆசாரியன் இவர்களுள் பேதம் இருப்பதாக எண்ணாது, த்வைதபுத்தியை உண்டாக்கிப் பலப்படுத்தும் மனதை அடக்கி வரவேண்டும். பகவத்கதைகளைச் சுத்தமனத்தோடு சொல்லிக்கொண்டு பற்றற்று உலகில் உலாவி வரவேண்டும். இதனால் நாம் மெய்ம்மறந்து பிரபஞ்சத்தையே பரம்பொருளாக எண்ணி ஆராதிப்போம். இம்மாதிரி அங்கங்களையுடைய பக்தி கடவுளுக்குத் திருப்தியை உண்டாக்கி அவரைப் பரமபதம் அளிக்கும்படி தூண்டுவது' என்று பதில் சொன்னார்.

வினா 9.—ஹவி என்ற யோகியிடம் நிமி கேட்ட கேள்வியும், அதற்கு அவர் கூறிய மறுமொழியும் என்ன?

விடை.—'பகவத்பக்தன் யார்? அவன் லக்ஷணங்கள் என்ன?' என்று நிமி ஹவியை நோக்கிக் கேட்டான். அதற்கு ஹவி 'விக்ரஹங்களை மாத்திரம் பக்தியுடன் ஆராதித்துக்கொண்டுவந்து, மற்றைய பகவத் பக்தர்கள் முதலிய பரிசுத்த விஷயங்களைக் கவனியாதவனே அதமபக்தன் தனது இஷ்ட தேவதையிடமே அதிகப் பற்று உடையவனும், அந்தத் தேவதையை ஆராதிப்பவனிடம் அதிகப்பிரீதி உடையவனும், அதைக் கவனியாத பாமரரைப்பற்றிப் பரிதாபப்படுபவனும், கெட்டவர்களை உபேக்ஷிப்பவனும் உள்ள பக்தனே மத்யம பக்தன். மன்னுயிரை தன்னுயிரைப்போலவும் எல்லாவற்றையும் பரம்பொருளாகவும் மதிப்பவனும், ஸுகதுக்காதிகளையும் பாராட்டாதவனும், பகவானைத் தவிர வேறொன்றையும் மனத்தில் வைக்காதவனும், தான் என்ற எண்ணமே எழாது ஸதா பகவான் என்ற எண்ணமே நிறைந்த மனதை உடையவனும், எவ்வளவு பெரிய துவைதஸுகம் கிடைப்பதாக விருந்தாலும் சற்றேனும் பகவானிடம் இருந்து அசையாது தாக்கற்று நிற்பவனும் இருப்பவனே உத்தமபக்தன் என்று மறுமொழி கூறினார்.

வினா 10.—அந்தரிக்ஷரிடம் கேட்கப்பட்ட கேள்வியும் அவர் அளித்த விடையும் என்ன?

விடை.—'பகவத்மாயையின் வைபவங்கள் என்ன?' என்று நிமி கேட்க, அந்தரிக்ஷர், 'போகஸாதனங்கள் உண்டாகிப் போகானுபவத்தால் கர்மசேஷம் உடையவரும் பகவத் ஸ்வரூபத்துள் அடங்கினவர்களுமாகிய ஜீவாத்மாக்

கள், முடிவில் பரமபதம் அடைய வேண்டிய தற்காகவே, பரம்பொருள் மிகுந்த கருணையுடன் பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கிருர். பின்னர் எல்லா ஜீவராசியுள்ளும் அவர் பிரவேசித்துக் கர்மக்கூட்டங்களுள் அடிபடும்படியாக்கி அவர்களைத் தேறும்படி செய்கிருர். பின்னர் ஸ்ருஷ்டி ஒடுங்கும் காலம் வர அவர் எல்லாவற்றையும் முறையே ஸூக்ஷ்மத்துள் ஸ்தூலத்தையும், அதிஸூக்ஷ்மத்துள் ஸூக்ஷ்மத்தையும் ஒடுக்கி வருகிருர். முடிவில் அதிஸூக்ஷ்மமான பிரகிருதியுள் எல்லாம் அடங்கிவிடுகின்றது. இது பகவத்மாயையாகிய ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரம என்று விடை அளித்தார்.

விஞ **11.**—பிரபுத்தர் நிமி கேட்ட எந்தக்கேள்விக்கு என்ன பதில சொன்ஞர் ?

விடை.—"ஸ்தூலபுத்தி யுடையவராயும் மனம் அடக்க சக்தியற்றவராயும் உள்ள பாமரர் பகவத்மாயையைக் கடக்க உபாயம் என்ன ?" என்று கேட்ட நிமியை நோக்கிப் பிரபுத்தர், உலகத்தவர்களுக்கு உலகவிஷயங்களிலிருந்தேதான் மனபற்று நீங்கவேண்டும். மனிதன் ஸுகம வேண்டும என்றே கல்யாணம், பணம் ஸம்பாதிப்பது ஆகிய வியவஹாரங்களில் முயலுகிருன். இவைகளிலிருந்து துக்கமும் சண்டையும் அதிகரிக்கின்றன. உலகில் எவ்வளவு ஸுகியாக இருந்தாலும் தனக்கு மேற்பட்டவனைப்பார்த்துப் பொறுமையும், ஸமமானவனைப் பார்த்து விரோதத்தையும், தன்நிலைக்குக் கேடுவருமே என்ற பயத்தையும் உடையவஞக இருக்கிருன். ஆதலால் விஷய ஆசைக்கு அளவில்லை. அதை ஒருபொழுதும் தீர்க்கமுடியாது. உலகிலிருக்

கிறவரையில் பயமே ஒருவனிடம் குடிகொண்டிருக்கும் என்று தெரிந்துகொள்ளலாம். இதிலிருந்து அவன், மனம் அடக்கல், ஸத்ஸங்கம், ஜீவகாருண்யம் முதலிய நல்ல அப்பியாசங்கள்செய்து பகவத் கதையைக் கேட்டல், பகவத்பக்தி செய்தல் முதலியவைகளால் திடப்பட்டுப் பின்னர் அவன் மாயையைத்தாண்ட முயலலாம். இதுதான் ஸாதாரண ஜனங்களுக்கு எளிதான வழி' என்று பதில் சொன்னார்.

வினா 12.—பிப்பிலாயனரை நோக்கி நிமி என்ன கேட்டான்? அதற்கு அவர் என்ன விடை கொடுத்தார்?

விடை.—'பகவத்பக்தி உண்டாகும்விதம் எப்படி?' என்று நிமிகேட்கப் பிப்பிலாயனர், வேதம் முதலிய மதக்கிரந்தங்களில் கூறியிருக்கிறபடி பரம்பொருளது சிறப்பை உணர்ந்து அவைகளின் உண்மையை நமது யுக்திக்கு எட்டியவரையில் மனனம்செய்து பார்க்கவேண்டும். அப்பொழுது பரம்பொருள் அவாங்மானஸகோசரர் (மனோவாக்குக் கெட்டாதவர்) அவர்தான் உண்மையாக இருப்பது. அவர் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷி, அவரே பிரியமான வஸ்து என்பவை ஒருவாறு விளங்கும். அப்பொழுதுதான் பரம்பொருளிடம் நிஜபக்தி ஜனிக்கும். அப்பொழுது ஆத்மஞான அபேக்ஷை உண்டாகும்' என்று விடைகொடுத்தார்.

வினா 13.—அவிர்ஹோத்ரரை நோக்கி நிமி என்ன கேட்டான்? அவர் என்ன மறுமொழி கூறினார்?

விடை.—'மனிதனைக் கர்மத்திலிருந்து விடுவிக்கும் கர்மயோகத்தின் ஸ்வரூபம் என்ன?' என்று நிமிகேட்டான். அதற்கு அவிர்ஹோத்ரர், 'கர்மங்கள் வேதங்களில்

காணப் படுபவைகளேயொழிய பரம்பொருளிடம் இருப்பவைகள் அன்று. வியாதியால் கஷ்டப்படும் சிறுவனுக்கு மருந்தை சர்க்கரை என்று கூறி நயவார்த்தைகளால் அதை அவன் உட்கொள்ளும்படிசெய்து வியாதியைச் சொஸ்தப் படுத்துவதுபோல், கர்மங்களிலிருந்து மனிதர்களை விடுவிப்பதற்காக முதலில் அவர்களைக் கர்மம் செய்யும்படி வேதங்கள் தூண்டுகின்றன. வைதிக கர்மங்களைச் செய்யாது விடுபவன் பாபங்களுக்கு ஆளாகி ஜனன மரணங்களில் சிக்கி வருந்துகிறான். வைதிகக் கர்மங்களின் பலன்களைக் கவனியாது அவைகளைச் செய்பவன் எளிதில் கர்மங்களிலிருந்து விடுபடுவான். பகவத் ஆராதனம், பூஜை முதலியவைகளே இந்தக் கர்மயோகத்திற்கு மிகச்சிறந்த ஸஹாயம். பூஜையை விதிப்படி செய்துகொண்டிருப்பவன் ஸம்ஸாரத்தி லிருப்பினும் விடுபட்டவனாகவே இருப்பான்' என்று விடை கொடுத்தார்.

வின 14.—நிமி திராவிடர் என்பவரிடம் என்னகேட்டான்? அதற்கு அவர் என்ன மறுமொழி உரைத்தார்?

விடை.—'பகவான் அவதார வைபவங்கள் என்ன?' என்று கேட்ட நிமியை நோக்கித் திராவிடர் கூறுகிறார்:—'பகவான் தம்மிடமிருந்து வெளியாகும் உலக விஷயத்தில் கருணையால் செய்யும் அவதாராதிகளை எண்ணித் தொலையாது. ஆயினும் சுருக்கிச் சொல்லுங்கால், பிரபஞ்சம் பகவானது தேகம், ஞானம் பகவானது ரூபம், பிரபஞ்ச சக்திகள் பகவானது மாயாரூபம். இவைகளே பகவானது பொது அவதாரங்கள். சிறப்பாக நோக்கில், ஸ்ருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மா, ஸ்திதிகர்த்தாவாகிய விஷ்ணு, ஸம்ஹாரகர்த்தாவாகிய ருத்ரர் ஆகிய மூம்

மூர்த்திகளும் பகவான் முதல் அவதாரங்கள். பின்னர் நாராயணரிஷி அவதாரம் முதலியவைகள்.' (த்விதீயஸ்கந்தம் அவதாரமாலையைப் பார்க்க.)

**வி 15.**—எந்த அவதார கதையைத் திராவிடயோகி இங்கு எவ்வாறு விஸ்தரித்தார்?

விடை.—நாராயண ரிஷியின் கதையை இங்கு திராவிடயோகி விஸ்தரித்தார். பகவான் நாராயண ரிஷியாக அவதரித்து லோகஹிதார்த்தம் பதரிகாசிரமத்தில் கொடிய தவம்செய்யத் தொடங்கினர். இந்திரன் முதலியோர் தமது பதத்தைப் பிடுங்கிக் கொள்ளத்தான் நாராயணரிஷி தவம் செய்கின்றார் என்று பயந்து அவரது தபஸைக்கெடுக்க மன்மதனைத் தக்க பரிவாரங்களுடன் அனுப்பினன். மன்மதனைக் கண்டதும் கோபங்கொள்ளாது சாந்தமாக நாராயணரிஷி நல்வரவு கூறினர். அவனால் இவரை ஒன்றும் செய்யமுடியாமல்போக அவனோடு வந்தவர்கள் எல்லோரும் வெட்கிப் போயினர். இவ்வாறிருக்கும் மன்மதன் அப்ஸரஸ்திரீகள் முதலியோர்களது கர்வத்தை அடக்க நாராயணரிஷி தமது தொடையில் இருந்து அழகிய ஸ்திரீ ஒருத்தியை உண்டாக்கி வந்தவர்களை அவமானம் செய்தார். இந்தப் பெண்தான் ஊர்வசி என்ற அப்ஸரஸ். இவளைத் தேவர்களுக்கு இந்த ரிஷி கொடுத்துவிட்டார். எல்லோரும் இந்திரனிடம் வந்து நடந்தவைகளைச் சொல்ல அவன் மிகுந்த ஆச்சரியப்பட்டான்.

**வி 16.**—சமஸரை நோக்கி நிமி என்ன கேள்வியைக் கேட்டான்? அவர் அதற்கு என்ன மறுமொழி சொன்னர்?

விடை.—'பகவத்பக்தி செய்யாதவர்கள் கதி என்ன?' என்று கேட்ட நிமியை நோக்கி சமஸர், 'பகவத் பக்தி இல்லாத வர்கள் முதலில் தமது ஜாதி தர்மத்தை விட்டுவிடுவார்கள். எல்லோரும் கண்டு பரிதாபப்படும்படியான நிலையை அடைவார்கள். பகவத்பக்தி யில்லாதவன் எவ்வளவுதான் வேதம் முதலிய ஞானங்களில் தேர்ச்சி அடைந்தபோதிலும், அவனை உலகப்பற்று விடாது; நன்னடக்கை அவனிடம் குடிகொண்டிருப்பது மிகக் கஷ்டம். வைதிககர்மங்களை எல்லாம் அவர் செய்த போதிலும், அவைகளின் உண்மை நோக்கத்திற்குத் தகுந்தபடிசெய்து பலனை அடையமுடியாது. வைதிக கர்மங்களாகிய யாகம செய்தல், விவாஹம் முதலிய வைகளை முறையே மாம்சபக்ஷண ஆசை, சிற்றின்ப ஆசை இவைபோன்ற தாழ்ந்த நோக்கத்துடன் அவன் செய்யத்தொடங்க அவனுக்குப் பாபமே ஸம்பவிக்கும். இவர்கள் ஆத்மஹத்தி பண்ணினவர்களுக்கு ஸமான மாவார்கள். இவர்கள் மிகுந்த கஷ்டத்தையே அடைவார்கள்' என்று மறுமொழி சொன்னார்.

வினா 17.—கரபாஜனரை நோக்கி நிமி என்ன கேள்வி கேட்டான்? அதற்கு என்ன ஸமாதானம் பிறந்தது?

விடை.—'ஒவ்வொரு யுகத்திலும் பகவானைப் பல ஜாதியார்கள் எந்த எந்த ரூபத்தோடிருப்பதாக எண்ணி எந்த எந்த நாமங்கள் மூலமாக ஆராதிக்கிறார்கள்?' என்று கேட்டான். அதற்குக் கரபாஜனர் 'ஸத்யயுகம் அல்லது கிருதயுகத்தில் பகவான் வெண்மை நிறத்தோடு கூடிய ரிஷி ரூபமாக இருப்பார். அவருக்குப் பெயர்கள் ஹம்ஸர், பரமாத்மா முதலிய பொதுப் பெயர்களே. அவரை சாந்தம், மனோ நிரோதம், நிஷ்டை முதலிய

வைகளால் ஜனங்கள் ஆராதிப்பார்கள். திரேதாயுகத்தில் பகவான் சிவப்பு நிறத்தோடு கூடிய வைதிகக் கிரஹஸ்த ரூபத்தோடு இருப்பார். அவருக்கு யஞ்ஞும், ஸர்வ தேவர் முதலிய பெயர்களே. அவரை யாகாதி க்ருதுக் களால் ஜனங்கள் ஆராதிப்பார்கள். துவாபரயுகத்தில், அதிநீல நிறத்தோடு கூடிய ராஜ ரூபமாக இருப்பார். அவருக்கு வாஸுதேவர் முதலிய பெயர்கள் உண்டு. அவரை ஆராதனம், ஸ்தோத்திரம் முதலியவைகளால் ஜனங்கள் பூஜிப்பார்கள். கலியுகத்தில் பகவான் கருப்பு நிறத்தோடு கூடிய போர் வீரனுக இருப்பர். அவருக்கு மற்றைய யுகங்களில் உள்ள பெயர்கள் எல்லாம் உண்டு. பகவானுக்கு நாம ஸங்கீர்த்தன மாத்திரத்தில் மிகுந்த திருப்தி' என்று பதில் சொன்னர். (இங்கு கலியுகம் வருங்கால் தக்ஷிணத்தில் காவேரி, தாம்பிரபர்ணி முத லிய நதி தீரங்களில் அநேக பகவத் பக்தர்கள் இருப் பார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது.)

வின 18.—இதன் பின்னர் நாரதர் வஸுதேவருக்கு என்ன புத்திமதி கூறி இந்தக் கதையை முடித்தார்?

விடை —'நிமி சக்ரவர்த்தி இவ்வொன்பது யோகிகள் சொன்னபடி நடந்து பரமபதம் அடைந்தான். உமக்குப் பகவான் பிள்ளையாகப் பிறந்தபடியால் முன்னேயே சிறப்பு ஏற்பட்டிருக்கிறது. இதனுடன் நீரும் பகவத் பக்தியுடன் முற்கூறியவைகளை அனுஷ்டித்தால் உமக்குப் பரமபதம் வரும் என்பதற்கு என்ன ஸந் தேகம்? சிசுபாலன், கம்ஸன் முதலியோருக்கே பக வானது ஸ்பர்சத்தால் மேன்மை வந்ததென்றல் உமக்கு மேன்மை உண்டாக என்ன தடை? துஷ்ட நிக்ரஹத்திற்காக உமது பிள்ளையாகப்பிறந்த பகவானை

கேவலம் உமது பிள்ளை என்று ஒருபொழுதும் எண்ணி ஏமாந்து விடாதேயும்' என்று எச்சரிக்கைசெய்து நாரதர் முன்னர் குருக்ஷேத்திரத்தில் வஸுதேவர் செய்த யாகத்தின் முடிவில்செய்த உபதேசத்தை இங்கு நன்றாக வற்புறுத்தி வஸுதேவரைக் கரையேற்றினார்.

வி 19.—இப்படி இருக்கையில் பகவானிடம் யார் வந்து என்ன செய்தது? மேல் என்ன நடந்தது?

விடை.—பிரம்மா முதலிய தேவதைகள், ரிஷிகள், பிதிர்க்கள் எல்லோரும் துவாரகையில் பகவானைப் பார்க்க வந்தார்கள். பகவானை எல்லோரும் மனதாரத் துதித்து விட்டு முடிவில் 'நீங்கள் செய்யவேண்டிய காரியங்கள் எல்லாம் முடிந்தன. இனிமேல் உமது ஆஸ்தானம் வந்து எங்களை எல்லாம் அநுக்கிரஹிக்கவேண்டும்' என்றுகூறிப் பகவானை வைகுண்டம் வரும்படி அழைத்தனர். அப்பொழுது பகவான் தேவர்கள் முதலியோரை நோக்கி, 'என் காரியம் எல்லாம் முடிந்துவிட்டன. யாதவர்களுக்கும் ஒரு முடிவு வந்துவிட்டது. அவர்களால் இனிமேல் உலகம் வருந்த இடமில்லை. நான் கூடியசீக்கிரம் உங்களைத் திருப்தி செய்கிறேன். போய் வரலாம்!' என்று உத்தரவுசெய்ய தேவதைகள் தமது இருப்பிடம் சென்றனர்.

வி 20.—தேவதைகள் முதலியோர்கள் வந்துபோனதும் பகவான் யாதவர்கள் விஷயத்தில் என்ன ஏற்பாடு செய்தார்?

விடை.—துவாரகையில் வரவர அபசகுனங்கள் உண்டாக ரிஷிசாபம் பலிக்கத் தொடங்குகிறது என்ற எண்ணம்

எல்லோருக்கும் வந்துவிட்டது. அப்பொழுது பகவான் துவாரகா வாஸிகளை நோக்கி, 'இனிமேல் நாம் இங்கிருப்பது நன்றாக இராது. எல்லோரும் அருகே இருக்கும் பிரபாஸ தீர்த்தம்போய் தான தர்மாதிகளைச்செய்து நமது பாபங்களைத் தொலைத்துக் கொள்ளவேண்டும்!' என்று கூறினார். உடனே எல்லோரும் அவ்வாறே செய்யத் தயாரானார்கள்.

வினா 21.—இந்த ஸமயத்தில் பகவானிடம் யார் எந்த நோக்கத்தோடு வந்து என்ன சொன்னது? மேல் என்ன நடந்தது?

விடை.—இவ்வாறு ஏற்பாடுசெய்து பகவான் ஏகாந்தமாக இருக்கையில் அவரிடம் அவர் பரம பக்தரான உத்தவர் வந்து சேர்ந்தார். பகவானை மிகுந்த விநயத்துடன் துதித்துவிட்டு அவரை விட்டுப் பிரியும் ஸமயம் வந்துவிட்டதே என்று மிகவும் துக்கித்தார். அப்பொழுது பகவான் தம்மிடம் தேவதைகள் வந்து கூறியதைச் சொல்லி 'நான் வைகுண்டம் போனதும் கலி புருஷனால் உலகம் தாக்கப்படும் ஆயினும் உலகை வெறும் தோற்றமாகக் கருதும் ஞானிகளுக்கு ஒரு துக்கமும் இராது. ஸதா அது என்னிடமிருப்பதாகவே மதிப்பார்கள். அவர்கள் போல நீயும் இரு!' என்று புத்திமதி கூறினார். அதற்கு உத்தவர், 'எனக்குப் பரம ரஹஸியங்கள் ஒன்றும் விளங்கவில்லை. ஆகையால் நான் இவ்வுலகில் மிகுந்த கஷ்டப்படுவேன் போலத் தோற்றுகிறது. ஆதலால் உமக்குப்பின் உமது பரம பக்தர்கள்போல நிச்சிந்தையாக இருப்பதற்கு வேண்டிய ஞானத்தை எனக்கு உபதேசம் செய்யும்!'

என்று கேட்க, பகவான் பலவிதமாக உபதேசம் செய்யத் தொடங்கினுர்.

வினு **22.**—பகவான் முதலில் எந்தவிதமாக ஞானேபதேசம் செய்யத் தொடங்கினுர்?

விடை.—ஆத்மாவின் ஸ்வரூபத்தை உணர்ந்து ஞானிகள் மனதை வெளியேவிடாது அடக்கிவிடுவார்கள். எல்லா ஜனங்களிலும் புருஷ ஜன்மமே எனக்குப் பிடித்தது. நான் எல்லாவற்றிற்கும் அப்பால் பட்டவனுக இருந்த போதிலும், நான் அகங்காரத்தைச் சுட்டறுத்த பக்தர்களிடம் அகப்பட்டுக் கொள்கிறேன். என்னை அவர்கள் வெகு தந்திரமாக எங்கும் கண்டு தெளிவடைகின்றனர்' என்றுகூறி இந்த விஷயத்தில் யது மஹாராஜனுக்கும் ஓர் அவதூதருக்கும் (தத்தாத்ரேயருக்கும்) நடந்த ஸம்வாதத்தை விஸ்தாரமாக எடுத்துரைத்தார். (இந்த பாகத்திற்குப் பாகவதத்தில் அவதூத ஸத்வாதம் என்று பெயர்).

வினு **23.**—அவதூதர் என்பவர் யார்? அவர் லக்ஷணங்கள் என்ன?

விடை.—அவதூதர் என்ற பதத்திற்கு வஸ்திரமில்லாது பிறந்தபடி இருப்பவர் என்று பொருள். அதாவது ஞானபரமாகப் பார்க்குங்கால் வஸ்திரம் எவ்வாறு தேஹத்தை மறைக்கிறதோ அவ்வாறு அஞ்ஞானம் மனிதர்களை மறைத்து பிரபஞ்ச பேதத்தை உண்டாக்குகிறது. இந்த அஞ்ஞான மறைப்பு இல்லாதவர் அவதூதர். இத்தகைய மஹான்கள் ஒருவேளை வஸ்திரம் இல்லாதிருந்தாலும் இருக்கலாம், இல்லாவிடில் வஸ்திரத்தோ டிருந்தாலும் இருக்கலாம்.

ஞானிக்கு இப்பெயர், அவன் வஸ்திரத்தைப்பற்றி வந்த பெயர் அல்ல. அவன் மனத் தெளிவைப்பற்றி அவனுக்கு வந்தபெயர் இது. இவனுக்குப் பிரபஞ்சம் வெறுந் தோற்றமாத்திரமாக இருக்கும். அதன் மாறுதல் ஒன்றும் இவனைத் தாக்காது. இவன் தான் உயிருள்ள போதே செத்தாரைப்போல எதிலும் தாக்கற்றிருப்பவன். இவனே விதேஹமுக்தன்.

வினு 24.—தத்தாத்திரேய அவதூதாளுக்கும் யதுமஹாராஜனுக்கும் எவ்வாறு சம்பாஷணை தொடங்கியது ?

விடை.—நிச்சிந்தையாக உலகில் உலாவிவரும் தத்தாத்திரேயரை நோக்கி ஒருநாள் யதுமஹாராஜன் 'ஓ பிராம்மணு! உம்மை விட்டு எவ்வாறு அஹங்காராதிகள் கழன்றன ? உலக விஷயங்களைக் கவனியாதிருப்பதால் நீர் ஸ்பைத்தியம் பிடித்தவர்போலவும் பிசாசுபோலவும் இருக்கிறீர். ஆனால் உமது பேச்சு மிகுந்த ஒழுங்காக இருக்கின்றது. உமக்கு நித்ய திருப்தி வந்து விட்டது போலக் காணப்படுகின்றது. இதன் காரணம் என்ன ?' என்று கேட்க, அவர், 'நான் பிரபஞ்சம் முழுவதையும் குருவாகக்கொண்டு உபதேசம் பெற்று மேன்மை அடைந்தேன். அவைகளுள் முக்கியமாக எனக்கு பின் வரும் 24-ம் முக்கிய குருக்கள். அவையாவன: பூமி, வாயு, ஆகாசம், நீர், நெருப்பு, சந்திரன், ஸூர்யன், புறு, மலைப்பாம்பு, ஸமுத்ரம், தேனீ, விட்டில், யானை, கருவண்டு, மான், மீன், பிங்களை என்னும் தாஸி, மீன் கொத்தி, குழந்தைகள், கன்னிகை, அம்பு செய்வோன், பாம்பு, சிலந்தி, குளவி எடுத்த புழு, ஆகிய இவைகளே' என்று மறுமொழிகூறி ஒவ்வொன்றும் தமக்கு இன்ன இன்ன விஷயத்தைப் போதித்தது என்று விஸ்தாரமாக எடுத்துச் சொன்னார்.

வி௵ **25.**—பூமியினிடம் இருந்து அவர் என்ன தெரிந்து கொண்டார்?

விடை.—பூமியை நாம் எவ்வளவு தான் வெட்டிக்குத்தி வருத்தியபோதிலும் அது நமக்கு உபயோகமாகக் கூடிய பழங்கள் முதலியவைகளையே கொடுக்கின்றது. இதுபோலவே அதில் காணப்படும் மலைகளும், மரங்களும் முக்கியமாக மரங்கள் தம்மை வெட்டுபவருக்கு நிழல்கொடுத்து ஸுகப்படுத்துகின்றன. ஆதலால் பூமியினிடமிருந்துபரோபகாரம், பொறுமை முதலியவைகளை அறிந்து கொண்டார்.

வி௵ **26.**—காற்றினிடமிருந்து தெரிந்துகொண்டது யாது?

விடை.—காற்றானது எந்தத் துர்க்கந்தம் உடைய வஸ்துக்களின் மேல் அடித்து அந்தத்துர்க்கந்தத்தை எடுத்துச் சென்றபோதிலும், காற்றில் அந்தக் கந்தம் ஒட்டுகிறதில்லை. இதனால் காற்றைப் போல ஞானிகளும் பிரபஞ்ச விஷயங்கள் மத்தியிலிருந்தும் தாக்கற்று இருப்பார்கள் என்று தெரியவந்தது.

வி௵ **27.**—ஆகாயம் என்ன விஷயத்தைத் தெரிவித்தது?

விடை.—ஆகாயத்தில் ஓடியாடிவரும் மேகங்களை ஆகாயம் உள்ளடக்கிக்கொண்டு அதன் உள்ளும் வெளியும் எங்கும் தாக்கற்றுப் பரவியிருக்கிறது. இதிலிருந்து பரப்பிரஹ்மத்தோடு இரண்டறக்கலந்த ஞானிக்கு ஆத்மா எங்கும் இவ்வாறு பரவி நிறைந்திருக்கிறது என்பது வெளியாகும் என்று தெரிய வந்தது.

வி௵ **28.**—தண்ணீரிலிருந்து அறியப்படுவது யாது?

விடை.—கங்காநதி தண்ணீரானது குளிர்ந்திருந்து அதை அண்டினவைகளைப் பரிசுத்தப்படுத்தித் தான் அசுத்த

மடையாமல் இருக்கின்றது. இதுபோலத்தான் ஞானியும் சாந்தமாக இருந்துகொண்டு பிறர் எந்த எண்ணத்தோடு வரினும் அவர்களைச் சுத்தப்படுத்தித் தானும் கர்வாதிகளில் அகப்பட்டுக்கொள்ளாது சுத்தமாகவே இருப்பான் என்பதே.

வினா 29.—நெருப்பிலிருந்து வெளியாவது யாது?

விடை.—நெருப்பு ஸகல வஸ்துக்களை எரித்துக்கொண்டு அவைகளில் தாக்கற்றுப் பிரகாசிக்கின்றது. அது சில ஸமயம் அடங்கியும் சில ஸமயம் வெளிப்படையாகியும் இருக்கும். விறகுகளுள் நெருப்பு அடங்கியிருக்கிறது. இதிலிருந்து ஞானியும் ஸம்ஸாராதிகளை அண்டவொட்டாது தேஜோவானாக இருப்பான்: நெருப்பைப் போலத் தம்மிடம் அறிந்துவருபவர்கள் கொடுப்பதைப் பேதாபேதம் கவனியாது ஏற்றுக்கொள்ளுவான். சில ஸமயம் வெளிப்படையாயும், சில ஸமயம் அடங்கியும் இருப்பான். ஞானி எங்கும் ஊடுருவிச்சென்று ஜனன மரணாதிகள் தேகதர்மம் என்றறிவான் என்பவை வெளியாகும்.

வினா 30.—சந்திரன் தெரிவிப்பது என்ன?

விடை.—சந்திரன் வளர்பிறை தேய்பிறை முதலிய காலங்களில் அதிகப்பட்டாலும் குறைந்தாலும் சந்திரனுக்கு யாதொரு குறைவும் இல்லை. இதிலிருந்து ஞானி காமக்ரோதாதிகள் ஆத்மதர்மமல்ல. அவைகளால் ஆத்மாவுக்கு யாதொரு கேடுமில்லை என்றிருப்பான் என்று தெரியவரும்.

வினா 31.—ஸூர்யன் யாது போதிக்கிறான்?

**விடை.**—ஸூர்யன் தனது கிரணங்கள் மூலமாக கடல் நீரை எடுத்து மழையாகத் தக்க ஸமயங்களுள் பொழிகிறான். மேலும் ஸூர்யன் ஒருவனாக இருந்து நீர் நிலைகள், அலைகள் தோறும் வெவ்வேறாகப் பிரதிபிம்பமாகிறான். இதன் மூலமாக 'எல்லா விஷயங்களையும் ஞானிகள் தமது இந்திரியங்கள் வழியாகக் கிரஹித்து அவைகளில் தாக்கற்றுத் தம்மிடம் வருபவருக்குக் கொடுப்பார்கள். ஆத்மா ஒன்றாயினும் பாமரர்களுக்கு அனேகம் தோற்றமுண்டாகின்றது' என்று ஸூர்யன் போதிக்கிறான்.

**வின 32.**—புறாவிடமிருந்து அவதூதர் என்ன தெரிந்து கொண்டார்? எவ்வாறு?

**விடை.**—உலக விஷயங்களில் அதிகப் பற்றுடையவராக இருந்தால் அவைகள் மாறுங்கால் நமக்குப் பெருந்துக்கமே உண்டாகும் என்று புறாவினிடமிருந்து தெரிந்து கொண்டார். புறாக்களே பக்ஷிகளுள் ஸ்திரீ புருஷ அந்யோந்யம் மிகுதியாக உடைய ஜந்துக்கள். ஒரு மரத்தில் ஒரு ஆண்புறாவும் பெண்புறாவும் வெகுகாலம் விளையாடிக்கொண்டு வாழ்ந்திருந்தன. இவைகளுக்குச் சில குஞ்சுகள் உண்டாயின. இவைகளுக்குக் குஞ்சுகளிடம் மிகுந்த பிரீதி உண்டாய் விட்டது. ஒரு நாள் இரண்டும் இரைதேடப் போயிருந்த காலத்தில் ஒரு வேடன் இவைகளை வலையில் பிடித்து விட்டான். இதைத் தாய்ப்பறவை அறிந்ததும் மிகுந்த துக்கத்துடன் குஞ்சுகளைப் பின் தொடர்ந்து தானும் வலையில் அகப்பட்டுக்கொண்டது. ஆண்பறவையும் வெகுவாகத் துக்கித்துவிட்டுத் தானும் வலையில் சிக்கிக்

கொண்டது. இதனால் விஷயப்பற்று நாசகாரணம் என்று அவதூதர் தெரிந்து கொண்டார்.

வி**ன 33**.—மலைப்பாம்பினிடமிருந்து (அஜகரம்) என்ன வெளி வந்தது?

விடை.—மலைப்பாம்பானது அசையாது ஓர் இடத்தில் படுத்துக் கிடக்கும். அதன் அருகில் ஏதாவது வந்தால் அதை இன்னதென்று கூடக் கவனியாது புஜிக்கும். இல்லாவிட்டால் ஆகாரமின்றி கிடக்கும். இது போலவே ஞானியும் இருப்பான். உலக இன்பதுன்பங் களின் ஸ்வபாவம் அவனுக்கு நன்றாகத் தெரியும். தன்னிடம் வலியவந்ததைக் கிரஹிப்பான். ஒன்றும் வராவிடில் தன் நிஷ்டையே கதியாக இருப்பான். எந்தக் காலத்தும் கர்மத்தைச் செய்ய வேண்டும் என்று அவன் மனம் கிளம்பவே மாட்டாது. பகவந் நிஷ்டை யைவிட எதுதான் சிறந்தது?' என்று வெளியாகின் றது (இதற்கே அஜகரவிருத்தி என்று பெயர்).

வி**ன 34**.—ஸமுத்திரத்தினிடமிருந்து என்ன கருத்து எவ்வாறு வெளியாகின்றது?

விடை.—ஸமுத்திரத்துள் எல்லா ஜலங்களும் போய் விழு கின்றன; அது கரை தாண்டுவதில்லை. வேனிற் காலங் களில் தண்ணீர் வந்து விழாதபோதும் அது குறை வதில்லை. அதில் விழும் தண்ணீர்களை எல்லாம் தன் மயம் ஆக்குகின்றது. அவைகளது ரூபத்தைத் தான் அடைவதில்லை. இதுபோல ஒருவன் ஞானியாய் இருந் தால், அவன் ஸதா சாந்தமாகியும், ஸந்தோஷ, துக் கங்களால் தாக்கப்படாது ஸதா பூர்ணமாகியும், உலக விஷயம் எதுவரினும் அதன் வழி தான் சென்று

விகாரப்படாது, தன் மயமாக அவைகளை ஆக்கி அவைகளின் கெட்டகுணம் பயன்படாமலிருக்கும்படி செய்ய வேண்டும் என்று தெரியவருகின்றது.

**வி. 35.**—விட்டிலினிடமிருந்து என்ன தெரிந்துகொள்ள வேண்டியது?

**விடை.**—விட்டில் விளக்கைக்கண்டதும் 'இது பழம்; இதைத் தின்று விட்டு ஸுகிக்கலாம்' என்று எண்ணி அதன் குணத்தை அறியாது அதனுள் விழுந்திறக்கும். இது போல மனிதனும், பெண், பொன் முதலிய விஷயங்கள் ஸுகம் கொடுக்கக்கூடியவைகள் என்று எண்ணி அவைகளில் சிக்கிக்கொண்டு அறிவிழந்து மாளுகிறான். ஆதலால் ஞானமார்க்கத்தில் பழகுபவர் பார்வைக்கு அழகாக இருப்பவைகளைக் கூடியவரையில் ஒதுக்கி முடிவில் முற்றிலும் விடவேண்டும்' என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

**வி. 36.**—தேனீ (மதுகரம்) என்ன விஷயத்தைத் தெரிவிக்கின்றது?

**விடை.**—தேனீ அநேக புஷ்பங்களில் சென்று ஆங்காங்கு கொஞ்சம் கொஞ்சமாகத் தேனை எடுத்துப் புஷ்பங்களுக்குக் கெடுதிவராமல் தேன்சேர்த்து வாழுகின்றது. இதுபோல ஞானியும் வீடுகள்தோறும் சென்று வீட்டுக்காரர்களுக்குக் கஷ்டம் தோன்றாதபடி கொஞ்சம் கொஞ்சமாகச் சோறுவாங்கித் தனது பசியை மாத்திரம் தீர்த்துக்கொள்ளவேண்டியது. சேர்த்துவைக்கவே கூடாது. தேனீ சேர்த்துவைத்த தேனுக்காக, அதை வேடர்கள் கொன்று தேனை எவ்விதம் எடுத்துக்கொள்ளுகிறார்களோ அதுபோல நாசம்

ஞானிக்கும் வரும். மேலும் தேனீ தேனை எப்படி அநேக மலர்களிலிருந்து எடுத்துச் சேர்த்துவைத்து ஸுகமாக இருக்கின்றதோ, அதுபோல ஞானிகள் சாஸ்திர கிரந்தங்களிலிருந்து உண்மைகளைத்தேடிக் கிரஹிக்கவேண்டும்' என்பது தெரியவருகின்றது. (இதற்குத்தான் மதுகரவிருத்தி என்று பெயர்.)

வி௵ 37.—யானையிடம் இருந்து தெரியவரும் கருத்து யாது?

விடை.—யானை கூட்டங்களுள் பழகிய பெண் யானைகளை விட்டுவிட, இவைகள் அவைகளைத்தொட்டு அந்த ஸுகத்தால் அவைகளை மோசம் செய்து இழுத்து வரும். உடனே அவைகள் பாகர்கள் கையில் அகப்படுகின்றன. இதிலிருந்து ஸ்பர்ச ஸுகத்தில் ஆசையிருந்தால் கஷ்டத்திற்குக் காரணம்; அதை விடவேண்டும்' என்று தெரிகின்றது.

வி௵ 38.—கரிவண்டுகள் என்ன விஷயத்தைப் போதிக்கின்றன?

விடை.—'சில வண்டுகள் தாமரை மலருள் வாஸனை முதலியவைகளில் ஈடுபட்டு நாள் முழுவதும் அதிலேயே இருந்தன. ஸூர்யாஸ்தமனமானதும் தாமரை மூடிக்கொள்ள அவை அகப்பட்டு இறந்தன. சில வண்டுகள் வாஸனைக்கு இச்சைப்பட்டு எல்லா மலர்களிலும் போய்க்கொண்டிருக்கையில் சண்பகத்தின் (வண்டுணு மலர்.) அருகில்வந்து அதன் வாஸனைபட்டு இறந்தன. இவைகளால்ஞானி ஓர்இடத்தில் தங்கிவிட்டால் அவன் பற்று முதலியவைகளில் சிக்கிக்கொண்டு நாசம் அடைவான். வாஸனையில் ஈடுபட்டால் அவனுக்கு அபாயம்

வரும்: ஆகையால் இவைகளை விலக்கவேண்டும்' என்று வண்டுகள் போதிக்கின்றன.

வி௫ 39.—மானிடம் இருந்து தெரிந்துகொள்ளவேண்டியது என்ன?

விடை.—'வேடர்கள் தமது குழல்கள் மூலமாகப் பாடும் பாட்டைக்கேட்டு அசைவற்றிருந்து அவர்கள் போகும் வழியே தொடர்ந்துசென்று அவர்கள் விரித்திருக்கும் வலையில் மான் சிக்கிக் கொள்ளுகின்றது. இதிலிருந்து காதினால் வரக்கூடிய ஸுகத்தைப் பெரிதென்று எண்ணிவிட்டால் முடிவில் மான் கதிதான். ஆதலால் இதையும் விடவேண்டும்' என்று தெரிந்துகொள்ள வேண்டியது. (ரிசியசிருங்கரும் இவ்வாறுதான் ஏமாந்தது

வி௫ 40.—மீனிடம் இருந்து வெளியாகும் கருத்து என்ன?

விடை.—மீன் பிடிப்பவர்கள் தூண்டிமுள்ளில் புழு அல்லது சோற்றை வைத்துத் தண்ணீரில் போடுகிறார்கள். அதைத் தின்று ஸுகிக்கவரும் மீன் தூண்டிமுள்ளில் சிக்கிப் பிடிபடுகின்றது. இதிலிருந்து நாக்கினால் வரக்கூடிய ஸுகத்தின் முடிவு இன்னது, ஆதலால் அதையும் விட்டுவிடவேண்டும் என்ற கருத்து வெளியாகின்றது.

(வினாக்கள் 35 முதல் 40 வரையில் உள்ள விஷயங்களை ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசிரிய ஸ்வாமிகள் பின்வருமாறு தமது விவேக சூடாமணியில் மிகுந்த உருக்கத்துடன் கூறியிருக்கிறார். 'மான், யானை, மீன், விட்டில், வண்டு ஆகிய இவ்வைந்து ஜெந்துக்களும்

முறையே சப்த, ஸ்பர்ச, ரஸ, ரூப, கந்தங்களுள் ஒவ்வொன்று ஒவ்வொன்றிற்கு மாத்திரம் ஈடுபட்டு நாசம் அடைகின்றது. இப்படியிருக்க இவ்வைந்து விஷயங்களிலும் ஈடுபட்டு இவைகளால் ஸுகிக்கவேண்டும் என்று எண்ணும் பாழும் மானிடன் கதி எப்படியாகும்?')

வினா 41.—பிங்களை என்னும் தாஸி எவ்வாறு, என்ன விஷயத்தை அவதூதருக்குத் தெரிவித்தாள்?

விடை.—பிங்களை என்பவள் மிதிலாப் பட்டணத்திய ஒரு தாஸி (இவள் தான் கூனியாகப பிறந்து கிருஷ்ண பகவான் கிருபைக்குப் பாத்திரமானது). இவளுக்குப் பணத்தாசை அதிகம். ஒரு நாள் இரவில் யாராவது பணக்காரன் தன்னிடம் வந்து பணம் கொடுக்கமாட்டானு என்று மிகுந்த ஆவலுடன் வாயிற்படியில் நின்று கொண்டு எதிர் பார்த்திருந்தாள். இவள் மனம் ஆவலால் பதைத்தது; தூக்கம் பிடிக்க வில்லை. அன்றிரவு வெகு நாழிகை வரையில் இவள் வீட்டிற்கு ஒருவரும் வரவில்லை. ஆவலுக்குத் தகுந்த பலன் கிடைக்காததினுல் அன்று நடுராத்திரியில் அவளுக்கு வைராக்யம் வந்தது. 'மனிதர்களை நம்பி மோசம் போனேமே. ஸர்வதயாபரனை பகவானை இதைவிடக் கொஞ்சமான ஆவலோடு மட்டும் ஆராதித்திருந்தால் நமக்கு எவ்வளவு சாந்தம் உண்டாயிருக்கும். இந்தப் பணத்தால் வரும் ஸுகத்தை மறந்தேன்! துறந்தேன்!' என்ற தீர்மானத்துடன் வீட்டுக்குள் வந்து படுத்துக்கொண்டு ஸுகமாகத் தூங்கினுள். இதனுல் அவதூதர் ஆசையே பரமதுக்கம், நிராசையே பரமஸுகம் என்று தெரிந்து கொண்டார்.

**விஞ 42.**—மீன் கொத்திப் பறவையால் என்ன தெரிய வந்தது ?

**விடை.**—ஒரு மீன்கொத்தி மீனைக்கொத்தி எடுத்துக் கொண்டு பறந்து போயிற்று. அதை அநேகம் பறவைகள் தொடர்ந்து சென்று தமது மூக்கால் அதன் தலையைக்கொத்தி வருத்தின. அது வலி பொறுக்க மாட்டாது மீனை எறிந்து விட்டது ! அந்த மீனை எடுத்துக் கொள்ள மற்றைய பக்ஷிகள் எல்லாம் சண்டையிட்டுக் கொண்டுபோய் விட்டன. மீன்கொத்தித் தனிமையாய் ஸுகமாக இருந்தது. இதனால் 'பலர் விரும்பக்கூடிய உலக விஷயங்களை அப்பியாஸிகள் விரும்பினால் பெரிய சண்டை சச்சரவுகள் ஏற்பட்டு மிகுந்த துக்கம் உண்டாகும். அவைகளை விட்டால் தான் அவருக்கு ஸுகம்' என்று தெரியவந்தது.

**விஞ 43.**—குழந்தைகளிடமிருந்து அவதூதர் தெரிந்து கொண்டது என்ன ?

**விடை.**—குழந்தைகள் மானுவமானமின்றி இருக்கின்றன. குழந்தைகளுக்கும் ஞானிகளுக்கும் மனச் சஞ்சலம் இல்லை. ஆதலால் 'ஞானியும் குழந்தைகளைப்போலப் பிறந்த மேனிக்குத் தாக்கற்று இருக்கவேண்டும்' என்று தெரிந்துகொண்டார். (சில குழந்தைகள் கொடுத்த வஸ்துக்களைத் தின்ன மாட்டா. அதை நாம் வாயிற் போட்டுக்கொண்டு மிகுந்த ருசியாக இருக்கிறதென்று சொல்லி முகக்குறியும் காட்டினால் அவைகள் பின்னர் தின்னும். இதுபோலவேதான் ' குருவும் தான் பிரம்ம ஞானனந்தத்தை அனுபவித்துத் தமது நடத்தைப்படி சிஷ்யனையும் நடக்கும்படி தூண்டுகிறார்' என்றார் ஒரு மஹான்.)

**வி 44.**—கன்னியாப் பெண் என்ன விஷயத்தை எவ்வாறு வெளி யிட்டாள் ?

**விடை.**—ஓர் பெண் வீட்டிற்கு அவள் கல்யாண விஷயமாக சிலர் வந்து சேர்ந்தார்கள். வீட்டில் ஒருவரும் இல்லை. அவளேதான் வந்தவர்களுக்கு உபசாரம் செய்ய வேண்டி வந்தது. வீட்டில் அரிசியில்லாததால் அவள் நெல்லுக் குத்தும்படியும் நேர்ந்தது. குத்தும்பொழுது இவள் கையிலிருந்த சங்கு வளைகள் சப்தம் செய்தன. இதனால் வந்தவர்கள் 'நமது வீட்டின் நிலையை அறிந்து விடுவார்களே' என்று அஞ்சி அவள் ஒவ்வொன்றாக வளைகளை ஒடித்தெறிந்தாள். முடிவில் ஒவ்வொரு கையில் இரண்டு வளைகளை நிறுத்திவைத்தாள். அப்பொழுதும் சப்தம் அடங்கவில்லை. பின்னர் ஒரு வளையை ஒடித்தெறிந்தாள். சப்தம் நின்றுவிட்டது. இதிலிருந்து அவதூதர் 'அநேகம் பேர்கள் சேர்ந்தால் சண்டை, கூச்சல், வீண்பொழுது போக்ககாகத்தான் முடியும். ஆதலால் ஏகாந்தமே பகவத்யானம், வைராக்யம் ஆகிய இவைகளுக்கு ஸஹாயம் என்று அறிந்தார்.

**வி 45.**—அம்பு செய்வோன் எந்த விஷயத்தை எவ்வாறு போதித்தான் ?

**விடை.**—அம்பு செய்வோன் அதைச் சாணை பிடிக்குங்கால் மிகுந்த கனமாக இருக்கவேண்டும்; இல்லாவிடில் அது அவன் கையையே துண்டித்துவிடும். இப்படி இருக்கும் ஒருவன் பக்கமாக ஒரு ராஜா தமது பரிவாரங்களோடு போனார். அவர் போனதே இவனுக்குத் தெரியவில்லை. இதிலிருந்து அவதூதர் 'மனோ நிரோதமுடையவனுக்கு உள் வெளி பிரபஞ்சங்களே இல்லை! அவை

உண்டு என்பதே அவனுக்குப் புலப்படாது' என்று அவன் போதித்ததாகத் தெரிந்துகொண்டார்.

**வி௫ 46.**—பாம்பினிடமிருந்து அவதூதர் தெரிந்துகொண்டது என்ன ?

விடை.—பாம்பு தனக்கு என்று ஒரு வீடில்லாமல் கறையான் புற்றில் தங்கியிருந்து ஸஞ்சரிக்கின்றது. பாம்பு மறைந்து ஜாக்கிரதையாக உலாவுகின்றது. இதிலிருந்து 'தனக்கு என்று ஒரு வீட்டையும் மதியாது பொது ஸ்தலங்களாகிய மடம், சத்திரம், குகை இவைகளில் ஞானி தங்கவேண்டும். வீடே ஸகல துக்கத்திற்கும் காரணம். மேலும் பாம்பைப்போல மறைந்து நீறு பூத்த நெருப்புப்போல இருக்கவேண்டும். அதிகமாகப் பேசாது தந்திரமாக உலகுடன் பழகவேண்டும்!' என்று அவதூதர் தெரிந்துகொண்டார்.

**வி௫ 47.**—சிலந்திப்பூச்சி எதைத் தெரிவித்தது ?

விடை.—சிலந்திபூச்சி தன்னிடமிருந்தே நூலை உண்டாக்கி வலை செய்கின்றது. அதைத் தானே காக்கின்றது. அதை தன்னுள்ளேயே அடக்கிக்கொள்ளுகின்றது. இது 'பிரம்மமும் ஜகத்காரணம், ஸ்திதிகர்த்தா, ஸம்ஹார கர்த்தாவாக இருந்து ஸகலத்தைத் தன்னிடமே ஸதா இருக்கும்படி செய்கின்றது' என்ற அரிய விஷயத்தைத் தெரிவித்தது.

**வி௫ 48.**—குளவி எடுத்த புழுவிலிருந்து எந்த அரிய விஷயம் வெளியாகின்றது ?

விடை.—சிற்சில புழுக்களைக் குளவி எடுத்துச்சென்று தன் கூட்டுள் வைத்து அவைகளைக் கொட்டிவிட்டு அவைகளின் முன்பே சப்தித்துக்கொண்டு பறக்கின்றது.

வலிபொறுக்கமாட்டாத புழுக்கள் பயந்து எதிரே இருக்கும் குளவியைப் பார்த்திருப்பதால் காலக்கிரமத்தில் அவைகளும் குளவியாகின்றன. இது மனிதனும் விஷயங்களுக்கு பயந்து அவைகளுக்குக் காரணனை பிரம்மத்தை தியானம்செய்து முடிவில் பிரம்மாவாகலாம்' என்ற அரியவிஷயத்தை வெளிப்படுத்துகின்றது.

வி **49.**—இவ்வளவு கூறி தத்தாத்திரேய அவதூதர் என்ன சொன்னார் ? பின்பு என்ன செய்தார் ?

விடை.—'இவ்வளவு விஷயங்களையும் அறிந்துகொண்ட பின்னர் நான் இருக்கும் வழியைச் சொல்லுகிறேன். இந்த தேஹம் கர்மானுஸாரம். அநேகம் பெண்சாதிகள் எவ்வாறு ஒரு கிரஹஸ்தனை வருத்துவார்களோ அவ்வாறே மனிதனை அவனது இந்திரியம் முதலியவைகள் கண்டபடி இழுத்து கஷ்டப்படுத்துகின்றன. பகவானே கர்மானுஸாரம் ஜன்மமெடுக்கும் ஜீவராசிகள் மோக்ஷம் அடைதற்பொருட்டே இந்த ஸ்ருஷ்டியை வெளியிட்டிருக்கிறார். இதில் மனுஷ்ய ஜன்மம் துர்லபம் அதிலிருந்துதான் மனிதன் மோக்ஷமடைய முடியும். இப்படிப்பட்ட ஜன்மம் வந்தபிறகு அது முடியுமுன் மோக்ஷம் அடைய முயலவேண்டும். ஆதலால் அகங்காரத்தைவிட்டு வைராக்யத்தை ஏற்று, ஆத்மபரனாய் நிச்சிந்தையாய் நான் உலாவிவருகிறேன்' என்று சொல்லிவிட்டு யதுமஹாராஜன்செய்த மரியாதைகளைப் பெற்று தமது இச்சைப்படி உலகில் உலாவப் புறப்பட்டார்.

வி **50.**—இதன்பின்பு பகவான் உத்தவருக்கும் எந்த விஷயத்தைப்பற்றி விஸ்தரித்தார் ?

விடை.—ஒவ்வொருவனும் பலத்தில் இச்சையில்லாது ஸ்வ தர்மத்தையே செய்யவேண்டும். அப்பொழுது தான் அவன் கர்மபந்தத்திலிருந்து எளிதில் விடுபடுவான். ஒருவன் தன் மனதை பரீக்ஷை செய்துகொண்டே வந்து அதன் நிலையை நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கவேண்டும். வீண்பேச்சு, பொறாமை, முதலிய விஷய ஸம்பந்தமானவைகளை முற்றும் துறக்கவேண்டும். எரியும் நெருப்பும் எவ்வாறு விறகைவிட்டு வேறாகி ஸகல வஸ்துக்களையும் எவ்வாறு பிரகாசப் படுத்துகிறதோ அவ்வாறே ஆத்மாவும் தேஹாதிகளைவிட்டு வேறாகி எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாக இருக்கிறது. ஆசார்யன் தான் அடி அரணிக்கட்டை, சிஷ்யன்மேல் அரணிக் கட்டை, உபதேசம்தான் கடையும் மத்திய அரணிக் கட்டை, ஞானம்தான் கடைதலால் உண்டாகும் நெருப்பு. இது மாயாகல்பிதமான எல்லாவற்றையும் எரித்துவிட்டு அடங்கிவிடும். இவ்வாறு சிஷ்யனை சிறப்புப்படுத்தும் ஆசாரியனைச் சிஷ்யன் ஸதாமரியாதை செய்யவேண்டும். ஸ்வர்க்காதி ஸுகங்களும் நிலையாக இரா. புண்யம் குறைந்தால் ஸ்வர்க்கத்திலிருந்து ஒருவன் விழவேண்டியதுதான். ஆதலால் இதை எவனும் விரும்பக் கூடாது. மேலும் கர்மம், ஸுகம் இவைகள் வேண்டும் என்று முயலுபவருக்கு எப்பொழுதும் துக்கம்தான், பயம்தான். ஆதலால் இம்மாதிரி விஷயங்களில் மனதைப் போகவொட்டாது ஸதா என்னிடம் செலுத்தவேண்டும். அப்பொழுதுதான் துக்கம், பயம் இவைகளுக்குக் காரணமாகிய வேற்றுமைகள் அடங்க அவைகளும் நீங்கும்என்ற பொதுவிஷயங்களை எடுத்து விஸ்தரித்தார்.

வி௲ 51.—உத்தவர் 'பக்தன், முக்தன் இவர்களது லக்ஷணம் யாது? ஆத்மா பக்தனு?' என்றுகேட்க பகவான் என்ன பதில் கூறினார்?

விடை.—'பக்தன் முக்தன் என்ற வ்யவஹாரம் உண்மையில் இல்லை. ஆதலால் ஆத்மா பக்தனும் அல்ல முக்தனும் அல்ல. இவைகளுக்குக் காரணமாகிய அவித்தை' வித்தைகளே மாயாகல்பிதம். ஆதலால் ஆத்மா என்னாளும் மாறாத நிர்க்குணவஸ்து. பிரபஞ்ச வ்யவஹாரத்தை அதில் ஏற்றவேபடாது. பக்த முக்தர்கள் நடக்கும் விதத்தைப் பின்வருமாறு சுருக்கிச் சொல்லலாம். ஒரே மரத்தில் இரண்டு அழகிய இறகுகளை உடையனவாயும், மிகுந்த ஸ்நேகமுடையனவாயும் உள்ள இரண்டு பறவைகள் இருக்கின்றன. ஒன்று அந்த மரத்தின் பழங்களைத் தின்றுகொண்டு உலாவுகின்றது. மற்றொன்று நிச்சிந்தையாக ஒன்றையும் தின்னாது ஸுகமாக இருக்கின்றது. முன்னது அஞ்ஞானமே பந்தம், ஞானமே முக்தி. பக்தன் தேகப்பற்று, விஷயப்பற்று முதலியவைகள் உடையவனாகி, ஸுக்துக்கங்களில் பிடிபட்டுக் கஷ்டப்பட்டுக்கொண்டு உலகில் வாழுவான். முக்தனோ ஆத்மானாத்ம விவேக முடையவனாய் பக்தன் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யும்படி நேரிட்டாலும் அவைகளிடம் பற்றில்லாது ஸதா பிரிந்து நின்று, தேகத்திலிருந்தும் தேகப்பற்றில்லாதவனாக நித்யதிருப்தனாய் உலகில் உலாவுவான். வேதங்களை எவ்வளவுதான் அத்தியயனம் செய்தபோதிலும் பகவான் நிஷ்டை இல்லாதவன் பக்தன் ஆகான். வேதம் அவனுக்கு உதவாது. ஞானிகள் எப்பொழுதும் அதை (ஆத்மாவை) உரைத்து அதை நினைந்திருப்பதை நீதி

யாகக் கொண்டிருப்பார்கள். அவ்வாறிருக்க உன்னல் முடியாவிடில் ஒன்றையும் கவனிக்காது நீசெய்து தீர வேண்டிய கர்மங்களைச்செய்து எனக்கு அற்பிதம்செய். இது உன்னை எளிதில் ஞானியாக்கிப் பரமபதம் அடையும்படி செய்யும்' என்று பதில் சொன்னர்.

**விஞ 52.**—'உமக்கு இஷ்டமாயிருக்கும் பக்தர்கள் யார்? உமக்கு அற்பிதம் செய்யக்கூடிய விஷயங்கள் யார்?' என்று கேட்ட உத்தவருக்குப் பகவான் என்ன மறுமொழி கூறினர்?

**விடை.**—'என்னை உள்ளபடி உணர்ந்து வழிபடுபவரே எனக்கு இஷ்டமான பக்தர்கள். அவர்களிடம் மோக்ஷஸாதனமான ஸகல நற்குணங்களும் குடிகொண்டிருக்கும். ஒருமனிதனுக்கு எந்தெந்த விஷயங்கள் அதிக இஷ்டமோ அதை அவன் எனக்கு முதலில் அற்பிதம் செய்யவேண்டியது. நான் எங்கும் பரவி இருத்தலால் என்னை ஆராதிக்கத் தகுந்த வஸ்துக்கள் மூலமாக ஆராதிக்கலாம். ஸூர்யனில் என்னை வேதங்களாலும், நெருப்பில் என்னை நெய்யாலும், பிராம்மணர்களில் என்னைப் போஜனதிகளாலும், பக்தர்களிடம் என்னை ஸ்நேஹித்தாலும், ஆடு மாடுகளில் என்னைப் புற்களாலும், மனதில் நிஷ்டையாலும் ஆராதிக்கவேண்டும். என்னை எப்பொழுதும் மறக்கக்கூடாது. என்னை ஏகாக்கிர சித்தத்தோடு ஆராதிக்கவேண்டியது. என்னைப் பக்தியாலும் ஸத்ஸங்கத்தாலும் அடைந்தால்தான் பந்தம் விடும்' என்று மறுமொழி கூறினர்?

**விஞ 53.**—இதன் பின்பு பகவான் எந்த பரம ரஹஸ்யத்தை வெளியிட்டார்?

விடை.—'யோகம், வேதாத்யயனம் முதலிய எந்த வழியாலும் என்னை அடைதல் அரிது. அப்படி இருந்தும், தைத்யாள், ராக்ஷஸாள், தாழ்ந்த ஜாதியார்கள், பிரஹ்லாதன், ஸுக்ரீவன், கோபஸ்திரீகள் முதலிய அநேகர் என்னை அடைந்திருக்கிறார்கள். இவர்கள் தவம், வேதாத்யயனம் முதலிய ஒன்றிலும் பழகினவர்கள் அல்லர். இவர்கள் என்னை அடைந்ததற்கு காரணம் ஸத்ஸங்கமே. எவ்விதத்திலோ என்னோடு நேரிடவாவது, அல்லது என் பக்தர்களோடாவது ஸம்பந்தப்பட்டு மற்றைய பற்றுக்களைக் களைந்தவர்கள். முக்கியமாகக் கோபஸ்திரீகள் என்னை அடைந்து என்னோடு நேரிட ஸம்பந்தப்பட்டு நான் பிரிந்துவந்து விட்டபோதிலும் ஸதா என்னைத் தியானித்ததால்தான் பற்று நீங்கினார். முதலில் என்னை அறியாது என்மீது ஆசை கொண்டபோதிலும் ஸத்ஸங்க விசேஷத்தால் அவர்கள் மேன்மை அடைந்தார்கள். ஆதலால் உத்தவா! வேதம் முதலிய எல்லாவித மத அப்பியாஸங்களையும் கவனியாது முடிவாக என்னைக் கோபிகளுக்கு இருந்த பற்றுடன்வந்து சரணமடை! நான் உன்னைக் காப்பாற்றுவேன்!' என்ற பரமரஹஸ்யத்தை வெளியிட்டார். (இதுவே கீதா ஸாரம்.)

வி 54.—உத்தவர் இந்த சரணாகதி விஷயத்தை நன்றாக உணரும் வண்ணம் பகவானே எவ்வாறு இதை விளக்குகிறார்?

விடை.—'உலகம் காரியம் துணிபோல, பகவான் காரணம் நூல்போல. நூலைத்தவிர துணியே இல்லாததுபோல, பகவானைத் தவிர உலகமே இல்லை. பிரபஞ்சம் என்னும் விருக்ஷத்திற்கு இரண்டுவிதை. அதாவது தர்மம்,

தேஜஸ், அடங்கா ஆசையே அதன் வேர். முக்குணங்களே (ஸாத்விக, ராஜஸ, தாமஸம்) அதன் அடிமரம். பஞ்சபூதங்களே அதன் அடிக்கிளைகள். பஞ்ச விஷயங்களே அதன் பழங்கள். பதினொரு இந்திரியங்களே அதன்கிளைகள். இதில் கர்மஸம்பந்தமாக இரண்டு விதப் பழங்கள் உண்டு. இதில் அழகிய இறக்கையுடைய இரண்டு பக்ஷிகள் (ஜீவாத்மா, பரமாத்மா) இருக்கின்றன. இந்த மரம் எங்கும் பரவி இருக்கிறது. ஸாதாரண ஜனங்கள் துக்கம் என்னும் பழத்தையும், ஸந்யாஸிகள் ஸுகம் என்னும் பழத்தையும் தின்னுகிறார்கள். எவன் குருகிருபையால் இவ்வாறு மாறுபட்டுத் தோற்றுவதெல்லாம் ஒன்றே என்று உணருகின்றானோ அவனே ரஹஸ்யம் உணர்ந்தவன். ஆதலால் ஞானம் என்னும்கோடரியைக் குருபக்தியால் கூர்மையாக்கி இந்த விருக்ஷத்தைவெட்டிப் பகவானுள் கலந்து அந்த ஆயுதத்தையும் விட்டுவிடு. ஸாத்விக, ராஜஸ, தாமஸகுணங்கள் ஆத்மாவுடன் ஸம்பந்தப் பட்டவைகள் அல்ல. ஆதலால், முதலில் பின்னிரண்டையும் ஸத்வகுணத்தால் நாசம்செய். இதனால் பகவத்பக்தி முதலிய நற்குணங்கள் உண்டாகும். இந்த குணங்கள் முற்றினால் (சவம் சுடும் தடிபோல) தாம் செய்யவேண்டியதாகிய மற்றைய குணங்களை அழித்தல் என்பது முடிந்ததும், ஸத்வம் தன்னாலேயே மறைந்துபோகும். எவ்வாறு மூங்கிற்காட்டிலிருந்து உண்டாகும் நெருப்புக் காட்டை எரித்துவிட்டு அணைந்து விடுகிறதோ அதுபோல ஸத்வமும் முடிவில் நீங்கும். இது நீங்குவதே முற்றும் துறத்தல்' என்று பகவான் விளக்கினார்.

**வி 55.**—'விஷயம் விஷம் என்று தெரிந்திருந்தும் ஏன் மனிதர் மடத்தனமாக அதில்கிடந்து உழலுகிறார்கள்?' என்று உத்தவர் கேள்விக்குப் பகவான் என்ன ஸமாதானம் சொன்னார்?

**விடை.**—'ஸத்வம் இருக்கும் மனதில்கூட அகங்காரம் புகுந்துவிட்டால் தாமஸகுணமாகிய அஞ்ஞானம் வந்துவிடும். இதிலிருந்து சஞ்சலம் உண்டாகும். இது விஷயஸம்பந்தப்பட்டால் மிகுந்த ஆசை உண்டாகிவிடும். இதனால் துக்கம்வரும் என்று தெரிந்தபோதிலும், பாமரர்கள் அஞ்ஞானத்தால் கர்மங்களைச்செய்வார்கள். படித்து விஷயங்களில் தேர்ந்த புத்திமான் இந்த சமயத்தில் தன் மனதை அடக்கிக்கொண்டு ஜாக்கிரதையாக இருப்பான். இந்த ஸஹாயமான மனோநிரோதத்தைச்செய்து ஸுகாஸனத்தில் வீற்றிருந்து மனதை என்னிடம் ஒப்புவித்துவிட்டு ஏகாக்கிரப்படுத்திப் பழகவேண்டியது' என்றார்.

**வி 56.**—இந்த விஷயத்தில் பகவான் என்ன கதையைச் சொன்னார்?

**விடை.**—'முன் காலத்தில் ஸநகாதி யோகிகள் பிரம்மாவை நோக்கி மனதிற்கும் திரிகுணங்களுக்கும் நெருங்கின ஸம்பந்தமிருக்க அவைகளை எவ்வாறு முமுக்ஷு நீக்குவது? என்று கேட்டனர். பிரம்மா பதில் சொல்ல முடியாமல் என்னை நினைத்தார். நான் ஹம்ஸரூபமாகப் போனேன். என்னை யார் என்று கேட்க நான் ஆத்மாவிடம் வேற்றுமையில்லாததால், ஆத்மபரமாக இந்தக் கேள்விக்குப்பதில் சொல்லமுடியாது. தேகவிஷயமாகவும் இதற்குப்பதில் இல்லை என்றுகூறி அவர்களை யோசிக்கும்படி செய்தேன். பின்னர் மனமும் குணங்க

ளும் என்னைவிட்டு வேறாக இல்லை. இதை அறிந்து அவைகளை நீக்கவேண்டும். இதற்கு ஆத்மா அவஸ்தாத்ரய ஸாக்ஷி (ஜாக்கிரத் ஸ்வப்நஸுஷுப்திகளில் மாறாது ஸாக்ஷியாக இருப்பவன்) என்ற ஞானத்தைச் சுருதி யுக்தி அனுபவமூலமாக உணரவேண்டும். குடியன் துணியை லக்ஷ்யம் செய்யாதிருப்பதுபோல, ஞானியும் தேஹத்தையும் லக்ஷ்யம் செய்யக்கூடாது. மனது முற்கூறிய வழியால் ஸதா ஏகாக்கிரபட்டு அந்தர்முகப்பட்டு நிற்கவேண்டும் என்று சொன்னேன்' என்ற திவ்யகதையைக்கூறினார்.

வினா 57.—'மோக்ஷத்திற்கு அநேக வழிகள் இருக்கின்றன என்று பிரம்ம நிஷ்டர்கள் கூறுவர். அவைகளில் எல்லாம் முக்கியமா, அல்லது ஒன்றுதான் முக்கியமா? என்ற உத்தவர்கேள்விக்குப் பகவான் என்ன விடை அளித்தார்?

விடை.—'ஜனங்கள் மனோதர்மம் அநேகவிதம். அவர்களுக்கு ஏற்ப அநேக மோக்ஷவழிகள் காணப்படும். உண்மையில் எல்லா வழிகளும் பகவத் பக்தியில் வந்துசேர அதுவே மேல்நோக்கி மனிதனைக் கொண்டுபோவது. இந்த வழியில் வந்துவிட்டவனுக்கு நிராசை தானே உண்டாகும். முதலில் பக்தி சின்னங்களாகிய மயிர் சிலிர்த்தல், மனம் கரைதல், ஆனந்தக்கண்ணீர், எல்லாம் உண்டாகி மனதின் அசுத்தங்கள் நீங்கும். காமங்களினின்றும் விடுபட்டுப் பக்தியால் ஒருவன் சுத்தனுவான். இதன் மேல் இவன் மனோநிரோதத்தோடு என்னைவிடாது தியானம் செய்யவேண்டும். இதுவே முக்கியமான வழி' என்று விடை அளித்தார்.

வினா 58.—பகவத் தியானவிதம் என்ன?

விடை.—பக்தன் ஸுகாஸனத்தில் வீற்றிருந்து தேஹத்தை நேராக வைத்துக்கொண்டு ஓம் என்றபதத்துடன் பிராணுயாமம் என்பதை அப்பியாசம் செய்யவேண்டும். இதனுல் பின்னர் மனதை அடக்க முயலவேண்டும். மனது அடங்க மூச்சு விடுவதும் குறையும். ஹிருதயத்தில் பகவான் திவ்யமங்கள ரூபத்துடன் (நாரதர் துருவருக்குக் கூறியபடி) இருப்பதாகப் பாவித்து அடங்கி வரும் மனதை அங்கு ஸமர்ப்பிக்கவேண்டும். பின்னர் மனதை ஆகாயத்தில் நிறுத்தவேண்டும். இம்மாதிரி, மனம் முதலில் ஏகாக்கிரப்பட்டுச் சக்தியுடையதாகி விரிவை அடைந்தால் என் ஸ்வரூபம் நன்குவிளங்கும். இந்தத் தியானத்தால் மனதின் முந்திய உருவம் அழிந்துவிடும். இந்த நிலே வருவதற்கு முன்னமே பக்தனுக்கு ஸித்திவித்தைகள் எல்லாம் வந்துவிடும்.

வின 59.—ஸித்திகள் எத்தனே விதம்? அவைகளின் விவரம் என்ன?

விடை.—ஸித்திகள் எட்டு. அவைகளின் விவரம் பின்வருவன:—அணிமா.—சரீரத்தை அணுவிலும் சிறியதாக்கிக் கொள்ளும் சக்தி. மஹிமா;—பருவதத்திலும் பெரியதாகச் செய்துகொள்ளும் சக்தி. லகிமா:—எல்லாவற்றிலும் லேசாகவிருப்பது. கரிமா:—எல்லாவற்றையும்விட கனமாக விருப்பது. ப்ராப்தி:—இந்திரியங்களுடன் அந்தந்தத்தேவதாஸ்வரூபியாக ஸம்பந்திப்பது. ப்ராகாம்யம்:—நேரில் கேட்கப்படாதவைகளேயும் பார்க்கப்படாதவைகளேயும் அனுபவிக்கும் சக்தி. ஈசத்வம்:—மாயாம்சங்களேத் தாண்டுதல். வசித்வம்:—விஷயபோகங்களில் ஆசைப்படாமலிருப்பது. இவைகள் பகவத்ஸித்திகள்.

இவை தவிர பசிதாகமின்மை, தூரதிருஷ்டி, தூர சிரவணம், மனோவேகமாகப்போதல், இஷ்டப்பட்ட ரூபந்தரித்தல், பரகாயப் பிரவேசம், ஸ்வச்சந்தமரணம், ஸ்வர்க்கபோகம் அனுபவித்தல், ஆசைப்பட்டது கை கூடல், தங்கு தடையின்றி உள்ள அதிகாரம், திரிகால ஞானம், பிறர்மனம் உணர்தல், ஸூர்யன், நெருப்பு, தண்ணீர், விஷம் இவைகளால் தாக்கமுடியாத நிலை ஆகிய இவைகள்பத்தும் மனுஷ்ய ஸித்திகள். இந்த ஸித்திகள் எல்லாம் பகவத் பக்தி செய்யவொட்டாது மனதைச் சஞ்சலப்படுத்தி அப்யாஸிகளைத் தடுக்கும். இதை ஜாக்கிரதையாகக் கவனித்துப் பழகவேண்டியது.

**வின 60.**—'உம்மை எவ்வாறு எண்ணி ஆராதிப்பது? உமது ரூபங்களின் சிறப்பு என்ன?' என்று உத்தவர் கேட்க, பகவான் என்ன பதில் சொன்னார்?

**விடை.**—'என்னை அர்ஜுனனும் இவ்வாறு குருக்ஷேத்திர யுத்தகளத்தில் கேட்க, அவனுக்கு என் விபூதிகளை விஸ்தாரமாகக் கூறியிருக்கிறேன்' என்றுசொல்லி அங்கு கூறியவாறு விஸ்தாரமாக இங்கு உத்தவருக்கு எடுத்துரைத்தார். (இதன் விஸ்தாரத்தை மஹாபாரத வினவிடை, இரண்டாம்பாகம், பீஷ்மபர்வம் வின 16-ல் காண்க.)

**வின 61.**—'எந்தத் தர்மத்தை எவ்விதம் அனுஷ்டித்தால் பகவத்பக்தி வரும்?' என்று கேட்ட உத்தவருக்குப் பகவான் என்ன மறுமொழி கூறினார்?

**விடை.**—'என்னுடைய வாய், புஜங்கள், தொடைகள், பாதங்கள், இவைகளிலிருந்து முறையே பிராம்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரர்கள் உண்டானார்கள். என் இடுப்பு,

ஹ்ருதயம், மார்பு, தலை முதலிய இவைகளிலிருந்து முறையே கார்ஹஸ்த்யம், பிரம்மசர்யம், வானப்ரஸ்தம், ஸந்யாஸம் இவைகள் உண்டாயின' என்றுகூறி, வர்ணு ச்ரமதர்மங்கள், குணங்கள் முதலியவைகளை விஸ்தார மாகஎடுத்துரைத்தார். (இதன் விஸ்தாரத்தை ஏழாவது ஸ்கந்தம், விஞக்கள் 21, 22-களில் பார்க்க). முடிவில் 'பிரம்மஞானம் வருமளவும், ஆசார்யனைப் பகவான் எனப்பாவித்துப் பக்திசெய்தல்வேண்டும். ஸந்யாஸி மனத்தை அடக்கி அஹிம்ஸையில் பழகவேண்டும். வானப்பிரஸ்தன் விருதங்கள், தபஸ் முதலியவைகளை அனுஷ்டிக்கவேண்டும். கிரஹஸ்தன் அன்னதானம் செய்யவேண்டும்; பிரம்மசாரி குரு சிச்ருஷை செய்ய வேண்டும். எல்லோரும் என்னை ஆராதிக்கவேண்டும். இம்மாதிரித் தனது தர்மங்களை யார் செய்துவந்த போதிலும், அவனுக்கு எளிதில் பரமபதம் ஸித்திக்கும்' என்று மறுமொழி கூறினர்.

விஞ **62**.—பகவான் பின்னர் எந்த விஷயத்தை எடுத்து பிரஸ்தாபித்தார்? அதிலிருந்து உத்தவர் என்ன கேள்வி கேட்டார்?

விடை.—'மனம் அடங்கிய ஒருவன் சுருதி யுக்தி அனுப வம் எல்லாம் என்னிடம் முடியும்படி செய்யவேண்டும். நானே பரமபதம். தேர்ந்த ஞானியே என்னை உள்ள படி அறிவான். ஞானத்தால் உண்டாகும் பரிசுத்தம் எவ்வித அப்பியாஸத்தாலும் உண்டாகாது. என்னை ஞானத்தாலேயே ஆராதனை செய். ரிஷிகள் எல்லாம் இவ்வாறுதான் என்னை அடைந்திருக்கின்றனர்' என்று பகவான்கூற, உத்தவர், 'ஞானம் நித்யா நித்யவஸ்து விவேகத்தாலும், வைராக்யத்தாலும் நிலைபெறுவது

எப்படி? பக்தியோகம் என்றால் என்ன?' என்று கேட்டார்.

**விஞ 63.**—பகவான் இந்தக் கேள்விகளுக்கு என்ன மறுமொழி சொன்னார்?

விடை.—'இதையேதான் தர்மபுத்ரர் பீஷ்மரைக்கேட்டார். வேதம், பெரியோர் வாக்கு, பிரத்யக்ஷம், அனுமானம் இவைகளால் ஒருவனுக்குப்பேதமான விஷயத்தில் வைராக்யம் வரும். காணப்படுவனவாகிய மாறுந் தன்மையை உடைய பொருள்களில் எல்லாம் ஆத்மா பரவி இருத்தலை அறிவதே நித்யாநித்ய வஸ்து விவேகம். இவைகளே என்னை உள்ளபடி அறியும் அறிவைக்கொடுக்கும். பகவத் கதையினிடம் பக்தி, அதைக் கேட்டல், பகவானை ஆராதிப்பதில் ஆசை, இது போன்ற பகவத் விஷயமாக உள்ள எல்லா விஷயங்களோடும் தன்னையும் பகவானுக்கு அற்பிதம் செய்வதே பக்தியை உண்டாக்குவது' என்று பதில் சொன்னார்.

**விஞ 64.**—இதன் பின்னர் உத்தவர் என்னென்ன கேள்விகள் கேட்டார்? அதற்குப் பகவான் என்னபதில் சொன்னார்?

விடை.—உத்தவர்:—எத்தனைவித மனோநிரோதம் உண்டு?

பகவான்—இரண்டு. அவையாவன பிரவிருத்தி நிரோதம், நிவிருத்தி நிரோதம் ஆகிய இவைகளே. திருடாமை, பொய்கூறாமை, பொருள் ஆசை இன்மை, வருத்தாமை, வெட்கம், ஒதுங்கி நிற்றல், ஸ்வதர்மாசரணம், பிரம்மசரியம், மௌனம், உபரதி, திதீக்ஷை, பயம் ஆகிய 12-ம் பிரவிருத்தி நிரோதம், சமம், தமம், அத்யயனம், ஸங்யாஸம், ஹோமம், தயை, பகவத்

ஆராதனம், க்ஷேத்ராடனம், பிறருக்கு உழைத்தல், ஆசார்ய ஆராதனே, சாஸ்திரபக்தி, திருப்தி ஆகிய 12-ம் நிவிருத்தி ஆராதனே.

உத்தவர்:—இவைகளின் நியமம் என்ன ?

பகவான்:—இவைகள் முறையே கிருஹஸ்தர்கள், ஸந்யாஸிகள் அனுஷ்டிக்க வேண்டியவை.

உத்தவர்:—சமம், தமம் என்ருல் என்ன ?

பகவான்:—சமம், மனதை என்னிடம் நிறுத்தல்; தமம் இந்திரியங்களே வெளியில் போகவொட்டாது தடுத்தல்.

உத்தவர்:—திதீக்ஷை, தைர்யம் என்ருல் என்ன ?

பகவான்:—துக்கங்களே ஸஹித்தல் திதீக்ஷை. ருசியையும் ஸ்திரீவிஷய ஆசையையும் அடக்குவதே தைர்யம்.

உத்தவர்:—ஸந்யாஸம், தனம், யஞ்ஞம், தக்ஷிணே என்ருல் என்ன ?

பகவான்:—நல்ல விஷயங்களிலும் உள்ள பற்று நீங்குவதே ஸந்யாஸம். தர்மமே தனம், நானே யஞ்ஞதேவன், என்னே உணரப் புகட்டும் ஞானமே தக்ஷிணே.

உத்தவர்:—தபஸ், பலம், வித்யை என்ருல் என்ன?

பகவான்:—ஆசையை அடக்கலே தபஸ். பிராணுயாமமே பலம். ஆத்மவிஷயத்தில் அத்வைதஞானமே வித்யை.

உத்தவர்.—வெட்கம், அழகு, ஸுகம், துக்கம் என்ருல் என்ன ?

பகவான்:—கெட்ட காரியங்களில் உள்ள வெறுப்பு தான் வெட்கம். ஒன்றிலும் தாக்கற்றிருப்பது முதலிய நற்குணங்களே அழகு. ஸுகதுக்கங்களுக்கும் அப்பாற் பட்டிருப்பதே ஸுகம். விஷயபோக இச்சை துக்கம்.

உத்தவர்:—யார் ஞானி? யார் அஞ்ஞானி? யார் ஸ்நேஹிதன்? எது வீடு?

பகவான்:—பந்த மோக்ஷங்களுக்கு வழி அறிந்தவனே ஞானி. தேகம் எனது என்று எண்ணுபவன் அஞ்ஞானி. நானேதான் ஸ்நேஹிதன். மனிதன் தேகமே அவன் வீடு.

உத்தவர்:—எது மார்க்கம்? எது அமார்க்கம்? எது ஸ்வர்க்கம்? எது நரகம்?

பகவான்:—என்னை அடையும் வழியே மார்க்கம். மனச் சஞ்சலமே அமார்க்கம். ஸத்வகுணம் மேலிடுவதே ஸ்வர்க்கம். தமோகுணம் மேலிடுவதே நரகம்.

உத்தவர்:—யார் தனவான்? யார் தரித்திரன்? யார் பஞ்சை? யார் யஜமானன்?

பகவான்:— திருப்தனே தனவான். அதிருப்தி உடையவனே ஏழை. இந்திரிய நிக்ரஹம் இல்லாதவன் பஞ்சை. விஷயப் பற்றற்ற மனம் உடையவனே யஜமானன்.

விஞ 65.—பகவான் இதன் பின்னர் எந்த விஷயத்தை எடுத்து விஸ்தரித்தார்?

விடை.—மூன்று யோகங்களை எடுத்து விஸ்தரித்தார். அவையாவன: ஞான, கர்ம, பக்தி யோகங்கள். உலக விஷயங்களில் வைராக்யம் வந்தவனுக்கு ஞானயோகமும், விஷயங்களில் பற்றுடையவர்களுக்குக் கர்ம

யோகமும், பகவத்கதை முதலியவைகளில் ஒரு பிரீதியும், விஷயங்களில் ஓர்வித வெறுப்பும், அவைகளை விடமுடியாத ஓர்வித விருப்பும் உடையவர்களுக்கே பக்தியோகமும் தக்கவை. மனுஷ்ய ஜன்மமே மிகச் சிறந்தது. இதிலிருந்துதான் பக்தியையும் ஞானத்தையும் எளிதில் அடையலாம். ஆதலால் புத்திமான் எப்படி நரகத்தை விரும்புவதில்லையோ அப்படியே ஸ்வர்க்கத்தையும் விரும்பக்கூடாது. மனது அடங்காவிட்டால் அதன்படி சற்றுவிட்டு அது விஷயங்களில் பற்றிவிடாமல் தக்க ஸாத்வீக ஸமயங்களில் அதை எளிதில் மேலான விஷயங்களில் திருப்பிப் பழக வேண்டும். இதுதான் எந்த யோகத்திலும் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம். ஞானிக்குத் தியானத்தைத்தவிர வேறு பிராயச்சித்தமே கிடையாது. மனம் அடக்கமுடியாமல் தத்தளிக்கும் பக்தன், விஷயங்களில் தெளிவான தோஷதிருஷ்டியோடு இது எப்பொழுது நிவர்த்தியாகும் என்று விஷயங்களை அனுபவித்தே தீரவேண்டும். வேறு வழியில்லை. ஸகல வித யோகங்களிலும் பக்தியோகமே மிக எளிதான யோகம். இதன்படி நடப்பவன் எளிதில் பரமபதம் அடைவான். கர்மங்களை என்னிடம் அற்பிதம் செய்வதே அவைகளை சுத்தப்படுத்துவது. பலாபேக்ஷையால் கர்மம்செய்வது மனிதர்களுக்கு அத்யந்த ஸுகத்தை உண்டாக்காது. வேதங்களின் உட்கருத்தை அறியாதவர்கள் வேதங்கள் காம்யகர்மங்களை விதிக்கின்றன என்பார்கள். பலன்கள் மனிதனைக் கர்மம்செய்யத் தூண்டுகின்றன. அதில் என் ரூபத்தைக்கண்டதும் காம்யகர்மங்கள் குறைந்துவரவேண்டி-

யதுதான். இவ்வாறு வேதத்தின் உட்கருத்தை அறியாது கர்மங்கள் செய்துவருபவர் அவைகளில் கூறிய பலன்களை அனுபவித்துவிட்டு மறுபடி உலகில் பிறக்க வேண்டியதுதான். ஆனால் வேதங்களோ பகவத் ஸ்வரூபத்தின் ஆதாரத்தால் முடிவில் எல்லாம் தோற்றமே ஒழிய வேறல்ல. பகவான் தான் உண்மைப்பொருள் என்றுகூறி எல்லாக்கர்மங்களையும் விலக்குகின்றன. அவரவர்களுக்குத் தக்கபடி முற்கூறிய யோகங்களில் பழகி வந்தால் முடிவில் வேதம்கூறிய நிலைக்கு எல்லோரும் வந்துவிடுவார்கள்.

வின 66.—' தத்துவங்களை அனேகர் 18, 26, 7, 9, 6, 4, 11, 17, 18, 13 என்று அநேக விதமாகக் கணக்கிடுகின்றனரே இதன் விவரம் என்ன ?' என்று உத்தவர் கேட்டதற்குப் பகவான் என்ன ஸமாதானம் சொன்னார் ?

விடை.— ' முற்கூறியவைகள் எல்லாம் உண்மைதான். எல்லா மாறுபாடுகளும் என் மாயையை நோக்கும் விதத்தால் ஏற்படுவன. இதை அறியாது பிரபஞ்ச விஷயத்தில் ஒரு விதம்தான் ஸரி; வேறோர் விதம் தான் தப்பிதம் என்று வீண்தர்க்கம் செய்வதில் பயனில்லை. மனோ நிரோதம், சாந்தி ஆகிய இவைகள் வந்ததும் இந்தத்தர்க்கத்திற்கே இடம் இல்லாமல் போய்விடும்' என்று கூறி தத்துவங்கள் இவ்வாறு அநேகமாகக் கூறப்படுகின்றன என்பதை விவரித்தார்.

வின 67.—'துர்மார்க்கர்கள் வையும் வசவை மஹான்கள் எவ்வாறு பெறுவர் ?' என்று உத்தவர்கேட்டதற்குப் பகவான் என்னபதில்சொன்னார்? மேல் எந்த விஷயத்தை எடுத்து விஸ்தரித்தார்?

விடை.—பகவான் இந்த விஷயத்தில் ஒருகதை சொல்லித் தெளிவு உண்டாக்கினர். 'முன் காலத்தில் அவந்தீ புரத்தில் ஓர் பணக்காரப் பிராம்மணன் இருந்தான். இவனிடத்தில் எல்லாத் துர்க்குணங்களும் குடிகொண்டிருந்ததால் இவன் உறவினரும், மற்றவரும் மனப்பூர்வமாகக் இவனிடம் ஸ்நேகம் பாராட்டவில்லை. ஒரு ஸமயத்தில் திருடர்கள், ராஜன், உறவினர் முதலியோரால் இவன் செல்வம் முழுவதும் அபகரிக்கப்பட இவனுக்கு வைராக்கியம் வந்தது. உள்ளத்துறவும் உண்டாய்விட்டது. அப்பொழுது இவன் ஊர் ஊராகப் பரதேசிபோல் பிக்ஷைஎடுத்து உண்டு காலத்தை பகவத் தியானத்தில் கழித்துவந்தான். அப்பொழுது இவனை அநேகர் வாயில் வந்தபடி எல்லாம் பழித்தனர். தான் முன் பட்டபாடுகள் எல்லாவற்றையும் எண்ணிக் கொண்டு தன் ஜனங்களது கெட்டவார்த்தைகளைக் கவனியாது தன் நிலையைவிட்டு அசையாது இவன் ஸ்திரமாக இருந்தான்' என்று சொல்லிப் பின்னர் குணத்திரயங்களின் ஸ்வரூபத்தை எடுத்து விஸ்தரித்தார். (மஹாபாரத வினவிடை, இரண்டாம்பாகம் வினு 20-ஐப் பார்க்க.)

வினு **68**.—இதன்பின்பு பகவான் எந்த விஷயத்தைப் பற்றிப் பேசினர்?

விடை.—உலகவிஷயங்களில் பற்று உள்ளவர்கள் மிகுந்த கஷ்டத்திற்கு ஆளாகிப் பின்னர் தேறுவார்கள். இதற்கு உதாரணம், இளன் என்ற ராஜனே. இவன் ஊர்வசியுடன் ஒன்றையும் கவனியாது வெகுநாள் ஸுகித்திருந்தான். பின்னர் அவளைப்பிரியும்படி நேரிட அவனுக்கு மிகுந்த கஷ்டம் உண்டாய்விட்டது. பித்துப்

பிடித்தவன்போல கொஞ்சநாள் இருந்தான். இப்படி இருக்கையில் ஊர்வசி திரும்பிவாராமலேபோக அவனுக்கு வைராக்கியம் வந்துவிட்டது. மனதைத் திடம் பண்ணிக்கொண்டு சாந்தனாகப் பின்னர் உலகில் உலாவினான்.

வின 69.—கர்மயோகம் என்றால் என்ன?' என்று உத்தவர் கேட்கப் பகவான் என்ன சொன்னார்?

விடை —'கர்மங்களுக்கு முடிவே இல்லை. அவைகளுள் என்னை ஆராதிப்பதே முக்கியமான கர்மம். என்னை விக்கிரஹம், பஞ்சபூதங்கள், ஹிருதயம் ஆகிய எவைகளில் இருப்பதாக எண்ணிச் சுத்தமனதுடன் பூஜை செய்யவேண்டும். பின்னர் எனது திவ்யமங்கள விக்ரஹத்தை, பூஜைமுடிவில் தியானம் செய்யவேண்டும். (நான்காவது ஸ்கந்தம், வின 15ஐ பார்க்க.) இதன் பின்னர் எனது பக்தர்களாகிய ஸநகாதிகள், நாரதர், கருடன் முதலியோர்களைத் தியானம் செய்யவேண்டும். வேதமந்திரங்களைக் கூடியவரையில் சொல்லவேண்டும். ஸங்கீதம் முதலியவைகளால் பஜனை செய்யவேண்டும். எனக்கு அரியவிஷயங்களை அற்பிதம் செய்யவேண்டும். அவைகளை மறுபடியும் கைப்பற்ற எண்ணக்கூடாது. பரஸ்துதி, நிந்தை முதலியவைகளை ஒருபோதும் செய்யவேகூடாது. ஏனெனில், உண்மையில் பிரபஞ்சத்தில் நன்மை என்றும் தீமை என்றும் இரண்டு இல்லவே இல்லை. எங்கும் பரம்பொருளே இருக்கின்றது. ஆதலால் முற்கூறிய ஸத்விஷயங்களைத் தவிர வேறொன்றிலும் மனம் போகக்கூடாது. இதுதான் கர்மயோகம்'என்றார்.

வின 70.—'பிரபஞ்சம் ஆத்மாவா அனாத்மாவா?' என்ற கேள்விக்கு என்ன ஸமாதானம் பகவான் சொன்னார்?

விடை.—உலகப் பற்றுடையவனுக்குத் தேகம், இந்திரியங்கள், ஆத்மா மூன்றும் சேர்ந்திருக்கும்வரை பிரபஞ்சம் உண்மை எனத்தோற்றும். உண்மையில் அவ்வாறல்ல, என்பது குரு உபதேசத்தால் உண்டாகும் ஞானத்தால் தெளிந்தவர்களுக்கு நன்முக விளங்கும். இவ்வாறு தெளிந்தவருக்கே எவ்வித சஞ்சலமும் உண்டாகாது மனதில் சாந்தமே குடிகொண்டிருக்கும்.

வி**71**.—முடிவாகப் பகவான் உத்தவருக்கு என்ன உபதேசம்செய்தார்?

விடை.—'பலத்தை இச்சிக்காமல் ஒருவன் தான் செய்யவேண்டிய அவசிய கர்மங்களைச் செய்யவேண்டும். தேகத்தைத் தனது என்று எண்ணுது என்வசம் ஒப்புவித்து விடவேண்டும். பொதுவாய் மனிதர்களுக்கு ஞானனுபவத்தால் மோக்ஷமும், கர்மத்தால் தர்மமும் யோகத்தால் காமமும், உழுது பயிர்செய்தல் முதலியவைகளால் பணமும், ஆகிய நான்கு புருஷார்த்தங்களும் இவ்வாறு உண்டாகும். உள் விஷயமாகப்பார்க்கிலோ, என் பக்தியால் இவைகள் எல்லாம் வரும். ஸகல கர்மங்களையும் விட்டுவிட்டு உன் ஆத்மா உள்பட எல்லாவற்றையும் என்னிடம் ஒப்புவித்துவிடு. உனக்கு மோக்ஷத்தில் எனக்கு ஸமானமாகும் நிலைவரும். இந்த ரஹஸ்யத்தைப் பெற்றுக்கொள்ளத் தகுந்தவர்களுக்கே நீ சொல்லவேண்டும். பேதாபேதமின்றி இதை வெளியிட்டு விடாதே!' என்று உபதேசித்தார்.

வி **72.**—இதைக் கேட்டதும் உத்தவர் என்ன செய்தார்? பகவான் உத்தவரை எவ்வாறுதேற்றி என்ன செய்யும்படி சொன்னுர்? மேல் உத்தவர் என்ன செய்தார்?

விடை.—முடிவாகப் பகவான் உபதேசித்துவிட்டதும் உத்தவருக்குப் பகவானிடம் இருந்த பக்தி அதிகரித்துவிட்டது. பகவானைத் துதிசெய்து மேல் தான் என்ன செய்யவேண்டும் என்று பகவானை உத்தவர் கேட்டார். அதற்குப் பகவான் அவரைப் பதரிகாசிரமம்போய் கங்கையில் ஸ்நாநாதிகள் செய்து காட்டில் உள்ள பழங்களைப் புஜித்துத் தேகதாரணம் செய்துகொண்டு தம்மை தியானம்செய்து முடிவில் பரமபதம் அடையும்படி ஏவினார். உத்தவருக்குப் பகவானைப் பிரிந்துபோகவேண்டுமே என்ற துக்கம் அதிகரித்துவிட்டது. மிகுந்த கஷ்டத்தின்பேரில் பகவானை விட்டுப் பிரிந்து பதரிகாசிரமத்திற்குச் சென்று பகவான் கூறியபடி காலக்கிரமத்தில் பரமபதம் அடைந்தார்.

வின 73.—உத்தவர் பதரிகாசிரமம் சென்றதும் பகவான் என்ன செய்தார்?

விடை.—முன்னமே யாதவர்களுக்குப் புத்திமதி கூறியிருந்தபடி எல்லோரையும் பிரபாஸ தீர்த்தம் போகும்படி செய்து அங்கு அவர்களை ஸத்கிருத்தியங்களில் முயலும்படி ஏவினார். யாதவர்களும் அவ்வாறே செய்து தம்மால் இயன்றமட்டும் ஜாக்கிரதையாக இருந்தனர்.

வின 74.—யாதவர் கதி என்னமாக முடிந்தது?

விடை.—பிராம்மணசாபம் பகவத்மாயை இவைகளால் தாக்கப்பட்டவர்களாயும், விநாசகாலம் ஸமீபித்தவர்களாயும் உள்ள யாதவர்களுள் குடிவெறியால் கலகம் உண்டாக ஒருவரை ஒருவர் அடித்துக்கொள்ளத் தொடங்கினர். இதைப் பகவானும் பலராமரும் தடுக்க

முயன்றனர். அவர்களை விரோதிகள் என்றெண்ணி யாதவர்கள் கூடி அடிக்கவரவே இவர்கள் ஒதுங்கிவிட்டனர். யாதவர்கள் ஸமுத்திரக்கரையிலுள்ள கோரைப் புற்களைப் பிடுங்கிக்கொண்டனர். அவைகள் அவர்கள் கையில் இரும்புபோன்ற கடின வஸ்துவாக, ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டு எல்லோரும் இறந்தனர். (இதன் விஸ்தாரத்தை மஹாபாரத வினு விடை மௌஸல பர்வத்தில் காண்க.)

வினு **75.**—ஒதுங்கிய கிருஷ்ண ராமாள் என்ன செய்தனர்?

விடை.—பலராமர் ஸமுத்ரக்கரையில் உட்கார்ந்துகொண்டு பரம்பொருளைத் தியானம் செய்துகொண்டு காலம் முடிந்ததைக்கண்டு தமது தேகத்தை நழுவவிட்டு பரமபதம் அடைந்தார். இதைக்கண்ட பகவான் தம்து காரியம் முடிந்தது என்று கண்டு ஓர் அச்வத்தமரத் தடியில் சதுர்புஜ ரூபத்தோடு மிகுந்த தேஜஸ்ஸுடன் கால்மேல் காலைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்து விட்டார்.

வினு **76.**—இந்த ஸமயத்தில் பரமபதம் போகும்படியான ஸந்தர்ப்பம் பகவானுக்கு எவ்வாறு கிடைத்தது?

விடை.—பகவான் இவ்வாறு உட்கார்ந்திருக்கையில் தூரத்தில் வந்துகொண்டிருந்த ஜரன் என்ற வேடனுக்குப் பகவான் சதுர்புஜங்கள் நான்கு கால்கள்போலவும், பகவான் சிவந்த உள்ளங்கால் முகம்போலவும் தோன்ற ஏதோ ஒரு மான்தான் இவ்வாறு படுத்திருக்கிறது என்று எண்ணி அவர் காலைநோக்கித் தனது அம்பை விட்டான். (இவன்தான் முன் ஜன்மத்தில் வாலியாக இருந்தவன். இவன்தான் இருப்புலக்கையில் தேயாத

அடிப்பாகத்தை எடுத்து தனது அம்புநுனியில் வைத்துகொண்டான். அந்த அம்பையேதான் இவன் இப்பொழுது விட்டது.) ஓடோடியும் வந்துபார்த்தான். தான் தெரியாது பகவானுக்குச்செய்த அபராதத்தை எண்ணி எண்ணிப் பரிதபித்தான். பகவான் அவனிடம் கோபித்துக்கொள்ளாது, 'அப்பா! எல்லாம் நடக்க வேண்டியபடிதான் நடந்திருக்கிறது! நீ வீணுகத்துக்கிக் காதே!' என்று தேற்றி அவனுக்குப் பரமபதம் அளித்தார்.

**விஞ 77.**—இந்த ஸமயத்தில் அங்கு யார்வர என்ன நடந்தது?

**விடை.**—பகவான் தேகத்தின் ஸுகந்தத்தால் அவர் இருக்கும் இடத்தை அறிந்துகொண்டு அவர் ஸாரதி தாருகன் அங்குவந்தான். பகவான் அவனை நோக்கி, 'நீ போய் யாதவர்கள், பலராமர் நான் எல்லோருக்கும் வந்த கதியை உக்கிரஸேனுதிகளுக்குச்சொல்லித் துவாரகையைவிட்டு அர்ஜுனனை ஸஹாயமாகக் கொண்டு போய் விடச்சொல். சிலநாளில் ஸமுத்திரம் பொங்கித் துவாரகையை முழுத்திவிடப் போகிறது. நீயும் வைராக்கியத்தை ஏற்று சாந்த நிலையை அடை!' என்றார்.

**விஞ 78.**—தாருகன் துவாரகை போய் என்ன செய்தான்? மேல் என்ன நடந்தது?

**விடை.**—தாருகன் சென்று ஸமாசாரங்களைத் தெரிவிக்க உக்கிரஸேனன், வஸுதேவர், ஸ்திரீகள் எல்லோரும் பிரபாஸம் வந்து சேர்ந்தனர். மிகுந்த துக்கத்துடன் வந்த வயது முதிர்ந்தோரும் ஸ்த்ரீகளும் அங்கேயே துக்க அதிகத்தால் இறந்தனர். அர்ஜுனன் இவர்களுக்

குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை முடித்தான். பின்னர் மிகுதி இருக்கும் சிறுவர்கள், சிறுமிகள் எல்லோரையும் கூட்டிக்கொண்டு ஸமுத்ரத்தைத் தாண்டிப் பரதகண்டம் வந்து வஜ்ரன் என்ற யாதவகுலத்தவனை ராஜா வாக்கிவிட்டு இந்திரப்பிரஸ்தம் வந்து சேர்ந்தான். இதற்குள் ஸமுத்திரம் பொங்கித் துவாரகையை மூடினபோதிலும், பகவான் அரண்மனையை மாத்திரம் மூடாது விட்டது.

வினா **79**.—இவைகள் இவ்வாறு நடப்பதற்குமுன் பகவான் பரமபதம் சென்ற வைபவம் என்ன?

விடை.—பகவான் தாருகனைத் துவாரகை அனுப்பிவிட்டுத் தனிமையாக இருக்கையில் அங்கு தேவதைகள் எல்லோரும் வந்து கூடிவிட்டனர். புஷ்பங்களை ஏராளமாக வருஷித்தனர். பகவான் இவர்களைக் கண்டதும் தமது கண்ணை மூடிக்கொண்டு மஹாபரிசுத்தமான தமது திவ்யமங்கள தேகத்துடனேயே பரமபதம் போகத் தலைப்பட்டார். பகவான் போவது தேவதைகளுக்கு மாத்திரம் தெரிந்ததே ஒழிய வேறொருவர் கண்ணுக்கும் புலப்படவில்லை. இவ்வாறு எல்லோருக்கும் பரமபதம் முன்னரே கொடுத்துவிட்டுப் பகவான் உலகைவிட்டார். பகவான் உலகைவிடும் விஷயஆராய்ச்சிக்கு, ராமாயண வினா விடை உத்தரகாண்டம் 139-ம் வினாவைப் பார்க்க.)

---

# 12-வது ஸ்கந்தம்.

யுகதர்மம், கல்கி அவதாரம், பரீக்ஷித் மரணம், மார்க்கண்டேயர் கதை.

சுகபரீக்ஷித் ஸம்வாதம்: ஸூதஸௌனக ஸம்வாதம்.

*சூதுநா னறியாவகை சுழற்றியோ ரைவரைக்காட்டி உன்னடிப்*
*போதுநா னணுகாவகை செய்துநீபோ திகண்டாய்*
*யாதும்யா வருமின்றி நின்னகம்பா லொடுக்கி யோராலினீளிலை*
*மீதுசேர் குழவிவினை யேன்வினை தீர்மருந்தே.*

**வி௵ 1.**—பகவான் வைகுண்டம்போன வைபவத்தைச் சொன்னதும் சுகப்பிரம்மம் எந்த விஷயத்தை எடுத்து விஸ்தரித்தார்?

**விடை.**—கலியுகத்தில் அரசாளப் போகிற ராஜவம்சங்களை விஸ்தாரமாக வரிசைக் கிரமமாக எடுத்துரைத்தார். இதில் நவநந்தாள், மௌர்ய வம்சத்தில் பிறக்கும் சந்திரகுப்தன், அசோகன் முதலியபேர்களும் காணப் படுகின்றனர். பின்னர் கலியுக தர்மத்தை விஸ்தாரமாக எடுத்துரைத்தார்.

**வி௵ 2.**—கலியுக தர்மத்தின் விவரம் என்ன?

**விடை.**—கலியுகத்தில் வர்ணாசிரமதர்மங்கள் குறைந்து விடும். அவைகளுக்கு உரிய வேஷங்கள் மாத்திரம் தான் நிற்கும். பலவானே நியாயவாதி தர்மிஷ்டன் என்று மதிக்கப்படுவான். தனவானே உயர்ந்த குடிப்

பிறந்தவனாக மதிக்கப்படுவான். ஸ்திரீ புருஷர்கள் தாமே தமது கல்யாணங்களைத் தீர்மானம்செய்து நடத்திக் கொள்ளுவார்கள். மோசம் செய்வதே வியாபாரம் என்று மதிக்கப்படும். ஏழைக்கு ஒரு நாளும் நியாயம் கிடைக்காது. அதிகமாகப் பேசுபவனே படித்தவன் என்றும், உண்மை கூறுபவனென்றும் மதிக்கப்படுவான். தூரத்திலிருக்கும் கோயில் குளங்கள் மாத்திரமே சிறந்தவை என்று மதிக்கப்படும். தேகத்தை அலங்காரம் செய்து கொள்ளுதல், விசித்திரமாகத் தலைமயிரை வெட்டிக்கொள்ளுதல், அதிகமாகச் சாப்பிடுதல் ஆகிய இவைகளே புருஷார்த்தங்கள் என்று மதிக்கப்படும். ஸ்நேஹிதர்களுக்கும் உறவினர்களுக்கு மாத்திரமே ஸமாராதனைகள் நடத்தப்படும். கீர்த்தி வரவேண்டும் என்ற தர்மம் அனுஷ்டிக்கப்படும். ஜனங்களுள் பலவானே ராஜ்யபதவிக்கு வந்துவிடுவான். ஜனங்களுக்கு வரி, மழையின்மை, பஞ்சம் முதலியவைகளால் பொதுவாகக் கஷ்டமே உண்டாகும். பஞ்சபூத பாதைகள், அகச்சண்டைகள் முதலியன அதிகரிக்கும். மனிதர்கள் மனது நிலைத்து நிற்காது. ஸதா சஞ்சலம் உடையதாக இருக்கும். புருஷ ஆயுஸ் 50 வருஷம் இருக்கும். ஜனங்கள் செய்யும் திருட்டு முதலிய அக்கிரமத்தால் அவர்களுக்குப் பலக்குறைவு உண்டாக, அதனால் இந்த ஆயுஸும் குறைந்துவிடும். பிராணி ஹிம்ஸையே தர்மம் என்று மதிக்கப்படும். ரிஷி ஆசிரமங்கள் கிரஹஸ்தர்கள் வீடுகள் போல ஆகிவிடும். பெண்சாதி வகையிலுள்ள உறவினரையே ஒருவன் நெருங்கின உறவினராக மதிப்பான். மருந்துகளுக்கு வீரியம் குறைந்துபோய்விடும். மரங்கள் உயரம்

குறைந்துபோகும். மின்னல், இடி அடிக்கடி உண்டாகும். கலியுகத்தில் ஜனங்கள் பொதுவாகக் கழுதைகள் போலாவார்கள்.

**வி 3.**—இந்தஸமயத்தில் இவர்களைச் சீர்திருத்த என்ன நடக்கும்?

**விடை.**—இந்த ஸமயத்தில்தான் பகவான் சம்பலம் என்னும் கிராமத்தில் **விஷ்ணுயசஸ்** என்ற பிராம்மணனுக்குப் பிள்ளையாகப்பிறந்து கல்கி அவதாரம் எடுப்பார். இவர் தேவதைகளால் கொடுக்கப்பட்ட குதிரையின்மேல் ஏறிக்கொண்டு தர்மம்தவறி நடந்துகொண்டு பூமிக்குப் பாரமாக இருப்பவர்களைக் கொன்று தள்ளிவிட்டு வருவார். இந்த ஸமயத்தில் மனிதர்கள் மனம் சுத்தப்படும். கல்கி அவதாரம் ஆனதும் ஸத்யயுகம் அதாவது கிருதயுகம் தொடங்கிவிடும். இந்தக்கலியுகத்திலும் சந்தனு தம்பி தேவாபி ரிஷியும், இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த **மரு** என்ற ரிஷியும் கலாபம் என்ற கிராமத்தில் தவம் செய்துகொண்டிருந்து வர்ணாசிரம தர்மங்களை மெதுவாக வெளிக்குக் கொண்டுவருவார்கள்.

**வி 4.**—இதன் பிறகு சுகப்பிரம்மம் எதை எவ்வாறு விஸ்தரித்தார்?

**விடை.**—பரீக்ஷித்து யுகதர்மங்களை விஸ்தாரமாக உணர வேண்டும் என்று சொல்ல, சுகப்பிரம்மம் அவைகளை எடுத்து விஸ்தரிக்கத் தொடங்கினார்.

**கிருத அல்லது ஸத்யயுக தர்மம்:**—இந்த யுகத்தில் ஜனங்கள் எல்லோரும், தயை, தபஸ், கொடை முதலிய நற்குணங்களைப் பின்பற்றுவார்கள். அவர்களுக்குச் சாந்தி, திருப்தி, ஸாத்மீகம், சமம், தமம், உபாதி

தீக்ஷை முதலிய குணங்கள் இருக்கும். எல்லாவற்றை யும் ஸமமாகப் பார்ப்பார்கள். பகவத்தியானத்தால் இந்த யுகத்தில் ஜனங்களுக்கு முக்திவரும். இந்த யுகத் தில் ஸத்யமே முக்கியமாக இருக்கும்.

திரேதாயுக தர்மம்:—இந்த யுகத்தில், தர்மம் நான்கில் ஒருபங்கு குறைந்துவிடும். ஜனங்களுக்குப் பொறுமை, சண்டையிடுதல், பொய் சொல்லுவது ஆகிய துர்க் குணங்கள் வந்துவிடும். ஆனால் அவர்களுக்குத் தபஸ் முதலிய மூன்று தர்மங்களிலும் சிரத்தை இருக்கும். இந்த யுகத்தில் கெட்டவர்கள் அதிகமாக இருக்க மாட்டார்கள். வேதசாஸ்திர ஞானம் பிராம்மணர் களுள் அதிகமாக இருக்கும்: இந்த யுகத்தில் ஜனங்கள் யாகம், பகவத் ஆராதனம் முதலியவைகளால் முக்தி யை அடைவார்கள். இதில் ராஜஸமே முக்கிய குண மாக இருக்கும்.

துவாபரயுக தர்மம்:—இந்த யுகத்தில் தர்மம் பாதி குறைந்துவிடும்.இந்தக்காலத்தில் க்ஷத்ரியர்கள் அதிகம். இவர்கள் வேதசாஸ்திரங்களில் தேர்ச்சி அடைந்து கொண்டு நல்நடத்தை உடையவர்களாக ஸந்யாஸ தர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு கிரஹஸ்தர்களாக வே இருப்பார்கள். இந்த யுகத்தில் பகவத் கைங்கரி யத்தால் ஜனங்கள் முக்தி அடைவார்கள். ராஜஸ் தாமஸ குணங்களே இந்த யுகத்தில் முக்கியம்.

கலியுக தர்மம்:—தர்மம் கால்பங்குதான் மிஞ்சி நிற் கும். இதுவும், கலி முற்ற முற்ற மறைந்துபோகும். ஜனங்களுக்கு மனோபலம் குறைந்துவிடும். தாமஸ குணமே இந்த யுகத்தில் முக்கியம். தாழ்ந்தவைகளையே ஜனங்கள் சிறந்தவை என்று எண்ணுவார்கள். அவர்

களுக்குக் கஷ்டங்களே வந்துகொண்டிருக்கும். அதிக சாப்பாடு இந்த யுகத்தில் உண்டு. எல்லாவிஷயங்களிலும் அதிகமாகப்போய் ஜனங்கள் ஏழையாகி விடுவார்கள். ஸ்திரீகளிடம் பொதுவாகப் பாதிவிருத்யம் இராது. அதிகமாக இவர்கள் சாப்பிடுவார்கள். குழந்தைகள் அதிகமாகப் பிறக்கும். பெண்களிடம் அப்பிரிய வார்த்தை, திருட்டுத்தனம், வெட்கமின்மை, அதிக தைர்யம் இவைகளே குடிகொண்டிருக்கும். இவர்களே கணவர்களை அடக்கியாளுவார்கள். பிராம்மணர், க்ஷத்ரியர், வைசியர் முதலியோர் தம் ஸுகத்தையே அதிகமாகக் கவனிப்பார்கள். பக்தர்கள் நிலைத்து ஓர் இடத்தில் வாஸம் பண்ணத்தொடங்கி விடுவார்கள். ஸந்யாஸிகளுக்கு ஆசை அதிகமாகிவிடும். ஜனங்கள் கஷ்டகாலம் இல்லாமலிருக்கும்போது கூடத் தமது தர்மத்தை விட்டுத்தாழ்ந்த தர்மத்தை அனுஷ்டிப்பார்கள். யஜமானன், வேலைக்காரன், குரு, சிஷ்யன் இவர்களுள் உள்ள ஸம்பந்தம் தோற்றமாத்திரமாக இருக்கும். சூத்ரர்களே இக்காலத்தில் பக்தர்கள், ஸந்யாஸிகள், வேஷங்களைப் போடுவார்கள். தீர்க்க ஞானமில்லாதவர்களே மதவிஷய உபந்யாஸங்களுக்குப் புறப்படுவார்கள். நல்லொழுக்கம் முற்றிலும் போய்விடும். பணம் ஆள்கொல்லியாக ஏற்படும். ஞானப்பேச்சு, சாப்பாட்டு ஆசை, ஸ்திரீவிஷய ஆசை இதுவே இந்த யுகத்தில் அதிகம். மற்றைக் கடமைகளை ஜனங்கள் சரிவர நடத்த மாட்டார்கள். இவ்வளவு கஷ்ட நிலைக்கு ஜனங்கள் வந்தபோதிலும், மன உருக்கத்துடன் இந்த யுகத்தில் பகவந்நாமங்களை யார் ஸங்கீர்த்தனம் செய்கிருனே, அவன் மனம் மாறி எளிதில் முக்தி அடைவான்.

**வி** **5.**—இதன் பின்பு கால அளவைகளைப்பற்றிக் கேட்ட பரீக்ஷித்திற்குச் சுகப்பிரம்மம் என்ன மறுமொழி கூறினர்?

விடை.—யுகம் முதலிய கால அளவைகளின் விஸ்தாரத்தை முன் 3-வது ஸ்கந்தத்தில் கூறியபடி சுருக்கமாக எடுத்துரைத்தார். இதன் முடிவான பிரளயம் நான்குவிதம். அவையாவன: தினப்பிரளயம், காரணப் பிரளயம், பிராகிருதப் பிரளயம், அத்யந்தப் பிரளயம் ஆகிய இவைகளே. நாம் தினம் தூங்குங்கால் உலகத் தோற்றமே இல்லாமல் போவதற்குத் தினப்பிரளயம் என்று பெயர். 1000 சதுர்யுகங்களுக்கு ஒரு கல்பம் என்று பெயர். இவை பிரம்மாவுக்கு ஒரு பகல். அடுத்த 1000 சதுர்யுகம் பிரம்மாவின் இரவு. இந்த இரவில் மூன்று லோகங்களும் அடங்கிவிடும். இதற்குக் காரணப் பிரளயம் என்று பெயர். இதன்பின் பிரம்மாவின் ஆயுஸ் முடிந்ததும் (1000 பிரம்ம வருஷத்திற்குப் பின்னர்) பஞ்சபூதங்கள், மனஸ், அஹங்காரம் ஆகிய இவைகளும் அழிந்துவிடும். இதற்குப் பிராகிருதப் பிரளயம் என்று பெயர். இந்தப் பிரளயங்களின் பின் மறுபடி ஸ்ருஷ்டி உண்டு. ஒருவன் அஞ்ஞானம் நீங்கினல் பிரம்ம ஸாக்ஷாத்காரம் அடைவான். வைராக்யம் முதலியவைகளால் இவன் மனதில் இருந்த அஞ்ஞானம்நீங்கும். இவ்வாறு நீங்கினதும் ஏற்படும் பிரளயத்திற்கே அத்யந்தப் பிரளயம் என்று பெயர். இதில் பகவானே சேஷித்து நிற்பது. இது வந்துவிட்டால் மறுபடி ஸ்ருஷ்டியே இல்லை. முன் கூறப்பட்ட பிரளயங்கள் எல்லாம் அஞ்ஞான ஸம்பந்தப்பட்டவை. பின்னது அஞ்ஞானஸம்பந்தம் அற்றது.

வினா 6.—சுகப்பிரம்மம் எதைப்பற்றிக் கூறத் தொடங்கினார்? பின்னர் என்ன நடந்தது?

விடை.—இதன் பின்பு, சுகப்பிரம்மம் மரணத்தை மனங் கலங்காது ஏற்றுகொள்ள அவசியம் செய்ய வேண்டிய பகவத்தியானத்தைப் பின்வருமாறு எடுத்து விஸ்தரித்தார்: "முடிவாக பகவானது உண்மைரூபத்தை எடுத்துக் கூறுகிறேன். பகவான் எங்கும் பரவியிருக்கும் நித்யவஸ்து. மரணம் என்பது உண்மையானதல்ல. தேஹம் என்றைக்கும் நிலையாதது. ஒருவன் உயிரோடிருக்கும்பொழுது அவன் தேஹம் ஸதா மாறிக்கொண்டே இருக்கிறது. ஆத்மாவோ அழிவற்றது. இதை அறிந்து இதன்படி நடப்பவன் மரணம் அடைந்த போதிலும், எவ்வாறு உடைபட்ட பாத்திரத்தின் அகத்திலிருப்பது போலத் தோற்றிய வெளி புறத்திலிருக்கும் வெளியோடு கலக்கிறதோ, அதுபோல பரம்பொருளோடு கலப்பான். ஆகவே மரணம் ஆத்மாவை அணுகாது. தேஹமோ என்றும் அழியக் கூடியது. ஆதலால் மாறுதன்மையை உடைய வஸ்துக்களில் மனதைச் செல்லவிடாது உன் ஆத்மாவைத் தியானம் செய்து எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளை அடை. தக்ஷகன் வந்து கடித்தபோதிலும் உன்னைக் கொல்ல முடியாது. ஏனெனில் மரணத்திற்கு அப்பாற்பட்டவனாய்விடுகிறாய். ஆதலால் 'ஹம்ஸ ஸோஹம்' நானே அவன் (பிரம்மம்), அவனே நான்' என்ற தியானத்திலிருந்து உன் ஆத்மாவை பரமாத்மாவுடன் சேர்த்துவிடு. எதுவும் உன்னைவிட்டு வேறில்லை என்ற பாவம் வந்துவிடும். இதுதான் உயிரிருக்குங்கால் சாகவும், சேத்தபின் உயிருடன் இருக்கவும் தகுந்த வழி"

என்று கூறிய பின்னர், பரீக்ஷித்து தான் அவ்வாறிருந்து மரணத்தை ஜயிக்கும்படி அநுக்ரஹிக்கவேண்டும் என்று மஹாவிநயத்துடன் கேட்டுக்கொண்டான். உடனே சுகப்பிரம்மம் தியானம் செய்து கரையேறும்படி உத்தரவு கொடுத்துவிட்டு, ரிஷிகளுடன் புறப்பட்டுத் தம் இஷ்டப்படி ஸஞ்சாரம் செய்யத்தொடங்கினர்.

**வி 7.**—பரீக்ஷித்துப் பின்னர் என்ன செய்தான்? மேல் என்ன நடந்தது?

**விடை.**—சுகப்பிரம்மம் கூறியவாறு பரீக்ஷித்து ராஜன் தியானம் செய்யத் தொடங்கினன். மனம், பரம்பொருளில் லயிக்க, ராஜனுக்குத் தேகஞாபகமே இல்லை. இப்படி இருக்கையில் ரிஷி பிள்ளை சாபப்படி தக்ஷகன் வந்து அரசனைத் தீண்ட அரசன் ஆத்மா பிரமத்தோடு கலந்தது. அவன் தேகம் பாம்பின் விஷத்தால் பஸ்மமாயிற்று.

**வி 8.**—தக்ஷகன் எவ்வாறு வந்து தீண்டினன்? வரும் வழியில் என்ன அற்புதம் நடந்தது?

**விடை.**—தக்ஷகன் பிராம்மணன் உருக்கொண்டு ராஜன் அருகாமை வரையில் வந்து திடீரென்று பாம்பாகி அவனைக் கடித்துக்கொன்றான். தக்ஷகன் பிராம்மண உருவத்தோடு அரசனைக் கடிக்க வந்துகொண்டிருக்கையில் வழியில் காசியபன் என்ற பிராம்மணன் வெகு அவஸரமாகப் போவதைக் கண்டான். அவனிடம் இருந்து தன்னால் கடிக்கப்படும் பரீக்ஷித்தைப் பிழைப்பு மூட்டப் போவதாகத் தெரிந்துகொண்டு, தக்ஷகன் 'அரசன், ரிஷி சாபப்படி இறக்கவேண்டியவன். மேலும்

தக்ஷகன் மிகக் கொடிய விஷமுடைய பாம்பு. உம்மால் விஷத்தை இரக்க முடியுமோ முடியாதோ, ஏன் வீணாக அவமானப்படவேண்டும். இப்படியே திரும்பிப் போம்' என்றான். அதற்குப் பிராம்மணன், 'நான் ஏழை. அரசனைப்பிழைப்பித்தால் தனவானாகிக் கஷ்டம் நீங்குவேன். எப்படிபட்ட கொடிய விஷமாகிலும் இரக்கும் திறன் எனக்கு உண்டு' என்றான். அப்பொழுது தக்ஷகன் தனது நிஜரூபத்தைக் காட்டி அருகாமையிலிருந்த ஓர் ஆலமரத்தைக் கடித்துப் பஸ்மமாக்கிக் காசியபரை நோக்கி, 'உமக்குத் திறனுண்டானால் இந்த மரத்தைத் தழைத்தோங்கும்படி செய்யும்' என்றான். காசியபர் கையிலிருந்த ஜலத்தை பஸ்மத்தின்மேல் மந்திர பூர்வமாகப் பிரோக்ஷணம் செய்ய, மரம் முன் போலத் தழைத்தோங்கியது! உடனே தக்ஷகன் தனது நாகரத்நத்தைக் கக்கிப் பிராம்மணனுக்குக் கொடுத்துவிட்டு 'உமது தேர்ச்சிக்காக இதோ பரிசளித்தேன். நீர் அரசனிடம் உமது திறத்தைக் காட்டமுடியாது. உமக்கு விரோதமாக பிராம்மணசாபம் அடைவீர். ஆகையால் கௌரவமாக இப்படியே திரும்பிவிடும்' என்றான். பிராம்மணன் அவ்வாறே செய்ய, தக்ஷகன் தன் காரியத்திற்குப் புறப்பட்டான்.

விஞ 9.—பரீக்ஷித்து இறந்தபின் என்ன நடந்தது?

விடை.—பரீக்ஷித்தின் பிள்ளையாகிய ஜனமேஜயன் பாம்புகளின்மேல் வீண்கோபங்கொண்டுஸர்ப்பயாகம் செய்து அவைகளை அழித்துவந்தான். தன் விரோதியாகிய தக்ஷகனை அழிக்க முடியாமற்போக யாகம் தடைபட்டு நின்றது. (மஹாபாரத விஞ விடை, முதல்பாகம் பீடிகை விஞ 5-10-களைப் பார்க்க.)

வி௫ 10.—இவ்வாறு பாகவதம் முடிந்ததும் ஸூதபுராணிகர் ஶௌனகாதிகளுக்கு என்ன விஷயங்களை எடுத்துரைத்தார்?

விடை.—வேதம் பிரம்மாவினிடமிருந்து வந்த விதம். ஓம் என்ற அக்ஷரத்தின் உட்பொருள், வேதவ்யாஸர் வேதங்களைப் பிரித்தவிதம், புராணங்களின் எண்ணிக்கை லக்ஷணங்கள் முதலியவைகளை எடுத்துக்கூறி மார்க்கண்டேயர் திவ்ய கதையை எடுத்துரைத்தார்.

வி௫ 11.—மார்க்கண்டேயர் கதை என்ன?

விடை.—பிருகு வம்சத்தில் பிறந்த மிருகண்டு ரிஷியின் பிள்ளை மார்க்கண்டேயர். இவர் இளமையிலேயே மிகப் பாண்டித்யம் அடைந்து ரிஷியாகிப் பரம்பொருளை (நாராயணரை) தியானம்செய்து மரணபயத்திலிருந்து நீங்கினார். இவர் செய்துவந்த தபஸைக் கலைக்க, இந்திரன் தனது பரிவாரங்களை அனுப்ப அவர்களால் ஒன்றும் முடியாமல் போனதும் அல்லாமல், முடிவில் அவர்கள் மார்க்கண்டேயரது தபாக்னியால் இறக்கவேண்டியும் வந்தது. அப்பொழுது பகவான் பிரத்யக்ஷமாகி 'என்ன வரம் வேண்டும்?' என்று கேட்டார். மார்க்கண்டேயர் பகவானைத் துதிசெய்து, 'எனக்குவேணடியது ஒன்றும் இல்லை. ஆனால் உமது மாயையை உள்ளபடி உணர வேண்டும். இதுதான் நான் அபேக்ஷிப்பது' என்றார். 'அப்படியே ஆகட்டும்' என்று பகவான் மறைந்தார்.

வி௫ 12.—மார்க்கண்டேயர் பகவான் மாயையை எவ்வாறு தரிசித்துத் தெளிந்தார்?

விடை.—மிகுந்த பக்திமானான மார்க்கண்டேயர் ஒருநாள் புஷ்பத்திரா நதிக்கரையில் அனுஷ்டானம்செய்து

ஜபம் செய்துகொண்டிருக்கையில் ஒருபெரிய புசல் காற்று அடிக்கத் தொடங்கியது. ஆகாயத்தில் மேகங்கள் வந்து கவிந்துகொண்டு மழை பெய்யத் தொடங்கக் கொஞ்சநாழிகையில் ஸமுத்திரங்கள் கரை புரண்டோடிவந்து உலகத்தை முழுத்திவிட்டன. இந்தப் பிரளயத்தில் முழுகித் தத்தளித்து மார்க்கண்டேயர் மாத்திரம் நீந்திக்கொண்டு இன்ன வழிபோகிறதென்றறியாது போய்க்கொண்டிருந்தார். இவருக்கு மிகுந்த சிரமம் உண்டாக அநேகவிதக் கஷ்டங்களுக்கு ஆளானார்.

வினா **13.**—இந்தக் கஷ்டத்தின் மத்தியில் மார்க்கண்டேயர் என்ன அற்புதத்தைக் கண்டார்?

விடை.—மார்க்கண்டேயர் இவ்வாறு நீந்திவருங்கால், ஸமுத்திரத்தில் மூழ்கிக்கிடக்கும் ஓர் ஆலமரத்தைக் கண்டார். அதன் உச்சியில் உள்ள ஓர் இலை மாத்திரம் தண்ணீரின்மேல் மிதந்து கொண்டிருந்தது. அதில் ஓர் சிறு குழந்தை படுத்திருந்ததை அவர் கண்டார். அது திவ்ய தேஜோமயமாக விருந்தது. ஸகல லக்ஷணங்களும் வாய்ந்திருந்தது. அது புன்னகை செய்துகொண்டிருந்தது. வெகு ஸாவதானமாக அது தன் கால்கட்டை விரலைச் சப்பிக்கொண்டிருந்தது. பார்த்தார் மார்க்கண்டேயர்! ஆனந்த பரவசமானார். அதனிடமிருந்து விஷயங்களை உணரவேண்டும் என்று அதனிடம் சென்றார்.

வினா **14**—இந்த எண்ணத்துடன் சென்றவர் மேல் என்ன செய்தார்? மேல் என்ன நடந்தது?

விடை.—இந்த எண்ணத்துடன் அருகே சென்றபோதிலும், மார்க்கண்டேயர் ஓர் கொசு உருக்கொண்டு குழந்தையின் மூக்கின்வழியாக வயிற்றுள் நுழைந்தார். அண்ட பிண்ட சராசரங்கள் அனைத்தையும் அங்கு கண்டார்! மிகுந்த பாவசமானார்! இப்படி இருக்கையில், திடீரென்று குழந்தை வெளிமூச்சால் மார்க்கண்டேயர் வெளியே வரும்படி நேர்ந்தது. வடபத்திரசாயியாகிய பகவானைக் கண்டார். பக்தி பரவசராகி அவரை கட்டிக்கொள்ளச் சென்றார். உடனே பகவான் உள்பட ஸகலத் தோற்றங்களும் மறைந்தன. மார்க்கண்டேயர் தாம் புஷ்பத்திரா நதிக்கரையில் உட்கார்ந்திருப்பதை உணர்ந்தார். இவ்வாறு பகவான் மாயாதரிசனம் மார்க்கண்டேயருக்கு ஆயிற்று.

வின 15.— இப்படி இருக்கையில் மார்க்கண்டேயருக்கு என்னசிறப்பு ஏற்பட்டது?

விடை.—மார்க்கண்டேயர் தமது ஆசிரமத்தில் பகவத்நிஷ்டையில் இருக்கையில் பரமசிவன் அவருக்குத் தரிசனம்கொடுத்து 'என்றும் மாறாப் புகழுடையவனாக இருக்கக்கடவது' என்று அனுக்கிரஹித்து மறைந்தார்.*

---

* இங்கு நாராயணரது கிருபையால் மார்க்கண்டேயருக்கு யமபாதை நீங்கியதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஸாதாரணமாக பரமசிவன் அருளால் யமபாதை நீங்கியது என்பது எல்லோரும் அறிந்தவிஷயமே. மார்க்கண்டேயரே நாராயணருக்கும் பரமசிவத்திற்கும் பேதம் இருப்பதாகக் கூறவில்லை. ஆகவே இவைகளை உற்றுநோக்கில் நாராயண மூர்த்திக்கும் பரமசிவத்திற்கும் பேதமே இல்லை என்பது தெரியவரும்.

வின 16.—இதன் பின்னர் ஸூதர் எவ்வாறு இந்தத் திவ்ய கதையை முடித்தார் ?

விடை.—தந்திரமார்க்க ஆராதனுக்கிரமம், விஷ்ணுவின் விச்வரூபவர்ணனே, பகவான் ஸூர்யன் ரூபமாக இருந்துகொண்டு உலகை செழிப்பாக்குவது, பாகவத ஸாரம், வைதிக தர்மஸாரம், புராணச்லோகங்களின் எண்ணிக்கை இவைகளை எடுத்து விஸ்தரித்து, ஸூதர் இந்தப் பாரஹம்ஸ ஸம்ஹிதையாகிய ஸ்ரீமத் பாகவதத்தை முடித்தார்.

ஓம்.

---

# அனுபந்தம் 1.

## 1. மகாப்பிரளயம்.

விசித்ரமான தோற்றத்தோடு கூடிய இப்பிரபஞ்சத்தை நோக்குபவர் ஒவ்வொருவரும் 'இது எவ்வாறு? எதிலிருந்துண்டாயிற்று?' என்ற கேள்வியைக் கேட்காமலிருக்கிறதில்லை. இந்தக் கேள்விக்கு எல்லோரும் தங்களுக் கேற்றபடி விடை கொடுக்கவும் முயலுகிறார்கள். இந்தச் சேதனு சேதன ரூபமான பிரபஞ்சம் எப்படி உண்டாயிற்று? இது ஸர்வ வல்லமையுள்ள கடவுள் என்ற ஒரு வஸ்துவால் சிருஷ்டிக்கப்பட்டதா? அல்லது இதிலடங்கிய அணுக்களின் ஸ்வபாவத்தால் உண்டானதா? முன் சொன்னபடி உண்டாக்கப்படுகிறதானால், கடவுள் இந்தப்பிரபஞ்சத்தைச் சூனியத்திலிருந்துண்டாக்கிறாரா? அல்லது அசித்தாகிய பிரபஞ்சம் முதலில் குழப்பத்தோடு உருவில்லாமல் கிடக்க, அதை அவர் ஒழுங்குபடுத்தி உருவோடு தோன்றும்படி செய்தாரா? பின் சொல்லியபடி பிரபஞ்ச முண்டாகின்றதானால், இது உண்டாகும்படி செய்யும் அணுக்களின் ஸ்வபாவமும், ஸ்வரூபமும் என்ன? அவைகள் எப்படி உண்டாயின? அவைகள் இல்லாமலிருந்த காலமும் உண்டா? அல்லது அவைகள் எக்காலத்திலும் இருப்பவைகளா? கடவுள் ஒருவர் உண்டானால் அவர் எப்பொழுதாவது உண்டானவரா? அவருக்கு அந்தமுண்டா? தேகந்தோறும் வெவ்வேறாய்த் தோன்றும்

ஜீவாத்மாவின் ஸ்வரூபம் என்ன? என இவைபோன்ற அளவிறந்த கேள்விகள் நமது மனதில் அடிக்கடி உதிக்கின்றன. இவைகளை எல்லாம் இங்கு எழுதப் புகுந்தால் விஷயம் மிகவும் விரியும். ஆகையால் யுக்திக்கும் அநுபவத்திற்கும், புதிய பிரகிருதி சாஸ்திரங்களுக்கும் ஒத்தனவாயும், நமது சாஸ்திரங்களில் தொன்றுதொட்டு உள்ளனவாயும், சரியானவையாயும் உள்ள பிரபஞ்ச உற்பத்தி, சிருஷ்டிக்கிரமம் இவ்விஷயங்களைப்பற்றி இங்கு தொகுத்துக் கூறுவோம். அந்தச்சிருஷ்டி விஷயத்தைப்பற்றி நன்றாய் அறிந்து கொண்டால் நமது ஜீவதசையில் நேரிடும் கஷ்டமான நிலைகளிலும், மதவிஷயங்களில் வரும் இது போன்ற நிலைகளிலும், உள்ளபடி அறிந்து நேர்வழியில் நடக்கவேண்டிய ஞானம் நமக்கு உண்டாகும்.

சிருஷ்டிக்கிரமத்தைத் தெரிந்துகொள்வதற்குமுன், மூன்று புதிய சொற்களின் பொருளை நன்றாய்த் தெரிந்து கொள்ளவேண்டும். இது நன்றாய் விளங்குவதற்கு ஒரு செடியின் திருஷ்டாந்தத்தை எடுத்துக்கொள்ளுவோம். அந்தச்செடி நன்றாய் வளர்ந்து செழிப்பதற்கு அதன் அணுக்கள் எல்லாம் ஒற்றுமையாய் வேலைசெய்தல் வேண்டும். சிறந்த குடும்பங்கள் ஒழுங்காய்நடத்தப்படும்பொழுது இதுபோலவே அதிலடங்கிய ஒவ்வொருவரும் ஒற்றுமையோடு உழைத்தல் வேண்டும். இம்மாதிரியான ஒற்றுமையாலேதான் குடும்பங்கள் எல்லாம் சீக்கிரத்தில் நல்ல நிலைக்குவரும், இதுபோலவே செடிவளர்ந்து தழைப்பதற்கும் அதன் அணுக்கள் தம்முள் ஒற்றுமையாக இருக்கவேண்டியது அவசியம். இதுபோலவே ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிர் வரையில் எல்லா உயிர்களையும் உற்று நோக்குங்கால் மூன்று விஷயங்கள் வெளியாகின்றன. அவ்விஷயங்கள் பின் வருபவைகளே: (1) ஒற்றுமை (அல்

லது தெளிவு) என்பது வஸ்துக்கள் செழித்து வாழ்வதற்குச் சகாயமானதாயும், (2) பொருத்தமின்மை (அல்லது மோஹம்) என்பது வஸ்துக்களை நாசம் செய்வதற்குச் சகாயமானதாயும், (3) பிரவிருத்தி (அல்லது மாறுதல்) என்பது முன் சொன்ன நிலைகள் இரண்டும் இருப்பதற்குக் காரணமாயும் இருக்கின்றன. உலகத்தில் காணப்படும் ஸகல விஷயங்களிலும் இம்மூன்று நிலைகளையும் எப்பொழுதும் காணலாம். ஆனால் ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொன்று மேலாகி நிற்கும். செடிகள் பட்டுப்போகும் காலத்தில் அதில் அடங்கி இருக்கும் வஸ்துக்களே முழுவதும் நாசமடைவதால் அப்பொழுது பொருத்தமின்மை அல்லது மோஹம் என்ற நிலை ஓங்கி நிற்கிறது. ஒருவனுக்குச் சுகம் உண்டாவதற்கு அவன் தேகத்தின் பாகங்கள் எல்லாம் ஒற்றுமையாய் வேலைசெய்ய வேண்டும். ஒற்றுமையின்றி வேலைசெய்யுமாயின் வியாதி, பலக்குறைவு முதலிய துக்கங்கள் உண்டாகும். ஆகவே ஒற்றுமைக்குச் சுகம் என்றபெயரும், மோஹம் என்பதற்குத் துக்கம் என்ற பெயரும் பொருந்தும். இவ்விரண்டு நிலைகளும் பிரவிருத்தி அல்லது மாறுதல் என்ற நிலையின் தொழிலாலன்றி உண்டாவதற்கு இடமில்லை. முன்சொன்ன செடியின் விஷயத்தில், முளைக்குங்கால் பிரவிருத்தி என்பது ஓங்கியும் மற்றிரண்டு அடங்கியும் இருக்கின்றன. முளைவிட்டுச் செழிப்பதில் ஒற்றுமையும், நாளுக்கு நாள் சீக்கிரம் விருத்தியாவதில் பிரவிருத்தியும், பழைய விதையுடைந்து நாசமாவதில் மோஹமும் வெளிப்படும். இதுபோல் நல்ல செடியாய்ச் செழித்து வளர்ந்துகொண்டிருக்கும்பொழுது ஒற்றுமை ஓங்கியும், மற்றிரண்டு ஒடுங்கியும் இருக்கின்றன. இந்தச்செடி யழியுங் காலத்தில் மோஹம் ஓங்கியும் மற்றிரண்டும் ஒடுங்கி இருக்கின்றன: இம்மூன்றிற்கும் நமது சாஸ்திரங்களில் குணங்கள்

என்றும், ஒற்றுமை, மாறுதல், பொருத்தமின்மை என்பவைகளுக்கு முறையே ஸத்வ, ரஜஸ், தமோ, குணங்கள் என்றும், பெயரிட்டு, அவைகளை முறையே வெளுப்பு, சிவப்பு, கறுப்பு என்ற வர்ணங்களாகவும் உருவகப்படுத்தி இருக்கிறார்கள். உயிர்ப்பிராணிகளை உற்று நோக்குங்கால் இக் குணங்கள் முறையே சுத்தம் அல்லது தெளிவு என்ற நிலையாகவும், சுறுசுறுப்பு என்ற நிலையாகவும், மந்தமல்லது சோம்பல் என்ற நிலையாகவும் காணப்படும். ஆகவே உலகத்தில் ஸ்தாவரஜங்கம ரூபமாகிய ஸகல விஷயங்களிலும் இம்முக்குணங்களும் எப்பொழுதும் காணப்படுகின்றன. ஆனால் ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொன்று ஓங்கியும் மற்றிரண்டு அடங்கியும் இருக்கும். இதற்கேற்பவே கைவல்ய நூலாசிரியரும்:—

> "உத்தம வெளுப்புச் செம்மை யுரைத்திடு கறுப்பு மாகும்
> சத்துவ குணத்தி னோடு ரஜோகுணந் தமோகுணந்தான்
> சுத்தமோ டழுக்கி ருட்டாச் சொல்லுமுக் குணமு மூன்றாய்
> ஒத்துள வேனுந் தம்முள் ஒருகுணம் அதிக மாமே"

என்று எடுத்துரைத்திருக்கிறார்.

சிருஷ்டியைப்பற்றிச் சொல்லப் புகுங்கால், முதலில் சாதாரணமானவர்கள் கடவுள் தனது ஸர்வ வல்லமையால் எண்ணமாத்திரத்தில் திடீரென்று சூனியத்திலிருந்து இப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்துவிட்டார் என்று எண்ணலாம். இதற்கும் சாஸ்திரத்தில் வெளியிட்டிருக்கும் உண்மைக்கும் வெகுதூரம். மதவேறுபாடுகளை வேறு இடத்தில் விஸ்தரிக்கப்போகிறோம். ஆகையால் தற்காலத்தில் இவ்விஷயத்தில் கடவுள் ஜீவாத்மா உலகத்திற்குக் காரணமான அசித்து ஆகிய இவைகள் அநாதியாய் இருப்பனவாக வைத்துக்கொள்

வோம். இப்படி ஒத்துக்கொள்ளாவிட்டால் யுக்திக்குப் பொருந்தாத கொள்கைகளுக்கு இடமுண்டாகும். கடவுள் இல்லாமலிருந்த காலம் ஒன்றுண்டு என்று ஒப்புக்கொண்டு அவர் வேறொருவரால் சிருஷ்டிக்கப்பட்டார் என்றால், எல்லா மதங்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட கடவுளது ஸர்வவல்லமைக்குத் தோஷம் உண்டாகிறது. மேலும் கடவுள் இப்படிச் சிருஷ்டிக்கப்பட்டால், அக்கடவுளைச் சிருஷ்டித்தவரை உண்டாக்கினவர் யார்? என்ற கேள்வி உண்டாகும். வேறு யாரோ ஒருவர் சிருஷ்டித்தார் என்றால் பின்னும் அக்கேள்வியே உண்டாகி அனவஸ்தா தோஷத்திற்கு (ஒரேமாதிரியான ஓயாக்கேள்விக்கு) இடமுண்டாகும். ஆதலால் கடவுளைப்போலச் சிருஷ்டிக்கப்படாமல் தானாய் இருக்கும் ஒரு முதற்காரணப் பொருள் உண்டென்பதை ஸகல யுக்திவாதிகளும் எங்கிலேயிலாவது ஒப்புக்கொள்ள வேண்டியதாய் வருகிறது. பிரபஞ்சகாரணமான அசித்து ஒரு காலத்திவில்லாமலிருந்தது, புதிதாய் உண்டாயிற்று என்று ஒப்புக்கொண்டால், சூனியத்திலிருந்து திடீரென்று ஒன்று உண்டாயிற்று என்று, யுக்திக்கும் புதிய பிரகிருதி சாஸ்திரத்திற்கும், பொருந்தாத கொள்கையைப் பின்பற்ற வேண்டியதாய் வருகிறது. இதே மாதிரியான பிழை ஜீவாத்மா விஷயத்திலும் உண்டாகும். நமது சாஸ்திரங்களும், புதிதாய் உண்டான பௌதிக சாஸ்திரங்களும் அசித்தையும் சக்தியையும் புதிதாய்ச் சிருஷ்டிக்கவாவது, அடியோடு அழித்து விடவாவது, முடியாதென்று ஸ்தாபிக்கின்றன. ஆகையால் பிரபஞ்சத்தில் நடப்பது என்னவென்றால், முன்னிருந்த வஸ்துக்களே வெவ்வேறு விதமாய் ஒழுங்குபடுத்தப்பட்டு புதிய உருவமாகவும், மாறுபாடாகவும் தோன்றுவனவே ஒழிய வேறில்லை. எப்படி ஒரு குயவன்

மண் ஒன்றை மாத்திரம் கொண்டு பானை பதுமைகள் முதலியவைகளை உண்டாக்குகிறோமே, அதுபோல புதிது புதிதான தோற்றங்கள், உயிருள்ள வஸ்துக்களிலோ அல்லது உயிரில்லாத வஸ்துக்களிலோ, ஏற்பட்டபோதிலும், புதிதாய் முன் இல்லாதது ஒன்றும் சிருஷ்டிக்கப்படவில்லை என்பது ஸநாதன தர்மத்தின் ஸித்தாந்தம்.

நம்முடைய அனுபவத்தில் எவ்வளவோ மாறுபாடுடைய வஸ்துக்கள் தோன்றுவதையும் அழிவதையும் பார்த்திருக்கிறோம். அவைகள் அழிந்தபின்பு காணமற்போனபோதிலும் அவைகளின் பாகங்கள் பின்னும் இருக்கின்றன என்று நமக்கு நன்றாய்த்தெரியும். ஒரு செடியானது அழிந்துபோனால், செடியாகத் தோன்றியிருந்தபோதிலும், சருகுகளாகவும் சிறு விறகுகளாகவும் கொஞ்சம் விதைகளாகவும் இருக்கின்றது. ஒன்றும் இல்லாமல் செடி ஒருபொழுதும் அழிவதில்லை. இப்பொழுதிருக்கும் பிரபஞ்சத்திற்கு அழிவுகாலம் அணுகும்பொழுது இது மறைந்துபோகும். அதாவது இதிலடங்கிய அணுக்கள் புதிதாய் ஒழுங்குபட்டுப் புதியபிரபஞ்சம் வெளியாவதற்காக, இந்தப் பிரபஞ்சம் அடங்கவேண்டியது அவசியம்தான். இம்மாதிரி பிரபஞ்சம் மறைவதற்குப் பிரளயம் அல்லது ஸங்கோச நிலை என்றும், மறுபடியும் பிரபஞ்சம் தோன்றுவதற்கு விகாஸம் அல்லது சிருஷ்டி என்றும் பெயர். ஆகையால் சிருஷ்டி என்ற சொல்லிற்குமுன் தோன்றாது மறைந்து கிடப்பவைகளை ஒரு ஒழுங்காய்த் தோன்றும்படி செய்வது என்பது பொருள்.

இந்தச் சிருஷ்டிக்குமுன் இப்பிரபஞ்சம் எப்படி இருந்திருக்கக்கூடும் ? என்ற சங்கை உண்டாகலாம். நீங்கள் யாவரும் சிலந்திப்பூச்சி வலைகளை உண்டாக்குவதைப் பார்த்

திருக்கிறீர்கள் அல்லவா? அது என்ன செய்கிறது? தன்னுள் உள்ள வஸ்துவைக்கொண்டே வேண்டுமென்ற பொழுது வலைகளை உண்டாக்கி, தனக்கு இஷ்டமில்லாத பொழுது வலைகளைத் தன்னுள்ளேயே வாங்கிக்கொள்ளுகிறது. அவைகள் சிலந்தியின் தேகத்தில் நன்றாய் அடங்கி விடுகின்றன. பின்பு மறுபடியும் வேண்டுமானால் புதிதாய் ஒரு வலையை உண்டாக்கும் சக்தி அதற்கு உண்டு. அது போலச் சேதனு சேதனத்மகமான பிரபஞ்சம் முழுவதும் கடவுளிடத்து அதி சூட்சுமமாய்ச் சிருஷ்டிக்கு முன்பு அடங்கிக்கிடந்து, பின்பு சிருஷ்டி ஆரம்பத்தில் புதிதான ஒழுங்காய் முக்காலத்திலும் இருக்கும். அசித்தானது புதிய தோற்றத்தோடு கடவுளின் இச்சாமாத்திரத்தில் வெளியாகின்றது.

இப்பிரளய ஸ்திதியில், பிரபஞ்சம் முழுவதும் கடவுளிடத்தில் விதையுள் மரம்போலவும், மெழுக்குண்டையில் தங்கப் பொடிகள் போலவும், அடங்கி இருக்கும். இந்நிலைக்கு வருவதற்கு முன் இப்பிரபஞ்சம் படிப்படியாய்ச் சூட்சுமமான நிலைக்கு வந்திருக்கவேண்டும். மாறும் நிலைகளுக்கெல்லாம் ஒழுங்குகள் வரவர மாறிக்கொண்டே வரவேண்டும். இந்நிலைகள் ஐந்தென நமது சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. இம்மாதிரியான நிலைகள் உண்டென்று ஒருவாறு அறிவதற்குப் புதிய பிரகிருதி சாஸ்திரத்திலிருந்து ஒரு திருஷ்டாந்தத்தை எடுத்துக்கொள்வோம். ஒவ்வொரு கடின பதார்த்தத்தையும் தகுந்தபடி சுடவைத்தால் அதன் அணுக்களின் கட்டுத்தளர்ந்து, சிலகாலத்திற்கெல்லாம் உருகித் திரவபதார்த்தமாகும். மேல் மேலும் சுடவைத்துக் கொண்டே இருந்தால் அணுக்களின் கட்டு மிகத்தளர்ந்து அழியுங்கால் அதே திரவபதார்த்தம் வாயுபதார்த்தமாக

மாறுகின்றது. இன்னும் அதிகமாய்ச் சூடவைக்குங்கால் இந்த வாயுபதார்த்தம் விரிந்து அதன் அணுக்கள்கூட பரமாணுக்களாகப் பிரிந்து, எல்லா வஸ்துக்களுடைய பரமாணுக்களும் பேதாபேதமின்றிக் கிடக்கும் நிலையை அடைகின்றன. இவ்விதமாய் ஒவ்வொரு நிலையிலிருந்து அதைவிடச் சூக்ஷ்மமான நிலைக்கு வருங்காலத்தில் அததற்கேற்ற வெவ்வேறு ஒழுங்குகள் உண்டாகின்றன. கடைசியிலுள்ள சில சூட்சும நிலைகளில் வஸ்துவே கண்ணுக்கும் புலப்படாமல் இருந்த போதிலும், வஸ்து அங்கும் நிச்சயமாக இருக்கிறது. ஆகையால் பிரபஞ்சம் அழியுங்கால், ஒன்றுமில்லாமலேபோய் எல்லாம் நாசமடைவது என்பதேயில்லை. பிரபஞ்சமானது சூட்சும நிலையை அடையுங்கால் அந்நிலைக்கேற்ற ஒழுங்குகளுக்கு உட்பட்டே இருக்கிறது. நாம் இப்பொழுது காணுகின்ற இவ்விசித்திரங்களும், இவ்வொழுங்குகளும், இம்மாதிரியே அதி சூட்சும நிலையில் இல்லாமையால் அந்நிலையை ஒரு குழப்பமான நிலையென்று சிலர் எண்ண இடமுண்டாயிருக்கலாம்.

இத்தருணத்தில், ஜடமான அசித்திற்கு இம்மாதிரி நிலைமாறுதலை ஒப்புக்கொள்ளலாம். ஆத்மா, பரமாத்மாவானாலும் சரி, ஜீவாத்மாவானாலும் சரி, ஸ்தூலமென்றாவது, உருவமுடையதென்றாவது சொல்ல இடமில்லையே. ஆகையால் சேதனாத்மகமான ஆத்மாவுக்கு முன் சொன்ன மாறுதலை ஒப்புக்கொள்ள இடமில்லை, என்ற சங்கை நமது மனதில் உதிக்கலாம். ஆத்மா ஸ்வபாவத்தில் அரூபமானதாய் இருந்த போதிலும், அதற்குக் குடியிருக்கும் வீட்டிற்குச் சமமான அசித்தாலாகிய தேகபேதத்தால், அதுவும் பேதமாய் இருப்பதுபோல் காணப்படுகிறது. தேகம் ஸ்தூலத்திலிருந்து சூட்சும ஸ்திதிக்கு மாற, ஆத்மாவும் அவ்வாறு மாறுவது

போலத் தோன்றுகிறது. இப்படித் தேகத்தோடு ஸம்பந்த பட்ட ஆத்மாவைப்பற்றி, முன் சொன்ன நிலைகள் சொல்லப் பட்டனவே ஒழிய, ஆத்மாவை மாத்திம் தனியாய்நோக்கின் இம்மாதிரியான வ்யவஹாரத்திற்கிடமே இல்லை.

இப்பொழுது காணப்படுகின்ற பிரபஞ்சத்திற்கு நாசகாலம் இந்தமஹாகல்பத்தின் முடிவில் வரும்.மஹா கல்பத்தைப் பற்றி அநுபந்தம் 4-ஐப் பார்க்க. அக்காலத்தில் தமோகுணம் மேலிட்டு உலகம் அழியத் தலைப்படும். பிரபஞ்சத்தின் அணுக்களெல்லாம் ஒற்றுமையின்றிப் பிரிய ஆரம்பித்து, பிரபஞ்சம் திரவ ஸ்திதிக்கு வரும். பின்பு அதைவிடச் சூட்சுமமான வாயுஸ்திதிக்கு வரும். இப்படித் தமோகுணம் ஓங்கி நிற்றலால், பிரபஞ்சம் வரவர அதி சூட்சுமநிலையை அடைந்து, கடைசியில் தமோகுணம் உள்பட ஸகலமும் பேதமற்றுக் கிடக்கும் அதி சூட்சுமமான நிலைக்குவரும். ஏனெனில் தமோகுணமும் அதிகமாக வேலை செய்யச்செய்யத் தானும் க்ஷீணித்து மற்றைய குணங்களோடு ஸமமாய் அடங்கவேண்டியது நியாயந்தானே. இந்நிலையில் அசித்தானது ஆத்மாவால் போகஸாதனத்தனுவாக உபயோகிக்க யோக்கியமில்லாததாய் இருக்கும்.முக்குணங்களும் ஸமமான நிலையில் அசித்து அடங்கி இதோடு ஸகல ஜீவாத்மாக்களும் மெழுக்குண்டையில் தங்கப் பொடிகள்போல பரமாத்மாவில் லயித்திருப்பார்கள். பரமாத்மாதனது ஸ்வபாவமான ஆனந்த நிலையில் மூழ்கி,நித்திரையில் இருப்பவர்போல், அசித்தையும் ஜீவாத்மாக்களையும் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும். இம்மாதிரியான மங்கின நிலையைச் சக்தி ஜீவன் பரன் ஆகிய இவர்கள் அடையவேண்டுமென்பது நியாயமே. ஏனெனில் தொழில் செய்யும் நிலையும், தொழிலற்ற நிலையும் மாறி மாறி வந்துகொண்டிருக்கவேண்டியது நியாயந்தானே. இம்மாதிரி

யாய் மாறி மாறி இந்நிலைகள் வந்துகொண்டிருப்பதனல் உலகத்திலடங்கிய வஸ்துக்களும், ஆத்மாக்களும் விருத்தியடைந்து வர இடமுண்டாகிறது. இந்த ஓழிவான நிலையில் நிச்சப்தமாய் ஸுககரமாய்த் தொழிலற்று, ஏற்றத்தாழ்வுகளும் அற்று, மனேவிகாரங்கள் ஒன்றும் இன்றி, எல்லாம் ஸமமாய் இருக்கும். இந்நிலையையே சூனியம் என்று நமது வேதம் சொல்லுகின்றது. இந்த நிலையின் உண்மை ரூபத்தை நன்ருய் நமக்கும் புலப்படுத்த வேதம், ஸ்வப்னமற்ற நல்ல தூக்கத்தைத் திருஷ்டாந்தமாகக் காட்டுகின்றது.

இம்மாதிரியான சூக்ஷ்ம நிலையிலிருந்தே நமது பிரபஞ்சம் இவ்வளவு விசித்திரமாய் விரிந்து கிடக்கிறது. இதைச் சிலர் தமது அறியாமையால் சுத்த சூனியமென்றும், சுத்தக் குழப்பமான நிலை என்றும் எண்ணுகிருர்கள். முன் சொன்னவைகளை நன்ருய் அறிந்தோர்க்குப் பிரபஞ்ச உற்பத்திக்குக் காரணமான மஹாப்பிரளய நிலையின் நிஜஸ்வரூபம் எளிதில் விளங்கும்.

---

## 2. சாஸ்திரசிருஷ்டிக்கிரமம்.



தமையன் தம்பியை நோக்கி, "அப்பா, நீ கடவுள் இருக்குமிடத்தைக் காட்டுவாயானால் உனக்கு ஒரு மாம்பழம் தருவேன்" என்று சொன்னதற்குத், தம்பி, "அண்ணா, நீ கடவுள் இல்லாத இடமொன்றைக் காட்டுவாயானால் உனக்கு இரண்டு மாம்பழம் தருவேன்!" என்று சொன்னதாக ஒரு கதை நீங்கள் யாவரும் கேட்டிருக்கலாம். மேலும் மஹா பக்த சிரோமணியான பிரஹ்லாதாழ்வார் தமது பக்தியற்ற கொடியதகப்பனை நோக்கி, ஹரியானவர்,

> "சாணினும் உளன், ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட
> கோணினும் உளன்மா மேருக் குன்றினு முளன்இந் நின்ற
> தூணினு முளன்நீ சொன்ன சொல்லினு முளன்இத் தன்மை
> காணுதி விரைவின் * * * *"

என்று சொல்லியிருக்கிறார். இவைகள் என்ன குறிப்பிக்கின்றன? பிரபஞ்சத்தில் கடவுள் இல்லாதவிடமே இல்லை என்றல்லவோ காட்டுகின்றன? நீங்கள், உயிர் தேகத்தில் எந்தப் பாகத்தில் இருக்கின்றதென்று உற்று நோக்கில் தேகமுழுவதும் சகல விடங்களிலும் வியாபித்து இருக்கிறது என்றுதானே சொல்லவேண்டிவருகிறது. இது போன்றதே பிரபஞ்சத்தில் கடவுளது ஸர்வாந்தர்யாமித்வம். கடவுள் ஸ்தாவரங்களில் மாத்திரம் வியாபித்திருக்கிறார் என்று எண்ணவேண்டியதில்லை. அவர் ஸகலப் பிராணிகளிடத்தும் உயிர்க்குயிராய் அதாவது உயிரின் ஸாரபூதமாய் எப்பொழுதும் இருக்

கிறுரென்று எண்ணவேண்டும். எப்படி ஒளி தீபஜ்வாலை யிலிருந்து பிரிக்க முடியாமல் அதன் ஸாரபூதமாய் இருக் கிறதோ, அதுபோலவே கடவுளும் உயிர்களுக்கெல்லாம் ஸாரபூதமாய் இருக்கிறுர். இதற்கேற்பவே வில்லிபுத்தூராரும் "காயமுமுயிருமாகிப் பொருள்தோறுங் கலந்துநின்ற மாய வன்" என்று கிருஷ்ணபகவானை வருணித்திருக்கிறுர். கடவு ளது ஸர்வாந்தர்யாமித்வத்தை அநேக கவிகள் அநேக விதமாக வருணித்திருக்கிறுர்கள். தாயுமானவர் "அரும்போ னே மணியே என்அன்பே என்னன்பான அறிவே எனறிவிலூ றும் ஆநந்தவெள்ளமே" என்றும், சிதம்பரம் இராமலிங்க ஸ்வாமிகள், 'கண்ணே அக்கண்ணின் மணியே மணியிற் கலந் தொளிசெய் விண்ணே' என்றும் சொல்லி யிருக்கிறுர்கள். இவ்வாறு கடவுள் பிரபஞ்சத்தினிடம்ஜீவாத்மாவினிடத்தும் வியாபித்திருப்பவர் என்றுல் இவ்விரண்டும் கடவுளுக்குத் தேகமாய்விடுகின்றன. ஆகையால்தான் கடவுளுக்குப் பர மாத்மா என்று பெயரிடப்பட்டிருக்கிறது.

இப்பொழுது சிருஷ்டிக் கிரமத்தைப்பற்றிச் சொல்லப் புகுங்கால் உருவில்லாது மறைந்து கிடக்கும் அசித்து, உரு வோடு வெளிவரும் கிரமத்தையும், அதனுல் ஜீவாத்ம பர மாத்மாக்களுக்குண்டாகும் உபாதிகளையும் பற்றி விஸ்தரிக்க வேண்டியது அவசியம். அசித்து, கடவுளது கருணையால் உருவோடு வெளிப்பட்டுப் பரமாத்மாவை வரம்புக்குள்ள டக்குவதற்கு ஸமஷ்டி சிருஷ்டி அல்லது தொகுதி சிருஷ்டி என்றும், ஜீவாத்மாவை அடக்குவதற்கு வியஷ்டி சிருஷ்டி அல்லது பகுதி என்றும் சிருஷ்டி பெயர். இப்படிச் சிருஷ்டி க்கிரமங்களைச் சொல்லிவருங்கால் அசித்து உருவத்தில் விருத்தியடைவதென்றும் அதனுல் ஆத்மா வரவர எல்லைக் கட்டுள் அதிகமாய்ப் பந்தப்படுகிறதென்றும் சொல்லுவோம்.

ஏனெனில், அசித்தாகிய பிரபஞ்சம் விருத்தியாக ஆத்மாவுக்கு நிர்ப்பந்தம் அதிகமாக ஏற்படுகிறதென்பது யாவருக்கும் தெரிந்த விஷயமே. ஆகையால் நத்தை, ஆமை முதலிய ஜந்துக்கள் அபாயகாலங்களில் தமது அங்கங்களை எவ்வாறு உள்ளடக்கிக் கொள்ளுகின்றனவோ, அவ்வாறு நாமும் இகலோக இந்திரியாதிகளை வெளிச் செல்லவொட்டாது அடக்கிக்கொள்ளவேண்டும் என்பது எளிதில் விளங்கும். இதுபற்றியே சிதம்பரஸ்வாமிகளும்,

'அறிஞனே ! நல்லோர் சொன்ன அரியநூற் பயனெல் லாமும்,
பொறிவழி சென்று போகம் புசித்திடா திருக்கத் தானே,
மறமொடு கோப மாதி வஞ்சனை நீத்து ஞான,
நெறிதவ றாமல் இந்த நிலமிசை வாழு வாயே.'

என்று அருளிச்செய்திருக்கின்றார்,

மேலும் குணங்கள் ஒன்றைவிட ஒன்று ஏற்றத்தாழ்வுடையனவாகி விசித்திரமான சிருஷ்டிக்குக் காரணமாயினவென்று சொல்லப்படும். அப்பொழுது அசேதனமாயும் ஜடமாயும் உள்ள குணங்கள் எவ்வாறு தாமே ஏற்றத்தாழ்வுள்ளனவாகுமென்று சங்கிக்கலாம். குணங்கள் அவ்வாறுவதற்கு அவைகளாலே மாத்திரம் முடியா. அவைகளை அவ்வாறு மாறும்படி செய்யும் சேதனம் ஒன்று இருத்தல் வேண்டும். அதையே கடவுள் என்று யாவரும் சொல்லுகிறார்கள். இக்கருத்தை உள்ளடக்கியே கைவல்ய நூலாசிரியரும்.

'* * * அணுதியாம் ஜீவ ரெல்லாம்,
பொதுவான சுஷுப்திபோலப் பொருந்தும்அவ்யக்தம் தன்னில்,
இது கால தத்து வப்பே ரீசன்உட் பார்வை யாலே,
முதுமூலஸ்வ பாவம் விட்டு முக்குணம் வ்யக்த மாமே,' என்றும்

"ஏமமா யாவி னேத வீசனு ரருளி னலே,
பூமலி யுயிர்கட் கெல்லாம் போகஸா தனமுண்டாகத்
தாமத குணமி ரண்டு சாத்தியாய்ப் பிரிந்து தோன்றும்
* * * * * * "

என்றும் சொல்லியிருக்கிறார். இது எளிதில் விளங்குவதற்காக ஒரு உதாரணம் எடுத்துக்கொள்வோம். அடுப்பெரிவதும், புகைவண்டி ஓடுவதும், ஜலயந்திரம் சுற்றுவதும், மழை யுண்டாவதும் பார்க்குங்கால் சூரியனோடு எள்ளளவும் ஸம்பந்தம் அற்றவைபோல் தோன்றியபோதிலும், உற்றுநோக்கும் ஒருவனுக்கு அவைகளெல்லாம் சூரியனது உஷ்ணம், ஒளி ஆகிய இவைகளின் சக்தியாலேயே அவ்வன்மையை அடைந்தனவென்பது விளங்கும். செடி முதலியவைகள் வளருவதும், காற்று வீசுவதும், தண்ணீர் ஓடுவதும், ஆகிய இவைகள் சலியாது நடந்துவருவதற்குச் சூரியனது பக்தியே ஆதாரம். இதுபோல குணங்களது ஏற்றத்தாழ்வால் சிருஷ்டி உண்டாவதுபோலத் தோன்றியபோதிலும் அவைகளோடு ஒட்டாத ஈசனது அருளால், யாவையும் உண்டாகின்றன என்பது துணிபு. இது பற்றியே தாயுமானவரும் 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்றருளிச்செய்தார்.

முன் பாகத்தில் மஹாப்பிரளய நிலையில் யாவையும் செயலற்று ஒருவித ஆனந்தத்தில் உருவின்றி மூழ்கிக் கிடக்கும் என்றும், அந்நிலையில் இருந்து குண ஏற்றத்தாழ்வால் இப்பிரபஞ்சம் பலவிதத் தோற்றங்களோடு வெளியாகிற தென்றும் சொன்னேம். சிருஷ்டி ஆரம்பத்தில் இம்முக்குணங்கள் அசித்தினிடத்தில் ஸம்பந்தப்படுங்கால் ஸத்வ குணமானது இருபாகமாகப் பிரிந்து ராஜஸதாமஸ குணங்களோடு ஸம்பந்தப்படுகிறது. ஸத்வத்தின் ஒரு பாகத்தோடு மற்றகுணங்கள் கொஞ்சமாயும், ஸத்வத்தின் மற்றொரு பாக

த்தோடு மற்றக் குணங்கள் அதிகமாயும், ஸம்பந்தப்படுகின்றன. இவ்வாறு இரண்டுவித ஸத்வகுணங்கள் உண்டாகின்றன. அவைகளில் முன்னதற்குச் சுத்தஸத்வப் பிரதானம் என்றும், பின்னதற்கு அசுத்தஸம்வப் பிரதானம் என்றும் பெயர். இம்மாதிரியாகவே ராஜஸ தாமஸ குணங்களும் வெவ்வேறாய் இருபாகமாகித் தன்னை ஒளிந்த மற்றைய குணங்களிடத்தில் ஸத்வம் ஸம்பந்தப்படுகின்றன. ஆதலால் பிரளயகாலத்திற் கடுத்த படியில் அசித்தானது சூக்ஷ்ம நிலையிலிருந்து நான்கு கூறாகித் தோன்றுகிறதென்றும், ஒவ்வொரு பாகங்களில் முறையே சுத்தஸத்வமும், அசுத்த ஸத்வமும், ராஜஸமும், தாமஸமும் ஓங்கி நிற்கின்றனவென்றும் சொல்லலாம். இவ்வாறு குணங்கள் பிரிந்து அசித்தோடு ஸம்பந்தப்பட்டவுடன் சுத்த ஸத்வம் எவ்வாறு பரமாத்மாவைச் சூழ்கிறதோ அவ்வாறே அசுத்தஸத்வம் ஜீவாத்மாவைச் சூழ்ந்து வருகிறது. இப்படி ஸத்வம் சூழ்ந்த மாத்திரத்தில் ஆனந்தத்தோடு இரண்டறக்கலந்ததுபோல் மஹாப்பிரளயத்திலிருந்த ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஆனந்தம் வேறென்றும், அதை அநுபவிக்கிற நாம் வேறென்றும், பேதம் தோற்றுகின்றது. ஆனால் பரமாத்மாவிற்குள்ள சுகத்திற்கும் அதன் அறிவின் வியாபகத்திற்கும், ஜீவாத்மாவுக்குள்ள ஸுகத்திறகும் அதன் அறிவின் வியாபகத்திற்கும் அநேக பேதங்கள் உண்டு மேலும் ஜீவாத்மாக்களுக்குள்ளே ஒன்றின் ஸுகம் முதலியவைகளுக்கும் மற்றொன்றின் ஸுகம் முதலியவைகளுக்கும் மிகுந்த பேதங்களுண்டு. முந்திய பேதத்திற்கு ஜீவாத்மா பரமாத்மாக்களைச் சூழ்ந்த அசுத்த சுத்த ஸத்வப்ரதானங்களே காரணம். சுத்த ஸத்வப்ரதானத்தால் பரமாத்மாவின் அனந்த சுகத்தையும் அறிவையும் அதிகமாகக் குறைக்கமுடியாது. ஜீவாத்மாவைச் சூழ்ந்த

அசுத்த ஸத்வப்பிரதானம் அதன் சுகம் முதலிய வைகளை நன்ருகக் குறைத்துவிடும். பிந்திய பேதத்திற்குக் காரணம் அசுத்த ஸத்வஸம்பந்தமான அசித்தில் காணப் படும் அசுத்தத்தின் ஏற்றத்தாழ்வின் பரிமாணமே. ஏற்றத் தாழ்விற்குக் காரணம் பிரளய நிலைக்குமுன் அந்த அந்த ஜீவாத்மா செய்தகர்மமே ஒழிய வேறில்லை. சுத்தஸத்வத் தால் பரமாத்மாவுக்குண்டாகும் கோசத்திற்கும், அசுத்த ஸத்வத்தால் ஜீவாத்மாவுக்குண்டாகும் கோசத்திற்கும் ஆனந்தமயகோசங்கள் என்று பெயர். இவைகளுக்குக் காரண தேகங்கள் என்றும் வேருெரு பெயர் உண்டு. ஏனெனில் இத்தேகத்திலிருந்தே இன்னும் ஸ்தூலமாயுள்ள அநேக தேகங்கள் ஜீவாத்ம பரமாத்மாக்களுக்குண்டாகின்றன. ஒரே மறைப்பிற்கு இவ்விருவிதமாய்த் தேகமென்றும் சொல்லுவானேன் என்ற சங்கை உண்டாகலாம். இச்சங் கைக்கு இந்த வியாசத்தின் இறுதியில் உத்தரம் சொல்லு வோம். இம்முதற் சரீரத்தோடு தோன்றும் பரமாத்மாவிற்கு ஈசுவரன் அல்லது அந்தர்யாமி என்று பெயர். இப்பெயர் களுக்கு முறையே ராஜாதி ராஜன் என்றும், ஸகலத்திலும் வியாபித்து ஒழுங்குபடுத்துவோன் என்றும் பொருள். இவர் அசித்திற்குள் அகப்பட்டவர்போல் காணப்படினும் அதற்கு உண்மையில் உட்பட்டவர் இல்லை. காரண சரீரத்தால் சூழப் பட்ட ஜீவனுக்குப் பிராஞ்ஞன் என்று பெயர். இப்பதத் திற்கு, (தான் அழிவற்றவனென்றும், கடவுளுக் கடுத்தபடி தனக்கு மிகுந்த அறிவும் பலமும் உண்டென்றும்) அறிபவன் என்று அர்த்தம். இந்நிலையில் ஜீவாத்மாவிற்கு மிகுந்த ஆனந்தானுபவம்உண்டு. இந்நிலையில் கோசங்கள் அதிசூட் சுமமாயும் செவ்வையான உருவற்றதாயும் இருக்கும். இதற் கே காரண சிருஷ்டி என்று பெயர்.

இனிச்சொல்லும் நிலைக்குச் சூட்சும சிருஷ்டி என்று பெயர். இந்நிலையில் அசித்தின் உருவம் ஒருவாறு தெளிந்து பஞ்சபூதங்களுக்கும் காரணமாகிய தன்மாத்திரைகள் உண்டாகின்றன. 'ஏமமா யாவி னேத வீசனார் அருளினாலே பூமலி யுயிர்கட் கெல்லாம் போகஸா தனமுண் டாக,' அதன் மூலமாய் அவைகளை மோக்ஷமடையச் செய்யும் பொருட்டு தாமஸப்பிரதான மாகிய பிரகிருதியானது, பிருதிவி, அப்பு தேயு, வாயு, ஆகாச தன்மாத்திரைகளாய் பரிணமிக்கின்றது. இந்நிலையில் உள்ள பஞ்சபூத தன்மாத்திரைகளி லிருந்து ஸ்தூலபூதங்களும் ஸகலப்பிரபஞ்சங்களும் வெளியாகின்றன.

தாமஸம் ஓங்கியிருக்கும் பாகத்திலிருந்து பஞ்சபூத தன்மாத்திரைகள் உண்டானபோதிலும் இவைகளில் ஸாத்விக ராஜஸ பாகங்கள் இருக்கின்றன. ஸத்வ பாகத்திலிருந்து ஞானேந்திரியம் ஐந்தும் உண்டாகின்றன. இவைகளுக்கு முறையே துவக்கு, ஜிஹ்வை, சக்ஷுஸ், கிராணம், சுரோத்திரம் என்று பெயர். இவைகளாலேயே பிரபஞ்சத்தை ஸ்பர்ச ரஸ, ரூப, கந்த, சப்தமாக ஜீவன் அறிகிறான். இவ்விந்திரியங்கள் சூட்சுமமாகவே இருக்கின்றன. இவ்விந்திரியத்தின் வழியாய் பிரவேசிக்கும் விஷயங்கள் எல்லாம் அந்தஃகரணம் என்ற சூட்சும அங்கத்தில் தாக்கி அதனால் அறிவை உண்டாக்குகின்றன. அந்தஃகரணம் இரண்டு ரூபமாய்க் காணப்படும். தாழ்ந்த நிலையில் இருந்து வஸ்துவைக் கண்டு ஸம்சயிக்கும் நிலையில் மனமென்றும், மேலான நிலையில் இருந்து அறிந்து ஸ்திரமாய் இருக்கும்போது புத்தி என்றும் பெயர் பெறும். ஸத்வபாகத்திலிருந்து ஞானேந்திரியம் ஐந்தும், அந்தஃகரணம் இரண்டும் ஜனித்தல்போல் இந்தப் பிரகிருதியுள் இராஜஸபாகத்திலிருந்து ஐந்து கர்மேந்திரியங்கள் உண்டா

கின்றன. அவையாவன, வாக்கு, கை, கால், மலத்துவாரம், ஜலத்துவாரம் ஆகிய இவைகளே. இந்த இராஜஸபாகத்தினாலே இவ்விந்திரியங்கள் தொழில் செய்வதற்கு அவசியம் வேண்டிய வாயுக்களும் உண்டாகின்றன. இவ்வாயுக்கள் தாம் செய்யும் தொழிலின் விசேஷத்தால் ஐந்து விதமாகக் காணப்படும். ஐந்துக்களை மூச்சுவிடச்செய்யும் வாயு பிராணவாயுவென்றும், மலம் ஜலம் விடுவதில் ஸகாயம் செய்யும் வாயு அபானவாயுவென்றும், இரத்தத்தை ஓடச்செய்யும் வாயு வியானவாயுவென்றும், சிரோபாகத்திற்கு ஜீர்ணமாய் உணவின் ஸாரத்தைச் செல்லும்படி செய்யும் வாயு உதானவாயுவென்றும், தேகத்திலுள்ள ஸகல காரியத்தையும் ஒழுங்காய் நடத்திவரும் திறனுடைய வாயு ஸமானவாயுவென்றும் பெயர் பெறும். இவைகளே பஞ்சவாயுக்கள் என்னப்படும். ஆகையால் இந்தச் சூட்சும சிருஷ்டியில் ஞானேந்திரியம் ஐந்தும் கர்மேந்திரியமைந்தும், வாயுக்கள் ஐந்தும் அந்தஃகரணம் இரண்டும் ஆகிய பதினேழு (17) தத்துவங்களும் உண்டாகின்றன. இவைகளின் தொகுதியே லிங்கசரீரம் இதற்குச் சூட்சும சரீரம் என்றும் பெயர் உண்டு. இப்பெயர் வரக்காரணம் என்னவென்றால்,இப்பொழுது நமக்குக்காணப்படும் சரீரத்தைவிட இது சூட்சுமமாய் இருக்கிறதுதான். ஆனால் இது காரண சரீரத்தைவிட ஸ்தூலமாய் இருக்கிறது என்பதற்குச் சந்தேகமில்லை. இந்தத்தேகத்தில் மூன்று கோசங்கள் அடங்கியிருக்கின்றன. காரணதேகமாகிய ஆனந்தமயகோசத்திற்கு அடுத்து விஞ்ஞானமய கோசம் என்று பெயர் பெற்று, புத்தியையும் ஞானேந்திரியங்கள் ஐந்தையும் அடக்கியுள்ளது. இதற்கு அடுத்த கோசம் மனோமயகோசம் என்று பெயர்பெற்று, மனஸ்ஸையும் ஞானேந்திரியம் ஐந்தையும் அடக்கியுள்ளது. இதற்கு அடுத்தகோசம் பிராணமய

கோசம் என்று பெயர் பெற்று ஐந்து வாயுக்களையும், ஐந்து கர்மேந்திரியங்களையும் அடக்கியுள்ளது. இம்மாதிரி இக்கோசங்களடங்கிய சரீரம், ஜீவாத்மாவையும், ஸமஷ்டி சரீரமாய்ப் பரமாத்மாவையும் சூழ்கின்றது. ஸமஷ்டிசிருஷ்டியில் இக்கோசங்களால் சூழப்பட்டுத் தோன்றும் கடவுளுக்கு ஹிரண்யகர்ப்பன் என்றும் ஸூத்ராத்மா என்றும் பெயர் உண்டு. இவ்விரு பதங்களுக்கும் பொருள், முறையே, (பிரபஞ்ச ஆரம்பத்தில்) பொன் சாயை உடையவன் என்பதும், (முத்துமாலையில் முத்துக்களைச் சேர்த்துவைக்கும்) நூலைப்போல் ஸகலசூட்சுமப் பிரபஞ்சங்களிலும் பரவி அவைகளைப் பொருத்திவைப்போன் என்பதுமே. வியஷ்டி சிருஷ்டியில் இக்கோசங்களால் சூழப்பட்ட ஜீவாத்மாவுக்குத் தைஜஸன் என்று பெயர். இப்பதத்திற்குப் பிரகாசரூபி என்பது பொருள். ஹிரண்யகர்ப்பன், தைஜஸன் என்ற பதங்கள் குறிப்பன என்னவென்றால் தங்கமும் பிரகாசமுமாகிய இவற்றுள் ஒன்று, எதில் ஸம்பந்தப்பட்டிருந்தபோதிலும் அதில் அது இருப்பதாக எளிதில் கண்டுபிடிக்கமுடியும். அதுபோல இந்நிலையில் ஆத்மாவானவன் சூக்ஷுமமாய்த் தோன்றிய போதிலும், ஒருவாறு அவனைக் கண்டுபிடிக்கமுடியும் என்பதே. இந்நிலையில் கடவுள் தான் அநுபவிக்கும் ஆனந்தத்திலிருந்து வேறுபட்டுப் பிரபஞ்சத்திற்கு ஸூத்திரதாரியாகத் தோன்றுவார். இந்நிலையில்தான் பிரபஞ்சத்தில் விசித்திர விஷயங்களையும் தத்தம் கருமத்திற்கேற்ப ஜீவாத்மாக்களை வெவ்வேறாய்த் தோற்றுவிப்பதையும் செய்யக் கடவுள் தொடங்குகிறார். நாடகத்தின் ஆரம்பகாலத்தில் ஸூத்திரதாரி திரைக்கு வெளியில் வந்து நிற்பதும் நடிப்பவர்கள் திரைக்குள் வேஷங்களைப்போட்டு முடித்துக்கொண்டு தத்தமக்கு ஏற்பட்டபடி வந்து நாடகமாடத் தயாராய் இருப்ப

தும்போல கடவுளும், ஜீவாத்மாக்களும் இந்தச் சூட்சும சிருஷ்டியில் தோன்றுகிருர்கள்.

இனிமேல் ஸ்தூலசிருஷ்டி சொல்லப்படுகிறது. பிரபஞ்சம் இந்நிலைக்குவந்தபின்புதான் இப்பொழுது காணப்படும் விசித்திர நிலையை அடைகிறது. சூக்ஷ்மசிருஷ்டியால் பஞ்ச பூதங்களும் வெவ்வேருய் இருந்தபோதிலும் தன்மாத்திரா ரூபமாக அதிசூட்சுமமாய் இருக்கின்றன. அந்தச்சூட்சும சிருஷ்டியிலிருக்கும்பொழுது ஜீவர்களால் தத்தம் கருமத்திற்கேற்ப சுகதுக்கங்களை அனுபவித்தல் முடியாதாகையால் இந்நிலையிலிருந்து ஸ்தூலபூதங்கள் உண்டாகவேண்டியது அவசியம்தான். இவை உண்டாகின்றவிதம் எப்படி என்ருல், ஒவ்வொரு பூததன்மாத்திரையும் இரண்டு பாதியாக முதலில் பிரிகின்றது. பிறகு அப்பாதிகளுள் ஒருபாதி பிரியாதிருக்க மற்றப்பாதி நான்கு ஸமமாகப் பிரிகின்றது. ஆதலால் ஒவ்வொரு பூததன்மாத்திரையும் ஐந்து பாகங்களாகப் பிரிகின்றது. அவற்றுள் ஒன்று பாதியாகவும், மற்ற நான்கில் ஒவ்வொன்றும் அரைக்கால் பாகமாகவும் இருக்கும். இதன் பின்பு ஒவ்வொரு பூததன்மாத்திரையின் பெரிதாகிய அரைப்பாகமானது தன்னை ஒழிந்த மற்றை பூததன்மாத்திரைகளின் அரைக்கால் பங்கு ஒவ்வொன்ருேடு மாத்திரம் சேர்ந்து ஒரு முழுஸ்தூல பூதமாகத் தோன்றுகிறது. இதற்கு உதாரணம் ஆகாசத்தின் அரைப்பாகமானது, வாயு, தேயு, அப்பு, பிருதிவி ஆகிய இவைகளின், ஒவ்வொன்றின் ஒவ்வொரு அரைக்கால் பாகத்தோடுமாத்திரம் சேர்ந்து ஒருமுழு ஆகாச ஸ்தூல பூதமாகின்றது. இவ்வாறே வாயு, தேயு, அப்பு, பிருதிவிகளின் ஸ்தூலபூதங்களும் உண்டாகின்றன. இவ்வாறு ஒரு ஸ்தூல பூதத்தில் மற்றைப் பூதங்களின் பாகம் கலந்திருப்பதைக் கண்ணுக்குப் புலப்படும் பிரபஞ்சத்தில் எங்கும் காணலாம்.

இம்மாதிரியாய் ஒவ்வொரு பூததன்மாத்திரையும் ஐந்தாய்ப் பிரிந்து தம்முள் கலந்து ஸ்தூல சிருஷ்டிக்குக் காரணமாய் இருப்பதே **பஞ்சீகரணம்** என்று சொல்லப்படும்.

இந்தப் பஞ்சீகிருதமான ஸ்தூல பூதங்களால்தான் நாம் பார்க்கும் பிரபஞ்ச வஸ்துக்களும் ஜந்துக்களின் தேகங்களும் நமது தேகமும் உண்டாயிருக்கின்றன. இப்பூதங்களாலாகிய பிரபஞ்சம் முழுவதுமே கடவுளது **ஸ்தூலதேகம்** என்னப் படும். இந்த ஸ்தூலதேகத்தால் சூழப்பட்டுத் தோன்றும் கடவுளுக்கு **வைசுவாநரன்** என்றும் **விராட்** என்றும் பெய ருண்டு. இப்பதங்களுக்கு முறையே பிரபஞ்சத்தில் பரவி யிருப்பவன் என்பதும், சிரேஷ்டமாகப் பரவியிருக்கும் வஸ்துவென்பதும் பொருள். இந்த நிலையிலிருக்கும் கடவுளே புருஷஸூக்தத்தில் ஆயிரம் தலை, ஆயிரம்கண், ஆயிரம்கால் உடையவரென்று வருணிக்கப் பெற்றிருக்கிறார். இந்த வாக்கியம் குறிப்பிப்பது என்னவென்றால் பிரபஞ்சத்தில் ஒவ்வொரு பாகமும் கடவுளது ஒவ்வொரு அங்கமே ஒழிய வேறில்லை என்பதே. ஸ்தூல வியஷ்டி சிருஷ்டியில் ஜீவர் களுக்கு ஸ்தூலதேகம் உண்டாகின்றன. இத்தேகமே நமது கண்ணுக்குப் புலப்படும் தேகம். இந்நிலையிலிருக்கும் தைஜஸ னுக்கே **ஜீவன்** என்று பெயர். இப்பதத்திற்கு உயிரோடிருப் பவன் என்பது பொருள். கடவுளுக்கும், ஜீவாத்மாவுக்கும் ஸ்தூல பூதங்களால் உண்டாகும் மறைப்பிற்கு **அன்னமய கோசம்** என்றும் பெயருண்டு.

இவ்வாறே பிரபஞ்சவிருத்தியும் ஆத்மாவின் அவதரண மும் பூர்த்தியாகின்றன. இதில்வரும் பெயர்களை நீங்கள் நன் றாய் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அப்படி வைத்துக்கொண்டால் சிருஷ்டி விஷயங்கள் உங்களுக்கு

எளிதில் விளங்கும். இவைகளை மனதில் தெளிவாய் வைத்துக்கொள்வதற்காகப் பின்வருமாறு சுருக்கமாய்ச் சிருஷ்டி விஷயங்களை எடுத்துக் காட்டுகிறோம்.

| தேகங்கள். | கோசங்கள். | பரமாத்ம ஜீவாத்ம பரியாய நாமங்கள். | குண விசேஷம். |
|---|---|---|---|
| காரண தேகம் | ஆனந்தமய கோசம் | ஸமஷ்டி :— ஈசுவரன், அந்தர்யாமி.<br>வியஷ்டி:— பிராஞ்ஞன் | சுத்த ஸத்வம்<br>அசுத்த ஸத்வம் |
| சூட்சுமதேகம் அல்லது லிங்கதேகம்<br>ஞானேந்திரியங்கள் ... 5<br>கர்மேந்திரியங்கள் ... 5<br>வாயுக்கள் ... 5<br>மனம்,புத்தி... 2<br>ஆக தத்துவங்கள் ... 17 | 1. விஞ்ஞானமய கோசம் (புத்தி, ஞானேந்திரியங்கள்)<br>2. மனோமயகோசம் (மனது, ஞானேந்திரியங்கள்)<br>3. பிராண மய கோசம் (வாயுக்கள், கர்மேந்திரியங்கள்) | ஸமஷ்டி:— ஹிரண்ய கர்ப்பன், ஸூத்ராத்மா<br>வியஷ்டி :— தைஜஸன் | ராஜஸ பாகங்கள் |
| ஸ்தூலதேகம் | அன்னமய கோசம் | ஸமஷ்டி:— வைசுவானரன், விராட்<br>வியஷ்டி:— ஜீவன் | தாமஸ பாகங்கள் |

இப்பொழுது ஒரு கோசத்தின் பின் மற்றொரு கோசம் வந்ததாகச் சொன்னோமே. இதனால் நீங்கள் இக் கோசங்கள் ஒன்றன் உள்ளே மற்றொன்றாய் வெங்காயத்தின் தோல்போலக் காணப்படும் என்று எண்ணி விடக்கூடாது. இரண்டு வாயு பதார்த்தங்கள் எப்படி ஒன்றோடொன்று கலந்திருக்குமோ அதுபோலவே இக்கோசங்கள் கலந்திருக்குமே ஒழிய ஒன்றன்பின் ஒன்று, ஒழுங்காய் இருப்பதன்று. ஆனால் ஒன்றன்பின் ஒன்று வந்ததாகச் சொன்னதன் நோக்கம் என்னவென்றால், ஒருவாறு ஸ்தூலமாகிய கோசம் அழிந்து விட்டால் அதைவிடச் சூட்சுமமான கோசங்கள் கொஞ்சகாலம் நிற்கலாம் என்பதே. அதற்கும் அழியும்காலம் வரும்பொழுது அழிந்து போகும். ஒவ்வொரு கோசத்திலேயே உழலும் ஒருவனுக்கு அதைவிடச் சூட்சுமமான அடுத்த கோசமே தன் ஆத்மாவாகத் தோன்றும். ஸ்தூல தேகத்தில் இருக்கும் ஒருவனுக்குச் சூட்சும தேகம் ஆத்மாப்போலவும், ஸ்தூலசூட்சும தேகங்களில் இருப்பவனுக்குக் காரண தேகம் ஆத்மாவாகவும் தோன்றும். இது பற்றியே ஒரு கோசத்தின் பின் மற்றொருகோசம் வந்ததாகச் சொல்லியிருக்கிறது.

இப்பொழுது ஒரே மறைப்பைத் தேகமென்றும் கோசம் என்றும் இருவிதமாகப் பெயரிட்டு வழங்குவானேன், என்ற முன்சொன்ன சங்கையை எடுத்துக்கொள்ளுவோம். கோசமென்ற பெயரும், தேகம் என்ற பெயரும் ஒரேபொருளைத் தான் குறிக்கின்றன. ஒருவன் நம்மைக் கிள்ளுகிறான் என்று வைத்துக்கொள்ளுவோம். உடனே நாம் 'எம்மைக் கிள்ளுகிறான்' என்று சொல்லுவது வழக்கம். உண்மையில் அவன் நம்மைக் கிள்ளுகிறானா? இல்லை. அவன் நமது தேகத்தைக் கிள்ளுகிறானே ஒழிய வேறில்லை. நமது அறியாமை

யால் நமது தேகத்திற்கு வந்ததை நமக்கு வந்ததாக எண்ணு கிறோம். சிற்சில ஸமயங்களில் நாம் உண்மையில் இருக்கிற படியே பேசுவதும் உண்டு. 'என் தேகம் ஊதி இருக்கிறதோ'? என்று கேட்கும்போது உண்மைக்கேற்றபடியேபேசுகிறோம். பழக்கத்தில் ஸுகதுக்கானுபவ விஷயங்களில் நம்மைவிட உண்மையில் வேறாய் இருக்கும் மறைப்பின் தர்மமாக உள்ளவைகளை நமது தர்மமாகப் பேசும்படி வருகிறது. 'எனக்கு வலிபொறுக்க முடியவில்லையே' என்று நாம் சொல் லுவோமே ஒழிய, 'எனது தேகத்திற்கு வலிபொறுக்க முடியவில்லையே' என்று ஒருவரும் சொல்வது வழக்கமில்லை. ஆனால் தேகத்திலடங்கிய வஸ்துக்களையும் அவைகளின் விஷயங்களையும் பற்றிப் பகுத்தறிந்து பேசும்பொழுது உள் ளதை உள்ளபடி உரைக்கிறோம். 'என் தலை கனமாய் இருக் கிறது' என்றவிடத்து இம்மாதிரியாயே சொல்லுகிறோம். ஸ்தூல தேகவிஷயமாக இவ்வாறு இருவிதமாகப் பேசு கிறோம். இதுபோலவே நாம் சூக்ஷ்மதேக விஷயத்திலும் சொல்வதுண்டு. 'எனது இந்திரியங்களுக்குப் பாடவம் இல்லை என்று உள்ளபடியும் 'நான் அறிகிறேன், நான் பார்க்கிறேன், நான் மூச்சுவிடுகிறேன்,' என்று உண்மைக்கு விரோதமாய் நமது மேலேற்றியும், சொல்லுகிறோம். காரண தேகவிஷ யத்திலும் இம்மாதிரி சொல்லுவதற்கு இடமுண்டு. 'எனது தேகம் பஞ்சாய்ப் பறப்பது போலிருக்கிறது, என்றும், 'நான் ஸுகமாய் இருக்கிறேன்,' என்றும் சொல்வதுண்டு. ஆகை யால் தேகம் கோசம் என்ற பெயர்கள் ஒரே மறைப்பின் பெயர்களாய் இருந்தபோதிலும், தேகம் என்று சொல்லுங் கால் நம்மின் வேறுபடுத்தியும், கோசம் என்று சொல்லுங் கால் நம்மின் வேறுபடுத்தாமலும், சொல்வது வழக்கம்.

இப்பொழுது மஹாப்பிரளய நிலையிலிருந்து வரவர உருவபேதம் அதிகரித்து ஸ்தூலமாகி இப்பொழுதிருக்கும் நிலைக்குப் பிரபஞ்சம் வந்தவழியை ஒருவாறு காட்டினோம். இதுவே நமது இந்திரிய புத்தி சக்திகளுக்கு இயன்றமட்டும் உலக சிருஷ்டியைப் பற்றி அறியக்கூடியது. மஹாப்பிரளய நிலையில் மக்கிக்கிடந்து ஆனந்தமயமாய் இருந்த ஜீவர்கள் இப்படி ஸ்தூலதேகமென்ற சிறைச்சாலையில் அகப்பட்டு பழகிப்பழகி அனுபவ விசேஷத்தால் மலங்கள் கழலப்பெற்று விரக்தி யுண்டாகிக் கோசபாசத்திலிருந்து மோக்ஷமடைவதற்கு வேண்டிய அனுபவ விசேஷங்களை அடைய வந்தார்கள் என்பதை விளக்கிக்காட்டினோம். இப்படிக் கோசங்கள் விருத்தியானவிடத்தும் ஜீவனுக்கு வேண்டிய ஸகாயஞ் செய்வதற்காகக் கடவுளும் கோசங்களில் அகப்படாமல் ஆங்காங்கே தயாராய் இருக்கிறார் என்பதை இங்கு நன்கு விளக்குவோம். ஸ்தூல தேகம் வரும்போது கடவுள் அங்கே விராடரூபமாயிருந்து நமது புண்ணிய பாபங்களை எப்பொழுதும் பார்த்து அவைகட்குத் தகுந்த ஸுகதுக்கம் முதலியவைகளைக் கொடுக்கிறார். சூட்சும தேகத்தில் கடவுள் ஸூத்திராத்மாவாக இருந்துகொண்டு நம்மை மேல்நிலையை அடையும்படி செய்வதற்காக நம்மைப் பரிசுத்தப்படுத்துகிறார். காரண தேகத்திலோ கடவுள் அந்தர்யாமியாய் இருந்துகொண்டு நமக்கு ஆனந்த வைபவத்தைக் காட்டிக்கொண்டும் ஸகல ஜீவாத்மாக்களுக்கும் பிராணன் தரித்தற்கு வேண்டிய சக்தியை அளித்துக்கொண்டும் இருக்கிறார். ஆகையால் எந்நிலையிலும் ஜீவாத்மாக்களிலும் பிரபஞ்சத்திலும் கடவுள் இல்லாத இடமே இல்லை. அவருக்குத் தெரியாமல் நாம் எவ்வித எண்ணங்களையும் எண்ணவே முடியாது. நாம் கெட்ட காரியங்களைச் செய்தால் அவர் நம்மைக்

கண்டுபிடிக்கத் தயாராய் இருக்கிருர். ஒருவருக்கும் தெரியாமல் மலைகளில் கடுந்தவம் புரியும் மஹான்களிடத்தும், ஸதா உழைத்து வேலைசெய்யும் உழைப்பாளியிடத்தும், கடவுள் இருந்துகொண்டு அவரவரது மனோதர்மத்திற்கும், மனப்பூர்வமாய்ப் பாடுபடும் வகைக்கும் தகுந்தபடி பலனைக் கொடுக்கிருர். ஆகையால் கடவுள் இல்லாத இடமே இல்லை. இதற்கேற்பவே தாயுமானவரும் 'எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிருக்கும் அவ்வுயிராய், அங்கங்கே நிற்பதும் நீயன்ருே பராபரமே' என்றும், 'அங்கிங்கெனுதபடி எங்கும் ப்ரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி, யருளொடு நிறைந்ததெது, தன்னருள் வெளிக்குள்ளே அகிலாண்டகோடி எல்லாம், தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த் தழைத்ததெது' என்றும் பாடி இருக்கிருர். எங்கும் அவர் வியாபித்திருக்கிருர் என்ற எண்ணம் நமது மனதில் முதிர முதிர நாம் பரிசுத்த நிலையை அடைவோம். நமது அகத்தும் புறத்தும் இக்கடவுள் இருக்கிருர் என்று நமக்குப் பூர்ண நம்பிக்கை உண்டாய்விட்டதானுல், நாம் வரவரக் கடவுளைப் போலவேயாகிக் கடைசிலேயே மோக்ஷபதவியை அடைவோம் என்பது நிச்சயம்.

---

## 3. சாஸ்திரபுராண சிருஷ்டிகளின் பொருத்தம்.



இவ்விருவித சிருஷ்டிக்கிரமங்களின் பொருத்தத்தை விசாரிக்கப்புகும் முன், இவ்விரு சிருஷ்டிக்கிரமங்களையும் சுருக்கமாய் எடுத்துக் காட்டுவோம்.

புராணங்களில் பிரளயகாலத்தில் பிரபஞ்சம் முழுவதும் ஸமுத்திரஜலத்தில் முழுகி இருந்தனவென்றும் ஸ்ரீமந்நாராயணர் ஸகல கருமங்களையும் விட்டு ஸர்ப்பசயனத்தில் யோகநித்திரை செய்துகொண்டிருந்தார் என்றும், அப்பொழுது ஜீவாத்மாக்களும் அசித்தும் அவருள் அதிசூட்சுமமான நிலையை அடைந்து, அடங்கி இருந்தனவென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. நித்திரை தொடங்கும் காலத்தில், காலதத்துவத்திற்கு, சிருஷ்டி ஆரம்பகாலத்தில் தம்மை எழுப்பும்படி, ஸ்ரீமந்நாராயணர் உத்தரவு கொடுத்திருந்தார். அநேக யுகங்கள் யோகநித்திரையில் இருந்தபின்பு, அவரது இச்சை அவரது நாபியிலிருந்து கமலரூபமாய் வெளி வந்தது. அந்தக் கமலத்துள் தமது அம்சத்தால் அவரே பிரவேசித்தார். உடனே அந்தக்கமலத்தில் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மா உண்டானார். அந்தப் பிர்ம்மாவுக்குத் தாம் இன்னார் என்றும் இன்னவிடத்தில் இருக்கிறோம் என்றும் விளங்காமையால், தாமரைத்தண்டின் வழியாய் ஜலத்துள் புகுந்து கமலத்தின் ஆதாரத்தைக் கண்டுபிடிக்க யத்தனித்து, அம்முயற்சி வீணானது கண்டு கமலத்தின்மேல் வந்து உட்கார்ந்தார். அப்பொழுது 'தபதப' என்ற சப்தம் உண்

டாகத் தியானத்திலிருந்து கடவுளைக்கண்டு, தமது ஸ்ருஷ்டி சக்தி யுண்டாகவேண்டும் என்று பிரார்த்தித்தார். அப்பொழுது கடவுளது அநுக்கிரகத்தால் அவருக்கு ஸ்ருஷ்டி சக்திவர அநேகம் தரம் ஸ்ருஷ்டிகளைச்செய்து, கடைசியில் தமது அங்கங்களிலிருந்து பிரபஞ்சத்தினது விசித்திர விஷயங்களைச் சிருஷ்டித்தார் என்ற இதுவே புராண சிருஷ்டிக்கிரமம்.

சாஸ்திர சிருஷ்டிக்கிரமத்திலோ, செயலற்ற பரமாத்மா தம்முள் அசுத்தத்தையும் ஜீவாத்மாக்களையும் சூட்சுமநிலையில் அடக்கிக்கொண்டிருந்தார். சிருஷ்டி ஆரம்பத்தில் ஸத்வத்தின் பேதத்தால் காரண சரீரங்கள் உண்டாகி ஜீவாத்மா பரமாத்மாக்களைச் சூழ்கின்றன. அப்பொழுது அவர்களுக்கு முறையே ஈசுவரன் என்பதும் பிராஞ்ஞன் என்பதும் பெயர். இதிலிருந்து ராஜஸ தாமஸபேதத்தால் சூட்சும சரீரங்கள் உண்டாகியபொழுது, அவர்கள் முறையே சூத்திராத்மா, தைஜஸன், என்ற பெயர்களை அடைகிறார்கள். கடைசியில் தாமஸகுணத்தின் பிரபாவத்தால் ஸ்தூலசரீரங்கள் உண்டாகி ஜீவாத்மா, பரமாத்மாக்கள் முறையே விராட், ஜீவன் என்ற பெயர்களை அடைகிறார்கள். இதுவே சாஸ்திர சிருஷ்டிக்கிரமம்.

இவ்விரு கிரமங்களையும் ஒப்பிட்டுப்பார்த்தால் அநேக பேதங்களிருப்பனபோலக் காணப்படும். சாஸ்திர சிருஷ்டியில் கடவுள் பிரளய ஸமுத்திரத்தில் யோகநித்திரையில் இருக்கிறார் என்றும், அவரது நாபியிலிருந்து கமலம் வந்ததென்றும், அதில் பிரம்மா உண்டானார் என்றும் சொல்லப்படவில்லை. இதில் சூட்சுமசிருஷ்டியில் தான் அப்பு தன்மாத்திரை உண்டாகிப் பின் பஞ்சீகரணத்தால் தான் ஸ்தூல சிருஷ்டியில் ஜலம் உண்டாகின்றது. பிரளயத்தில் ஜலம்

இருப்பதாகச் சொல்லவில்லை. பிரபஞ்சம் விருத்தியாவதற்காக ஒவ்வொரு சிருஷ்டியிலும் கடவுளே சென்று வியாபிக்கிறார் என்று சாஸ்திர சிருஷ்டியில் சொல்லியிருக்கிறது. ஒரு சிருஷ்டிகர்த்தா உண்டாகி அவரது அங்கங்களில் இருந்து பிரபஞ்ச வஸ்துக்கள் உண்டாயினவென்று எடுத்துக்காட்டப்படவில்லை. இப்படி இந்த இரண்டு கிரமங்களும் மாறுபாடிருக்க எப்படி இவைகளைப் பொருத்துவது? இவைகள் தம்முள் உண்மையாகவே மாறுபட்டிருக்குமாயின், நமது சாஸ்திரங்கள் இப்படி விரோதமான விஷயங்களைச் சொல்லுவானேன் என்ற சங்கை உண்டாகும், இவ்விரண்டும் ஒரே விஷயத்தைத்தான் இரண்டுவிதமாகச் சொல்லுகின்றனவென்று நன்கு விளக்குவோம்.

ஸநாதனதர்மம் அதிகாரி பேதத்திற்குத் தக்கபடி உண்மைகளை ஸ்தூலமாகவாவது சூட்சுமமாகவாவது வெவ்வேறு விதமாய் வெளியிடுகின்றது என்பது எல்லோரும் அறிந்த விஷயமே. அதற்கு உதாரணமாக, கணக்கில் கூட்டல், கழித்தல், முதலியவைகளைச் சிறுவர்களுக்குப் போதிக்குங்கால், அவர்கள் எளிதில் அறிவதற்காக ஸ்தூல பதார்த்தங்கள் மூலமாய்க் கற்பிக்கிறார்கள். ஆனால் அதிலே நன்றாகத் தேர்ந்தவர்களுக்குப் போதிக்குங்கால் பதார்த்தங்களில்லாமலேயே சொல்லி, மேலும் இலக்கங்களுக்குப் பதிலாக அதிசூட்சுமமாய் அக்ஷரங்களை உபயோகப்படுத்தி, அது மூலமாகப் பீஜகணிதத்தையும் கற்பித்து விடுகிறார்கள். டிராம்வண்டி தந்தி முதலியவைகளை வேலை செய்யும்படி தூண்டும் மின்சார சக்தியைச் சிறுவர்களுக்கு முதலில் இரண்டு ரூபமாய் இருக்கின்றது என்று சொல்லி, தேர்ந்த பின்பு, இவ்விரண்டும் ஒரேசக்தியின் வேறான ரூபங்கள் என்று அவர்களுக்கே போதிக்கின்றார்கள். இப்படிப் பிர

கிருதி சாஸ்திர விஷயங்களில் காணப்படுவனபோல், மத விஷயத்திலும் நமது ஸநாதன தர்மத்தில் காணப்படுகின்றன.

மேலும் புராணரூபமாக வேதத்தில் சொல்லப்பட்ட விஷயங்களைச் சொல்லுங்கால் நமது மதம் ஒரு கொள்கையைப் பின்பற்றியே சொல்லுகிறது. அதாவது 'பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு முக்கியபாகத்திற்கும் அதிபதியாய் ஒவ்வொரு தெய்வம் இருக்கிறதென்றும், அது, எங்கும் நிறைந்திருப்பதுபோல் தன்னுள்ளும் வியாபித்திருக்கும் கடவுளது ஸந்நிதான விசேஷத்தால், தன் கீழுள்ளவைகளை அடக்கியாளுகிறது' என்ற கொள்கையே. இவ்விதமான கொள்கையைக்கொண்டே நமது மதம் வேதரகஸியங்களைப் புராண ஜனங்களுக்குப் போதிக்கின்றது: இந்த விஷயத்தை மறவாதிருப்போமேயானால், புராணகதைகள் எவ்வளவு வேடிக்கையாயும், அஸந்தர்ப்பமாயும் தோன்றியபோதிலும், அவைகளில் உள் அர்த்தமாகிய வேதரகஸியத்தை நாம் எளிதில் அறியலாம். இப்பொழுது சொன்ன பொது விஷயங்களை ஸ்ருஷ்டிக்கிரமங்களின் விஷயத்தில் பொருந்திப் பார்ப்போம்.

தேர்ச்சியடையாத மனதை உடையவர்களுக்கு அசித்தும் ஜீவாத்மாக்களும் சிருஷ்டிக்கு முன்பு பரமாத்மாவில் அதிசூட்சும நிலையை அடைந்து லயித்திருக்கும் என்று சொன்னால் அர்த்தமில்லாத வீண் பேச்சு என்றுதோன்றும். அசித்தெல்லாம் சூட்சுமநிலையை அடைந்து பேதமற்றுக் கிடப்பதைப் புராணங்கள் வரம்பற்ற பிரளய ஸமுத்திரம் என்று எடுத்துரைக்கின்றன. இந்த ஜலத்தைச் சூட்சும சிருஷ்டியில் உதிக்கும் அப்பு தன்மாத்திரை என்று விபரீத அர்த்தம் செய்யக்கூடாது. கடவுள் பள்ளிகொண்டிருக்கும் கடலைப் பாற்கடல் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன்

உட்பொருள் என்னவென்றால், பால் எப்படி பிராணிகளை வளரச்செய்து நல்ல நிலைக்குக் கொண்டுவருகிறதோ, அது போல இந்தப் பிரளயப்பாற்கடலிலிருந்தே ஸகலப் பிரபஞ்சமும் ஒழுங்குபட்டு விசித்திரமாய்த் தோற்றவேண்டும் என்பதே. கடவுளது படுக்கையாய் இருக்கும் ஸர்ப்பத்திற்கும் உட்பொருள் உண்டு. பிராணிகளுக்குள் பாம்பானது, விஷஜந்துவாய் அதிககோபம் முதலிய கொடிய குணங்களைப் பூர்ணமாக உடையது. பிரளயகால அசித்தானது தாமத குணத்திற்குக் கீழ்ப்பட்டிருப்பதால் அது கொடிய குணங்களை உடையதாய் இருத்தல்வேண்டும். அப்படிப்பட்ட அசித்தைப் பாம்பு குறிக்கிறது. பாம்பு மண்டலம் போட்டுக் கொண்டிருப்பது, பிரபஞ்சம் அடியோடழிவதும், திடீரென்று உற்பத்தியாவதும் இல்லாமல் எக்காலத்திலும் ஏதாவது ஒரு உருவாய் அழியாமலே இருந்து, சிலகாலங்களில் கடவுளிடத்தில் மறைந்து, மற்றக்காலங்களில் கடவுளிடமிருந்து வெளியாய்க்கொண்டே சக்கிராகாரமாய் மாறிமாறி வந்துகொண்டிருக்கிறது என்ற உண்மையைக் குறிக்கின்றது. இந்த ஸர்ப்பம் கடவுளுக்குப் படுக்கையாய் இருப்பது தாமதம் மேலிட்டபோதிலும் அசித்து கடவுளுக்கு எப்பொழுதும் அடங்கிஇருக்கும் என்பதைக் குறிக்கிறது. மேலும் இது முமுக்ஷுவாய் இருப்பவர்களுக்குப், "போதமாமிராஜன் றுஞைப் புந்தியைம் புலன்களெல்லாம்; தூதராயிருக்கப் பெற்றால் ஸகலமு மடங்குந் தானே." என்றபடி காமக்குரோதாதிகளைத் தாம் அடக்கி யாள வேண்டுமே ஒழிய, அவைகளுக்குத் தாம் அடிமையாய் விடகூடாது என்பதைக் காட்டுகிறது. பிரபஞ்ச சிருஷ்டிக் குத் தகுந்த சமயம்வருங்கால்தம்மை எழுப்பும்படியாக கால தத்துவத்திற்குக்கட்டளையிட்டுவிட்டுக் கடவுள் யோகநித்திரை

யில் இருந்தார் என்பது, ஸ்திதி காலத்தில் சிதறிப்போய் இருக்கும் பிரபஞ்சத்தின் சக்திகள் திரும்பப் பழையபடி உண்டாகும் வரையில் கடவுள் யோகநித்திரையில் செயலற்றிருக்கத் தீர்மானித்தார் என்ற உண்மையைக் குறிப்பிடுகிறது. 'கால தத்துவப்பேரீசன்' என்று சொல்லியபடி காலமானது கடவுளது அம்சமானதனால் அவரது தீர்மானத்தால் நடக்க வேண்டியவிஷயத்தைக் காலத்தினிடத்தில் ஏற்றிச் சொல்லப் பட்டிருப்பது நியாயம்தான்.

இப்படி அநேக காலம் யோக நித்திரையில் இருந்து விட்டுப் பின்பு சிருஷ்டிசக்தியைச்சேர்த்துத் தமது நாபி வழியாகவெளியிட்டதாகவும், அது உடனே ஒரு கமலத்தின் உருக்கொண்டதாகவும் சொல்லப்பட்டது. இப்படி வெளிவந்தது என்பதன் குறிப்பு என்னவென்பதையும், அது நாபியின் வழியாய் வந்ததன் குறிப்பு என்ன என்பதையும் சற்று விசாரிப்போம். சாஸ்திரக்கிரமத்தில் சூட்சும சிருஷ்டிக்கு முன்பு, கடவுள் காரண சரீரத்தில் ஈசுவரன் என்ற பெயரை அடைந்து, நிரதிசய ஆனந்தத்தை அநுபவிக்கிறவராய்ச் சிருஷ்டித்தொழிலிற்கு வேண்டிய சக்தியோடு விழித்திருப்பதாகச் சொன்னோம். அப்பொழுது அசித்து கடவுளிடம் இருந்து வெளிவந்து செவ்வையான உருவமின்றி இருந்தபோதிலும், கடவுளைச்சூழ்ந்துதான் மேன்மேலும் விசித்திரமாய்ப் பிரிந்து தோன்றத் தயாராய் இருப்பதாகவும் சொன்னோம். இம்மாதிரியாய் அசித்து முதலில் உண்டாவதை நாபீகமலம் என்று புராணம் சொல்லுகிறது. குழந்தை தாயின் கர்ப்பத்தில் இருக்கும்பொழுது அது தனது நாபியிலுள்ள கொடிமூலமாய்த் தாயுண்ணும் ஆகாரத்தின் ரஸம் முதலியவைகளைத் தானும் கொஞ்சம் இழுத்துக் கொள்ளுகிறதென்றும், தாய் தேகத்தில் இருந்த ரத்தமும்

அக்கொடியின் வழியாய்க் கொஞ்சம் குழந்தைக்குப்போய் அதை உயிர் தரிக்கும்படி பண்ணுகிறதென்றும், தேகதத்துவ சாஸ்திரத்தில் சொல்லி இருக்கிறது. இதனால் உற்பத்தி காலங்களில் நாபியே பிராணஸ்தானம் என்று தெரிகிறது. ஆதலால்தான், செவ்வையான உருவின்றிக் கடவுளது சிருஷ்டி சக்தியின் பரிணாமத்தோடு தோன்றும் அசித்தைக் குறிப்பிக்கும் இக்கமலமானது, கடவுளது நாபியிலிருந்து வருவதாகச்சொல்லி யிருக்கிறது.

இதன் பின்பு கடவுள் அந்தத் தாமரை முதலியவைகளில் தமது அம்சத்தால் பிரவேசித்தார் என்றும், உடனே பிரம்மா உண்டானார் என்றும், புராணம் சொல்லுகிறது. இப்படிக் கடவுள் பிரவேசிக்க, பிரம்மா உண்டானார் என்றால், கடவுளே சிருஷ்டி செய்வதற்காக ராஜஸ குணத்தைத் தாங்கிப் பிரம்மா உருவமாய் வந்தார் என்பதற்கு என்ன ஸந்தேகம். இந்தப் பிரம்மாவையே சாஸ்திரக் கிரமத்தில் ஹிரண்யகர்ப்பர் என்று சொல்லி இருக்கிறது. முந்திய நிலையில் ஈசுவரன் எனப்பெயர்பெற்று, ஒழுங்கான அங்கங்கள் ஒன்றும் இன்றி, சக்தி உருவாய் மாத்திரம் இருந்த கடவுள், இப்பொழுது பதினேழு தத்துவங்களாகிய சூட்சுமதேகத்தோடு வெளியானார். இந்நிலையில் ராஜஸம் ஓங்கி ஸத்வம் அடங்கி இருப்பதால், தாம் இன்னார் என்பதும், தாம் பிறந்தவிடம் இன்னது என்பதும் பிரம்மாவுக்கு விளங்கவில்லை. கடவுளது விசித்திர சக்தியைக் குறிப்பிக்குந் தாமரைத்தண்டின் வழியாய் இறங்கித் தமது ஆதாரத்தைப் பிரம்மாவால் கண்டுபிடிக்க முடியவில்லை. இத்தருணத்தில் கடவுள், 'தப, தப' என்று சொல்லிப், பிரம்மாவை நிஷ்டை செய்யும்படி ஏவ, அவர் ஆத்மநிஷ்டையிலிருந்து கடவுளோடு ஸம்பந்தப்பட்டதனால் அவருக்கு ஞானம் உதயமா

யிற்று. இந்தப் பாகத்திலிருந்து உண்மையை அறியும் விஷயத்தில், எவ்வளவுதான் வெளிப்பிரபஞ்சத்தில் தேகசிரமப் பட்டபோதிலும், உண்மையை ஸ்தூல இந்திரியங்களால் அறிய முடியாதாகையால் அவை பயனில்லாமலே போகும் என்பதையும், நிஷ்டையில் மனம் ஏகாக்ரப்பட்டபோது தான் உண்மை உள்ளபடி விளங்கும் என்பதையும் முமுக்ஷுக்கள் எளிதில் அறிந்துகொள்ளலாம். இவ்வாறு நிஷ்டை செய்யுங்கால் பிரம்மாவுக்கு, முன் கல்பத்தில் பிரபஞ்சம் இருந்தமாதிரி தெரிந்ததென்றும், உடனே தாமரையை மூன்று பாகமாகப் பிரித்து, இப்பொழுது இருக்கும் உலகங்களது சூட்சுமபாகங்களை உண்டாக்கினார் என்றும், சொல்லியிருக்கிறது. இது, பிரம்மா ஒன்றையும் புதிதாகச் சிருஷ்டித்து விடவில்லை என்பதையும், முன் இருந்தவைகளையே விசித்திரமாய்த் தோன்றும்படி செய்திருக்கிறார் என்பதையும் குறிக்கின்றது. முன் செய்யவேண்டியவைகளைக் கடவுளே செய்துவிட்டமையால் இப்பொழுது பிரம்மா சூட்சும சிருஷ்டியையும், ஸ்தூல சிருஷ்டியையும், உலகத்தில் சிருஷ்டித்தொழிலை விருத்திசெய்வதற்கு வேண்டிய ஸ்வயம்புவாகிய புருஷர்களையும் சிருஷ்டிக்க வேண்டியதே.

இப்படி நிஷ்டையால் சிருஷ்டி சக்தியை அடைந்து, பிரபஞ்சம் முன் கல்பத்தில் இருந்த மாதிரியை அறிந்து கொண்டு பிரம்மா முதலில் பஞ்ச அவித்தைகளைச் சிருஷ்டித்தார். இதனால் திருப்தியடையாதவராய் மஹாஸந்நியாஸிகளாகிய ஸநகாதியோகிகளைப் பின்பு சிருஷ்டித்தார். இவர்கள் பிரம்மாவினது மானஸபுத்திரர்கள். அவித்தியைகளின் ஸ்வபாவமானது நான்கு மானஸபுத்திரர்களின் ஸ்வபாவத்திற்கு நேர்விரோதமாய் இருந்தது. முன்னையவற்றின் ஸ்வபாவம் அஞ்ஞானமே. பின்னவர்களின் ஸ்வபாவம்

நிஷ்களங்கமான ஞானமே. ஸகலசாஸ்திரங்களிலும் அஞ் ஞானத்தை வயது முதிர்ந்த கிழவனுகவும், ஞானத்தைச் சிறிய வாலிபனுகவும் கொள்வதற்கு ஏற்பவே, இங்கும் அஞ் ஞானங்கள் முன்பு உண்டானவைகள் என்றும், ஸநகாதி கள் பின்புண்டானவர்கள் என்றும், சொல்லப்பட்டிருக் கிறது. இவைகளாலே சிருஷ்டி விருத்தியாவது அஸாத்தி யம்; ஏனெனில், முன்னேயவை அறியாமை நிறைந்திருப்ப தால் சிருஷ்டிக்கு வேண்டிய சக்தியை உடையனவாய் இருக்க மாட்டா.

பின்னவர்களோ மஹாஞானிகளாய் இருப்பதால் சிரு ஷ்டி விஷயத்தில் தமது சக்திகளே உபயோகப்படுத்த மன மில்லாதவர்களாய் இருப்பார்கள். ஆனால் இவ்விரண்டுவித சிருஷ்டியும், பின்னர் சிருஷ்டியாய் விருத்தி யடைந்து வருவதற்கு அதிக அவசியம், ஏனெனில் அவித்தியா ஸம் பந்தமில்லாமற்போனல் சிருஷ்டி கர்த்தர்கள் சிருஷ்டிக்க இசையமாட்டார்கள்; ஸநகாதி யோகிகளேப்போன்ற மஹாத்மாக்கள் இல்லாவிடில் உற்பத்தியாகும் பிராணிகளுக் குப் பின்பற்றி நெறிதவருது நடந்து உய்வதற்குவேண்டிய மஹாத்மாக்கள் இல்லாமல்போய், அவர்கள் அதோகதியை அடைந்து அவஸ்தைப்படுவார்கள். இவைகளேப் பிரம்மா கடவுளின் தூண்டுதலால் ஸ்ருஷ்டித்தாரே ஒழிய, தாமாக வே செய்யவில்லே. கடவுள் இம்மாதிரி ஜீவாத்மாக்களின் உற்பத்திக்கும் விருத்திக்கும் உபயோகமாய் இருப்பதற்கா கவே பிரம்மாவை இவ்விருவித சிருஷ்டிகளேயும் செய்யும் படி தூண்டினர்.

இப்படி ஸநகாதிகளே ஸ்ருஷ்டி செய்தான பின்பும் தமது சிருஷ்டி விருத்தியாகாதது கண்டு, தாமே மரீசி முத

வியவர்களைத் தமது அங்கங்களிலிருந்து பிரம்மா ஸ்ருஷ்டி செய்யத் தொடங்கினர். இந்நிலையில் பிரபஞ்சத்திலுள்ள ஸகலப் பிராணிகளது சரீரமும் பிரம்மாவின் சரீரத்தின் பாகமாதலால், பிரம்மா இக்காலத்தில் ஸ்தூல சிருஷ்டி செய்கிறார் என்பதும், அவர் விராட்ஸ்வரூபர் என்பதும் எளிதில் விளங்கும். இந்தவிராட் ஸ்வரூபத்தையே புருஷ ஸூக்தத்தில், ஆயிரம் தலை, ஆயிரம் கண், ஆயிரம் கால் முதலியவைகள் உடையதாகவும், புராண சிருஷ்டியில் சொல்லப்பட்டிருக்கும் வஸ்துக்களைத் தமது அங்கங்களி லிருந்து சிருஷ்டிப்பதாகவும், வர்ணித்திருக்கிறது. ஆகை யால் புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட விராட்டும், புரா ணத்தில் சொல்லப்பட்ட ஸ்தூல சிருஷ்டி செய்யும் அவஸ ரத்திலிருக்கும் பிரம்மாவும், சாஸ்திர சிருஷ்டிக்கிரமத்திற் சொல்லப்படும் வைசுவானரன் அல்லது விராட் என்பதும் ஒன்றே. இவை தம்முள் பேதமே இல்லை என்பது எளிதில் விளங்கும்.

இதுவரையிலும் புராண சிருஷ்டியும் சாஸ்திர சிருஷ் டியும் நன்றாய்ப் பொருந்திவிட்டன. ஆனால் பிரம்மா தமது பெண்ணிடம் காதல் கொண்டார் என்ற விஷயம், எப்படிப் பட்ட கெட்டவரும் செய்யக் கூசும் விஷயம் அல்லவா? இப்படி இருக்க இவர் இக்காரியத்தைச் செய்தது தகுதியா? இப்படிப்பட்டவரை நாம் ஆராதித்தல் தகுமா? கடவுளுக்கு அடுத்தபடியில் உண்டான இவருக்குக் காமம் முதலியவை கள் உண்டாகலாமா? தன் பெண்ணைப் பெண்சாதியாகக் கொள்ளுதல் பிரம்மாவுக்கு அடுக்குமா? இப்படி பிரம்மா நடந்துகொண்டதால் என்ன விசேஷப் பிரயோஜனமுண் டானது? என்ற இவ்விதமான சங்கைகள் நமது மனதைக் கலக்கலாம். இது தோற்றமாத்திரத்தில்தான் அடாத காரிய

மாய் இருக்கிறதே ஒழிய உண்மையில் அப்படிப்பட்ட காரிய மில்லை என்பதை நன்கு விளக்குவோம். பிரம்மா சூக்ஷும விஷயங்களுக்கு அதிதேவதை என்பதும், வாசா அல்லது ஸரஸ்வதி என்பவள் வாக்கிற்கு அதிதேவதை என்பதும் யாவரும் அறிந்தவிஷயமே. ஆகையால் பிரம்மாவிற்கும் ஸரஸ்வதிக்கும் நடந்த விவாஹமானது, அர்த்தத்திற்கும் அந்நியோந்ய ஸம்பந்தத்தைக் குறிப்பிக்கின்றது. வெறும் சப்தங்களால் பிரயோஜனமில்லையாகையால், இந்த விவாஹத் தால் பாஷைகள் உண்டாக இடமுண்டாயிற்று. இந்த விவா ஹத்தில் பிரம்மாவுக்கு அதிகக் காதல் உண்டானதாகச் சொல்லி இருக்கிறது. இப்படிப் பிரம்மா காட்டிக்கொண்டது, மரீசி முதலிய பிரஜாபதிகளைத் தமக்குப் பந்துக்களான பெண்மணிகளை விவாஹம்செய்யும்படி ஏவிச் சிருஷ்டித்தொ ழிலை விருத்திசெய்ய வேண்டியதற்கு, அதிக அவசியம்தான். ஏனெனில் சிருஷ்டியின் ஆரம்பகாலத்தில், ஜனங்கள் கொஞ்சமாய் இருக்கும்பொழுது, இக்காலத்திலுள்ள ஒழுங் குகளை வைத்துக்கொண்டு பார்த்தால் ஒவ்வொருவருக்கும் நெருங்கின பந்துத்வம் இருக்கவேண்டியது அவசிய மாத லால்,விவாஹம் என்பதே நடக்க இடமில்லாமல் போய்விடும். ஆகையால் பிரம்மா இப்படி முதலில் செய்து காட்டாமல் போனால் சிருஷ்டி விருத்தியாகாமல் தடைபட்டு நின்று விடும். இம்மாதிரியான விஷயங்கள் ஸகல மதங்களிலும் சிருஷ்டி விஷயமான சரித்திரங்களில் காணப்படுகின்றன. கிறிஸ்து மதத்தில், கடவுள் பிரபஞ்சத்தை விருத்திசெய்ய எண்ணி, முதலில் ஆதாம் என்ற ஆதிபுருஷனையும், பின்பு அவன் தூங்குகையில் அவனது விலாஎலும்பிலிருந்து ஈவ் என்ற ஸ்திரீயையும் உண்டாக்கினாராம். அதன் பின்பு அந்த ஆதாமிற்கு பெண் அல்லது ஸகோதரி முறையிலிருக்

கும் ஈவை விவாஹம் செய்துகொள்ளும்படி கொடுத்தாராம். இது போன்ற விஷயம் ஸகல மதங்களிலும் சிருஷ்டி ஆரம்பத்திற் காணப்படும். பிரம்மாவுக்கும் ஸரஸ்வதிக்கும் நடந்த விவாஹத்தை இது போன்ற விவாஹம் என்று கூடச்சொல்ல இடமில்லை. ஏனெனில் இவர்கள் இருவருக்கும் புத்திரர்கள் ஒருவரும் உண்டாகவில்லை. இது மரீசி முதலியவர்களை விவாஹ விஷயத்தில தூண்டுவதற்காக மாத்திரம் செய்ததே ஒழிய வேறில்லை. மேலும் இது ஸாமான்னியமான விவாஹம் அல்ல என்பதை குறிப்பிக்கும் மற்ருெரு விஷயம் இக்கதையில் காணப்படுகிறது. பிரம்மாவுக்குமட்டும் காதல் உண்டானதாகவும், வாசாவுக்கு அஃது உண்டாகவே இல்லை என்றும், சொல்லப்பட்டிருக்கிறது. வாக் அர்த்தம் இவைகளில், வாக்குக் கேவலம் ஜடம் அறிவற்றது ஆதலால், அதற்கு ஒருவித ஆசையும் உண்டாகவில்லை என்றும், அர்த்தமானது சித்துருவாய் இருந்து வார்த்தையினுட் புகுந்து அதற்கு உயிரை அளிப்பதால், இதற்கு மாத்திரம் காதல் உண்டானதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இம்மாதிரியாய் முதலிற் பிரம்மா செய்ய அதைக்கண்ட மரீசி முதலிய பிரஜாபதிகளுக்கு விவாஹ விஷயத்தில் வேண்டிய தைரியமுண்டாய்விட, உடனே பிரம்மா ஆவியுருவமாகி மறைந்தார் என்றும், பின்பு இந்த விஷய ஸம்பந்தமே இல்லாது தோன்றிஞர் என்றும், உடனே அர்த்தகர்ப்பிதையான வாக்கானவள் இப்பிரம்மாவின் நாவில் வந்திருந்தாள் என்றும் சொல்லியிருக்கிறது. இவ்வாறு ஸரஸ்வதி வந்த உடன்தான், பிரம்மாவின் வாய்களிலிருந்து ஸகலவேதங்களும் ஸகல கலைஞானங்களும் பிறந்தனவாம். இதன் பின்பு மரீசி முதலியவர்கள்' சிருஷ்டியை விருத்திசெய்யாதிருப்பதைக் கண்டு, தானே இருபாகமாகப் பிரிந்து அவற்றிலிருந்து

பிள்ளைகளையும் பெண்களையும் சிருஷ்டித்து, பெண்களை மரீசி முதலியோருக்குக் கொடுத்தார். அவர்களால் தேவாஸுரர்கள் உண்டாக, பிரபஞ்சம் ஒருவாறு உருவகப்பட்டு இப்பொழுதிருக்கும் நிலையை அடைந்ததாம்.

நண்பர்களே! தோற்றமாத்திரத்தில் அநீதியாய் இருக்கும் இக்கதையுள் அடங்கியிருக்கும் அரிய விஷயத்தைப் பாருங்கள்! மேலெழுந்த வாரியாய் நுனிப்புல் மேயும் குணமுடைய ஆத்திரக்காரர்கள் அவஸரப்பட்டு இம்மாதிரியான விஷயங்களில் தமது அப்பிராயங்களை வெளியிடாது சற்று நிதானித்துப் பார்க்கட்டும்! அவர்கள்மாத்திரம் ஸூக்ஷ்மமாய் நிதானித்து விசாரித்துப் பார்ப்பார்களேயானல், அதி விநோதமாய்க் காணப்படும் புராணகதைகளில் மறைந்து கிடக்கும் வேதரகஸியங்கள் அவர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கி, அவர் மனதில் குடிகொண்டிருக்கும் அஞ்ஞானந்தகாரத்தைப் போக்கி, அவர்களை எளிதில் மோக்ஷமடையும்படி செய்யும் என்பதற்குச் சந்தேகமில்லை.

---

# 4. திரிமூர்த்திகளின் ஸமரஸம்



புராண சிருஷ்டிக்கிரமத்தில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்றுண்டு. அது பிரம்மா செய்த ஸ்துதியில் வரும் 'உம்மிடத்திலிருந்து உண்டாகிற பிரபஞ்சம் என்ற விருக்ஷத்திற்கு, நானும், விஷ்ணுவும், ருத்திரனும் முக்கியமான கிளைகளாம்.' என்ற வாக்கியமே. இதை நாம் மறந்த பொழுதுதான் திரிமூர்த்திகளுள் பேதம் கற்பிக்க வேண்டிவரும். மும்மூர்த்திகளும் ஒரேகடவுளது அவஸரமாகையால், அவர்களுள் ஏற்றத்தாழ்வை ஒருபொழுதும் கற்பிக்கக்கூடாது. இது நன்ருய் விளங்குவதற்காக ஒரு உதாரணம் எடுத்துக்கொள்ளுவோம். ஒரு வகுப்பிற்கு உபாத்தியாயராய் இருப்பவர் அநேகம் பிள்ளைகளை அடக்கியாளவேண்டியவராகிருர். நல்ல பிள்ளைகளுக்குப் பாடம் கற்பிக்குங்கால் உபாத்தியாயர் மஹா ஸந்தோஷமுடையவராகவும், நல்ல குணமுடையவராகவும் காணப்படுகிருர். படியாத சில பிள்ளைகளைப் பார்த்தால் அவரது ஸந்தோஷமெல்லாம் எங்கேயோ போய்விடுகின்றது. உடனே ஒருவிதமான கோபத்தோடு அவர்களை அடக்கிப் பாடம் கற்பிக்கின்ருர். ஏதாவது ஒரு தவறு செய்த பையனைக் கண்டுவிட்டால், உடனே அதிக கோபத்தை வரவழைத்துக்கொண்டு, அவனுக்குத் தகுந்த தண்டனையைச் செய்யத்தொடங்குகிருர். இப்படி ஒரே உபாத்தியாயர் ஸமயங்களுக்குத் தக்கபடி மூன்று விதமாய்த் தோன்றுகிருர். இம்மூன்று விதமாயும் உபாத்தியாயர் இருக்கவேண்டியது அவசியமே.

இதில் ஒருவிதமாய்க்காணப்படும் உபாத்தியாயரே மேலான வர்; மற்றைய விதமாய்க்காணப்படும் உபாத்தியாயர் தாழ்ந் தவர் என்று நாம் எப்படிச் சொல்லலாம். இதுபோலப் பிர பஞ்ச விஷயத்தில் கடவுளது இம்மூன்று உருவங்களும் அவசியமானவைகளே. இப்படி இருப்பதால் இவைகளி டத்தில் ஏற்றத்தாழ்வைக் கற்பிப்பது நியாயம் அன்று. மதத்துவேஷம் நிறைந்தவர்களே வீணுகப் பல தர்க்கம்பேசி தொண்டைத் தண்ணீரை வற்ற அடித்துக்கொள்ளுவார்கள். சாஸ்திரங்களில் இம்மதத் துவேஷிகளது கொள்கைகளுக்கு ஆதாரமே இல்லை. இப்படிப்பட்ட கொள்கையைப் பின்பற் றிஞல் பாபமே ஸம்பவிக்கும் என்பதற்குச் சாஸ்திரங்களி லிருந்து அநேக ஆதாரங்கள் காட்டலாம். மேலும் பிர பஞ்ச விஷயத்தில் காலத்திற்குத் தக்கபடி கடவுள் தமது மூன்றுவித சக்திகளில் ஒன்றை மேலாகக்கொண்டு, மற்ற இரண்டும் அடங்கிநிற்கத் தோன்றுவார். இப்படித் தோன் றுவதால் அந்தக்காலத்தில் மேலான சக்தியேதான் உத்தமம் மற்றவைகளெல்லாம் அதமம், என்று சொல்ல ஒருவன் துணிந்தால், ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொரு சக்தியை மேல் என்று சொல்லவேண்டியதாக வ்ரும். ஆகையால் ஒன்றைவிட ஒன்று எப்பொழுதும் சிறந்தது என்றும், மற் றையவிரண்டும் தாழ்ந்தன என்றும் சொல்வது யுக்திக்குப் பொருந்தாது. ஆகையால் மும்மூர்த்திகளுள் ஒருவருக்கு ஏற்றத் தாழ்வைக் கற்பித்தல் சாஸ்திரத்திற்கு விரோதம் என்பதும் பாபஹேதுவென்பதும், யுக்திக்குப் பொருந்தாது என்பதும், எளிதில் விளங்கும்.

மும்மூர்த்தி பேதவிஷயமான சண்டைகளில் பிரம் மாவை ஒருவரும் அதிகமாய் ஏற்றிச்சொல்வது வழக்க மில்லை. இந்தச் சண்டையானது பெரும்பாலும் ‘ அரன

திகன், உலகளந்த அரியதிகன்' என்றே உண்டாகி வளர்கிறது. இம் மும்மூர்த்திகளும் ஒரு மரத்தினுள்ள மூன்று முக்கியக் கிளைபோல்வார் என்பதை எண்ணினுல் இச்சண்டை நிகழ்வதற்கு இடமே இல்லை என்று முன்னமேயே காட்டிவிட்டோம். புராணசிருஷ்டிக்கிரமத்தில்,

'நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்'

என்றிருப்பதால், சிவன் விஷ்ணுவையும் பிரம்மாவையும் விட மிகத்தாழ்ந்தவர் என்று சிலர் ஸ்தாபிக்க எண்ணுகிறுர்கள். இது முன்சொன்னதைவிட மனிதர்களை அதிக பாபத்திற்கு ஆளாக்கிவிடும். அவர்கள் சொல்லுகிறதுபோலவே ஸம்ஹார கர்த்தாவாகிய ருத்திரர் கடைசியில் உண்டானதாக வைத்துக்கொள்ளுவோம். முதலில் சிருஷ்டி சக்தி தோன்றிப் பின்பு பரிபாலன சக்தி தோன்றி அதன் பின்பு ஸம்ஹார சக்தி தோன்ற வேண்டியது நியாயமே. இப்படித் தோன்றும் ஒழுங்கால் பிந்தியது முந்தியதை விடக் கீழானது என்பது யுக்திக்குப் பொருந்தாத விஷயம். இப்பொழுது பாலை நாம் குடிப்பதாக வைத்துக்கொள்ளுவோம். குடித்த உடன் பால் நமக்கு ருசியாய் இருப்பதாகத் தெரிய வருகிறது. அதன் பின்பு நமக்குக் களைப்புத்தீருகிறது. இப்படி ஒழுங்காய் வருவதால், பால் அதன் ருசியைவிட சிரேஷ்டம் என்றும், அதன் ருசி அதன் களைப்புத்தீர்க்கும் சக்தியைவிட மேல் என்றும் நாம் எப்படிச்சொல்வது. ஆதலால் இவர்களிடத்தில் அந்தக்காரணத்தால் மாத்திரம் பேதபுத்தியோடிருப்பது யுக்திக்குப் பொருந்தாது.

ஆதலால் இதுவரையில் சொல்லிவந்தவைகளிலிருந்து, பிரபஞ்ச விஷயங்களுக்கு மும்மூர்த்திகளும் அவசியமான

வர்கள், என்பதும் 'திரிபுரமூன்றெரித்தானும், மற்றைமலர் மிசை மேலயனும் வியப்ப' என்று ஆழ்வார்கள் பாடியதற்கும், 'பிரமன் மால் அறியாத பெருமையன்' என்று நாயனூர்கள் பாடியதற்கும் உள்ள உட்கருத்தை, அவர்கள் பாடிய மற்றைய பாட்டுகளை ஆராய்ந்து அறிந்து தெரிந்து கொள்ளாது, முறையே விஷ்ணு சிவன் இவர்களுக்கு ஏற்றத்தைக் கற்பித்துச் சண்டையிடக்கூடாது என்பதும் விளங்கும். ஆனால் தியான விஷயத்தில் ஒவ்வொரு மூர்த்தியினிடத்தில் ஒவ்வொருவருக்கு மிகுந்த அன்பு உண்டாகலாம். அப்பொழுது அவ்வம்மூர்த்திகளை ஆராதித்து உய்யமுயன்ற அவஸரத்தில் சொன்ன பாட்டுகளே முன் குறிப்பிட்ட பாடல்கள். அதை நாம் எடுத்துக் கொண்டு சண்டையிட்டு வீண்பேச்சுப் பேசவேண்டும் என்ற எண்ணம் ஆழ்வார்களுக்காவது நாயன்மார்களுக்காவது கொஞ்சமேனும் இல்லை யென்பது அவர்களது திவ்யமான பாசுரங்களை முற்று முணர்ந்தவர்களுக்கு எளிதில் விளங்கும். ஆகையால் மும்மூர்த்திகளில் தமது இஷ்டப்படி யாரையாவது பரம்பொருள் என்று எண்ணித் தியானம் செய்து நிலைநிறுத்த முயலலாம். ஆனால் இதை வைத்துக் கொண்டு அம்மூர்த்தியே சிறந்தவர் என்று, பிறாது கொள்கையைக் கவனியாது, போதித்து மற்றை மூர்த்திகளைத் தாழ்த்திவிட்டுச் சண்டைகளை உண்டாக்குவதும், மற்றை மூர்த்திகளை ஏற்றமாய்க்கொண்டிருக்கும் ஜனங்களிடத்தில் பகை பாராட்டுவதுமே தகாத காரியங்கள். இப்படிப்பட்ட தகாத காரியங்களை விடாது செய்பவர் படாது படுவர் என்பது திண்ணம். நமது தேசத்தில் இவ்விதமான சண்டையால் அநேகங் கெடுதிகள் உண்டாய் விட்டன. நண்பர்களே! இதை இப்படியே விட்டுவிடுவோம். நாம் நித்தியம் செய்யும்

ஜபம் முதலியவைகளில் பரம்பொருளது உருவமாகிய மும்மூர்த்திகளையும் ஞானஸம்பத்தை எனக்குத் தந்தருள வேண்டுமென்று நாம் பிரார்த்திக்கிறோம் அல்லவா? மேலும் 'சிவனுகித் திசைமுகனுய்த் திருமாலாகி, என்று அப்பர் சுவாமிகளும்,

'உணர்ந்துணர்ந் துரைத்துரைத்தரி யயனரனெனுமிவரை,
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின்
மனப்பட்டதொன்றே'

என்றும், 'அவாவறச்சூழரியை யயனையரனையலற்றி அவாவற்று வீடுபெற்ற' என்றும் நம்மாழ்வார் அருளிச்செய்திருக்கின்ற இவைகளை எல்லாம் ஸதாகாலமும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு மூர்த்தித் துவேஷமாம் பேய் நம்மை வந்து அணுகாமலும் நமது தியான விஷயங்களுக்குக் குறைவு வாராமலும், நாம் மிகுந்த ஜாக்கிரதையோடு நடந்துகொள்ள வேண்டும்.

இதுவரையிலும் சொன்னவைகள் எல்லாம் சைவர்கள் ஆராதனை செய்யும் சிவனும், வைஷ்ணவர்கள் ஆராதனை செய்யும் விஷ்ணுவும் திரிமூர்த்திகளுள் ஒவ்வொருவர் என்பதை வைத்துக்கொண்டு சொன்னது. உண்மையில் உள்ளது இப்படியல்ல. சைவர்கள் தாம் ஆராதிக்கும் சிவனை பரம்பொருளே எனக்கொண்டு வைஷ்ணவர் கடவுளை மும்மூர்த்திகளில் ஒருவர் என்று எண்ணுகிறார்கள். இக்கொள்கைக்கு ஆதாரம்,

'காரொளிய திருமேனிச் செங்கண்மாலுங்
கடிக்கமலத் திருந்தயனும் காணுவண்ணம்,
சீரொளிய தழற்பிழம்பாய்நின்ற தொல்லைத் திகழொளியை'
* * * * * * "

என்ற அப்பரது திருவாக்கும் இதுபோன்ற மற்ற நாயன் மாரது திருவாக்குகளுமே. மும்மூர்த்திகளுக்கும் பரம் பொருளுக்கும் உள்ள ஸம்பந்தத்தைச் சொல்லுங்கால் ஸம்ஹார மூர்த்தியாகிய சிவனிடத்து பரம்பொருளது ஸாந் நித்யம் விசேஷமாய் இருக்கிறது என்று சைவர் சொல்லு கிறார்கள். இதற்கு ஆதாரம்,

'அங்கமலத் தயனொடு மாலாகி மற்று
மதற் கப்பாலொன்றாகி யறியவொண்ணாச்
செங்கனகத் தனிக்குன்றைச் சிவனை,
* * * * * * * "

என்ற அப்பர் திருவாக்கே. மேலும், சிவமஹாத்மியத்தைச் சொல்லுங்கால் விஷ்ணு அதை லக்ஷ்மிக்குஉபதேசித்தாரெ ன்றும், விஷ்ணு சிவனது பிரதமபக்தர் என்றும், அவர் ஒரு அவஸரத்தில் தாம் சிவபூஜைக்காகக் கொண்டு வந்திருந்த தாமரை மலர்களில் ஒரு மலர் குறைந்திருப்பதைக்கண்டு அதற்குப் பதிலாகத் தமது கண்ணைப்பிடுங்கி அர்ச்சனைச் செய்து பரிசுத்தரானார் என்றும், சிவனை ஏற்றமாயும் விஷ்ணுவைத் தாழ்வாயும் சொல்லும் இவைபோன்ற, அநேக கதைகள் சிவபுராணம் ஸ்காந்தம் முதலியவைகளில் காண லாம். ஆகையால் முன்சொன்னவைகளிலிருந்து சைவர்கள் தாம் ஆராதிக்கும் சிவனைப் பரம்பொருள் என்றும், வைஷ் ணவர் ஆராதிக்கும் விஷ்ணுவை மும்மூர்த்திகளில் ஒருவர் என்றும், பரம்பொருளது ஸாந்நித்யம் திரிமூர்த்திகளுள் ஸம்ஹாரக் கர்த்தராகிய சிவனிடம் அதிகம் என்றும் எண்ணு கிறார்கள் என்பது எளிதில் விளங்கும்.

வைஷ்ணவர்களும், விஷ்ணு, சைவர்கள் ஆராதிக்கும் சிவன் முதலியவர் விஷயத்தில் இதைப்போலவே தங்களுக்

கேற்ற கொள்கைகளை உடையவர்களாய் இருக்கிருர்கள். அவர்கள் விஷ்ணுவையே பரம்பொருள் என்றும், சைவர்கள் ஆராதிக்கும் சிவனைத் திரிமூர்த்திகளில் ஒருவர் என்றும், திரிமூர்த்திகளுள் விஷ்ணுவினிடத்தில் பரம்பொருளது ஸாந்நித்தியம் அதிகமாய் இருக்கிறது என்றும் எண்ணுகிருர்கள். இவைகளுக்கு முறையே ஆதாரம்,

'பெண்ணுலாம் சடையினனும் பிரமனும் உன்னைக்காண்பான்.
எண்ணிலா ஊழியூழி தவஞ்செய்தார் வெள்கிநிற்ப'

என்ற தொண்டர் அடிப்பொடியாழ்வார் அருளிச்செயலும்,

'யானும் தானுயொழிந்தானை யாதும்எவர்க்கும் முன்னோனை;
தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்த தனிமுதலை'

என்ற நம்மாழ்வார் அருளிச்செயல் முதலியவைகளுமே. முன்சைவர்கள் விஷயத்திற் கூறியதுபோல் விஷ்ணு மஹத்துவத்தைச் சொல்லுங்கால் சிவன் அதைப் பார்வதிக்கு உபதேசிப்பதாகவும், சிவன் விஷ்ணுவினது முக்கிய பக்தர் என்றும், சிவனுக்கு ஆபத்துக்கள் வந்த ஸமயங்களில் விஷ்ணுவை ஆராதித்து அவைகளிலிருந்து நீங்கிஞர் என்றும், இதைப்போலவே விஷ்ணுவை ஏற்றமாயும், சிவனைத் தாழ்வாயும் சொல்லும் அநேக கதைகள் விஷ்ணுபுராணம், பாகவதம் முதலியவைகளில் காணலாம். ஆகையால் சைவர்கள் சிவவிஷ்ணுக்களைப்பற்றி எவ்வாறு ஏற்றத்தாழ்வாய்ச் சொல்லுகிருர்களோ, அவ்வாறே வைஷ்ணவர்கள் விஷ்ணு சிவன் இவர்களைப்பற்றி ஏற்றத்தாழ்வாய்ச் சொல்லுகிருர்கள் என்பது முன் சொன்னவைகளால் எளிதில் விளங்கும்.

சைவ வைஷ்ணவர்கள் எவ்வளவுதான் மற்றையவாறு கடவுளைத் திரிமூர்த்திகளுள் ஒருவராக எண்ணித் தமது

கடவுளைப் பரம்பொருளாக வெண்ணி அறியாமையால் தம்முள் சண்டையிட்டபோதிலும், நடுநிலையிலிருந்து கொண்டு வைஷம்யமொன்று மின்றிச் சைவவைஷ்ணவ புராணங்கள், உபநிஷத்துகள் முதலியவைகளையும், அவரவர்கள் சிவ விஷ்ணுக்களை வர்ணிக்கும் விதங்களையும், நாம் நன்ருய் விசாரித்து நோக்கிஞல், சைவர்களால் மேலாகக் கொள்ளப்படும் சிவனும், வைஷ்ணவர்களால் மேலாகக் கொள்ளப்படும் விஷ்ணுவும், ஒரே பரம்பொருள் என்பதும் இவ்விரண்டும் அப்பொருளின் பெயர்கள் என்பதும் நமக்கு எளிதில் விளங்கும். பின்வரும் பாகங்களில் இந்த விஷயங்களைச் சற்று உற்றுநோக்குவோம்.

வைஷ்ணவர்கள் மஹாவிஷ்ணு தர்மத்தைப் பாதுகாத்தும் பிரகிருதியைச் சூசிப்பிக்கும்படியான ஸர்ப்பத்தின்மேல் படுத்திருக்கிருர் என்று வர்ணிக்கிருர்கள். சைவர்களும் தர்மத்தைக்குறிப்பிக்கும் விருஷபத்தின் மீது சிவன் ஏறிக்கொண்டு பிரகிருதி என்பதைச் சூசிப்பிக்கும் பாம்புகளை ஆபரணமாகவும் தமது ஜடாமகுடத்தைக் கட்டும் கயிருகவும் தரிக்கிருர் என்று வர்ணிக்கிருர்கள். சிவனையும் விஷ்ணுவையும் அவரவர்களுக்கு ஏற்பட்ட புராணங்களும் உபநிஷத்துக்களும் பரம்பொருளென்றே வர்ணிக்கின்றன. ஆஞல் புராணங்களில் அதிகாரிபேதம் உபதேச அவஸரம் இவைகளுக்கேற்ப மற்றைய மூர்த்திகளைத் தாழ்த்திச் சொல்லியிருக்கும் உபநிஷத்துக்களிலோ, ஒருமூர்த்தியையும் ஒருபொழுதும் தாழ்த்திச் சொல்லாமல் ஸகல மூர்த்திகளும், ஏற்றமாய்ச் சொல்லப்பட்ட மூர்த்தியின் பற்பல ரூபங்கள் என்றே சொல்லப்பட்டிருக்கும். ஆகையால் நிந்தாவிஷயம் கூடாது என்பது உபநிஷத்துக்களின் அபிப்பிராயம் என்பதும் எளிதில் விளங்கும். முற்கூறிய புராணங்

களும் தாழ்வு தோன்றும்படி சிற்சில விடங்களில் சொல்லியபோதிலும் அந்த அவஸரம் மாறியதும், வேறு சில விடங்களில் விஷ்ணுவிற்கும் சிவனுக்கும் பேதமே இல்லை என்று வற்புறுத்துகின்றன. வேதமானது விஷ்ணுவையும் சிவனையும் ஸ்துதிக்குமிடங்களில் தனித்தனியே அவரைப் பரம்பொருள் என்றே சொல்லுகிறது. அப்படிச்சொல்லுங்கால் சிவனையாவது விஷ்ணுவையாவது தாழ்த்திச் சொல்லுவதே இல்லை. இப்படி நமக்கு மோக்ஷவிஷயத்தில் ஆதாரமாய் இருக்கும் வேதசாஸ்திர புராணங்களே சிவ விஷ்ணுக்களுக்குப்பேதம் கல்பிக்காமல் இருக்கும்பொழுது, கனவிலும் பரம்பொருளைப் பார்த்திராத நாம் ஏன் வீணாகப் பேதங்கற்பித்துக் குதர்க்கம் செய்து தொண்டையைக் கிழித்துக்கொள்ளவேண்டும்?

மேலும் இந்தச் சிவ விஷ்ணுக்களுக்குள்ள பெயர்களின் அர்த்தம் முதலியவைகளை விசாரித்துப் பார்த்தாலும் அவர்களின் ஐகமத்தியம் எளிதில் விளங்கும். சிவன் என்ற சொல்லுக்கு மங்களகரமானவர் என்று பொருள். நாராயணன் என்ற சொல்லுக்கு ஞானநிலயம் என்று பொருள். ஞானத்தைவிட மங்களகரமான குணம் வேறொன்றும் இல்லாமையால் ஞானநிலயம் என்பதே மங்களகரமானதென்றும், மங்களகரமானதே ஞானநிலயம் என்றும் சொல்ல என்ன தடை? ஈசுவரன் என்ற சிவனது பெயருக்கு எட்டுவித விபூதியை உடையவராய்ப் பிரபஞ்ச ரூபமாய்க் காணப்பட்டு அவைகளை அடக்கியாளுபவர் என்று பொருள். விஷ்ணு என்ற பெயருக்கோ பிரபஞ்சம் எங்கும் வியாபித்து ஸகலத்தையும் அடக்கியாளுபவர் என்று பொருள். சிவனது பெயர்கள் அடங்கிய சிவஸஹஸ்ர நாமங்களையும், விஷ்ணுவின்பெயர்கள் அடங்கிய விஷ்ணு ஸஹஸ்ர நாமங்களையும் ஒப்பிட்டுப்பார்த்தால்

இந்த ஒற்றுமை நன்றாய் விளங்கும். சிவஸஹஸ்ர நாமத்தில் சிவனுக்கு விஷ்ணு என்ற பெயர் 621-ம் பெயராக 104-ம் சுலோகத்தில் வருவதும், விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் விஷ்ணுவுக்கு சிவன் என்ற பெயர் 27-ம் பெயராக 17-ம் சுலோகத்தில் வருவதும், ஒப்பிட்டு நோக்குங்கால் எவருக்கும் எளிதில் தெரியவரும். மேலும் சிவனுக்கு ஹரன் என்றும் விஷ்ணுவுக்கு ஹரி என்றும், பாபமுதலியவைகளைப் போக்குபவர் என்ற பொருளுடையனவாய் ஒரே தாதுவிலிருந்து பெயர்கள் அமைந்திருப்பதையும் பாருங்கள். 'அரியும் சிவனும் ஒன்று, அறியாதவன் வாயில் மண்ணு' என்று ஒரு பழமொழியும் வழங்கிவருகிறது. இவ்விஷ்ணு சிவபேதத்திற்கு ஒரு முக்கியகாரணமாய் காணப்படும் பாஞ்சராத்திர பாசுபத ஒழுங்குகளையும் இவ்வாறு ஒருவன் ஒப்பிட்டு நோக்குவானேயானால் அவ்வொழுங்குகளின் ஒற்றுமை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்.

சிவன் விஷ்ணு என்ற பெயர்கள் வேறாயிருந்தாலும் குறிப்பிக்கும் பொருள் ஒன்றே என்பதற்கு அநேக ஆதாரங்கள் பொதுப்பிரமாண நூல்களிலிருந்தும் இருதிறத்தாரது பிரமாண நூல்களிலிருந்தும் எடுத்துக் காட்டலாம்.

இதற்குச் சாதாரணமாக ஸ்கந்தோபநிஷத்தை எடுத்துக்கொண்டு அதின் அர்த்தத்தைப் பின்வருமாறு சுருக்கிச் சொல்லுவோம். 'ஓ மஹாதேவ! தங்களுடைய காருண்ய லேசத்தினாலே நான் அழிவற்றவனாய் இருக்கிறேன். விஞ்ஞானனாய் இருக்கிறேன். மங்களகரனாய் இருக்கிறேன். இதைப் பார்க்கிலும் சிரேஷ்டம் யாதிருக்கிறது? * * * விஷ்ணுரூபமாய் இருக்கிற சிவன் பொருட்டும் சிவன் ரூபமாய் இருக்கிற விஷ்ணுவின் பொருட்டும் நமஸ்காரம். சிவனுடைய ஹிருதயமே விஷ்ணு, விஷ்ணுவினுடைய

ஹிருதயமே சிவன். எவ்வளவு இவ்விருவரிலும் நான் பேதம் காணவில்லையோ அவ்வளவு எனக்குச் சந்தோஷமும் பிறப்பு இறப்பற்ற வாழ்வும் உண்டாகக் கடவது. சிவகேசவர்களுக் குள்ளே பேதமேகிடையாது. * * * மனது விஷயத் திற் பற்றுமைதான் தியானம். மனதிலுள்ள தோஷத்தை விடுவது தியாகம். இந்திரியங்களை அடக்குவதே சௌசம் * * * ஸ்ரீமத்-பரஞ்சோதியின் பொருட்டு நமஸ்காரம். எப்பொழுதும் எனக்குப் பிறப்பு, இறப்பற்ற வாழ்வு உண் டாகக்கடவது. ஓ நரஸிம்மா! ஓ தேவேசா! உம்முடைய பிரஸாதத்தினலேயே ஜனங்கள் விரிஞ்சி நாராயண சங்கர ஸ்வரூபமாயும், அசிந்தியமாயும் அவ்யக்தமாயும், ஆனந்த மாயும், துக்கமில்லாததாயும், தேவாத்மகமாயும் இருக்கிற பிரம்மத்தின் நிஜஸ்வரூபத்தை அறிகிறார்கள்.' இதற்கேற் பவே பொதுவாய்த் தாயுமானவர் பரம்பொருளை 'சமய கோடிகளெலாம் தன்தெய்வம் என்தெய்வம் என்று எங்கும் தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது' என்றும், நம்மாழ்வார்,

> ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவினுள் நின்ற
> நன்றெழில் நாரணன் நான்முக னரனெனு மிவரை
> ஒன்றநும் மனத்துவைத் துள்ளினு மிருபசை யறுத்து
> நன்றென நலஞ்செய் வதவனிடை நம்முடை நாளே,'

என்றும்; சிவவாக்கியர்,

> 'தங்கமொன்று ரூபம்வேறு தன்மையான வாறுபோல்
> செங்கண்மாலு மீசனும் சிறந்திறந்த தெம்முளே'

என்றும் அருளிச்செய்திருக்கிறார்கள். வேதமே ஸகல தேவ தாநாமங்கள் விஷயத்தில் 'பரம்பொருள் ஒன்றே, அதை மஹாநுபாவர்கள் (ஆராதிப்பவர்களது மனோதர்மத்திற் கேற்ப) அநேகவிதமாகப் பெயரிட்டழைக்கிறார்கள்' என்று கோஷிக்கிறது. பிரம்ம ஸூத்திரத்தில் வியாஸர் ஸகல

தேவதைகளின் பெயர்களும் ஒரே பரம்பொருளின் பலபெயர்கள் என்று பலஇடத்தும் ஸ்தாபிக்கிறார். இவைகளே இவ்விஷயத்தில் வேதசாஸ்திரம் முதலியவைகளின் அபிப்பிராயம்.

மேலும் சிவவிஷ்ணுக்களுள் பேதங்கற்பித்தல் கொடிய பாபம் என்பதற்குச் சில ஆதாரங்கள் காட்டுவோம். சிவவாக்கியர்.—

'நாழியப்பு நாழியுப்பு நாழியான வாறுபோல்
ஆழியோனு மீசனு மமர்ந்துவாழ்ந் திருந்திடம்
எருதிலேறுமீசனு மியங்குசக்ர தரனையும்
வேறுகூறு பேசுவோர் வீழ்வர்வீ ணரகிலே'

என்றும்,

'தில்லைநா யகனவன் திருவரங் கனுமவன்
எல்லையான புவனமு மேகமுத்தி யானவன்
பல்லுநாவு முள்ளபேர் பகுந்துகூறி மகிழுவார்
வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து மாய்வரே'

என்றும் அருளிச்செய்திருக்கிறார்.

'அரனதிக னுலகளந்த வரியதிகன் என்றுரைக்கு மறிவிலோர்க்குப் பரகதிசென்றடைய வரிய பரிசேபோல் * * * *'

என்றும் கம்பர் கிட்கிந்தாகாண்டம் நாடவிட்டபடலத்திலும்,

'* * பலதெய்வம் பழித்துரைக்கும் பரந்துதங்கள்
வாய்வழியே புழுச்சொரிய மாநரகக் கும்பியிடை மறுக்கக்கண்டான்'

என்று ஒட்டக்கூத்தர் உத்தரகாண்டம் திக்குவிஜயப் படலத்திலும் சொல்லியிருக்கிறார். இவைகளை எல்லாம் ஒருங்கு சேர்த்து ஔவையாரும் 'தெய்வமிகழேல்' என்றும், 'தெய்வம் ஒருவனே என்றும் உணரவல்லீரேல் அருவினைகள் ஐந்தும் அறும்' என்றும் திருவாய்மலர்ந்தருளினர்.

ஆகவே இவ்விஷயங்களை யறியாமையும், உண்மையில் பரம்பொருளைக் குறிக்கும் பெயர்களாகிய சிவன், விஷ்ணு என்பவைகள் திரிமூர்த்திகளில் அடங்கிய ஸம்ஹார ஸ்திதி கர்த்தர்களின் பெயர்கள் என்ற விபரீதஞானமும் சிவ விஷ்ணுபேதச் சண்டைக்கு முக்கியமான காரணம். சிவன் அல்லது விஷ்ணுவை அவரவர்கள் தத்தமக்குத் தக்கபடி எண்ணி ஆராதிப்பதில் கெடுதியொன்றுமில்லை. அதனால் அவர்களுக்கு நன்மையே உண்டாகும். இக்கருத்தை உள்ளடக்கியே கிருஷ்ணபகவான் கீதையில், 'யார் யார் என்னை எவ்வுருவ முடையவன் என்று ஆராதிக்கிறார்களோ அவரவர்களுக்கு அவ்வவ்வுருவத்தோடு அநுக்கிரகிக்கிறேன்,' என்று திருவாய் மலர்ந்தருளி இருக்கிறார். இம்மாதிரியாகவே,

'யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர் * * * *

என்று சைவநூலிலும் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படித் தம் மனோ தர்மத்திற்கேற்ப ஆராதிக்குங்கால் முன் எடுத்துக்காட்டிய சாஸ்திர விஷயங்களை மறவாது, துவேஷ புத்திக்கு இடங்கொடாமல், வேறு பெயர்களைப் பின்பற்றிப் பரம்பொருளையே ஆராதிக்கும் ஜனங்களை மோக்ஷமார்க்கத்தில் நம்மைப்போல் யத்தனம் செய்பவர்களாக, ஸதா பாவிக்க முயற்சிசெய்யவேண்டும். இப்படிப் பல நாமங்களும் ஆராதனைகளும் சென்றடையும் இடமானபரம்பொருளது கிருபையால், பேதபுத்தியும், அதனால் உண்டாகும் சண்டையும் இருந்தவிடம் தெரியாமல் போகட்டும்; எல்லா ஜனங்களும் கடவுளை அடையும் விஷயத்தில் அந்நியோந்நிய ஸ்நேகம் பாராட்டட்டும்; மனிதர்கள்மனதில் சாந்தி குடிகொள்ளட்டும்; ஸகல லோகங்களும் சௌக்கியத்தை அடையட்டும்.

---

## 5. யுகங்கள் முதலிய நெடுங்கால அளவைகள்



ஸகல ஜாதியார்களும் தம் தம் வேதமெனக் கொண்டாடும் புஸ்தகங்களில் ஒவ்வொன்றிலும் பிரபஞ்ச சிருஷ்டி ஆரம்பித்து இப்பொழுது இவ்வளவு காலம் இருக்கலாம் என்பது ஒருவாறு சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிச் சொல்லும் நூல்களுள் மற்ற நூல்களைப் பார்க்கிலும் ஸனாதனதர்மத்தின் ஆதிநூல்களாகிய வேதம் முதலியவைகளே சிருஷ்டிக்கிரமத்தின் காலங்களையும், பிரளயகாலத்தின் அளவைகளையும் உள்ளபடி எடுத்துக் காட்டுகின்றன. இவற்றுள் காட்டப்பட்டிருக்கும் கால அளவைகள் தோற்ற மாத்திரத்தில் விபரீத வர்ணனையாகக் காணப்படும். இத்தோற்றத்தால் மோசம் போன சில வித்வான்கள், இவைகள் உண்மையாய் உள்ளனவல்லவென்று எண்ணுகிறார்கள். இக்கால அளவைகள் உண்மையா அல்லவா என்று ஸந்தேகிப்பவர்களுக்கு உண்மை தான் என்பது, இவைகளை இப்பொழுது விருத்தியாய் முன்னுக்கு வரும் பிரகிருதி சாஸ்திரத்தின் உண்மைகளோடு ஒப்பிட்டுப்பார்க்குங்கால், நன்றாய் வெளிவரும். வானசாஸ்திரம் பூதத்துவ சாஸ்திரம் ஆகிய இவைகளின் பிரபஞ்ச சிருஷ்டிக்கிரமம், பூமியின் விருத்தியைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கும் ஒழுங்கு, இவைகளோடு நமது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் சிருஷ்டிக்கிரமத்தை ஒப்பிட்டுப் பார்க்குங்கால், அவைகளுள் உள்ள ஒற்றுமையைக் காணலாம். நமது சாஸ்திரங்களிற் காணப்படும் அளவிடமுடியாத யுகாதிகள் எல்லாம் விபரீதவர்ணனைகள் அல்லவென்பதும், அவைகள் உண்மையல்ல என்று சொல்

னுபவர்களுக்கு யுக்திக்கும் பிரகிருதி சாஸ்திரங்களுக்கும் பொருந்தும்படியான தகுந்த ஆதாரம் ஒன்றும் இல்லை என்பதும், நமது மனதில் நன்ருய்ப்படும். ஆகையால் முதலில் புதிய பிரகிருதி சாஸ்திரங்கள் பிரபஞ்ச உற்பத்தியைப் பற்றிச் சொல்லும் விஷயங்களைச் சுருக்கிச்சொல்லுவோம்.

வானசாஸ்திரப்படி ஸகல அண்டங்களும் ஆதியில் பிரகாசத்தோடு கூடிய வாயுபதார்த்தமாய் ஒரே கட்டியாய் இருந்தனவே ஒழிய, இப்பொழுதிருப்பவைபோலக் கடின பதார்த்தமாயும் பலவாயும் இருக்கவில்லை. இம்மாதிரியாய்க் கடின பதார்த்தமாகாமல் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் வாயு பதார்த்தங்களை, இருளாய் இருக்கும் இரவில் நிர்மலமான ஆகாயத்தில் அதிசக்தி வாய்ந்த தூரதிருஷ்டிக்கண்ணுடிகள் மூலமாய், ஆங்காங்கே காணலாம். இக்கண்ணுடிகளின் ஸகாயமில்லாமலும் இரவில் மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தின் அருகில் உள்ள மூன்று நக்ஷத்திரத்தில் நடுநக்ஷத்திரம் புகையால் சூழப்பட்டதுபோலத் தோன்றுவதைக் காணலாம். இதற்குக் காரணம் அதன் அருகில் இம்மாதிரியான வாயுபதார்த்தம் இருப்பதே. இவ்வாறு ஒரே கட்டியாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்த வாயு பதார்த்தத்துள்ளேயே சூரியனும் அதைச் சுற்றிவரும் கிரகங்களும் அடங்கிக் கிடந்தன. இக் கட்டி இப்பொழுது அந்தரத்தில் காணப்படும் கோளங்களாகப் பிரியும் முன்னர், தன்னிடமிருந்த உஷ்ணத்தை வெளியிட்டுக் குளிர்ச்சி அடைந்துகொண்டு வந்தது. இவ்வாறு குளிர்ச்சியடையும்பொழுது இக்கட்டி சுருங்கிவர அதனுள் ஏற்பட்டுப் பிரிக்கும் சக்தியால், அது தன்னைத்தானே சுற்ற ஆரம்பித்தது. சுற்றும் வேகம் வரவர அதிகரிக்க, அதிலிருந்து பிரிந்து சிறு கட்டிகள் வேருய் ஓடிப்போயின. இப்படிப் பிரிந்தவைகள் முன்னமே சுற்றிக்கொண்டிருக்கும்

பெரிய கட்டியில் அடங்கியிருந்தமையால் இவைகளுக்கும் பெரிய கட்டிக்கும் ஒருவிதமான ஆகர்ஷண சக்தியுண்டாக அதனால் இவைகள் பெரிய கட்டியைச் சுற்றத் தொடங்கினவே ஒழிய அதைவிட்டு ஒரே அடியாய்ப் பிரிந்துபோய் விடவில்லை. இதுவே சூரியன் முதலிய நக்ஷத்திரங்கள் உண்டான விதம். பிரிந்து வந்தவைகளும் பெரிய கட்டி தன்னைத்தானே சுற்றுவதுபோலத் தம்மைத் தாமே சுற்ற அவைகளிலிருந்து கிரகங்கள் உண்டாயின. இப்படி உஷ்ணங் குறைந்து பிரிந்துவந்த கட்டிகளுள் நமது பூமியும் ஒரு கட்டி. இது 8000-மைல் குறுக்களவுள்ளது. இதில் சுற்றினும் 50-மைல் வரையுள்ள பாகம் மாத்திரம் கடினபதார்த்தமாக மாறி இருக்கிறது. இது இவ்வாறாக, அநேக கல்ப காலங்கள் அவசியம் வேண்டியது. இப்பாகத்திற்கே பூமியின் ஏடு என்று பெயர். இதன் உள்ளே இன்னும் உருகிய நிலையில் திரவபதார்த்தம் இருக்கிறது. இஃது எரிமலைகளின் செயலை உற்று நோக்கினால் வெளிவரும். ஆகாயத்திற் காணப்படும் கோளங்களில் அநேகம் இன்னும் அதிக உஷ்ண நிலையில் இருக்கின்றன என்று வானசாஸ்திரிகள் தமது தூர திருஷ்டிக்கண்ணாடிகள் முதலிய சூட்சும யந்திரங்களால் கண்டுபிடித்திருக்கிறார்கள். இவ்வாறு செய்யுங்கால், முன்னால் ஒரே கட்டியாய் இருந்த பிரகாசமான வாயுபதார்த்தம் இப்பொழுது இருக்கும் நிலைக்கு வரவேண்டியதற்கு, அவசியம். இத்தனை காலமாயிருக்குமென்பதை அளவிட முயன்று, கணக்கிடமுடியாத கோடானுகோடி நூற்றாண்டுகள் முடிந்தபின்புதான் இவ்வாறு ஆயிருக்கவேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார்கள். இதுவே வானசாஸ்திரத்திற் கண்ட சிருஷ்டிக்கிரமம் முதலியவைகள்.

இனி, பூதத்துவசாஸ்திர சிருஷ்டி ஒழுங்கை உற்று நோக்குவோம். வானசாஸ்திர சிருஷ்டிக்கிரமத்தை எவ்விடத்தில் நிறுத்திவிடுகின்றதோ, அவ்விடத்தில் இருந்து பூதத்துவ சாஸ்திரம் காலநிர்ணயம் செய்யத் தொடங்குகிறது. பூமி உஷ்ணம் குறைந்து குளிர்ந்துகொண்டு வருங்கால், பூமியின் கடின பாகங்கள் படைபடையாய் அமைந்திருக்கும் ஒழுங்கைப் பரிசோதித்து நோக்கி, ஒவ்வொரு படை உண்டாக ஆயிருக்க வேண்டிய காலத்தை முதலில் நிர்ணயம் செய்து, பின்பு இப்பொழுது இருக்கும் நிலைக்குப் பூமி வருவதற்கு இவ்வளவுகாலம் ஆயிருக்கலாம் என்று தீர்மானிக்கிறது. படை என்றால் இன்னது என்பதையும், அது இவ்வாறு பூமியின் கடினபாகத்தில் அமைந்திருக்கிறது என்பதையும் சற்று விளக்குவோம். மலைநாடுகளில் வாஸம் செய்திராத மனிதர்கள் பூமியின் கடினபாகம் முழுவதும் இறுகலான மண்ணாலேயே ஆக்கப்பட்டிருக்கின்றது என்று எண்ணக்கூடும். இதற்கும் உண்மைக்கும் வெகுதூரமன்றோ? அந்த விதமான மண் அதிக ஆழம் காணப்படும் இடங்களிற்கூட, அது சற்றேறக்குறைய 100 அடி ஆழந்தான் இருக்கும். அதன் கீழ் கற்பாறையே காணப்படும். இதை நாம் குடைந்துகொண்டு கீழே போகுங்கால், இதில் படைகள் ஒன்றன்பேரில் ஒன்றாய் அமைக்கப் பட்டிருக்கிறது. இப்பொழுது எம்மாதிரியான பாறைகளிலும் இப்படைகளை நன்றாய்க் காணலாம். அடியிற் காணப்படும் படையின் நிலையே, உலகம் கடினமாகுங்கால் முதலில் இவ்வாறிருந்தது என்பதையும் முறையே மேல்மேலும் காணப்படும் படைகள், வரவர உலகம் இவ்வாறு மாறியதென்பதையும் குறிப்பாகத் தெரிவிக்கும். ஆகவே பூமியின் ஏட்டில் எவ்விடங்களிலும் காணப்படும் ஐந்துபடைகளுக்கேற்ப ஐந்துநெடுங்கால அளவைகள்

இருந்திருக்கவேண்டுமென்று பூதத்துவ சாஸ்திரிகள் ஸ்தாபிக்கிறார்கள். இந்நெடுங்காலங்களுக்கு இக்காலம் முதல் பின்னே கணக்கிடுங்கால் முறையே நான்காவது, மூன்றாவது, இரண்டாவது, முதலாவது நெடுங்காலங்கள் என்றும், உயிர்ப்பிராணிகள் ஒருவாறு வசிக்கத்தொடங்கிய நெடுங் காலம் என்றும் பெயர். இந்நெடுங்காலங்கள் ஒவ்வொன்றும் அநேக உட்பிரிவுகளை உடையதாய் இருக்கின்றன. இவைகளை விவரிக்கப்புகுந்தால் மிகவிரியுமாதலால் அவைகளின் விஷயத்தை ஒருவாறு சுருக்கிச்சொல்லுவோம். இப்பொழுது காணப்படும் நான்காம் நெடுங்காலமானது இரண்டு உட்பிரிவுகளை உடையது. அவைகளுக்கு முறையே பனிக் கட்டிகள் திரண்டிருந்த காலம் என்றும், அதற்குப் பிந்திய காலம், என்றும் பெயர். இதில் பின் உட்பிரிவிலேதான் நாம் இப்பொழுது இருக்கிறோம். முந்திய பனிக்கட்டிகள் திரண்ட காலத்தில் ஐரோப்பா ஆசியா அமெரிக்கா முதலிய கண்டங் களின் வடபாகமானது பெரும்பாலும் அநேக ஆயிரம் அடி வரையில் பனிக்கட்டிகளால் மூடப்பட்டிருந்ததென்றும் அப் பொழுது பூமியில் வடக்குத் துருவபாகமானது ஸுககரமான சீதோஷ்ண ஸ்திதியை உடையதாய் இருந்ததென்றும், அவ்விடத்தையே நமது முன்னோரான ஆரியர்கள் முதலில் வாஸஸ்தானமாகக் கொண்டிருந்தனர் என்றும், சில பூதத் துவ சாஸ்திரிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். பின் வந்த இரண்டாம் பாகத்தின் முதலில் இப்பொழுதிருப்பதுபோல வடக்குத் துருவம் அதிகக்குளிர்ச்சியுடையதாயும், பூமியின் மத்தியபாகம் அதிக உஷ்ணமுடையதாயும் மாறிவிட்டன. இனி நான்கு மூன்று ஆகிய நெடுங்காலங்களில் மனிதர்கள் வஸித் துக் கொண்டிருந்தார்கள் என்பது அந்தந்தகாலங்களுக்குரிய பூமியேட்டின் படைகளில் காணப்படும் குறிகளால் நன்றாய்த்

தெரியவரும். இரண்டாவது முதலாவது நெடுங்காலங்களில், மீன்கள், ஊர்வன, வாலில்லாக் குரங்குகள் முதலிய ஜீவ ஜந்துக்கள் வஸித்திருந்தனவென்பது அந்தந்தகாலங்களில் உண்டான படைகளிற் காணப்படும் குறிகளால் வெளிவருகிறது. இவற்ருல் பிராணிகள் முதலாவது நெடுங்காலத்தில் ஏராளமாய்த்தோன்றி வரவர மற்றைய நெடுங்காலங்களில் விருத்தியடைந்துகொண்டு வந்திருக்க வேண்டுமென்பது நன்ருய் விளங்கும். ஆதி நெடுங்காலத்தில் உயிர்ப்பிராணிகள் அதிகமாய் வஸித்திருந்ததாக அக்காலத்திற்குரிய படையிலிருந்து தெரியவரவில்லை. இவ்வைந்தாம் படைக்குக் கீழ் அலைமோதிக்கொண்டு அதிக உஷ்ணமான திரவபதார்த்த ரூபமாகப் பூமி காணப்படுகிறது. பூதத்துவசாஸ்திரிகளுக்கு இத்திரவபதார்த்த பாகத்தால் அதிகப்பிரயோஜனம் இல்லை; அதன்மேற் காணப்படும் ஐந்துபடைகளே அவர்களுக்கு மிக முக்கியமானவைகள். இவ்வைந்தும் சேர்ந்துசற்றேறக்குறைய 140,000-அடி ஆழமுள்ளது. பூதத்துவசாஸ்திரிகள் அபிப்பிராயம் 600-அடி உண்டாவதற்கு ஏறக்குறைய 100,000 வருஷங்களாகும் என்பதே. இந்தக் கணக்கின்படி இவ்வைந்து படைகள் உண்டாவதற்கு ஏறக்குறைய 23,400,000 வருஷங்களாயிருக்கவேண்டுமென்றும், ஆதி நெடுங்காலம் முதல் இப்பொழுதிருக்கும் நிலைவருவதற்கு ஏறக்குறைய 4,000,000-வருஷ மாயிருக்கவேண்டுமென்றும் தெரிகின்றன. இப்பொழுது நாம் பூதத்துவ சாஸ்திரிகள் தீர்மானித்த விஷயத்திற்கும் நமது சாஸ்திரங்களில் காணப்படும் கால அளவைகளுக்கும் உள்ள பொருத்தத்தை எடுத்துக்காட்டுவோம்.

நமது சாஸ்திரப்படி உள்ள கால அளவைகளின் விவரத்தையும் விஸ்தாரத்தையும் 3-வது ஸ்கந்தம் விணுக்கள் 9, 10-இல் காண்க.

இங்கு முக்கியம் கவனிக்கவேண்டியவை

1. மஹாயுகம்—4,320,000. ... மனுஷ்ய வருஷங்கள்

1. மன்வந்தரம்—306,720,000 ... ,, ,,

1. கல்பம்—4,320,000,000 ... ,, ,,

பிரம்மாவின் ஆயுஸ்—8,640,000,000 × 360 × 100 ,,

நண்பர்களே! இக்கால அளவின் விஸ்தீரணத்தைப் பாருங்கள்! எவ்வளவு அஸாத்தியமாயிருக்கிறது! இதை ஆழ்ந்து யோசிக்குங்கால் நமது ஆயுஸ் எந்தமூலே? நம்முள் அநேகர் சீக்கிரத்தில் இறக்கவில்லையா? இந்தப் பிரம்மாவினது ஆயுஸ்தான் பெரிதென்று எண்ணித்திகைத்து நின்று விடவேண்டாம்! இதை கடவுளோடு இருக்கும் அவரது உருவாகிய காலதத்துவத்தில் ஒரு நிமிஷம் என்று நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன.

இவை எவ்வளவு நம்பக்கூடாதனவாய் இருந்தபோதிலும் இவைகளை வானசாஸ்திரி, பூதத்துவ சாஸ்திரி ஆகிய இவர்களது அபிப்பிராயங்களோடு ஒப்பிடுவோம். உடனே இவைகளின் ஒற்றுமை எளிதில் விளங்கும். நமது மன்வந்தரம், கல்பம், மஹாகல்பம், பிரம்மாக்களின் ஆயுஸ் இவைகள் அநாதிகாலதத்துவத்திற்கு நம்மை எவ்வாறு கொண்டு போய் விடுகின்றனவோ, அவ்வாறே வானசாஸ்திர சிருஷ்டி ஒழுங்குகளும் நம்மைக்கொண்டுபோய் விடுகின்றன. பூதத்துவ சாஸ்திரப்படி பூமியேட்டின் படைகள் உண்டாவதற்கு வேண்டிய 23,400,000 வருஷங்கள் அநேகமாய் மஹாயுகங்கள், யுகங்கள் முதலியவைகளை அடக்கியுள்ளன. முதல்

நெடுங்காலத்தில் உயிர்ப்பிராணிகளுண்டாகி மீன், ஊர்வன, வாலில்லாக்குரங்குகள் முதலிய பிராணி பேதங்களின் வழியாய் விருத்தியடைந்து நான்காம் நெடுங்காலத்தில் உயர்ந்த நாகரீகத்தோடு கூடி மனிதனாய் வெளிவருவதற்கு வேண்டிய 4,000,000 வருஷங்களுக்கும், நமது சாஸ்திரத்தில் இம்மன்வந்திரத்தில் 4,320,000 வருஷங்களுக்கு முன்பாக, முதல் யுகாரம்பத்தில் பிராணிகளுண்டாகி மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நாரஸிம்ஹ, வாமன முதலிய உருவங்கள் மூலமாய் விருத்தியடைந்து இப்பொழுது அடைந்திருக்கும் நிலைக்கு வந்திருப்பதற்கும் உள்ள ஒற்றுமையைப் பாருங்கள்! — நண்பர்களே! இப்பொழுதாவது நீங்கள் நமது சாஸ்திரவிஷயங்களின் மேன்மையை அங்கீகரிக்க வேண்டியது அவசியமல்லவா?

நாம் முதலில் இவ்வத்தியாயத்தைத் தொடங்குங்கால் வெகு காலங்களுக்குமுன்பு எழுதப்பட்ட நமது சாஸ்திரங்களுக்கும் புதிய பிரகிருதி சாஸ்திர உண்மைகளுக்கும் இவ்வளவு பொருத்த மிருக்குமென்று கனவிலுங்கூட யாராவது எண்ணியிருப்பார்களா? முற்காலத்து மஹான்களான ரிஷிகள் உண்மையான விஷயங்களையே எடுத்துரைத்தனர். அவைகளைப் புதியசாஸ்திர மூலமாய் ஆராயுங்கால், அவைகளின் உண்மை திடப்படுகின்றனவே யொழிய வேறில்லை: அதனால் தெரிந்து கொள்ளவேண்டியது என்னவென்றால் நமது சாஸ்திர புராணகதைகள் எவ்வளவுதான் வீண் வர்ணனைகளாகத் தோற்றிய போதிலும், அவைகளை அவ்வாறு எண்ணித் தள்ளாது ஆய்ந்தோய்ந்து நோக்கின், அவைகளின் உட்பொருளை அறிந்து மனம் சுத்தியாகிக் கடைசியில் மேலான பதவியை அடையலாம் என்பதே.

---

என்று வற்புறுத்தி மதிமோசம் போகின்றனர். முற்கூறியவை களிலிருந்து இவர்களுக்குத் துர்நடத்தையால் ஏற்படக்கூடிய பாபமும், தெய்வமிகழ்வதால் உண்டாகும் பெரும் பாவமும். ஒன்று சேர்ந்துவந்து இவர்களை, அதோகதியை அடையும் படி செய்துவிடும் என்பது நன்கு வெளியாகும். ஆதலால் இந்தக் கிரஹஸ்த லீலையிலிருந்து ஒருவித ஆசையோடு தம்மிடம் வரும் பக்தர்களுக்குப் பகவான் தம் நிலைவழுவாது அந்த ஆசையைப் பூர்த்திசெய்து மேன்மை அடையும்படி செய்வர் என்பது தெரியவரும்.

இனி ஆசார்ய லீலைகளை எடுத்துக்கொள்வோம். மூன்று அவஸரத்தில் பகவான் இம்மாதிரி லீலைகளை நடத்திபிருக் கிறார். அவையாவன: பகவத் கீதை உபதேசம், அனுகீதை உபதேசம், உத்தவர் உபதேசம் ஆகிய இவைகளே. இம்மா திரி அவஸரங்களின் உட்கருத்தைப் பகவானே அர்ஜுன னுக்கு உத்தர கீதையில் நன்கு வெளியிடுகிறார். இந்த உத்தர கீதையில் மூன்று பாகம் உண்டு. அவையாவன; ப்ரா ஹ்மணர் உபதேசம் ப்ராஹ்மண ஸ்திரீ புருஷஸம்வாதம், குரு சிஷ்ய ஸம்வாதம் ஆகிய இவைகளே. இவைகளுள் தாம் துவா ரகையிலிருக்குங்கால் முன்பாகம் நடந்தது என்ன, அர்ஜுனன் ப்ராஹ்மண ஸ்திரீ புருஷர்கள் எங்குள்ளவர்கள் என்று கேட் டான். இதற்கு விடையாகப் பகவான், 'புருஷன், குரு ஆகிய இவர்கள் நானே, ஸ்திரீசிஷ்யன் ஆகிய இவர்கள் என்மனமே' என்று கூறி தமது ஆசார்ய நிலையின் ரஹஸ்யத்தை வெளி யிடுகிறார். ஆகவே ஒவ்வொரு மனிதனுள்ளும் புத்தியில் பிரகாசிக்கும் பரம்பொருளேயே ஆசார்ய லீலை செய்யும் கிருஷ்ணனாகவும், ஒவ்வொருவரது வைராக்கியம் நிறைந்த மனமே அர்ஜுனன் உத்தவராகிய சிஷ்யர்கள் என்றும் இதிலிருந்து வெளிவருகின்றது. ஆகவே தமது ஆசார்ய

பக்தியைக் கடைப்பிடித்தும் கஷ்ட நிலையிலிருந்து பின்னர் ஆசைகட்டு விட்டு பகவத் பராதீனர்களாகி சாந்தியடையும் பெரியோர்களை இங்குஸ்திரீகளாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. நாரதர் சென்று ஒவ்வொரு ஸ்திரீ வீட்டிலும் பார்க்கையில், அந்தந்த ஸமயங்களில் கிரஹஸ்தன் நடத்த வேண்டியவைகளை ஒருவிதப் பற்றுமின்றிப் பகவான் செய்துகொண்டிருந்ததாகப் பாகவதம்கூறும். இதனாலேயே பரமஞானிகளிடம் ஒருவித ஏற்றத் தாழ்வுமின்றிப் பரமாத்மா எல்லாரோடும் கலந்து நின்று அங்கங்கு அவரவர்கள் நன்மைக்கு வேண்டியவைகளைச் செய்து தாம் தாக்கற்று நிற்கிறார் என்று விளங்கும். இம்மாதிரி பகவான் இருக்கிறார் என்பது தேர்ந்தஞானிகளுக்குத்தான் விளங்கும் என்பதை நாரதர் பார்வைக்கு இது வெளிப்பட்டது என்பது விளக்கும். குசேலருக்கு இவர் செய்த மரியாதையே இதற்கு உதாரணம். இந்த லீலையிலும் கோபி லீலையிலும் பகவான் ஸ்திரீகள் மத்தியில் தாக்கற்று நின்று செய்ய வேண்டியவைகளை எவ்வாறு தயங்காது செய்து முடித்தாரோ அவ்வாறு ஒவ்வொரு கிரஹஸ்தனும் தன் பெண்சாதி விஷயத்தில் இருந்துவிட்டால் அதுவே 'நான் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷி' என்ற விருத்தியை வளர்த்து மேலான பதவி வரும்படிசெய்யும். இவ்வாறின்றிப் பகவான் அநேக ஸ்திரீகளோடு இருந்தாரே என்று எண்ணி, அவருடைய நித்திய பிரஹ்மசரியமாகிய பற்றற்ற நிலையில் தன் பெண்சாதியோடுகூட இருக்கமுடியாத இக்காலத்திய மேதாவிகள் வெறும் சிற்றின்ப ஆசையால் ஸம்ஸார பாரம் உறைக்காமல் ஸுகம் மாத்திரம் கிடைக்கப் பிறர் ஸதிர்கள், வேசையர்கள் முதலியவர்கள் மேல் நூறு ஆசைகொண்டு கெட்டலைகின்றனர். இவர் நமது நிலையை வேதாந்தபரமாகவும், கிருஷ்ணன் நடத்தை மூலமாகவும், தகுந்த நடை

யினும் பரம்பொருள் ஞாபகம் ஒருவனுக்கு நிலைத்திருக்கு மாயின் அவன் நிக்கிரஹத்தாலோ அநுக்கிரஹத்தாலோ பகவத் கிருபைக்கு ஆளாவான் என்பதாயிற்று. துஷ்ட நிக்கிரஹமும் ஒருவிதமான அநுக்கிரஹம் என்பதாகும். இதனால் சிஷ்டர்கள் நேரே பலனையும், துஷ்டர் காளடைவில் சீர்திருத்தமாகிய பலனையும் அடைவார்கள். இந்த லீலைகள் விஷயம் பொதுவாகப் பால்ய லீலைகளில் உள்ள பரோபகார விஷயம்போன்றதே. அங்கு விளையாட்டாக இது நடந்து விடும். இங்கோ தகுந்த ஆலோசனையோடு அவை ஸாவ தானமாக நடைபெறும். இதில்தான் சற்று வேற்றுமை காணப்படுவது.

கிரஹஸ்த லீலைகள் சற்றேறக்குறைய பகவான் நிலையி லிருந்து பார்க்கையில் கோபிகைகளுடன் நடந்த ஜாரலீலை போலவிருக்கும். கோபிகைகளைப்போலவே இங்கும் 16,108 ஸ்திரீகளும் பகவத் பக்தர்களே. இவர்கள் பகவானைப் புருஷ ஞகவே கொண்டு பத்தினிகளாகித் திருப்தி பெற்றனர். கோபி கைகளோ முதலில் பகவான் தமக்கும் புருஷனாகவேண்டு மென்று மதித்தபோதிலும், முடிவில் இந்த சிற்றின்ப ஆசை மோக்ஷ ஆசையாக மாறி பிரிவால் திடப்பட்டு நேரே பரமபத ஸாதனமாகிவிட்டது. அவர்கள் சற்றேறக்குறைய ஸந்யாஸி களையும், இவர்கள் கிருஹஸ்த பக்தர்களையும் உணர்த்து கின்றனர். இவர்களுள் 8 பெயர்கள் பட்டமஹிஷிகள்: பக வானது அஷ்டஐசுவர்யங்களை உணர்த்துகின்றனர். மிகுந்த 16,100 ஸ்திரீகளும் நரகாஸுரன் சிறையிலடைபட்டு வருந்தியவர்கள். பூமிக்கும் தமக்கும் பிறந்து கொடியவனுகி வளர்ந்த நரகாஸுரனைக்கொன்று, இந்த ஸ்திரீகளை அவர்கள் கருத்துக் கிணங்கி விவாஹம் செய்துகொண்டார் பகவான். பிரபஞ்சவிஷயமாக ஏற்படும் ஆசையால் கட்டுண்டு பகவத்

## 3. அனந்த கிருஷ்ணன்.



கிருஷ்ணன் பால்ய ரூபமாக ஆராதிக்கப்படுவதோடும் கூட யௌவன புருஷனாகவும் ஆராதிக்கப்படுகிறார். இந்த அவஸரத்தின் சிறப்புத்தோன்ற இந்த விக்கிரஹத்திற்கு அனந்த கிருஷ்ணன் என்று பெயரிட்டிருக்கிறோம். இந்த விக்கிரஹத்தை ஆராதிக்குங்கால் தேர்ந்த மனத்தில் ஊறும் ரஹஸ்யார்த்தங்களை ஒருவாறு வெளியிடுவோம்.

அனந்த கிருஷ்ணன் லீலைகளைக் கவனிக்குங்கால், அவைகள் வேதரஹஸ்யங்களையும் முடிவுகளையும் பூர்ணமாக அடக்கியுள்ளனவாக விருக்கும். இவைகள் ஐந்துவிதமாகக் காணப்படும். அவையாவன: பரோபகார லீலைகள், ஆசார்ய லீலைகள், ஈசுவர லீலைகள் அந்தர்யாமி லீலைகள் ஆகிய இவைகளே. இவைகளுக்கு முறையே துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலன விஷயங்கள் 16,108-ஸ்திரீகளை விவாஹம் செய்துகொண்டு நித்ய ப்ரஹ்மசாரியாக விருத்தல்; கீதாசார்யன் உத்தவர் குரு ஆகிய நிலைமைகள், விச்வரூபம் காட்டுதல், திரௌபதீ மானஸம்ரக்ஷணம், பாரதயுத்தம் நடத்திய விதம் முதலியவைகளே. இவைகள் சிறப்பையும் உட்கருத்தையும் விசாரிக்கப் புகுவோம்.

பரோபகார லீலைகளிலிருந்து பொதுவாகத் துஷ்டர்களும் நிர்க்கதியாக விடப்படவில்லை என்பது வெளிவரும். சிசுபாலன், கம்ஸன் முதலியோர் இறக்கவேண்டியது அவசியமாயினும், முடிவில் அவர்களும் மேலான பதவி பெற்றனர். ஆகவே பயம், துவேஷம் முதலிய எக்குணங்களாலா

கூத்தாடி நாடகமாடும் கூட்டத்தில் பாலகிருஷ்ணனிடத்தும் அவர் லீலைகளிடத்தும் உண்மை உணர்ந்து ஈடுபடுவர்கள் சேரவேகூடாது. கிருஷ்ணன் ! பால்ய லீலைகளில் ஸ்திரீ ஸம்பந்தமான சிற்றின்பவிஷயங்கள் மூலமாகப் பேரின்பத்தின் விஷயங்களை நிரூபித்திருப்பதால், சிற்றின்பவிஷய சம்பந்தம் ஒழித்துப் பேரின்பச்சிறப்பை நன்றாக மனதில் வாங்கிக்கொண்டு தனித்திருந்து கிருஷ்ணலீலைகளில் ஈடுபட்டுப் பரவசமாகியேதான் பாலகிருஷ்ண ஆராதனை த்யானாதிகள் செய்து பழகவேண்டும். இவ்வாறுசெய்து ஈடுபட்டு கிருஷ்ண கர்ணாம்ருதம் பாடிய லீலாசுகர், ஸந்த்யாவந்தனாதிஸத்கர்மங்களும் நழுவி நிற்கும்படியான பரம முக்தி நிலையை அடைந்திருக்கிறார். இவ்வாறின்றி உலக விஷயங்களோடு ஸம்பந்தப்படுத்தி ஆண் பெண் என்ற பேதமின்றிக் கூட்டங்கூடிப் பஜனை கூத்தடித்தால் அதோகதிதான் வரும். கறி நறுக்கி நல்ல உண்டிக்கு உபயோகப்படுத்த வேண்டிய அரிவாள்மணையை எடுத்து கழுத்தை அறுத்துக் கொண்டவனுக்கு நிகராவர் இக்கூட்டத்தார். இந்த எச்சரிக்கைக்குட்பட்டுச் செய்யப்படும் பாலகிருஷ்ணாராதனம் மிகச் சிறந்ததே.

---

குழந்தையாகவும், கோபிகைகளை வீட்டைவிட்டு வெளி யேறும் சோர நாயகிகளாகவும் குறிப்பித்து அவர்களைத் திருப்தி பண்ணியவிதத்தில் பகவான் நிலையைக்காட்டி இத ஞல் அவர்களுக்கு ஒருவித ஜாதி அனுசாரம் ஏற்படவில்லை என்று கூறி பின்னர் உத்தவர் பகவத் பக்திக்குப் பிரிவே ஸாதகம் என்றுகூறிய உபதேசத்தால் இவர்களுக்குச் சாந்தி பிறந்தது என்று விவரிக்கப் பட்டிருக்கிறது.

இம்மாதிரியான ஜாரசோர சிகாமணியான பாலகிருஷ் ணனை விரும்பாதவர் நம் பாதகண்டத்தில் யாராவது உண் டோ? எல்லோரும் இவர் பால்ய லீலைகளில் ஈடுபட்டபோதி லும், ஸரியான வழியில் ஈடுபடாததால் ராதா கல்யாண முதலிய அலங்கோல கோலாஹலங்களைச் செய்து அதோ கதியை அடைகின்றனர் ஒருதிறத்தார். ஈடுபடாத சிலர் மூடதனத்தால் குற்றங்கூறி வீண் பாபத்திற்கு ஆளாகின்ற னர். இந்நிலை வரலாகாது என்றுதான்சிருஷ்டரான க்ருஹஸ் தர்களே பாகவதத்தில் கிருஷ்ணகதையைப் படிக்க அதிகாரி கள் என்று பெரியோர் கூறுவர். அதிகாரிகளில்லாதவர்கள் வலியப்படித்துக் குற்றங்கூறுவது ஸூர்யனைப் பார்த்து நாய் குலைப்பது போலாகும். கிருஷ்ணரஹஸ்யம் உணராதவர்கள் அதை உணரும்வரையில் தமது அவஸர தீர்மானங்களை அடக்கிவைத்து, அமைதியுட னிருப்பார்களாகில் அவர்களுக் கும் மற்றெல்லோருக்கும் ஸுகமுண்டாகும். இவைகளில் ஈடுபட்டுப்பக்தி செய்பவர்களும் மிகுந்த ஜாக்கிரதையாக விருக்கவேண்டும். முற்கூறிய லீலைகளில் பகவான் விகாரமற் றிருந்தார். அவைகளைப் போல வீண்நாடகமாடும் பக்தா க்ரகண்யாள் அவ்வாறிருக்கமுடியுமா? ஒருநாளும் முடி யாது! ஆதலால் பாலகிருஷ்ண ஸம்பந்தமாக எற்பட்டிருக்கும் பஜனைக்கூட்டம் என்று பெரும்பெயர் கொண்டிருக்கும்

போராவலாகிய முமுக்ஷுத்வம் இவ்வளவு தீவிரமுடையாது என்பதைக் காட்டவேண்டும் என்று அவர்களைச் சோரநாயகனிடம் போகும் கோபிகளாக நமது பெரியோர் காட்டியிருக்கின்றனர். தன் நாயகனைவிட சோரநாயகனிடம் கெட்ட ஸ்திரீகளுக்கு உண்டாகும் காதல், குலஸ்திரீகளுக்குத் தன் கொழுனனிடம் ஏற்படும் மெய்க்காதலைவிட மிகத் தீவ்ரமாக விருக்கும். இதை அதிகமாக விஸ்தரிக்கவேண்டியது அனாவசியம். இதற்கேற்பவே ஸமாதியிலிருந்து வெளிப்படும் மஹானது மனோநிலை வ்யவஹாரமத்தியில் இவ்வாறிருக்கும் என்பதை கைவல்யநூலாசிரியர் சோரநாயகி திருஷ்டாந்தத்தால் பின் வருமாறு விளக்குகிறார்:—

விவஹார வேளையெல்லாம் ஸமாதி என்றால் விகற்பமன்றோ
மனமலைந்து விடாதோ? விட்டால்
அவதான நழுவுமன்றோ, வென்றாயாகில் அதன்
திட்டாந்தங்கேள் ஆசை கொண்டு,
நவமாகப் பரபுருஷன் தன்னைக்கூடி நயந்துஸுக
மனுபவித்த நாரி நெஞ்சம்
தவமான மனைத்தொழில்கள் செய்யும்போதும் தழுவி
அனுபவித்தஸுகந் தனைவிடாதே.

ஆகவே உத்தம நாயகிக்குப் பரமபுருஷனிடம் ஏற்படும் காதலே மஹான்களது பரமபகவத் பக்தி நிலையை நன்கு உணர்த்தும். பகவானது ஜாரலீலை ஜீவன்முக்திக்கு முந்தின நிலையிலுள்ள மஹான்கள் மனோநிலையை நன்கு உணர்த்தும். ஆதலால்தான் ஜாரலீலைகளைத் திருப்திலீலைகள் என்றோம். ஆகவே பகவத் பக்தர்கள் பகவானால் ஸுகிக்கும் சோர நாயகிகள். இவர்கள் ஸுகம் பொய் வளரும் நெஞ்சினர்கள் உணராது ரஹஸ்யமாகவருவது என்பதாயிற்று. இதன் சிறப்புத் தோன்றவேதான் ஸ்ரீமத் பாகவதத்தில் பகவானைக்

ஜீவபாவம் முற்றிலும் நீங்கி, ஜீவன் முக்தியாகிய பரம அத்வைத நிலை கைகூடும்வரையில் மஹான்கள் பகவத் அதீனமாக விருப்பார்கள். ஸ்திரீகள் அபலைகளாகி எப்பொழுதும் புருஷர்களிடமே பராதீனர்களாக விருப்பதால் மஹான்களை ஸ்திரீகளாகவும், பரம்பொருளைப் பரம புருஷனாகவும் கூறியிருக்கிறது. இதுவுமல்லாமல் எல்லா ஸ்திரீ புருஷ ஸம்பந்தத்தையும்விட நாயகிநாயக ஸம்பந்தமே மிகச் சிறந்தது. இதில் நாயகி முற்றிலும் நாயகனையே ஆதாரமாக உடையவள். அவனன்றி அவளுக்கு வேறு ஒரு கதியும் இல்லை. இந்த ஸம்பந்தம் திடப்பட சிற்றின்ப வாஞ்சையால் ஏற்படும் காதல் பந்தமும் உண்டு. இவ்விரண்டு விஷயங்களால் இந்த ஸம்பந்தத்திற்கும் இதனால் ஏற்படும் இன்பத்திற்கும் முறையே பக்தர்களுக்கும் பகவானுக்கும் உள்ள நெருங்கிய ஸம்பந்தத்திற்கும் அதனால் அவர்களுக்குஏற்படும் பேரின்பத்திற்கும் மிகுந்த பொருத்தம் உண்டு. ஆனால் பகவான் நிலைக்கும் நாயகன் நிலைக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. இதை நன்கு விளக்கத்தான் பரமபுருஷனைக் காதலின் குழப்ப மறியாத குழந்தையாய் காட்டியிருக்கிறது. நாயகனே நாயகிமேல் காதல்நோயால் வருந்திக் காதலி சேர்க்கையில் சிற்றின்ப வெள்ளத்தில் மூழ்கிவிடுவான். பகவான் அப்படியல்ல. பரம பக்தர்களுக்குத் தமது சேர்க்கையால் பேரின்பம் கொடுத்து அவர்களுக்குக் கர்வம் முதலிய தோஷங்கள் ஏற்பட்டால் தாம் நீக்கி அவர்களுக்கு விரஹதாபத்தைத் தயங்காது உண்டாக்குவர். நித்தியதிருப்த ராதலால் இந்த விஷயத்தை அவர் ஒரு லீலையாக மதிப்பாரே ஒழிய பெரிய விஷயமாகக் கொள்ளார்.

இவ்வாறு மஹான்களை வெறும் நாயகிகளாகக் காட்டினால் போதாது; அவர்களுக்குப் பகவானிட மிருக்கும்

உணர்த்தும். 'நான் எங்கும் பரவியுள்ள வஸ்து, எனக்கு உங்களைவிட்டுப் பிரிவு என்பதே கிடையாது. எப்பொழுதும் உங்களுடன் சேர்ந்தே யிருக்கிறேன். இப்பொழுது ஏற்பட்டுள்ள பிரிவு உங்கள் பக்தியை அதிகப்படுத்தி உங்களுக்குச் சாந்தியை உண்டாக்கும்" என்பதே பகவான் உபதேசம். இதைக் கேட்டதும் கோபிகள் தேறி சாந்தி பெற்றனராம். ஆகவே கிருஷ்ணன் கேவலம் காமியான புருஷனல்லன். இது தோன்றவே அவரை இக்காலத்தில் குழந்தையாக வைத்திருக்கிறது. கோபிகைகள் அன்பு, முதலில் காமம் போல இருந்தபோதிலும் வரவரப் பக்தியாக மாறிச் சாந்தி ப்ரதமான முமுக்ஷுத்வமாகி விடுகின்றது என்று தெரிய வரும்.

கோபி என்ற பதத்தின் பொருளே மிகச்சிறந்தது. 'ஸர்வ உபநிஷத்துக்களும் கோக்கள்; கோபாலநந்தனரே பால்காரர். பார்த்தன் கன்று: மஹான்களே பால் குடிப்பவர்கள். கீதாமிருதமே மஹத்தான பால்' என்று பகவத்கீதை விஷயமான ஒரு சுலோகம் உண்டு. இதிலிருந்து உபநிஷத்துக்கள் கோக்கள் என்பதாயிற்று. அதாவது உபநிஷத்துக்கள் என்ற பசுக்களைப் பரிபாலனம் செய்து, வரும் ஞானமிருதமாகிய பாலைப் பருகுபவர்கள் மஹான்களாகிய கோபிகள். இதற்கேற்பவே, ராமாயணம் உத்தரகாண்டத்தில் ராவணன் திக்விஜயத்தில் ச்வேதத்வீபம் என்ற விடத்தில் எல்லோரும் ஹரிபக்தர்களாகிய ஸ்திரீகள் என்று கூறப்பட்டுள்ளது. மேலும் ராமாவதாரத்தில் பக்தியில் ஈடுபட்டு ஸாகிக்க முடியாத ரிஷிச்ரேஷ்டர்களே கிருஷ்ணாவதாரத்தில் கோபிகளாகிவிட்டனர் என்ற கதைகூட உண்டு. ஆனால் பரமபக்தர்களான மஹான்களைப் பெண்களாகவும் பகவானைப் புருஷனாகவும் கூறுவானேன் என்ற சங்கை உண்டாகலாம்.

கிருஷ்ண ஆராதனம் மனிதர்களை மஹா பாபிகளாக்கிவிடும் என்று அபிப்பிராயப்படுகின்றனர். தன் மதமே உண்மை, உலகில் வேறு உண்மை மதங்களே இல்லை, தன் மதாசாரியனே மஹான், வேறு மஹான்கள் உலகில் இல்லை என்று மூடபக்தி, மதாவேசம், மதத்வேஷம் முதலிய கொடுங்குணம் வாய்ந்த வெளிநாட்டோர் பிதற்றுவதற்கு கேட்க வேண்டுமா! அவர்களுக்கு நமது மதவிஷயமான அஞ்ஞானம் அதிகமாகவாக மததூஷணம் அதிக கொடுமையாகக் கிளம்பி வரும். இதனால் தெய்வமிகழ்ந்து கொடிய பாபத்திற்கும் அநேக கொடிய செய்கைகளுக்கும் அவர்கள் ஆளாகின்றனர். பாலகோபாலனாகிய பகவானே இவர்களைச் சீர்திருத்த வேண்டுமே ஒழிய, எவராலும் இவர்கள் த்வேஷாந்தகாரத்தை நீக்கமுடியாது. வெளியோர் பிதற்றல்களுள் பாலகிருஷ்ண விஷயமானதே பெறும் பிதற்றலாகவிருக்கின்றது. ஆதலால் இந்த ஜாரலீலைகள் விஷயத்தை நாம் நன்கு ஆராய்தல் வேண்டும்.

இந்த ஜாரம் அல்லது திருப்திப்படுத்தும் லீலைகளில் யார் ஸம்மந்தப்பட்டவர்கள்? பகவான் ஒருபுறம், கோபஸ்திரீகள் மறுபுறம். இந்த லீலைகளில் பகவான் திருப்திப்படுத்தும் விதம் எவ்வாறு? கோபஸ்திரீகளுக்குச் சாந்தம் வரும்படி நடந்துகொள்ளுகிறார். தமக்கு அவ்வாறு நடப்பதால் ஸுகமும் ஏதாவது ஏற்படவேண்டும் என்ற எண்ணமே இல்லாதவர். ஆதலால் உண்டாகும் சாந்தத்திற்கு ஏதாவது கெடுதல் வரக்கூடியதான நிலை வந்தவுடன் நிஷ்கண்டகமாகக் கோபஸ்திரீகளை வருத்துகிறார். பகவான் பிருந்தாவனம்விட்டு மதுரைசென்றதும் கோபஸ்திரீகள் பட்டபாடு சொல்லிமுடியாது. அதை நீக்க பகவான் உத்தவருக்குச் சொல்லியனுப்பிய உபதேசம் பகவான் நிலையை நன்கு

விடுகிறார். அதாவது முடிவில் வைராக்யம் திடப்பட்டு இந்திரியங்களுக்கு வெளியேறி விஷயானுபவம்செய்யும் ஆற்றல் அடியோடே போய்விடும். மேலான நிலை பின்னர் வரும் என்று கூறவும் வேண்டுமோ ? இந்தலீலை ஸம்பந்தமாகப் பெரியோர்கள் ஒரு உபதேசமொழி ஒன்று கூறுவது வழக்கம். 'விஷம் கொடியதல்ல: அதை விஷம் என்று கூறவே கூடாது. விஷயமே விஷம், ஸம்ஸாரம் அந்த விஷய விருக்ஷம். விஷம் சாப்பிடுவோர் தேஹத்தைப்போக்கி ஒரு ஜன்மத்தை வீணுக்குவர். விஷயமோ அவ்வாறின்றி மனதால் ஸ்மரித்து அழுந்துபவர்களது அனேக ஜன்மங்களை வீணுக்கிவிடும். விஷயானுபவ ஆசையை வேரறுப்பதே உலகவாழ்க்கையின் பலனுகும். இதை அடையாது இருப்பவர் வாழ்நாள் வீணுளே!' இந்த ரஹஸ்யத்தைப் பகவான் பரோபகார லீலைகள் நன்கு உணர்த்தி ஜன்மத்தை ஸ்பலமாக்கிக்கொள்ள நம்மை நன்ருகத் தூண்டும்.

இனி பகவானது ஜாரலீலைகளை எடுத்துக் கொள்ளுவோம். இவைகளைத்தான் கிருஷ்ண லீலைகளுக்குள் பரம ரஹஸ்யங்கள் அடங்கியவைகள் என நமது பெரியோர் கொண்டாடுகின்றனர். இவைகளின் உள்நோக்கம் அறியாத கிருஷ்ணபக்தர்கள், இந்த லீலைகளை வெளிப்படையாகக் கொண்டு மயங்கி வாயால்கூற இயலாததும் வேதவிரோதமுமான கொடிய பாபச்செயல்களைத் தயங்காதுசெய்து 'பக்தி செய்கிருேம், பஜனை செய்கிருேம்' என்று வீண்பெருமை பேசுகின்றனர். இந்த நாடகங்களைக் கண்டு நம்முள் லீலா ரஹஸ்ய முணராத சில அறிவுடையோர்கள் யுக்திக்குப் பொருத்தமாகவே கிருஷ்ண லீலைகள் இத்தகைய அடாத காரியங்களுக்கு இடங்கொடுக்குமா என்று சங்கித்து

சித்த ஸமாதானம் உண்டாகும்படி செய்யும் என்பதை உணர்த்தும். ராக்ஷஸாதிகள் பொதுவாக மனத்தின் அசுத்த வாஸனைகளை உணர்த்துகின்றனர் என்பது எல்லோரும் அறிந்த விஷயமே. இம்மாதிரியான லீலைகளுள் காளிங்கநர்த்தன லீலையே சிறந்த உட்கருத்துகள் அடங்கியுள்ளது. எங்கும் பரவியதுபோல மானிடருள்ளும் இருக்கும் பரமாத்மா இவ்வாறு லோகானுபவாதிகளில் மனிதனுக்கு ஜீவபாவம் நீங்குங்கால் வெளிப்பட்டுத் துக்கநிவர்த்திக்கும் ஆனந்த ப்ராப்திக்கும் இடனாகிறது என்பதை இந்த லீலை நன்றாக உணர்த்தும். ஐந்து தலை நாகமாகிய காளிங்கன், ஞானேந்திரியம் ஐந்தையும் உணர்த்துகிறான். யமுனை ப்ரபஞ்சத்தையும், அதிலுள்ள காளிந்திமடு விஷயத்தையும் உணர்த்தும். காளிங்கன் மடுவிலிருந்து எங்கும் விஷஜ்வாலையாகவிருக்கும்படி செய்து, சிரஸில் சிறந்த மாணிக்கத்துடன் இருக்கிறான். அதாவது மனிதன் ஐந்து இந்திரிய வழிப்பட்டு விஷயத்தை அனுபவித்து, வரவர விஷய வெறுப்பை விருத்திசெய்து வருகிறான். இந்த ஸமயத்தில் பாலகிருஷ்ணன் இந்த மடுவில் விழுந்து நீந்தி முன்னர் பாம்பால் கட்டுண்டு பின்னர் அதன்பேரில் ஏறி நர்த்தனம் செய்கிறார். முற்கூறிய பக்குவமடைந்தவன் உள்ளிருக்கும் பரம்பொருள் உலகில் ஸம்பந்தப்பட்டு விளையாடி விஷயங்களில் கட்டுப்பட்டு முடிவில் விஷயவெறுப்பை ஸஹாயமாகக் கொண்டு இந்திரியங்களை அடக்கி உள்ளபடி விளங்கும். இந்த லீலையில் பகவான் ஒருகாலால் பாம்பின்மேல் மிதித்துக் கொண்டு ஒருகாலை உயரத்தூக்கி நர்த்தனம் செய்வது ஆனந்த நடேசர் உட்கருத்தை முற்றிலும் அடக்கியுள்ளது. இதன் முடிவில் பகவான், காளிங்கனை விஷம் கக்கும்படி அடித்து அவன் மாணிக்கத்தைப் பிடுங்கிக்கொண்டு விட்டு

வெண்ணெய் என்றாயிற்று. இது எப்பொழுதும் மாறாதிருந்த போதிலும், கிருஷ்ணன் இதைத் திருடிவிடுகிறார். இது பற்றியே பரம்பொருளை வேதம் தஸ்கராணாம்பதி (திருடர் பெருமான்) என்று கூறுகிறது. இப்பெயரின் ரகஸ்யத்தையே உணர்த்த கிருஷ்ணன் சோரலீலைகள் ஏற்பட்டன. இவர் யாரிடத்திலிருந்து இதைத் திருடுகிறார்? தேஹமே நான் என்று மயங்கி இந்நிலையைக் கவனியாதவர்களிட மிருந்து இதைத் திருடிவிடுகிறார். ஆனால் தேஹம் நான் என்பது எப்படியாகும் என்று சங்கிக்கும் மானிடர்களுக்கு அவர்கள் புத்தி ரூபமாக விருந்து இந்தக் கைவல்ய வெண்ணெயைப் புகட்டுகிறார். இதைத்தான் கிருஷ்ண கதையில், பகவான் திருடிய வெண்ணெயைக் குரங்குகள் வாயுள் திணிக்கிறார் என்று கூறப்பட்டுள்ளது. குரங்கு, ஸ்வபாவமாகவே சஞ்சல முடைய ஜந்து; அதாவது தேஹம் நானல்ல; ஆனால் நான் இன்னது என்று தெரியவில்லையே என்ற சஞ்சலமுடைய மனத்தைக்குறிக்கிறது. ஆகவே அப்யாஸத்தின்மேல் ஏற் படுவதாயும் பரம்பொருள் நேரான ரூபமாயும் உள்ள ஞான ரூபமான புத்தி, தேஹாதி ப்ரபஞ்சத்தில் அபிமான முடை யவரிட மிருந்து பரமநிலையான மோக்ஷத்தை மறைத்து, இவைகளில் நான் என்ற புத்தி நீங்கப்பெற்று மேல்வழி இன்னதென்றறியாது தத்தளிக்கும் பக்குவிகளுக்கு அந் நிலையை நினைப்பூட்டும் என்பதைக் குழந்தையான பகவான் தமது சோரலீலைகளால் விளக்குகிறார்.

இனி பரோபகார லீலைகளை எடுத்துக்கொள்ளுவோம். இவைகளில் தம்மைச் சேர்ந்தவர்களுக்கு வரும் ஆபத்துக் களைப் பகவான் விளையாட்டுப்போல நீக்குகிறார். அதாவது பரம்பொருள் தன்னை நாடுபவர்கள் சித்தசஞ்சலம், அதனால் விளையக்கூடிய துக்கம் முதலியவைகளை நீக்கி அவர்களுக்குச்

முதலில் சோரலீலைகளை எடுத்துக் கொள்ளுவோம். கிருஷ்ணன் எதைத் திருடுகிறார்? தயிர், பால் முதலியவைகளைத் திருடிக்குடித்து வந்தபோதிலும் வெண்ணெயையே இவர் முக்கியமாகத் திருடுவது. ஆதலால் தவிழ்ந்த கிருஷ்ணன் திருக்கோலத்தில் பகவான் வெண்ணெய்த் தாழியும் வெண்ணெய் உருண்டையும் கொடுக்கப்பட்டிருக்கும் ஆகவே அவருக்கு அதிப்ரீதியான வெண்ணெய் யாது என்ற கேள்விப் பிறக்கும். இதைப் பின்வரும் பாட்டினால் கைவல்ய நூலாசிரியர் நன்கு விளக்குகிறார்.

படர்ந்தவே தாந்த மென்னும்
  பாற்கடல் மொண்டு, முன்னூற்
குடங்களில் நிறைத்து வைத்தார்
  குரவர்கள் எல்லாம் காய்ச்சிக்
கடைந்தெடுத் தளித்தேன் இந்தக்
  கைவல்ய நவநீ தத்தை
அடைந்தவர் விஷய மண்தின்
  றலைவரோ் பசியி லாரே.

'ப்ரஹ்மமென்னும் காமதேனுவில் சுரந்த சுருதிகள் என்னும் பாலை, விசாரம் என்னும் அக்னியால் பூர்வபக்ஷம் என்னும் நீர்சுண்ட, ஸித்தாந்தம் என்னும் மதுரம் மிகக் காய்ச்சி, விருத்தி ஞானம் என்னும் புரை குத்தி, உபதேசம் என்னும் மத்திட்டு, அனுபவ ஆராய்ச்சி என்னும் கடைதலைச் செய்து, அதில் எழாநின்ற கைவல்யம் என்னும் வெண்ணெயை அனுபவித்தவர்கள் நித்யதிருப்தியாகிய பசியிலாத்தன்மை அடைந்து,விஷயானந்தமாகிய மண்ணைத் தின்னார்கள்' என்று இப்பாட்டிற்குத் தாத்பரியம் கூறப் பட்டிருக்கிறது. அதாவது ஆநந்தநிலையைப் பெற்றால் மேல் ஆசை கிளம்புவதில்லை. அந்தக் கைவல்ய நிலையே

## 2. பாலகிருஷ்ணன்



இந்த விக்ரஹம் சிறு குழந்தை உருவாகவிருக்கும். அநேக அவஸரங்களில் இந்த விக்ரஹம் ஆராதிக்கப்பட்டு வருகிறது. இவைகளில் முக்கியமானது வெண்ணெய்க் குடத்தோடுகூடிய தவிழும் கிருஷ்ணன், பாம்பின்மேல் ஆடும் தாண்டவ கிருஷ்ணன், கோபிகைகள் மனதைக் கவரும் வேணுகோபால கிருஷ்ணன் ஆகிய இவைகளே மிக முக்கியமானவை. கிருஷ்ண விக்ரஹமே அத்யத்புதலீலை களை நமது மனதிற்குக் கொண்டுவந்து நம்மை மேன்மைப் படுத்துகிறது. கிருஷ்ணன் இவ்வாறு பரம்பொருளை யுணர்த்தி வேதரஹஸ்யத்தைத் தமது லீலைகளால் வெளி யிடுகிறாரென்பதை அடுத்த பாகத்தில் நன்கு வெளியிடு வோம். இங்கு அவர் பால்யலீலையையும் ஒருவாறு எடுத்து விவரிப்போம்.

கிருஷ்ணன் பால்ய லீலைகளை உற்றுநோக்கில் மூன்று விதமாகக் காணப்படும். அவையாவன: சோரத்வம்(திருடுதல்) உபகாரத்வம் (பிறர் நன்மைக்குத் தொழிற்படல்) ஜாரத்வம் (திருப்திப்படுத்தல்) ஆகிய இவைகளே. இவைகளுக்கு முறையே வெண்ணெய் திருடுவது, அஸுரர்கள் முதலிய கொடியவர்களை அடக்குதல், வேணுகானத்தால் கோபிகளை இழுத்துத் திருப்திப்படுத்துதல் ஆகிய இவைகளே உதார ணங்கள். இவைகளைத் தனிமையாக எடுத்து இவைகளின் உட்கருத்தை ஆராய்வோம்.

என்றும், ஆனந்தகிருஷ்ணன் என்றும் பெயரிடப்பட்டிருக்கின்றன. இதில் முதலில் கிருஷ்ணன் பால்யதிசையில் கோகுலம், பிருந்தாவனம் முதலிய இடங்களிலிருந்து லீலைகள்செய்து அதன் மூலமாக தம்மைப்பற்றி வேதரஹஸ்யங்களைப் பலர் எளிதில் அறியும்படி வெளிக்காட்டுவது நன்கு விளக்கப்படும். இரண்டாவதில் கிருஷ்ணன் வயது ஆனதும் இந்த லீலாவிஷயங்களை முற்றிலும் துறந்து இல்லறத்தில் நித்திய ப்ரஹ்மசாரியாக விருந்து தமது அனந்த நிலையை அநேகவிதத்தில் காட்டியதும் விளக்கப்படும். இதன் பின்னர் பெரியவர்கள் சில கிருஷ்ண லீலைகள் விஷயமாக உட்பொருள்களில் ஈடுபட்டு ஆனந்தித்த உபதேசமொழிகளைக் குறிப்புக்கள் மூலமாக வெளியிடுவோம். சிறந்த உட்கருத்துக்களை விளக்கும் மூன்று புதியலீலைகளை வேறாக அடுத்த அநுபந்தத்தில் (அநுபந்தம் 4-ல்) விஸ்தாரமாக எடுத்து எழுதுவோம்.

---

# அனுபந்தம் 3

## கிருஷ்ணலீலைகள்

### 1. பீடிகை

கிருஷ்ண சரித்திரமே பாகவதத்தில் முக்கியமான பாகம். கர்மங்களின் முடிவாகிய பரம்பொருளை நம்மை விட்டுநிற்கும் வேறு வஸ்துவாக எண்ணி ஆராதித்துப் பரமநிலையை அடைய ஏற்பட்டுள்ள அவதார கதைகளுள் பூர்ணாவதாரக் கதையாகிய இதுவே மிகச்சிறந்தது. இந்தக் கதையிலும் இதிலுள்ள ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரலீலைகளைச் செய்து ஜீவர்கள் அதில் மொத்துண்டு திருந்தும்படி செய்து வரும் ஜகத் அந்தர்யாமியாகிய பரமாத்மாவின் ஸ்வரூபம் உள்ளபடி உணர்த்தப் படுவதோடுங்கூட, வேதத்தில் கூறியுள்ள பகவான் உண்மை நிலையாகிய நிர்குணரூபம் அதை அடையும் மார்க்கம், அங்கு ஏற்படும் அனுபவவிசேஷம் எல்லாம் உட்கருத்துகளாகத் தொனிக்கும்படியாகவே இக் கிருஷ்ணகதை அமைந்துள்ளது. இது பற்றியேதான் சுகப் பிரம்மம்போன்ற பரமஹம்ஸர்களுக்கு இக்கதையில் மிகப்ரீதி. இதற்கு இதனாலும் பரமஹம்ஸ ஸம்ஹிதை என்று பெயர் வந்தது. கிருஷ்ண லீலைகளின் சிறப்பு, உட்கருத்து இவைகளை விளக்க அவர் சரித்திரத்தை இரண்டுபாகமாகப் பிரித்துக் கூறுவோம். அவைகளுக்கு முறையே, பாலகிருஷ்ணன்

இக்கருத்துக்கு இசைய ஒரே சரித்திரமாக உண்டாகாது பாகவதம். பல சரித்திரங்கள் சேர்ந்ததாயும் இடை இடையே அரிய ஸூக்ஷ்ம விஷயங்களை நேரிட எடுத்து கூறும் பாகங்கள் சேர்ந்ததாயும் இருக்கிறது. கூறியுள்ள கதைகளிலும், சிலவற்றில் வேதரஹஸ்யமான உட்பொருள்கள் மறைந்துகிடக்கின்றன. அவைகளில் சிலவற்றை ஆங்காங்கு எடுத்துக் கூறியுள்ளது. பாகவதத்தில் கதை, ஸூக்ஷ்ம விஷயம் ஆகிய இவ்விருவிதப் பொருள்கள் அடங்கியிருப்பதற்கு ஏற்ப, இங்கு இரண்டுவித அட்டவணைகளையும் பிரித்தே எழுதுவோம். இங்கு காட்டப்பட்டவைகள் முதல் பாக அட்டவணையே. இரண்டாம் பாக அட்டவணை இப்புத்தகத்திற்கு முன்னர் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

---

வாக்குக்கு எட்டாதது). அதை உள்ளபடி அனுபவித்து நிற்பதற்கு வேதங்கள் ஸத்சிதானந்தம், ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதிகாரணன் என்ற இவைபோன்ற அவாந்தர வாக்கியங்களால் மனதை உயர்த்தி அந்நிலையைச் சேரும்படிசெய்து, பின்னர் வேதங்கள் மஹாவாக்கியத்தால் உண்மைவஸ்துவை கூறுமற்கூறிவிடுகின்றன. இத்தகைய வஸ்து எங்கும் எப்பொழுதும் உள்ளது. இதை அடைவதற்காகவே அறிந்தோ அறியாமலோ எல்லோரும் முயலுகின்றனர். (இதை நன்கு உணர, 5-ம் அநுபந்தத்தில் மூன்றாவது நிஜானந்த லீலையைப் பார்க்க.) அறியாமல் முயலுவோருக்கும், தீவரமாயின்றி அறிந்து முயலுவோருக்கும், இவ்வஸ்து அனுபவம் ஸித்தியாது அவர்களை வருத்துகின்றது. இதனால்தான் ப்ரபஞ்ச வைசித்ரியம், வ்யவஹாரம் எல்லாம் உதித்து ஓங்குகின்றன. ஆகவே பரவஸ்து ஒன்று உண்டு; அது ப்ரபஞ்சத்துள் பரவி நின்று இவ்வாறு இக்காரணத்தால் தோன்றி மறைந்து, ஜீவாத்மாக்களை மேன்மை அடையும்படி செய்து முடிவில் அவர்களைத் தன்னுள் வரும்படி செய்கின்றது; எந்தக்கர்மம் செய்தபோதிலும் முடிவு இந்நிலைதான்; இதுவரும்வரையில் ஜீவர்கள் மற்றைய நிலைகளைப் பின்பற்றி, அவை முடிவானவை என்று மயங்கி, சற்று ஸந்தோஷித்துப், பின்னர் தாம் ஏமாந்ததை எண்ணித் துக்கித்து, அதைவிட்டு வேறு நிலைகளைப்பற்றி வருந்திக்கொண்டேயிருப்பர் என்று இவ்வாறு வெவ்வேறாக விருக்கும் வேதாஹஸ்யமான பரம்பொருள் விஷயத்தை நன்கு உணர்த்தி அதை ஒரு புருஷரூபமாக ஆராதிப்பதற்கு வேண்டிய உட்பொருள் நிறைந்த பூர்ண அவதாரக் கதையாகிய கிருஷ்ண சரித்திரத்தையும் எடுத்துக் காட்டிவிடவேண்டும் என்பதே இந்தப் பாகவதத்தின் கருத்து.

# அநுபந்தம் 2

## பாகவதக்கருத்து

பாகவதம் செய்வதற்குமுன் வ்யாஸர் கங்கைக்கரையில் உட்கார்ந்து நிஷ்டைசெய்ய முயலுகையில், அவர் மனச்சஞ்சலம் அடங்காமல் தத்தளிக்க, நாரதர் வந்து 'அப்பா நீ இதுவரையில் செய்துள்ள நூல்களில் எல்லாம் தர்மங்களை அதிகமாக எடுத்துக் காட்டியிருக்கிறாய். அவைகள் சென்றடையும் முடிவாகிய பரம்பொருளின் ஸ்வரூபத்தை அவ்வளவு அதிகமாக நீ எடுத்துக் காட்டவில்லை. ஆகையால் இதோடு உன் வேலையை நிறுத்திவிட்டால், தர்மங்களைமாத்திரம் மிகுந்த ச்ரத்தையோடு ஜனங்கள் அநுஷ்டித்து அவைகளின் முடிவாகிய பரம்பொருளை யறியாது தயங்குவர். ஆகையால் எல்லோரும் பரம்பொருளை எளிதில் அறிந்து மேன்மையை அடையும்படி அவரது ஸ்வரூபத்தையும், அவர் அவதாரம் எடுத்துச் செய்தருளிய அரிய செயல்களையும் பாகவதம் என்ற 18-வது புராணமாக வெளியிடு. இதனால் உன் மனச்சஞ்சலம் நீங்கிவிடும்' என்றார்.

இதிலேதான் பாகவதத்தின் கருத்து அடங்கியுள்ளது. அநித்தியவஸ்துக்கள் கொஞ்சம்கூட தலை யெடுக்காது நீங்கிய நிலையில் சேஷிக்கும் பரம்பொருள் வேதங்களாலும் கண்டுபிடிக்க முடியாது; அவாங் மானஸகோசரம் (மனோ

லீலைகள் மூலமாக ஒவ்வொருவனுள்ளும் புத்தி மனத்திற்கு உபதேசம் செய்ய அவனவன் ஜீவன் முக்திநிலையை அடையும் அருமையான வழி குறிக்கப் படுகின்றது. இந்த ரஹஸ்யத்தை விஸ்தாரமாக வெளிப்படுத்தும் கட உபநிஷத் வாக்கியம் ஒன்று உண்டு. 'ஜீவனே (மனமே) ரதிகன், தேஹமே ரதம், புத்தியே ஸாரதி, விருத்திகளே கடிவாளங்கள், இந்திரியங்களே குதிரைகள் 'விஷயங்களே பாதைகள் என்பதுதான் இந்த வாக்கியம். இதன்படி நோக்கில் மற்றைய ஆசார்யலீலைகள் எல்லாவற்றின் உட்பொருள் விளங்கியபோதிலும், கீதாசார்ய லீலையின் உட்பொருளுக்கு இது மிகப் பொருத்தமாக உள்ளது. இங்குதான் ஆசாரியன் ஸாரதியாகவும் சிஷ்யன் ரதிகனுகவும் அமைந்திருப்பது. உபதேசம் செய்யும் இடம் குருக்ஷேத்திரபூமி, அதாவது உண்டாகப்படும் இடம், அதாவது மனத்தின் காரியமான பிரபஞ்சம். இது முதலில் ஸுககரமாகத் தோன்றியபோதிலும் விசாரணையால் துக்ககரமாகத்தோன்றும். குருக்ஷேத்திரம் யுத்தபூமியாகுங்கால் அதில் உபதேசம் தொடங்குகின்றது என்பது விசாரணையால் பிரபஞ்சம் துக்கபூர்ணம் என்று காணுங்கால்தான் புத்தி தெளிந்து மனதிற்கு உபதேசம் செய்யத் தொடங்குவது என்ற கருத்தை அடக்கியுள்ளது. இப்பொருத்தங்களை உற்றுநோக்கில் முன் எடுத்துக் காட்டிய கட உபநிஷத் வாக்கியத்தை உருவகப்படுத்தி நன்கு விளக்கவே பகவான் கீதாசார்ய லீலையை விளையாடிக் காட்டினரோ என்று எண்ணவேண்டி வருகிறது. ஆகவே இந்த ஆசார்ய லீலைகளை நன்கு உணர்ந்து ஒவ்வொருவனும் தன்னுள் ஆசார்யன் உதிக்கவேண்டிய முயற்சிகள் செய்ய வேண்டுவதுதான் பகவானைப் பார்த்தஸாரதி ரூபமாக ஆராதிப்பதன் நோக்கம் என்பது வெளியாகும். இந்த ஆசார்ய உதயமாகிவிட்டால் பின்னர்:—

எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே !

என்று கூறப்படும் பரமநிலை தானே கைகூடிவிட யுத்த பூமிக்கு நிகரான பிரபஞ்சத்தில் தாக்கற்று நிற்றலாகிய ஜயம் வந்து தானே நம்மைச் சேரும்.

ஈச்வர லீலைகளில்தான் கிருஷ்ணன் தாமே ஸர்வசக்தி மாஞன ஈச்வரன் என்று நேரிட பக்தர்களுக்குக் காட்டுவது. இவைகள் மூன்று அவஸரத்தில் காட்டப்பட்டன. முதலாவது துர்யோதனனிடம் தூது நடந்த காலத்தில் பகவானை அவன் கட்டிப்பிடித்துச் சிறையிலிட சதியாலோசனை செய்து ஸபையில் கட்டிவிடத் தொடங்க விச்வரூபத்தைக் காட்டினுர். இரண்டாவது பகவத்கீதோபதேசத்தின் அங்கமாக அர்ஜுனனுக்குத் திவ்யப்பார்வை கொடுத்து (11-ம் அத்யாயத்தில்) தமது விச்வரூபம் காட்டி வேதாஹஸ்யம் வெளியிட்டார். மூன்றுவது பாரதயுத்தம் முடிந்தபின் தர்ம புத்திரர் அச்வமேதயாகத்திற்கு முன்னர் பகவான் அனு கீதை உபதேசம்செய்து துவாரகைநோக்கித் திரும்புகையில் எதிர்ப்பட்ட உத்தங்கர் கோபத்தை மாற்ற விச்வரூபம் காட்டினுர். இவைகளால் தம்மிடமே பிரபஞ்சம் எல்லாம் அடங்கியிருக்கிறது, தாமே ஸர்வேச்வரன் என்பதை வெளியிட்டார். இப்படிச் செய்தும் பீஷ்மார்ச்சுஞதிகள் தெளிந்தனரே ஒழிய துர்யோதஞதிகளுக்கு இது பெரும் ஜாலமாகத் தோன்றிவிடச் சீர்திருந்த இடமில்லாமல் போய்விட்டது. ஆகவே மூர்க்கனைப் பகவானே நேரிட வந்தாலும் திருத்த முடியாது. அவன் பகவத்தண்டனை மூலமாகவே தெளியவேண்டும் என்பதை இவ்லீலைகள் குறிக்கும். மேலும் பகவான் வாய்திறந்து ஸகல அண்டங்களையும் உள்ளே காட்டி யசோதையைப் பிரமிக்கும்படிசெய்த

இரண்டு பால்ய லீலைகளையும் இந்தப் பாகத்தோடு சேர்க்கலாம்.

இனி கடைசியான அந்தர்யாமி லீலைகளை எடுத்துக் கொள்ளுவோம். பிரபஞ்சத்துள் எங்கும் மறைந்து நின்று பகவான் தம் ஸந்நிதான விசேஷத்தால் எல்லாவற்றையும் சேஷ்டிக்கும்படி செய்கிறார் என்ற ரஹஸ்யம் இவைகளிலிருந்து நன்கு வெளியாகும். துச்சாஸனன் ஸபைநடுவில்புடவையைப் பிடித்திழுக்கத் தன்னால் கூடியவரையில் தடுத்து முடியாமல் இருகைகளையும் சிரமேல் தூக்கி 'ஹா கிருஷ்ண! த்வாரகாவாஸா!! எல்லாம் உன்செயல்! என்னால் ஆவதொன்றுமில்லை! நீயே கதி!!' என்று கதறிய திரௌபதிக்கு மறைந்து நின்று எண்ணரும் புடவைகள் அளித்து மான ஸம்ரக்ஷணம் செய்த பகவான் லீலையும், அகாலத்தில் விருந்தாகத் தூர்வாஸர் அவர் சிஷ்யர்கள் எல்லோருக்கும் பூரண திருப்திவரும்படி ஒருகீரையையும் பருக்கையையும் தீர்த்தத்துடன் உட்கொண்ட லீலையும், தம் ஸந்நிதான மாத்திரத்தில் பாரத யுத்தம் நடக்கும்படி செய்துவைத்த லீலையும், நேரிட அரசனுக்கிராது ராஜ்யம் நடத்திய லீலையுமே இந்த மாதிரி லீலைகளுக்கு உதாரணம். இங்கெல்லாம் பகவான் தோன்றாமலாவது அல்லது வெறும் ஸந்நிதான மாத்திரமாகவாவது இருப்பார். இவைகளை உற்று நோக்குங்கால் பிரபஞ்சம் முழுவதும் பிறந்து நடைபெற்று அழிவதும், இடையில் ஜீவர்கள் மொத்துண்டு திருந்தி விருத்தியடைவதும் ஆகிய இவைகள் கடவுள் முன்னிலையில் காந்தச்சிலை முன் சேஷ்டிக்கும் ஊசிகள் ஆட்டம்போல நடைபெறுகின்றன என்ற விரிந்த எண்ணம் யாருக்குத்தான் வாராது?

ஆகவே அனந்த கிருஷ்ண ஆராதனத்தில் இவ்வைந்து வித லீலைகள் மனத்திலூறிக்கொண்டே இருத்தல் வேண்டும்.

வேதாகமங்களில் காட்டியபடி கடவுள் லக்ஷணங்கள் முற்றிலும் அமைந்து கிடக்கும் வஸ்துவைப் புருஷனாக ஆராதிக்க வேண்டுமாகில் கிருஷ்ணன் ஒருவனையே பின்பற்றல் வேண்டும். மணியுள் கயிறுபோலத் துவந்துவங்களும் மாறுபாடுகளும் நிறைந்த பிரபஞ்சத்துள் ஊடுருவிச் செல்லும் பரம்பொருளை ஒருவாறு தியானத்திற்குக் கொண்டு வந்து ஆராதிக்கவேண்டுமாகில் கிருஷ்ண ஆராதனத்தால் தான் செய்ய முடியும். இதுபற்றியே ஒரு மஹான், கிருஷ்ண பரமாத்மா விடம் பின்வருமாறு ஈடுபடுகிறார். 'பிரபஞ்சமாகிய நாடகத்திலிருக்கும் வெளிப்படையான விரோதாம்சங்கள், தோஷங்கள் முதலியவற்றையும் விடாது நடித்து யாவரும் மறவாத வண்ணம் காட்டி, அவைகளின் உள்ளே தாமே கபட நாடக ஸூத்ரதாரியாக விருப்பதை வெளிப்படுத்தியவராயும், தாமே தஸ்கராணும்பதி(கள்வர் தலைவன்) ஆக இருப்பவராயும், பிரேமை, கருணை முதலியவைகளுக்கு நிலயமாக விருந்தபோதிலும் தாமே ஸகல விரோதம், சண்டை முதலியவைகளுக்கு இவ்வாறு காரணமாக இருப்பது என்பதை வெளியிடுபவராயும், ஸகல வேதார்த்தங்களையும் வெளிப்படுத்தும் திறனுடையவராயும், ஸகல ஸ்திரீகளும் மிகுந்த ஆனந்தத்துடன் கூறத்தக்கதாக உள்ள பால்ய லீலைகளை உடைய அற்புதக் குழந்தையாயும் உபநிஷத்துக்கள் வெளியிடும் அற்புத விஷயங்களைத்தெரிவிக்கும் சேஷ்டைகளைக் கோபிகள், ராதை முதலியவர்களோடு செய்த அற்புத புருஷனாயும், உலகத்தையே நிலைநிறுத்தும்படியான சட்டங்களை வெளிப்படுத்திய அமைச்சராயும், ஸந்நிதான மாத்திரத்தில் எல்லா விஷயங்களையும் நியாயப்படி நடக்கும் வகை செய்யும் அற்புத வீரராயும், உலகத்தில் உள்ள ஸகல வேதங்களது ஸாரத்தையும் சுருக்கமாகக் கொஞ்ச நாழிகை

யில் எடுத்துரைத்த பரம குருவாகியும், 16,108 ஸ்திரீகளோடு கூடியிருக்கும் நித்ய ப்ரஹ்மசாரியாயும், நாரதரை ஒரு நொடியில் மாயையில் கட்டுப்பட்டுத் தவிக்கும்படி செய்த சூதான ஸ்நேஹிதராயும், ஸதா வேணுகானம், நடனம், விளையாட்டு ஆகிய இவைகளையே நிச்சிந்தையாகச் செய்துகொண்டிருக்கும் கோபாலனையும், கற்பனா ரஸம், ஸம்பவ விசித்திரம், ஆழ்ந்த உட்கருத்து ஆகிய இவைகள் விஷயத்தில் தனக்குத் தானே நிகர் என்று சொல்லும்படியான திவ்யசரித்திரத்தை உடையவராயும், பூர்ணவதாரமாயும் உள்ள கிருஷ்ண பரமாத்மாவைக் கடவுளெனக் கருதித் துதிக்காதிருப்பவரும் உண்டோ?' என்று வியந்து கூறியிருக்கிறார் அம்மஹான். இக்கருத்தை உள்ளடக்கியே வாஸுதேவ சப்தத்திற்கு அமிருதபிந்து உபநிஷதத்தில் பின்வரும் பொருள் குறிப்பாகக் கூறப்படுகின்றது. அது 'எல்லாப் பூதங்களுக்கும் வாஸவிடமாகி அவைகளில் வஸித்துக்கொண்டு எல்லாவற்றையும் காக்கும் வாஸுதேவன் எவனோ அவனே நான்' என்றுபொருள்படும். ஆதலால்தான் 'பல பிறவியின் முடிவில் ஞானி, எல்லாம் வாஸுதேவன் என்று என்னை அடைகிறான். அவன் கிடைப்பது மிக அருமை' என்று பகவான் கீதையில் கூறுகிறார். இவ்வளவு சிறப்பான அனந்தகிருஷ்ண விக்கிரஹத்தை முற்கூறிய உட்கருத்துகளுடன் பொருத்திச் சுத்த மனதுடன் ஆராதித்தால் நம்முள் கிருஷ்ண பரமாத்மா உதிக்க, அவரோடு இரண்டறக் கலக்கும் நிலையாகிய பரமபதம் கைகூடிவிடும் என்பது கூறாமலே விளங்க இடமுண்டு.

---

# 4. *பாரிஜாத புஷ்பலீலை



இந்திரன் தனக்கிருந்த ஐச்வர்ய மதத்தால், தான் கிருஷ்ணனைவிட மேல் என்று எண்ணிக் கர்விக்கத் தொடங்கி விட்டான். வாமன அவதாரத்தில் பகவான் தனக்குத் தம்பியான உபேந்திரனாகப் பிறந்திருந்தார் என்பது ஞாபகம் வர இந்தக் கர்வம் அதிகப்பட்டு ஓங்கியது. இதை எப்படி யாவது அடக்கி இந்திரனுக்கு நற்கதி வரும்படி செய்ய வேண்டும் என்று நாரதருக்குத் தோன்றியது. உடனே தேவலோகத்திலிருந்து ஒரு திவ்யமான பாரிஜாதப்பூவைப் பறித்துக்கொண்டு வந்து கிருஷ்ணன் தமது பட்டமஹிஷி களுடனிருக்கையில் அவருக்கு ஸமர்ப்பித்து விட்டார். அவர் அருகிலிருந்த ருக்மணிக்கு இதைக் கொடுத்துவிட்டார். இதைக் கண்டதும் ஸத்யபாமைக்குப் பொறாமை அதிகரித்து விட்டது. தனக்கு அந்த மாதிரியான புஷ்பம் வேண்டும் என்று கிருஷ்ண பரமாத்மாவைத் தொந்திரவு செய்தாள். அவளை முற்றிலும் திருப்தி செய்யப் பாரிஜாத மரத்தையே அவள் புறங்கடையில் கொண்டு வந்து நட்டுவிடுவதாக வாக்களித்து விட்டார். இதைப் பூர்த்தி செய்யப் பகவான் நாரதர் மூலமாக இந்திரனுக்கு ஸங்கதிசொல்லி யனுப்பு வித்து அதைத் துவாரகை அனுப்பும்படி கேட்டுக் கொண்டார். தேவலோக விருக்ஷம் பூமியில் வளருவது

*குறிப்பு:—ஸ்க-10, விஞ 121 இல் காணப்படும் பாரிஜாத புஷ்பலீலை பின்வருமாறு புராணாந்தரங்களில் கூறப்பட்டுள்ளது.

அழகல்ல, ஆதலால் கொடுக்கமுடியாது. என்று இந்திரனும் மறுத்துவிட்டான். பகவான் அடிக்கடி கேட்டும் இந்திரன் வழிக்கு வரவில்லை. இனிச் சும்மாவிருப்பது அழகல்ல வென்று அவர் இந்திரன்மேல் படை எடுத்துச் சென்று முதல் நாள் யுத்தத்தில் இந்திரனை நன்றாக முறியடித்தார். அன்றிரவு நாரதருங் காச்யபரும் இந்திரனிடம் வந்து தேற்றி அவனுக்குக் கிருஷ்ண பரமாத்மாவின் சிறப்பை உபதேசித்து விட்டனர். துக்க ஸமயமாகவிருந்ததால் இவ்வுபதேசம் இந்திரன் மனதில் நன்றாகப் பதிந்துவிட்டது. மறுநாள் பகவான் பாதத்தில் இந்திரன் விழுந்தான்: அதுவரையில் செய்த குற்றங்களுக்கு எல்லாம் மன்னித்து விடவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டான். பின்னர் அவன் பாரிஜாத மரத்தை வேரோடு பிடுங்கிக் கிருஷ்ணன் கையில் கொடுக்க, அவர் அதைக் கருடன்மேல் ஏற்றிக்கொண்டு த்வாரகை வந்து ஸத்யபாமை கொல்லைப்புறத்தில் அதை நட்டு விட்டார்.

புருஷர்கள் தீர்க்க ஆயுளை விரும்பும் பத்னிகளுக்குச் சாஸ்திரத்தில் ஒருவித வ்ருதம் ஏற்பட்டிருக்கிறது. அதன்படி ஆசார உபவாஸங்களோடு பரிசுத்தமான மரத்தடியில் அந்தப் பத்னி தன் புருஷனை ஒரு ப்ராஹ்மணனுக்குத் தானம் செய்துவிட்டு, அவன் கோரும் பொருள் முதலியவைகளைக் கொடுத்து அவனிடம் இருந்து பதியை மீட்டுக்கொள்ள வேண்டும். இந்த விருதத்தைப் பாரிஜாத மரத்தடியில் செய்யவேண்டும் என்று ஸத்யபாமைக்குத் தோன்றியது. உடனே நாரதரையே தானம் வாங்கும் ஸ்தானத்திலிருக்கச் செய்து கிருஷ்ணனை விதிப்படி தானம் செய்துவிட்டாள்.

அப்பொழுது பகவானுக்கு ஸமநிறையுள்ள விலையுயர்ந்த வஸ்துக்களை எனக்குக் கொடுத்துவிட்டு உன்பதியை மீட்டுக் கொள் என்றார் நாரதர். உடனே ஒரு பெரிய தராசு வந்து சேர்ந்துவிட்டது. பகவான் ஒரு தட்டில் ஏறி உட்கார்ந்தார். ஸத்யபாமை மற்றத்தட்டில் தனது நகை முதலிய விலையுயர்ந் தவைகளைக் கொண்டுவந்து போட்டாள். பகவான் தட்டு அசையவே இல்லை. தன் வஸ்துக்கள் எல்லாம் போட்டாள்! பயன்படவில்லை. ஏது! பகவான் நாரதருக்கு அடிமைதான். நம்மால் மீட்க முடியாதுபோல விருக்கிறது' என்ற ஏக்கம் வந்துவிட, மிகுந்த பரபரப்புடன் ருக்மணி தவிர மற்றைய பெண்சாதிமார்களை அழைத்து நடந்ததைக் கூற எல்லோரும் நடுநடுங்கிப்போய் தமது வஸ்துக்களை எல்லாம் கொண்டு வந்து போட்டுப் பார்த்தனர். பகவான் தட்டு அசைந்து கொடுக்ககூட வில்லை. 'என்னடீ! அவஸரப்பட்டு இக்காரியம் செய்துவிட்டாய்!! எங்களை எல்லாம் கேலிசெய்தாய்? இப்பொழுது மோசம் வந்துவிட்டதே! தீர்க்கமாங்கல்யம் வேண்டும் என்று செய்யப்போன காரியம், பதியை உயிரோடு பறிகொடுக்கும்படியான முடிவிற்கு வந்து விட்டதே! என்ன அவஸரம்! மூடத்தனம்!' என்று எல்லோரும் ஸத்ய பாமையை இகழ்ந்துபேசித் துக்கிக்கலாயினர். அப்பொழுது ருக்மணி இந்த ஸமாசாரத்தைக் கேள்வியுற்று ஸாதாரண உடையுடன், தான் பிரியமாகப் பகவானைப் பூஜிக்கும் துளஸிதளங்களுள் ஒன்றைக் கையிலேந்தி அங்கு வந்தாள். எல்லோரும் அவளிடம் சென்று முறையிட்டுக்கொண்டார். அவள் பகவத்யான பரவசையாய் கையிலிருந்த துளஸி தளத்தை ஆபரணக் குவியலின்மேல் வைத்தாள். உடனே பகவானிருந்த தட்டுக் கிளம்பி ஊசலாடி ஆபரணத்தட்

டோடு ஸமமாகி நின்று விட்டது. 'ருக்மணியின்மீது பகவான் அதிக பிரீதியாக விருக்கிறார் என்று நாமெல்லாம் பொறாமை பட்டு என்னபயன்? அவள் பக்தி நமக்கு உண்டா?' என்று எல்லோரும் சொல்லிவிட்டுத் தமது இடம் சென்றனர். ஸத்யபாமை அவமானப்பட்டு வெட்கிப் போனாள். 'நாம் எந்தமூலை ருக்மணி முன்னர்' என்று அழுந்திப் போய்விட பொறாமை அவளைவிட்டுச் சற்று விலகிற்று. அதுமுதல் ருக்மிணியைக் காணுங்கால் ஒருவித பயமும் மரியாதையுமே அவள் மனத்தில் குடிகொள்ளத் தொடங்கிவிட்டது.

இவ்வாறு ஒரே விஷயத்தில் இந்திரன் ஸத்யபாமை இவர்கள் கர்வத்தை ஒடுக்கி ருக்மணியின் சிறப்பை எல்லோரும் அறியும்படி செய்துவிட்டார் பகவான்.

---

## 5. உட்பொருள் குறிப்புகள்



(1) அவதாரம்:—ஈச்வரன் வேறு தனிகர்ப்பத்தில் பிறப்பது மாத்திரமல்ல. சைதந்யம் ஒன்றே எங்கும் பரவி யுள்ளது: அளவில் வித்யாஸம். கற்பூரம் ஒன்றுதான். ஒருவனிடத்தில் ஒரு பலமும், மற்ெறாருவனிடத்தில் ஒரு வீசையும், வேறு ஒருவனிடத்தில் ஒரு மணங்கும் இருக்கிறது: இதுபோல ப்ரஹ்மம் ஒன்றேயாயினும் பலவிடங்களில் அவ்வவ்விடங்களுக்கு ஏற்ப இருக்கும். பகவான் கீதையில் 'பெருமை, சிறப்பு, வலிமை முதலியவைகள் அதிகமுள்ள வஸ்துக்கள் எவையோ அவைகள் எல்லாம் என் ஒளியின் ஒரு பாகத்தை ஆதாரமாக உடையவை என்று அறி' என்று கூறியிருக்கிறார்.

(2) கம்ஸன்:—(கம் = ஸுகம்; ஸ: = விரோதம்) அதாவது ஜீவ அஹங்காரம். கம்ஸஹரி = ஜீவ அஹங்கார சத்ரு. இவன் உக்ரஸேனன் பிள்ளை. உக்ரஸேனன் கோபதாப உக்ரங்களுக்கு ஸேனாதிபதி. இவன் குமாரத்தி தேவகீதேவி. இந்த தேஹத்தில் நல்லதும் கெட்டதும் கலந்திருக்கிறது என்பது விளங்கும். சுத்த புத்தி விருத்தியாகிய ஆறு பிள்ளைகள் பிறந்தபோது, அஹங்காரமாகிய கம்ஸன் அவைகளைக் கொன்று விட்டான்: அதாவது அடக்கிவிட்டான்.

(3) பாலகிருஷ்ணனாகிய பகவத் பக்தி முதலிய ஸத்குணம் வந்தபோதுதான் தேவகீ விடுதலையானாள். சிறைச்

சாலைக் கதவுகள் தாமாய்த் திறந்தன: ஞானானுபவத்தால் பாசம் தானாகக் கெடும். நமது வீட்டில் ஏதாவது துக்கம் வருங்கால் யாராவது நல்விஷயங்களைக்கூறி ஆறுதல் உண்டாக்குவதைப் பாலகிருஷ்ணன் பிறப்பு என்னலாம்.

(4) பகாஸுரன் = கௌடில்யம் (மாயை). சுத்த விருத்தியாகிய கிருஷ்ணன் உள்ளேபோய் அதைக் கிழித்து விடுகிறார்.

(5) மாயஸ்ருஷ்டி லீலை:—ப்ரஹ்மா பசுக்களை எல்லாம் கொண்டுபோய் ஒளித்துவிட்டார். கிருஷ்ணன் மறுபடியும் அவைகளை ஸ்ருஷ்டித்துவிட்டார். ப்ரஹ்மா பார்த்துச் சரணாகதி யடைந்தார். பாஹ்யவைராக்யமே கொண்டுபோய் ஒளித்துவைத்து, ஸ்வப்னமாகிய விஷ்ணு எல்லாவற்றையும் மாயாஸ்ருஷ்டி செய்து விடுகிறார். ஜாக்ராதி முகமான ரஜோ விருத்தி கெட்டு, ஸ்வப்ன சரணாகதி யடைகிறோம். அப்போது ஸ்வப்னமும் ஸுகமாகவிருக்கும். கிருஷ்ணன் ஸங்கல்பித்த உடனே ஸ்ருஷ்டி உண்டாகி விட்டது நமது அனுபவத்திலேயே யிருக்கிறது.

(6) நாயக நாயகீ பாவம்:—பரஸ்த்ரீ பரபுருஷன் பேரில் அதிகப் ப்ரீதி யுடையவளாக விருப்பது வழக்கம். ஆகையால்தான் இந்த உபமானம் எடுக்கப்பட்டது. ஜீவன் நாயகி. பரமாத்மா ஸ்வாமினன். ப்ரீதிவிசேஷத்தால் பார்த்த விடமெல்லாம் கிருஷ்ணனாக விளங்குவதைக் கண்டார்களாம் கோபிகள். இலைகள் கைகள்போலவும், புஷ்பங்கள் கண்கள் போலவும் இருந்தனவாம்.

(7) கோபிகள் முன் ஜன்மத்தில் ரிஷிகளாம். தபஸு இல்லாது பகவத் பக்தி படியாது. ஞானம் தானாகவருவது மிகக்கஷ்டம். படித்தவர்களுக்கும் படியாதவர்களுக்கும்

உள்ள பேதத்தைப் பாருங்கள். உபநிஷத்தாகிய பசுவில் அர்ஜுனன் என்ற கன்றுகுட்டியால் கிருஷ்ணன் என்ற இடையன், உபதேசம் என்னும் பால் கறந்து, பக்தி என்னும் வெண்ணெய் திரட்டி ஞான நெய்காய்ச்சி கொடுக்கிறுன். கோ = ச்ருதி: கோபிகள் = ப்ரஹ்ம நிஷ்டாகரிஷ்டாள்.

(8) கோவிந்த:—பசுபதி. கோ = பூமி. பூமியைக் காட்டினதால் பஞ்சபூதங்கள் உபலக்ஷணையாகக் குறிக்கப் பட்டது.

(9) வேணுநாதம்:—சப்த நிஷ்டம் ஜகத். வாசித்த உடன் பசுக்களெல்லாம் வந்துவிட்டனவாம், அதாவது எல்லா லோகங்களும் ஸ்ருஷ்டியாகி விட்டதாம். பசுவின் பேரில் சாய்ந்துகொண்டு வாசிக்கப்பட்டது. அதாவது ஜீவ ஸ்ருஷ்டியை மூலமாகக்கொண்டு என்பதாயிற்று.

(10) கோவர்த்தனலீலை.—நந்தன் முதலியவர்கள் இந்திர பூஜைசெய்யப் புறப்பட்டபோது கிருஷ்ணன் கூறிய புத்திமதியின் கருத்து 'கர்மம்செய்து பலனைக் கோருவதால் தேஹாதிகள் உண்டாகின்றன. பலனே கர்மத்தைப் பொருத்தது. ஒருவனை உத்தேசித்துப் பூஜை போடவேண்டாம். பொதுவாகப் பூஜைசெய்து எல்லோருக்கும் விநியோகம் செய்யுங்கள். கோவர்த்தனமலை அவித்தை ஜடம்பெரிது. இந்திரியவழிச் செல்லுவதை உணர்த்தும். அதைப் பகவான் சுண்டுவிரலால் தூக்கிவிட்டார். ஞானலேசத்தால் பகவத் அபிமுகமாய் எல்லாம் திரும்பிவிடும். பின்னர் ஸம்ஸார மழை என்ன பெய்தாலும்தான் என்ன?

(11) ராஸக்ரீடை:—ரா, ராமா என்னும் பதத்தில் என்னபொருளோ அது: அதாவது ப்ரகாச ஸ்வரூபம். ப்ரகாசரூபத்தில் சம அதிகத்துடன் சேர்த்து க்ரீடித்தார்.

(12) காளிங்க மர்த்தனம்:— விஷம் விஷமல்ல : விஷயமே விஷம். ஸம்ஸாரம் விஷவிருக்ஷம். விஷம் ஒரு தேஹத்தைக்கொல்லும். விஷயம் பல ஜன்மங்களை நாசம் செய்துவிடும். விஷம் முத்தினால் மாணிக்கம்; விஷயம் முத்தினால் அதன்மேல் உண்டாகும் வைராக்கியம். பாம்பு= இந்திரியங்கள் — விஷத்யாகம்=மடுவை விடுதல் — நாலு நாககன்னிகைகள் எங்கள் புருஷனை விட்டுவிடவேண்டு மென்று கேட்கக் காளிங்கன் விடுபட்டான். விஷயஸம்பந்த விருத்தி கெட்டு ஸத்விருத்தியோடு கூடியிருக்கும்படி இந்திரியத்தை விடுவது மனம் ஸ்வரூபநாசமடைந்த நிலை.

(13) கிருஷ்ணன் ஒவ்வொரு பெண்சாதி வீட்டிலும் இருந்தாராம். யார் பார்வையில் ? நாரதர் முன்னில். நாரதர் ப்ரஹ்மவித்: கலஹப்ரியர்தான். பூர்வ ஸங்கல்பங்களுக்கு ஞானம் விரோதம். ப்ரஹ்மஞானிக்கு எல்லாம் ப்ரபஞ்ச மல்ல ப்ரஹ்மமே.

(14) கிருஷ்ணோபநிஷத்:—ஸச்சிதானந்த ஸ்வரூப மான மஹாவிஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீராமர் அங்க அமைப்பின் சிறப்பைக்கண்டு அவர் அமானுஷ ஸௌந்தர் யத்தில் ஈடுபட்டு வனங்களிலிருந்த முனிவர்கள் எல்லோரும், எங்கள் பிறவி மிக அசுத்தமானது என்று கூறப்பட்டுள்ளது. உம்மை ஆலிங்கனம் செய்து பரிசுத்தமாவோம்! உத்தரவு தரவேண்டும்!' என்று கேட்டுக்கொண்டனர். அதற்கு ஸ்ரீராமர் 'அடுத்த யுகத்தில் நான் கிருஷ்ணனாக அவதரிப் பேன், நீங்கள் கோபிகைகளாகப் பிறந்து என்னை ஆலிங் கனம் செய்துகொள்ளலாம்' என்றனர். அப்பொழுது மஹ ரிஷிகள், அடுத்த அவதாரத்தில் எங்களைக் கோபிகைகளாக் குவது இருக்கட்டும். இப்பொழுது உமது அங்கங்களைத் தொட்டுவிட்டுப் பின்னர் வேறு எந்தஜன்மம் வேண்டுமானு

லும் எடுக்கத் தயாராகிறோம். எங்கள் ஜன்மங்களில் எல்லாம் உமது தேஹஸ்பர்சம் கிடைப்பது நிச்சயமாகில் நாங்கள் எவ்வளவு ஜென்மம் வேண்டுமாஞலும் எடுக்கத் தயார் தான்!' என்று கூறிவிட்டனர். இவைகளைக்கேட்டு அவ்வாறே செய்துகொள்ள ஸ்ரீராமர் அனுமதிகொடுக்க, அவரைத் தொட்டு எல்லோருந் திருப்தி யடைந்தனர்.

கிருஷ்ணன் வளர்ப்புத் தகப்பஞன நந்தகோபர், பரமானந்தம்; யசோதை, முக்தி காந்தை; அவள்தான் ஸத்வ ரஜஸ்தமோ ரூபமான மாயை, ருத்ரனிடம் ஸத்வமாயையும், பக்தஞகிய ப்ரஹ்மாவிடம் ராஜஸமாயையும், தைத்யரிடம் தாமஸமும் உள்ளது. விஷ்ணுமாயையிலிருந்து அஸுரர்கள் வெளிப்பட்டனர். தேவகீ வேதத்திலுள்ள ப்ரஹ்மவித்யை வஸுதேவர் வேதம், கிருஷ்ணராமாள் வேதரஹஸ்யம், கோபிகளும் பசுக்களும் ரிக்குகள், மாடு மேய்க்குங்கோல் ப்ரஹ்மா, புல்லாங்குழல் ருத்ரன், கொம்பு இந்திரன், கோகுலவனம் வைகுண்டம், மரங்களே தபஸிகள், தைத்யர்கள் லோபக்ரோதாதிகள், திரஸ்காரம் கலிகாலம். விஷ்ணுவே தன் மாயையால் கோபாலகிருஷ்ண ரூபம் எடுக்கிறர். இந்த மாயையை உணருவது தேவதைகளுக்கும் அஸாத்யம். த்விஜர்களே த்ருஷ்டி. இப்படிப்பட்டவரை மாயை எப்படி மயக்கும்? பலராமர் சேஷன். கிருஷ்ணன் சாச்வத ப்ரஹ்மம். 16,108 பெண்சாதிகள் ரிக்குக்களும் உபநிஷத்துகளும். பட்டமஹிஷிகள் ரிக்குக்கள். சாணூரன் த்வேஷம், முஷ்டிகன் மத்ஸரம், குவலயாபீடம் தர்ப்பம், பகாஸுரன் கர்வம், ரோஹிணீ தயை, ஸத்யபாமை பூமி, அகாஸுரன் மஹாவ்யாதி, கம்ஸன் கலி, குசேலர் சமம், அக்ரூரர் ஸத்யம், உத்தவர் தமம், சங்கம் விஷ்ணுரூபமான லக்ஷ்மி. அது பாற்கடலில் உண்டாய் இடிபோல முழுங்கும். தயிர்

இருக்கும் உள்ளே புகுந்து பானைகளை உடைத்துத் தான் முன்னர் பாற்கடலில் வடபத்ரசாயியாக விளையாடியது போல விளையாடுகிறார். துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனம் செய்து தர்மத்தை நிலைநிறுத்த ஸர்வரக்ஷகரான பரம் பொருள் கருணையால் கிருஷ்ணனாகிறார். சிவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட சக்கரம் ப்ரஹ்மாவினின்றும், சாமரம் தர்மம், அதன் காற்று ஜயந்திபுத்ரன், நெருப்புப்போல ஒளிவிடும் கத்தி மஹேச்வரன், உரல் காச்யபர், கயிறு தாயாகிய திதி. தேவதைகள் எல்லோரும் 'பகவானுக்கு ஆயுதமாக ஞானிகளே ஏற்படுகின்றனர். அவர்களைத் தேவதைகளாகவே கருத வேண்டும்' என்று கூறுகின்றனர். ஸர்வ சத்ருக்களையும் அழிக்கும் கதையே காளி, சாரங்கதனுஸ் மாயை, ஸுபோஜனம் என்னும் ஆயுதம் சரத்காலம், கையில் வைத்திருக்கும் தாமரைக்கொத்து ப்ரபஞ்ச காரணமான அவ்யக்தம், கருடன் பந்தீர ஆலமரம், ஸுதாமா தான் நாரதர். இம்மாதிரி ஸகல தேவதைகளும் உலகில் பகவானுக்கு அங்கங்களாக உதித்தனர். பகவான் இவர்களைவிட வேறாகத் தோன்றியபோதிலும் உண்மையில் எல்லாம் அவரே.

(15) இவ்வாறு லீலைகளின் அமைப்பிற்கு ஏற்ப வேதாந்த ரஹஸ்யம் அடங்கிக் கிடப்பதைக் காணலாம். இந்த லீலைகளை மனனம் செய்யுங்கால் பின்வரும் விஷயம் கவனிக்கவேண்டும். 'நாம் கையில் ஒரு ரத்னம் எடுத்துப் போகிறோம் என்று வைத்துக்கொள்வோம், அது ஒரு குப்பை மேட்டில் விழுந்து விடுகின்றது என்போம், அதை எடுப்பதற்கு அது விழுந்த விடத்தில் உள்ள குப்பைகள் எல்லாவற்றையும் எடுத்துக் குப்பைகளைத் தள்ளி ரத்னத்தை மாத்திரம் க்ரஹிப்போம். இதுபோலப் புராண கதைகள் விஷயத்திலும் ஒரு கதையை ஒட்டி அநேக ஸம்பவங்கள்,

பாகங்கள், வர்ணனைகள் முதலியன விருக்கும். அவைகளைக் கவனமாக நீக்கி அவைகளுள் ரத்னம்போலப் புதைந்து கிடக்கும் வேதரஹஸ்யப் பொருளையே புத்திமான் கிரஹிக்க வேண்டும். எல்லாப் பாகத்தையும் பொருள்படுத்தத் தொடங்கிவிட்டால் வீண் விதவை வேதாந்தமாக முடியும்' இந்த எச்சரிக்கையைப் பின்பற்றிக் கிருஷ்ணலீலைகளைப் பொருள் படுத்தி மனனம் செய்யலாம்.

---

# அநுபந்தம் 4

## மூன்று புதிய லீலைகள்

## 1. நிஜஸந்யாஸம்

### ராதாகிருஷ்ண லீலை

"மனத்தகத்தழுக்கறாத மௌனயோகஞானிகள்
வனத்தகத்திருக்கினும் மனத்தகத்தழுக்கறார்,
மனத்தகத்தழுக்கறுத்த மௌனயோகஞானிகள்
மனைத்தடத்திருக்கினும் பிறப்பறுத்திருப்பரே."

யமுனைக்கரை, அதனோடு ஸம்பந்தப்பட்ட கதைகளால், மிகச்சிறப்புற்று விளங்குகிறது. இதைவிடப் பெரிதாக உள்ள அமேஸான் முதலிய பேராறுகள் இவ்விஷயத்தில் யமுனைக்கு நிகராகுமோ? புராணங்கள் இந்நதியைக் கிருஷ்ண பரமாத்மாவோடு ஸம்பந்தப்படுத்தி இதற்கு மாறாப்பரிசுத்தமும் புகழும் அளித்துவிட்டன.

ஒரு ரமணீயமான மாலைப்பொழுதில் இந்த யமுனைக் கரை வெண்மணலில் ராதையும் கிருஷ்ணனும் உல்லாஸமாக விளையாடிக்கொண்டிருந்தனர். அப்பொழுது வந்த குளிர்ந்த தென்றலோடு அதியத்புதமான வேதகானம் அவர்கள் காதில் விழுந்தது. ராதைக்கு இதைக் கேட்டதும் அடங்கா ஆவல் உண்டாக 'இது எங்கிருந்து வருகிறது?' என்று தன் காதலனைக் கேட்டாள். 'என் கண்மணியே!

அருகாமையிலுள்ள காட்டுள்ளிருக்கும் ஆச்ரமத்திலிருந்து ஒருவேளை 'வருவதாகவிருக்கும். அங்கு ஸந்யாஸி இருந்து தவம் செய்துகொண்டிருக்கலாம்' என்று மறுமொழி கூறினார் கிருஷ்ணன். 'பசு பத்னி ஸுதாலாயும் எல்லாவற்றையும் துறந்து காட்டில் வஸிக்கும் இந்த ஸந்யாஸிகளே உண்மையாக நோக்கில் மிகப்பரிசுத்த ஆத்மாக்கள். பகவத் கிருபைக்குப் பாத்ரமாவதற்கு இவர்களே மிகத் தகுந்தவர்கள். இவர்களுக்கு எளிதில் அது கிடைக்கும் என்று கூறவும் வேண்டுமா? க்ருஹஸ்தன் குடும்பத்தில் அகப்பட்டுக்கொண்டு அதன் கவலைகளில் மூழ்கித் தத்தளிக்கிறான். அவன் எவ்வளவு சிஷ்டனாயினும் முக்திபெறுவது மிகக் கடினம்' என்று ஓங்கி உரைத்தாள் ராதை. 'அப்படியா? ஒருவேளை இருக்கலாம்! என்று அலக்ஷ்யமாகக் கூறிவிட்டுக் கிருஷ்ணர் தமது புல்லாங்குழலை ஊதத் தொடங்கிவிட்டார். வனவாஸம் அதன் ஸம்பந்தமான சிறந்த கற்பனைகள் இவைகளால் ராதையின் மனம் கவரப்பட இந்த விஷயத்தை இதோடு நிறுத்திவிட முடியாது, துறவியின் வாழ்க்கையைத் துதிக்கத் தொடங்கிவிட்டாள். 'காஷாயம், பர்ணசாலை இவைகளிலேயே ஏதோ சிறப்பு இருக்கிறது. உயர்ந்த மரம் பெரிய நதி இவைகள் அருகில் வஸிப்பவன் மனமும் பூரித்தேதான் இருக்கும். வனத்தில் ஏகாந்த ஸ்தானத்தில் பகவத் தியானம் ஓங்குவதுபோலக், குடும்பக் குழப்பத்திற்கு இடையில் செழிக்குமா? காட்டில் வஸிக்கும் ரிஷிகளைவிடச் சிறந்தவர்கள் ஒருவருமில்லை என்று எனக்குத் தோற்றுகிறது. சாந்தம், ஒழிவு முதலியவைகள் குடிகொண்டிருக்கும் இந்தச் சிறந்த வேளையில் வேதம் ஓதும் முனியைச் சென்று கண்டு வருவோம் வருகிறீரா? இவர்கள் தர்சனமே பாபநாசனம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. வாரும் போவோம்!

என்று கிருஷ்ணனை இழுத்தாள் ராதை. 'என்ன அம்மணீ ராதா! உன்மனமே என் மனம். அந்த ரிஷியிடம் போவோம்! பக்தியோடு இன்பமும் சேர்ந்திருக்க ஒரு வேடிக்கைக் கதையை அவரிடம் சொல்லுவோம். நான் ஒரு கிழட்டு வேடன் உருவம் தாங்குகிறேன். நீ இருக்கிறபடியே அழகிய ராஜகுமாரியாகவே இரு. காட்டு மிருகங்களிடம் தப்பிப் பிழைக்க அவர் ஆச்ரமத்தில் இன்று ஒதுங்குவோம். நான் நம்மைப்பற்றி ஒரு விசித்திர கதை சொல்லுவேன்; நீபுன்னகைகூடச் செய்துவிடக் கூடாது! பத்ரம்!' என்று தாக்கீது செய்தார் கிருஷ்ணர்.

இவ்வாறு சொல்லிக்கொண்டே ராதை கண்டு வியக்கும்படி சுருங்கிய கன்னம், நிறைமயிர், கூனல் முதுகு, நடுங்கும்கால் முதலியவைகளை உடைய கிழவனாகிப் பகவான் ராஜகுமாரி தோளில் சாய்ந்துகொண்டு தட்டித்தள்ளாடி நகரலுற்றார்.

யமுனையிலிருந்து பிரிந்த சிற்றாற்றின் கரையில் காட்டில் மனித ஸஞ்சாரமே இல்லாத ஒரு மூலையில் இந்த ஆச்ரமம் அமைந்திருந்தது. அது மிகத் தாழ்ந்த குடிசைபோல விருந்தபோதிலும் மிக ஒழுங்காகவும் விசித்திரமாகவும் கட்டப்பட்டிருந்தது. அந்த ஆச்ரமத்தில் எல்லாம் வெகு துப்புரவாயும் நேர்த்தியாயுமிருந்ததால் அதன் உடையவர் மனோபாவமும் ஜாக்கிரதையும் நன்குவிளங்கியது. அதனுள்ளிருந்த ஸாமான்களாவன: சில மண்பாத்திரங்களும் சமையல் சாமான்களும், விறகுவெட்டி ஆயுதங்களும், நன்றாகச் செய்துள்ள மணைகளும், பதனிட்ட புலித்தோல்களும், மான்தோல்களுமே. இவைகள் தேர்ந்த குடும்ப மேல்பார்வைத்திறனுடன் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன. வெளியிலிருந்த அநேக உயர்ந்த மரங்களிற் சில இக்குடிசையின்

மேல் தழைந்து நின்று இதை ஒரு கோயில் போலிருக்கும் படி செய்தது. இம்மரக் கிளைகளில் காஷாய வஸ்திரங்கள் தொங்கிக்கொண்டிருந்ததால் அவைகள் ரிஷிகளைப்போலப் பிரகாசித்தன. ஸூர்யன் அஸ்தமித்துக் கொஞ்ச நாழிகை யானதும் இரண்டு யாதவர்களும் ஆச்ரமம் வந்துசேர அப்பொழுது சந்திரன் தன் வெள்ளிய கிரணங்களைப் பரப் பலானுன்.

இந்த ஆச்ரமாதிபதி அடர்ந்த தாடியை உடைய ஒரு யௌவனபுருஷன். அவன் சிவந்த அழகிய மேனியில் பிரகா சித்த பரிசுத்தமும் நேர்த்தியுமான காஷாயவஸ்திரம் அந்த இளம் நிலவொளியில் மிகுந்த சோபையுடன் விளங்கியது. அவன் வெளியில் ஒரு கல்மேடையில் கிழக்கு நோக்கி வெகு கம்பீரமாக உட்கார்ந்திருந்தான். ராதையும் கிருஷ்ணனும் இவரைக் கண்டதும், வெகு விநயத்துடன் தண்டனிட்டனர். ஸந்யாஸி இவர்களை ஆசீர்வதித்து இவர்கள் யோக க்ஷேமங் களை அன்புடன் விசாரித்தான். அப்பொழுது கிருஷ்ண பரமாத்மா கூறலுற்றார்:—'ஓ! தபோநிதே! இவ்வழகிய ராஜ குமாரி, ஸௌவ்ராஜதேசத் தரசன் மகள். அவன் தனது பரிவாரங்களோடு இவளையும் கூட்டிக்கொண்டு வேட்டைக் குப் புறப்பட்டு இக்காட்டுக்கு வந்தான். இன்றுகாலை ஒரு காட்டானைக் கூட்டம் அவர்களைச் சிதற அடித்து நாற்புற மும் ஓடும்படி செய்துவிட்டது. இவள் தகப்பனைவிட்டுப் பிரிந்து வழிதெரியாது இக்காட்டில் ஓடிவருகையில் இவள் அழகைக்கண்டு மோஹித்து வருவதுபோல ஒரு பெரும்புலி தன்னைத் துரத்தி வருவதைக் கண்டாள். நான் அத்தரு ணத்தில் அங்கில்லாவிட்டால் அக்கொடிய மிருகத்திற்கு அவள் இரையாகிவிட, அது அவள் அழகியதேஹத்தைச் சின்னபின்னமாக்கிவிட்டிருக்கும். முற்காலத்தில் என்னிட

மிருந்த வில்வித்தையின் லேசத்தை நம்பி ஒரு அம்பை நான் அதன் கழுத்திற்கு நேரேவிட்டேன். நல்லவேளை குறிதவறவில்லை! அவள் கதையைக்கேட்டதும், எனக்கு மிகுந்த கனிவு உண்டாக என் வயலைதக் கூடக்கவனியாது அவளைத் தகப்பனிடம் கொண்டு சேர்ப்பதாகத்தீர்மானித்துவிட்டேன். இன்று முழுவதும் தேடிப் பார்த்தும் வேட்டைக் கூட்டத்தின் ஒரு குறியாவது அகப்படவில்லை. அலைச்சல், துக்கம் இவைகளால் மொத்துண்டு, களைத்து காட்டின் கொடுமைகளுக்குப் பயந்து உமது பரிசுத்தமான ஆச்ரமத்தில் இரவு தங்கிப்போகவேண்டும் என்று கோருகிறோம். எல்லா வழியிலும் நீரே எங்களுக்குத் தகுந்த அடைக்கலம். இந்த அபாயகாலத்தில் கடவுள் கருணையால்தான் எங்களுக்கு இவ்வளவு நல்ல தங்குமிடம் கிடைத்திருக்கிறது!' என்று கதை கட்டிவிட்டார் கிருஷ்ணன்.

ஸந்யாஸி ராஜ குமாரிக்கு வந்த ஆபத்தை எண்ணித் துக்கித்துத் தேறுதல் கூறி அவர்கள் வேண்டுகோளின்படி இரவில் தங்க இடம் கொடுத்தார். அவர்களை மிகுந்த அன்புடன் உபசரித்து தம்மிடமிருந்த உணவுப்பொருள்களை அவர்களுக்கும் ஈந்தார். கிழட்டு வேடனை நோக்கி அவன் தைர்யம், கருணை, அநாதரக்ஷணம் முதலிய குணங்களை எடுத்துப் புகழ்ந்து, அவனை வெகு அதிகமாக உபசரித்து, களைப்பை நன்றாகத் தீர்க்கக்கூடியதென்று கூறி ஒருவித மதுவை மிகுந்த அன்புடன் அவனுக்கு அளித்தார். அந்தச் சூதான வேடன் மிகுந்த ஸந்தோஷத்தோடு அதைக் குடித்து அரை மணிக்குள் தூங்குவதாகப் பாசாங்குசெய்து குறட்டைவிடத் தொடங்கினான்! ராஜகுமாரத்தியும் அந்தக் குடிசையில் ஒரு மூலையில் சென்று படுத்துக்கொண்டாள்.

இவ்வாறு ஒருமணி கழிந்ததும் ஸந்யாஸி ராஜகுமாரத்தியிடம் வந்து அவளை மெதுவாக எழுப்பினான். அவள் விழித்து ஸந்யாஸி மஹாவிநயத்துடன் ஒடுங்கிக் கெஞ்சுவதைக் கண்ணுற்று 'என்ன காரியம் உனக்கு என்னிடத்தில்?' என்று மிகுந்த கடுகடுப்புடன் கேட்டாள். 'கண்மணீ! இந்த வெட்கம்கெட்ட நடத்தையை மன்னித்து விடு! இவ்வளவு வசீகரமாயும் தெய்வீகமாயும் உள்ள இதுபோன்ற பேரழகை யான் இதுவரை கண்டதில்லை. உன் ஆனந்தமான மயக்கும் சக்தியை யாரால் தடுக்கமுடியும்? இம்மாதிரியான விலையில்லா மாணிக்கம் என்னருகிலிருக்க என்மனம் எவ்வாறு சலிக்காதிருக்கும்?' என்று காதலை வெளியிட்டான் ஸந்யாஸி! 'அடா பாபி! இதுதானா உன் தவம்! உன் பரிசுத்தம்!! உன் ஸந்யாஸம்!! அடா நாஸ்திகப் பதரே! உன் வேதாத்யயனம், உன் வேஷம். உன் ரிஷித்வம், எல்லாம் வெறும் வேஷமா, வீணா, பாசாங்கா? என்ன?——' என்று மிகுந்த கோபத்துடன் கதறினாள், ஆச்சர்ய பரவசையான அப்பெண். 'பெண்ணே! வீண்கோபங்கொள்ளாதே! தபஸ் துக்ககரம், எல்லோரும் அதை ஸஹித்துக் கொண்டிருப்பவர்களே ஒழிய ஒருவரும் ஸுகமாக அதை அனுபவியார்கள். பரிசுத்தம், துறவு முதலியன வெறும் பெயரே ஒழிய உண்மையில் எங்கும் காணப்படாது! வெறும் வெறுப்பால் நான் இவ்வனவாஸம் தொடங்கிவிட்டேன். என் அழகிய பெண்சாதி என்னைவிட்டு ஓடிப்போய் விட்டபடியால் இவ்வெறுப்பு எனக்கு வந்தது. உன் அழகுக்கு அவள் அழகு எந்தமூலை?. இந்த நல்ல ஸமயத்தில் கடவுள் கருணைதான் உன்னை என்னிடம் கொண்டு சேர்த்திருக்கிறது. நிலவு எவ்வளவு அழகாய்க் காய்கிறது பார்! நீ வந்துவிட்டால் அதன் ஒளி மழுங்கிவிடும். கிழட்டுப்பயலோ குறட்டை

விட்டுக்கொண்டு கிடக்கிறான். நான் கொடுத்திருக்கும் மது பெருமயக்கத்தை உண்டாக்கிவிடும். மூன்றுநாள் வரையில் அவனைத் தலை எடுக்கவொட்டாது. இதுதான் தருணம், என் அப்ஸரஸ்ஸே! இது தப்பினால்—' 'அடே! படுபாவி!!' என்று கதறினாள் ராதை. கோபாதிகத்தால் மேல் ஒன்றும் கூறமுடியவில்லை அவளுக்கு. இவள் இவ்வாறு கூறியது தான் தாமதம், மயங்கித்தூங்குபவன்போலக் கிடந்த கிழ வேடன் கோபம்கொண்ட கொடிய ஸர்ப்பமாகத் திடீரென்று சீறிக்கொண்டெழுந்து நாஸ்திக ஸந்யாஸியை நோக்கிப் படமெடுத்து நின்றான். நடுநடுங்கிப்போய் ஸந்யாஸி ஓடத்தலைப்பட்டான். வேடப்பாம்பான கிருஷ்ணன் அவனைத் துரத்தி துரத்தி யடிக்க அவன் உயிரைப் பிடித்துக் கொண்டு திசைதெரியாது வாயுவேக மனோவேகமாக ஓடிக் காட்டுள் மறைந்து விட்டான்!

ராதையும் கிருஷ்ணனும் சேர்ந்துகொண்டார்கள். அப்பொழுது ராதை, 'என்ன மடத்தனம் பார்த்தீர்களா? வெளித் தோற்றத்தைக்கண்டு மயங்கிவிட்டேனே! காட்டி விருந்தாலே——' என்று கூறி முடிக்குமுன். ராதே! என்னைப் பிடித்துக்கொள் கண்ணே! விடாதே! என்னை ஏதோ இழுத்துப் போகிறதே! எது இழுக்கிறதோ அறியேன் பிடித்துக்கொள், விடாதே!' என்று கதறினார் பகவான். மிகுந்த ஆச்சர்யத்துடன் ராதை தன் இருகைகளாலும் கிருஷ்ணன் தோளைப் பிடித்துக்கொண்டாள். உடனே தானும் அவரோடு இழுத்துச் செல்லப்படுவதை உணர்ந்தாள். தன்னால் கூடியமட்டும் பிடித்து நிறுத்தப்பார்த்தாள். முடியவில்லை. இன்னது என்று விளங்காத அற்புதசக்தி ஒன்று அவர்களை இழுத்துச் சென்றது. எங்கே என்று மாத்திரம் விளங்கவில்லை ராதைக்கு. இதன் காரணத்தை

விளக்கவேண்டும் என்று எவ்வளவோ மன்றாடிக் கேட்டாள் கிருஷ்ணரை. முடிவில் 'எனக்கே தெரியாது! ஒருவேளை என் பக்தன் ஒருவன் என்னை அவன் மாறா பக்தியால் இழுத்தாலும் இழுக்கலாம்!' என்று கூறி, 'பார்த்தாயா! கடவுளாக விருப்பது எவ்வளவு எளிதென்று!' எனக் கண்டித்துச் சொல்லிப் புன்னகைசெய்தார். இப்படிப் பேசிக்கொண்டிருக்கையிலேயே ஒரு அழகிய உத்யானவனத்துள் அவர்கள் இழுக்கப்பட்டுப் புகுந்தனர். ராதை எண்ணியபடி தாடி ரிஷியாவது, அடங்கிய தியானத்திலிருந்த பக்தனாவது அங்குக் காணப்படவில்லை. அங்கு விடபுருஷன்போன்ற யௌவனபுருஷன் மெதுவான மெத்தை, தலையணைகள் அமைந்த கட்டிலின்மேல் படுத்துக்கொண்டு நிலாவொளியை ஆனந்தத்துடன் அனுபவித்துக் கொண்டிருந்தான். அவனைச் சுற்றி ஆறு அழகிய பெண்மணிகள் மேல்துணி ஒதுங்கிப் புரள, ராஸமண்டலம்போல் ஆடிப்பாடி அவனைப் பலவிதங்களில் போட்டி போட்டுக்கொண்டு ஸந்தோஷப்படுத்த முயன்றுகொண்டிருந்தனர். 'இவனா உமது பக்தன்! நாதா!' என்று பரிஹாஸமாகக் கேட்டாள் ராதை. 'பொறு! பார்ப்போம்!' என்று சாந்தமாக விடையளித்தார் பகவான். அதிக நாழிகை காக்கவேண்டியதாகவில்லை. இவர்கள் வந்து சேர்ந்தது வெளிப்பட்டதும் பெண்மணிகள் தடபுடலாக மேல் துணியை இழுத்து மூடிக்கொண்டு வெட்கி மிகுந்த குழப்பத்துடன் நாற்புறங்களிலும் பிரிந்து ஓடிப்போய்விட்டார்கள். பார்வைக்கு விடன்போலவிருந்த அந்தப்புருஷன் கட்டில் விட்டெழுந்து ஆனந்த பரவசனாகி ராதாகிருஷ்ணர்களுக்குத் தீர்க்கதண்டம் ஸமர்ப்பித்துத் துதிக்கத் தொடங்கினான்.

'பரம்பொருளே! வரவேணும்! ப்ரபோ! எவ்வளவு அபூர்வம் தங்கள் தர்சனம்! என் படிந்தமனத்தை ஆஸனமாக ஸமர்ப்பிக்கிறேன். எனது ஆனந்த பாஷ்பங்கள் உமக்குப் பாத்யமாகட்டும். என் பக்தியே உமக்கு நைவேத்யம். உமது அளவிலாக் கருணையை நோக்கில் என் தவம் எந்த மூலை. உமது கருணை சக்தி எல்லாம் ஒப்புயர்வற்றது. இவைகளைப் புகழ்ந்து பேசிப்பேசி என் நாத்தழும்பேறவேண்டும் என்று அடங்காவிருப்பம் எனக்கு உண்டு. உமது குணவைபவத்தில் சொக்கிக் கிடக்கவேண்டும் என்று என் மனம் மாறாக் காதல் கொண்டுள்ளது. என் சிற்றறிவிற் கெட்டிய வரையில் உமது குணவைபவத்தை வர்ணிக்கப்புகுந்தால் 'அளவிடமுடியாது ஆழ்ந்துபரந்த பாற்கடல் போன்றது' என்றே கூறவேண்டும். ஸூர்யன், சந்திரன், மேல் கீழுள்ள நக்ஷத்ரக் கூட்டங்கள், முதலிய பெரிய வஸ்துக்கள் எல்லாம் இந்தப் பாற்கடலில் சிறு அலைகளே. பிரளயாதிகள் இதில் ஏற்படும் சண்டமாருதாதிகள். ஆகாயம், கடல்கள், மலைகள், நதிகள் முதலியவைகளை எமது சிறுமைநோக்கி மிகப்பெரியவைகள் என்று கூறுவோம். இவைகள் இந்த அகன்ற க்ஷீரஸமுத்ரத்தில் சிறு துளிகள். இந்தப் பாற்கடலின் பொங்கும் ஒழுங்கு, இதன் பெரிய ஓசையின் இனிமை, அளவிடமுடியா ஆழத்தில் உள்ள கணக்கிலா நதிகள் ஆகிய இவைகளைத் தேவதைகளும் அறியவல்லர்அல்லர். உமது முகம் உருவம் இவைகளில் என் கண்கள் கடலில் கலக்கும் மழைத்துளிபோல உருவிழந்து நிற்கின்றன. ஆகாயத்தில் விடும் பாணம்போல உன் வெளித்தோற்றத்தைக் கண்ட மாத்திரத்திலேயே என் மனமும் இந்திரியங்களும் தட்டழியுமாயின், ஒப்புயர்வற்ற நீயேயாகி நிற்பதல்லாமல் உன்னை எவ்வாறு உணரமுடியும். 'நீ அரூபியாயினும் ரூபங்களின்

ஆதாரம், நிலைத்த வஸ்துவாயினும் எல்லா அசைவுக்கும் ஆதாரம், நாமம் அற்றவராயினும் நாமம் எல்லாவற்றிற்கும் காரணம், தேசகாலாதீதராயினும் தேசகால நிலயம். அணுவுக்கு அணு; மஹத்திற்கு மஹத்' என்று வேதங்கள் கூறுகின்றன. இப்பொழுது நீர் மனிதன்போலக் காணப் படுகிறீர். உம்மை உற்றுநோக்குங்கால், நீர் வரவரச் சிறப் புற்றோங்கி ஸூர்ய சந்திரர்கள், நக்ஷத்திரங்கள், கடல் கள், ஏரிகள், மனிதர், மிருகம் எல்லாவற்றிற்கும் ஆதிகாரண ராகி நிற்கிறீர்; உம்முள் புகுந்து நோக்கில், நீரே பூமி முதலிய அண்ட கோடிகளுள் எல்லாம் பரவிநிற்கும் அந்தர்யாமி, இன்னும் ஊன்றி அனுபவிக்குங்கால், பிரபஞ்சம் எல்லாம் மறைந்து ஸச்சிதானந்தமாக விளங்கும், ஸ்வாமீ! உம்மை உள்ளபடி உணரும்படியாகவும், உம்மை அறியாமல் அறியும் படியாகவும் அனுக்ரஹிக்கவேண்டும்!'

இந்தத் துதி முடிந்ததும் கிருஷ்ணனும் அவனும் திடீரென்று நெருங்கி ஒருவரை ஒருவர் அணைந்து கொண்ட னர்! ஆச்சர்ய பரவசமான ராதைக்கு அவர்கள் கூடினவிடத் தில் ஒரு பேரொளி தோன்றிற்று. அது வரவர அகன்று அண்டங்களை எல்லாம் அடைய விழுங்கிநிற்க அவைகள் ஸூர்யன் ஒளியில் ஓடியாடும் தூசிகள்போல முடிவில் அந்த அகண்டகார ஜ்யோதியில் எல்லாம் நாமரூபமிழந்து மாண்டு போயின. கிருஷ்ணனுவது யௌவன புருஷனுவது அங்குக் காணப்படவில்லை. இக்கண்கொள்ளாக் காட்சியைக் காணக் கொடுத்துவைத்த ராதைக்கு அங்கு ஓரே அடங்கிய நாத மும், அளவிடமுடியா ஆனந்தமும், மாரு ஒளியும் தோற்ற, ஸூர்ய சந்திர நக்ஷத்ர ஒளிகள் எல்லாம் அப்பொழுது அடர்ந்த இருட்டுக்கு நிகராயின. அங்கு உண்டான ஆனந் தத்தில் அதன் அனுபவ அறிவே முழுகிவிட்டது.

கொஞ்சநாழிகை இவ்வாறிருக்க ராதை ஸாவதானமாக இந்த அத்புதக் கனவிலிருந்து விழித்ததும் தன் அரண்மனையில் க்ருஷ்ணனோடு இருப்பதை உணர்ந்தாள். 'ஹே! ஜகந்மோஹனா! உண்மையான துறவு என்றால் என்ன என்பதை நன்கு விளக்கிவிட்டீர்! வீடு முதலியவைகளை விட்டோடுவதாலேயே ஸந்யாஸம் ஸித்திக்காது. வீட்டிற்குப்பதிலாகச் சோலைகளையும், பெண்கள் கானத்திற்குப்பதிலாகப் பக்ஷிகள் குரலோசைகளையும் வைத்துக்கொண்டு ஸம்ஸார விஷயங்களை மனத்தில் நிலைக்கும்படி செய்வதால் துறவு ஏற்படுமா? துறவு முற்றிலும் மனஸ் ஸம்பந்தமான விஷயம். தடியான தேஹம் இருக்கும்வரையில் வெளிவஸ்துக்களை முற்றிலும் விடவே முடியாது. விடவேண்டிய ஸம்ஸாரம் உள்ளேயிருப்பதே ஒழிய வெளியில் இல்லை. காமக்ரோதாதி சித்த சலனமே ஸம்ஸாரம். உம்மை உணர்ந்து இந்த உணர்ச்சியை முன்னிட்டு உலகப்பற்றுக் கழன்று நிற்பது; அதாவது உலகிலிருந்தும் ஒட்டாது நிற்பது; உம்மை ஸாக்ஷாத்கரித்து உண்டாகும் அனுபவத்தில் நாமரூபாதிகளை மறந்து நிற்பதே உள்ளத்துறவாகும். வேஷரிஷி உலக விஷயங்களை விட்டு ஒதுங்கியிருந்தும் மனப்பற்றொழியாதிருந்தான். யௌவன புருஷனோ விஷயங்கள் மத்தியிலிருந்தும் அவன் மனம் விலகி நின்றுவிட்டது. காட்டிலிருந்தும் ஒருவனுக்குக் கடவுள் வெகுதூரத்திலிருந்தார். போகமத்தியிலிருந்தும் மற்றவனுக்கு அணுகி நின்றார் கடவுள். நீரே அணுகிச் சென்றபோதிலும் பயந்து ஓடிவிட்டான் முன்னவன்; பின்னவனோ உம்மை வலிய இழுத்துத் துதித்து ஆனந்தத்தில் மூழ்கிக் கலந்துவிட்டான்.'

'ஸந்யாஸி யார்? எல்லாத் தர்மங்களையும் விட்டு நான், எனது என்ற பற்றுதல்கள் அற்றவனாய் ப்ரஹ்மம் ஒன்றையே

சரணமாகக்கொண்டு, மஹாவாக்யார்த்த அனுபவ ஞானத்திஞலே நானே ப்ரஹ்மம் என்று திடத்துடன் நிர்விகல்ப ஸமாதியிலிருந்து ஸ்வதந்த்ரஞக உலாவும் யதி எவனே அவனே ஸந்யாஸி. அவனே பூஜ்யன் ; முக்தன் ; யோகி; பரமஹம்ஸன் ; அவதூதன் பரஹ்மஞானி' என்பது நிராலம்ப உபநிஷத் வாக்கியம்.

இங்குத் துறவு ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் என்றே கூறப் படுகிறது. இதை ஒட்டி நோக்கில் முன்சொன்ன கதையின் உட்பொருள் பின் வருமாறு.

ராதை சித்சக்தியை உணர்த்துகிருள். கிருஷ்ணன் ஸ்வரூபம் அதாவது ஆத்மா. வேட்டை (விஷயப்ரவ்ருத்தி), காட்டு யானைகள் (உலக துக்கங்கள்), புலி (பயம்) முதலிய எல்லாம் ராதாக்ருஷ்ணர்களுக்குப் பொய்யாயினும் ஸந்யாஸி (ராஜஸம், காமம்) உண்மை என நம்பிவிடுகிருன். மனிதன் தினம் ஸுகமாகிய மானைத்தொடர்ந்து செல்லுகையில் அடிக்கடிக் காட்டு யானை (ஆசை) குறுக்கிடவும் புலி (பயம்) துரத்தவும் மிக வருந்துகிருன். ஸுகதுக்கம் பயம் எல்லாம் ஸ்வரூப பரமாக நோக்கில் வெறுங்கதையே. பயத்தை இந்த ஸ்வரூபம் விரட்டிவிடுகிறது. தாமஸப்ராந்தியாகிய உலகைவிட்டு ஆத்மாவை நோக்கிய புத்தியாகையால் ராதை இக்கதையைக் கேட்டு நகைக்கவிடமுண்டு. இப்படியிருந்தும் இவளுக்கு ஸந்தேஹம் முற்றிலும் நிவர்த்தியாகவில்லை. அதஞல் விபரீதஞானம் உண்டாகிறது. இதஞல்தான் தாமஸம் நீங்கியிருந்தும் ஸந்யாஸியாகிய ராஜஸத்தினிடம் போகவேண்டி வருகிறது. ஆத்மா அருகாமையிலிருப்பதால் சித்சக்தி பூர்ணஞானமாக மாறி ஸமயத்தில் ஸஹாயம் செய்ய, ஸ்வரூபம் பாம்பாகி ஆசையைத் துரத்தி

யடிக்கிறது. ரஜஸ் நீங்கியதும் ஸத்வம் மிஞ்சுகிறது. அது ஸ்வரூபத்தையும், சித்சக்தியையும் இழுக்கிறது. ஸத்வம் ஒருவிதமான ஆனந்தரூபத்தை உடையதாதலால் யௌவன விடபுருஷனாகக் காட்டப்பட்டிருக்கிறது. மெத்தையுள்ள கட்டில் ஸுகாஸனம், ஆறுபெண்கள் இந்திரியங்களும் மனமும், இவைகளால் ஸத்வத்தை அசைக்க முடியவில்லை. இவைகள் மேல் துணி நீங்கிக் குதிக்கின்றனவாம். அதாவது இந்திரிய விஷயங்கள் முற்றிலும் வெளிப்பட்டுவிட்டால் வெறுப்பு உண்டாக்கிவிடும். ஞானத்தால் உணரப்பட்ட ராதா கிருஷ்ணனாகிய உபாஸனாமூர்த்தி (அதாவது ஸ்வரூபம்) ஸத்வத்தை நெருங்க மனமும் இந்திரியங்களும் நீங்கிவிடும். ஸத்வமும் ஸ்வரூபமும் சேர்ந்து அகண்டாகார ஜ்யோதியாகும். உடனே ஞானம் உணரும் சக்தி இழந்து பார்த்துக்கொண்டே சொக்கி மூழ்கி விடுகிறது. இதுதான் உபநிஷத் ஸந்யாஸம்.

இந்த நிர்விகல்பஸமாதி அல்லது நிஷ்டை தீர்ந்ததும் புத்தி மறுபடி உலக ப்ரக்ஞைக்கு வர ஸந்தேஹம், விபரீதங்கள் நீங்கித் தன் அறிவு ஆத்மபக்தி முதலியவைகளில் ஈடுபட்டு அதன் தோற்றங்களில் ஆனந்தித்துப் பரவசமாக விருக்கும்.

---

## 2. நிஜானந்தம்
### (கோபிகாகிருஷ்ணலீலை)



ஒருநாள் மாலை வெப்பந்தணிந்து வானம்பசந்து குளிர்ச்சி மிகுந்து தென்றல் வீச மிக அழகாகவிருந்தது. பகவத் பக்தியால் பூரித்த யோகிகள் மனம்போலச் சாந்த ஸ்வரூபமாய் விளங்கியது. அன்று அந்திப்பொழுது. ப்ரபஞ்சம் முழுவதும் அப்பொழுது ஆனந்த நிஷ்டையிலிருப்பது போல ஓய்ந்துவர ஸமாதியிலிருக்கும் முக்தர்போல விளங்கியது. பக்ஷிகள் எல்லாம் கூட்டுள் அடங்கி விட்டன: ஆடுமாடுகள் தமது தொழுவில் அடைந்து விட்டன. பகற்பொழுது வேலை முடிந்துவிட மனிதர்கள் அனுஷ்டானாதிகளைச் செய்துகொண்டாவது, சுற்றுமுள்ள சாந்தத்தை அனுபவித்து அசைவற்று இருந்துகொண்டாவது காலம் கழிக்கலாயினர். இரவில் பாடும் குருவி ஆனந்தமாகப் பாடத்தொடங்க, அப்பொழுது குடிகொண்டிருந்த உத்தம சாந்தத்தோடு அது மிகப்பொருத்தமாக விருந்தது. வேறு எந்தப் பக்ஷியின் பாட்டும் அப்பொழுது பொருத்தமாக விராது. அப்பொழுது புஷ்பித்த பூக்களின் மிருதுவான மந்தவாஸனை அந்தியின் ரமணீயத்தை விருத்தியாக்க இளம் சந்திரிகையின் வெள்ளம் அப்பொழுது நன்றாகச் சோபிக்கும்படி செய்தது. யமுனை அப்பொழுது தனது ஸ்வபாவ காம்பீரியத்துடன் ஓடிக்கொண்டிருந்தது. வெள்ளிய மணல் நிறைந்து பூர்வ ஸம்பவங்களால் இப்பொழுது சிறப்புற்றோங்கும் அதன் கரையில் இந்த விசேஷம் வாய்ந்த சந்திரிகை

ப்ரகாசித்த அந்த மாலைப்பொழுதில் ராதை, ஜானகி, ஸாவித்ரி முதலிய கோபிகைகளாற் சூழப்பட்டு வந்து புகுந்தார் பாலக்ருஷ்ணன்.

உடனே புல்லாங்குழலை எடுத்து வெகு அற்புதமாக வாசிக்கத் தொடங்கிவிட்டார். அவர் அப்பொழுது வாசித்த ராகத்தின் சிறப்பை யாரால் எடுத்துரைக்கமுடியும்! அவரைச் சூழ்ந்திருந்த மயிலினங்களுக்கு அது ஒரு சொக்கும் மந்திரம்போல விளங்கியது. இந்த ஆனந்தானுபவம் வெகுநாழிகை நிற்கவில்லை. தம்மிடத்திலிருந்து கொஞ்ச தூரத்தில் இறந்துகிடந்த கன்று ஒன்றைக் கண்டு விட்டார் பகவான். உடனே அதை நெருங்கிநோக்க அது கிருஷ்ணன் ப்ரியமாக வளர்த்தது என்று தெரியவந்தது. இந்தத் துக்கத்தை எல்லோரும் தம்மதாகவே பாராட்டிக் கொஞ்ச நாழிகை துக்கித்த பின்பு கிருஷ்ணன் கூறலுற்றார்:—'அதிக துக்கம் வேண்டாம். கன்று பிழைத்தெழ வழியொன்றிருக்கிறது. அதைத்தவிர வேறுவழியுமில்லை. இந்த மனோரம்யமான அந்திப்பொழுதில் உங்கள் ஒவ்வொருவருக்கும் மனதில் ஏற்படும் விருப்பத்தை ஒளியாது கூறிவிட வேண்டும். இந்த சந்திரன் ஒளி, நதி, இந்த அந்திப்பொழுது இவைகள் எல்லாம் உங்கள் மனதில் எந்த ஆசையைக் கிளப்புகின்றன? இதை உள்ளபடி கூறிவிட்டால் கன்று பிழைத்துவிடும். உண்மைக்கு இவ்வளவு சக்தியுண்டு! என்று சொன்னார் பகவான்.

'ஸரிதான் என்று ஒப்புக்கொண்டு ஒவ்வொருவரும் தமது மனதில் தோன்றியவைகளை ஒளியாது கூறத் தொடங்கினர். 'யாதொரு இடையூறுமின்றி உமது அற்புத வேணுவின் கானரஸத்தைப் பருகி ஆனந்திக்கவேண்டும்! ஹே கிருஷ்ணா! இதைவிடச் சிறந்தது வேறொன்றும் இல்லை!'

என்றாள் ஒரு கோபி. உருக்கி ஓடவிட்ட வெள்ளிபோலப் பாய்ந்துபோகும் இந்த யமுனையில் இந்த மனோரம்யமான சந்திரிகையில் உம்மோடு நீந்தவேண்டும்' என்றாள் மற்றொருத்தி. எனக்கு ஒரு ஆவல் மாறாதிருந்தது. அது இப்பொழுது அதிகமாகி விட்டது. அது புருஷரைப்போல ஸ்வதந்தராக விருக்கவேண்டும் என்பதே. ஸ்திரீகள் அடிமைத் தனத்துக்கு மறுபெயர்களாகிய பேதமை, நாணம் முதலிய ஜாதிக்கூட்டால் ஏற்பட்டிருக்கும் மூட நம்பிக்கைகளை உதறி எறிந்துவிட்டு, புருஷர் உடைதரித்து, செருப்பு, தலைப்பாகை தடி முதலியவைகள் ஏற்று கம்பீரமாக இஷ்டப்படி நடந்தால் நலமாகவிருக்கும். இப்பொழுது இருப்பதுபோல உள்ள பெண்கள் வாழ்க்கை பெருந்துக்கமே ஒழிய வேறல்ல!' என்றாள் வேறொருத்தி. 'ஹிமாசலத்திலுள்ள ஒரு ரிஷியாக விருந்து இக்காலத்தில் உம்மை ஸ்துதி செய்யவேண்டும்! கங்கோத்தரையிலிருந்து இந்த நிர்மலமான அந்திப்பொழுதில் ஸந்தியாவந்தனாதிகள் செய்யவேண்டும் என்பதே என் விருப்பம்' என்றாள் நான்காம் கோபி. 'ஏழைகளைக் காத்து, நோயாளிகளையும் புண்பட்டிருப்போரையும் அன்புடன் விசாரணைசெய்து, அநாதைகளான குடும்பத்தவர்களைத் தேற்றியே காலம் கழிக்கவேண்டும் என்பது என் ஆவல். துக்கம் நிறைந்த இப்பிரபஞ்சத்தில் எனக்கு என்று எந்த ஸுகத்தையும் கோற மனம் வரவில்லையே!' என்றாள் ஐந்தாவதவள். 'ஒரு பெரிய உபந்யாஸகனாகவிருந்து, இம்மாதிரி காலங்களில் ஜாதி சீர்திருத்தம், நாகரீக அபிவிருத்தி முதலிய அருமையான விஷயங்களைப்பற்றி சரமாரியாகப் பொழிந்துவிட என்கீர்த்தி எங்கும் பரவவேண்டும் என்பதே என் எண்ணம்! என்றாள் ஒருத்தி. 'சீ! இதிலெல்லாம் என்ன இருக்கிறது! இக்காலத்திலிருக்கும் சாந்தமே

யாகி, இந்த ஆனந்தமயமாகிவிடவேண்டும் எனக்கு' என்றாள் ஒரு கோபி. இம்மாதிரி ஒவ்வொருவரும் ஒழுங்காக பணம், நகை, அழகு முதலியவைகள் வேண்டும் என்று சொல்லிக் கொண்டேவந்தனர்.

இப்படி வருகையில் ஸாவித்ரி என்ற கோபி கூற வேண்டி வந்தது: 'அறிய முடியாதனவாகித் தந்திரங்கள் நிறைந்த கிருஷ்ணா, நீர் எனக்கே முற்றிலும் வசப்பட்டு நிற்கும்படி செய்துவிட வேண்டும் என்பதே எப்பொழுதும் என்னுள் மாறாது குடிகொண்டிருக்கும் பரபரப்பு' என்றாள். 'எங்கள் அழகுக்குக் குறைவே இல்லை. ஆயினும் நாங்கள் மெய்ம்மறந்து உமக்கும் நமக்குமிருக்கும் காதலாகவே நின்றுவிடவேண்டும் என்றிருக்கிறது எனக்கு. நான் கேவலம் ஆனந்தமாகவே ஆகிவிடவேண்டும். இதைவிட அழகாயும் ஸுககரமாயும் உள்ளது எதுவும் இல்லை' என்று ஜமாய்த்து விட்டாள் ராதை. முடிவில் ஜாநகி கூறலுற்றாள். "நாதா! என்னநாடகம் நடத்திவிட்டீர்! ஒருநாழிகைப் பொழுதில்! என் ஸகோதரிகள் எல்லோரும் உண்மையையே கூறிவிட்டனர். ஆனால் ஒருவருக்கு ஸுகமாகவிருப்பது மற்றொருவருக்கு ஸுகமாகத் தோற்றவில்லை. இவர்கள் விரும்பும் வஸ்துக்கள் எல்லாவற்றிற்கும் மாறாத நிஜகுணம் ஒன்று இல்லை. ஆதலால் தான் இவ்வாசா விசித்ரம் உண்டாயிற்று. ஆனால் ஒன்றுமாத்திரம் எல்லோரிடமும் காணப்பட்டது. எல்லோருக்கும் ஆனந்தம் வேண்டும். அதுவும் மனம் அடங்கி மேல் விருப்பமின்றி ஸுகமாக நிலைக்கும் ஆனந்தமாகவும் இருக்கவேண்டும் என்ற ஆவலே. இந்த மாறாமை, நிறைவு ஆகிய இவைகள் அமைந்த உணர்ச்சி, இந்த ஆனந்தம் ஆகிய இதையே எல்லோரும் தேடித்திரிகின்றனர். ஆனால் அது இல்லாத விடத்திலேயே எல்லோரும் விடா

முயற்சி செய்கின்றனர். இப்பொழுது இவர்கள் எல்லோரும் விரும்பிய வஸ்துக்களின் விசித்திரத்திலிருந்தே வெளிவஸ் துக்கள் ஒன்றும் இந்த ஆனந்தத்தைகொடுக்கா என்பது நன்ருக வெளியாகிவிடும். இந்த ஸூக்ஷ்மம் எனக்குத் தெரிந்துவிட்டது. இதன் பின்னர் சாந்தமாகவிருந்து என்னுள்ளே (என் ப்ரத்யேகாத்மாவுள்ளே) மாருமை, அறிவு, ஆனந்தம் (ஸச்சிதானந்தம்) ஆகிய இவைகள் குடி கொண்டிருக்கின்றன என்று சாந்தமாகவிருப்பேன். ஆதலால் நிராசையாகவிருந்து ஸதா ஆத்மாவாகவே இருக்கவேண்டும் என்பதே என் முடிவான ஆவல்' என்று மஹாவிநயத்துடன் கூறினள் ஜாநகி. இவ்வாக்கு முடிந்ததும் அதுவரையில் கைகால் அசைத்துக்கொண்டிருந்த கன்று திடீரென்று எழுந்துநின்று துள்ளியோடிக் குதித்து ஆனந்தித்தது.

மைத்ரேயி (என்ற கோபி கிருஷ்ணனை நோக்கி,) 'நாதா! ஜானகி கூறிய மொழிகள் எனக்குப் பெரும் ஸந் தேகத்தை உண்டாகி விட்டன. நாம் எல்லோரும் ஆனந் தத்தையேதான் நாடுகிருேம் என்ருள் அவள். எங்குபோன போதிலும் எப்படி இருந்தபோதிலும் இவ்வுலகில் துக்கமே எங்கும் காணப்படுவதால் ஆனந்தத்தை நாடுவது இழிவான தும் தகாததுமான காரியமல்லவா? தர்மம், அன்பு முதலிய வைகளையே நமது நோக்கமாகக் கருதுவது இதைவிட மே லானதல்லவா? இதைத்தீர்க்க உம்மால்தான் முடியும். என் மனம் தெளியும்படி செய்யும்' என்று கேட்டுக்கொண்டாள்.

கிருஷ்ணன்:—என் கண்ணே! மைத்ரேயி! ஒரு குழந்தை அழுதுகொண்டிருந்தது: அதனுல் வாய்விட்டு ஒன்றும் சொல்ல முடியவில்லை: தனக்கு இன்னது வேண்டும் என்பதே அதற்குப் புலப்படவில்லை. ஏதோ ஒன்று வேண்டி யிருக்க அது கதறியது. ஒரு பொம்மையை அதற்குக்

கொடுத்துப் பார்த்தார்கள்: அதை கொஞ்சநாழிகை திருப் பித்திருப்பி நோக்கிச் சீக்கிரத்தில் தூர எறிந்துவிட்டது. பின்னர் பழம் ஒன்றுகொடுக்க, அதைக் கொஞ்சம் ருசி பார்த்துவிட்டு, கோபத்துடன் வீசி எறிந்துவிட்டது. பிற்பாடு படம், புத்தகம், விளையாட்டு வஸ்துக்கள் முதலிய வைகள் ஒழுங்காகக் கொடுத்துப் பார்க்கப்பட்டன. தனக்கு வேண்டியது கிடைக்கும்வரையில் குழந்தை ஓரிடத்தில் தரித்து நிற்கவில்லே. இக்குழந்தைபோல நீயும் உன்குறை எது என்பதை நன்கு உணரவில்லே: ஒவ்வொன்றையும் பிடித்துப் பரீக்ஷை பார்த்துக்கொண்டும் இருக்கிருய், அது நீ உண்மையாகத் தேடித்திரிவதாகிய ஸச்சிதானந்தத்தைப் பற்றி நிற்கும்வரையில் உன் மனம் ஸமாதானப்படாது. ஆத் மாவாகிய இதை தேடித்திரியாதிருக்கவும் உன்னுல் முடியா. எப்படி உயர எறிந்த கல் கீழேவிழுவது ஸ்வபாவமோ அது போல இதைத் தேடித்திரிவதும் உன் ஸ்வபாவம். பிரபஞ்சத் திலுள்ளவைகள் எல்லாம் அறிந்தோ அறியாமலோ இதை யே தேடி அணுகுகின்றன. மற்றவைகள் எல்லாம் கொஞ்ச நாழிகைதான் ஸுகதரமாக விருக்கும். பின்னர் அவைகளில் வெறுப்பு உண்டாகிவிடும். கொஞ்ச காலத்திற்குள் நீ எவ் வளவு விஷயங்களை அனுபவித்துப் பார்த்து வெறுத்து விட்டாய்! இந்த யமுனேக்கரையிலேயே ஒருதரம் காட்டுப் பூக்கள் போல நகைகள் செய்து அவைகளில் தகுந்த வாஸனே களை அமைத்துத் தரவேண்டும் என்று ஆசைப்பட்டாயே ஞாபகமிருக்கிறதா உனக்கு? நான் அவ்வாறே செய்ய சில மாதங்களுக்குள் உனக்கு அந்த விருப்பம் வெறுப்பால் மங்கி விடவில்லேயா? இப்பொழுது தர்மசிந்தை, அன்பு முதலியவை களை முன்னிட்டு உலகிற்கு உழைக்கவேண்டும் என்று ஆவல் கொண்டிருக்கின்ருய். இது முன்னதைவிட மேலானதாயும்

ஸ்வயம்யமற்றதாயும் உள்ள ஆவல். இவ்விரண்டிலும் நோக்கம் என்னமோ ஆனந்தம் வேண்டுமென்பதுதான். ஆசை என்பது ஆனந்தக் குறைவால்தான் ஏற்படும். முற் கூறிய குழந்தைபோல உன்நோக்கம் இன்னது என்பது உனக்கு நன்ருக விளங்கவில்லை. திருடன், கொலையாளி, முன்வைத்த கால் பின்வைக்காது உத்ஸாஹமாய் போர் செய்து இறக்கும் வீரன், தன் குடும்பத்தைவிட நாட்டை மிகுந்த பற்றுடன் கருதும் தேசாபிமானி சிருங்கார கவிகள் கட்டிக்கொண்டே இருக்கும் நாயகன் ஆகிய எல்லோரும் வெவ்வேறு வஸ்துமூலமாக ஆனந்தத்தையே விரும்புகின்ற னர். முடிவு ஒன்று தான், வழிகள் தான் வெவ்வேருக விருக் கின்றன. சில நல்லவைகளாயும், சில கெட்டவைகளாயும், சிலகலப்பாயும் இருக்கும். ஆனல் வெளிவஸ்துக்கள் எவ்வித மாயினும் நீ தேடுவதைக் கொடுக்கக்கூடிய சக்தி அவை களுக்கு இல்லை. வெளிவஸ்துக்களைப்பற்றி ஓடும் ஓட்டம் பயனற்றது என்று தள்ளப்பட்டு மனம் ஓய்ந்தால்தான் இந்த மாருத நிஜானந்தம் கைகூடும்.'

மைத்திரேயிக்குத் திருப்தி வந்துவிட்டது. கார்க்கி என்ற கோபி, இந்த ஆத்மானந்தம் என்று உம்மால் கூறப் பட்டது ஸ்வயம்யம்? ஏவதாக முடியாதா, கிருஷ்ணு? என்று கேட்டாள்.

கிருஷ்ணன்:—இல்லை, என் அன்பே! நான் கூறும் ஆனந்தம் ஸச்சிதானந்த ரூபமானது. நீ, நான் என்னும் எண்ணங்களுள் இந்த நிஜானந்தம் அடங்கிவிடும் என்று எண்ணிவிட்டாயா? ஸமுத்ரமுழுவதும் ஒரு சிறு துளியில் அடங்கினுலும்; அடங்கலாம் ப்ரபஞ்சம் முழுவதும் ஒரு அணுவிலடங்கினுலும் அடங்கலாம்; அகண்டஸச்சிதானந் தம் என்று கூறப்படும் ஆத்மா இத்தேகத்துள் அடங்கவே

அடங்காது. நீ, நான் என்பதெல்லாம் சிறுத்துத் தனித்து பேதப்பட்டு இழிவாகவிருக்கும் வஸ்துக்கள். நான் நீயல்ல வென்றும், நீ நானல்லவென்றும் பிரிந்திருப்பதால் இவ்வுண் மை நன்கு வெளியாகும். உன் தேஹம், மனம் இரண்டையும் 'நான்' என்று கூறிவிடுகிறாய். தேஹப்ரக்ஞை, வெளிவஸ்து ப்ரக்ஞை, மனோராஜ்யவேட்டை எல்லாம் அடங்கியபின்பு தான் ஆத்மானந்தம் உதயமாகும். நீ வேறு என்று எண்ணம் இருக்கிறவரையில், நீ சிறுத்தேயிருப்பதால் இந்த அகண் டானந்தம் வெளியாகாது. இந்த பேதபுத்தியை விட்டுவிட் டால் அகண்டாத்மா வெளியாகும் ஸ்வயநயம் கருதுவதே இந்த அனுபவத்திற்கு முக்கிய சத்ரு. இது புத்திவிசா லத்தைத் தடுத்து, நம்மை கிஞ்சிக்ஞனாக்கி, சிறுபுழுவினும் இழியவனாகச் செய்துவிட அகண்டாத்மானுபவம் ஸித்திப் பது எவ்வாறு? இந்த சிறு அகங்காரம் என்னும் பாதா ளத்தைவிட்டு உயர உயர பரமாத்மாவாகிய ஸ்வர்க்கத்தை அணுகுவாய். தர்மம், அன்பு முதலியவை உன்னை இந்தப் பாதாளத்திலிருந்து கிளப்பிவிடும். ஆதலால் தன்னுயிரைப் போல் மன்னுயிரையும் பார்க்கப் பழகு. அன்பு என்னும் வெள்ளத்தில் உன் சிறு அகங்காரத்தை முழுத்திவிடு, மாறா தர்மம் செய்யும் பழக்கத்தில் அதை நன்றாக உருவிழக் கும்படி தேய்த்துவிடு. இவ்வாறு செய்தால் அகண்டாத்மா வெளியாகும். ஸ்வயநயம் கருதுவது என்னும் புண்ணுக்கு அன்பென்பதே தகுந்த கைகண்ட மருந்து. அது உன் மனத்தை ஒழுங்குபடுத்திப் புத்தியைத் திருத்தி, உன்னையே பரிசுத்தப்படுத்திவிடும். இது மிருகத்துவம் நீங்கி மனிதத் தன்மைவந்து பின்னர் அதுவும் தெய்வத்வமாக மாறும்படி செய்துவிடும். இவ் வன்பைவிட கடவுளுக்குப் பிரியமானது வேறு ஒன்றுமில்லை. இம்மாதிரி அகங்காரம் முற்றிலும்

போய்விட்டால் அன்பே யாகிவிட நிஜானந்தம் நெருங்கி விடும். நிஜானந்தம் என்பது பூர்ண அன்பே ஒழிய வேறில்லை.

'நான் கண்டுகொண்டேன்! ஒன்று கண்டுபிடித்துவிட்டேன்!' என்றாள் ஸீதை என்பவள்.

'ஆனால் அதைச் சொல்லேன்! அதன் சிறப்பை நாங்களும் கண்டு ஆனந்திப்போம்!' என்றார் பகவான்.

'நிஜானந்தம், பூர்ண அன்பு மாத்திரமல்ல. அது பூர்ண ஞானமாகவும் இருத்தல்வேண்டும். எங்கு ஞானக் குறைவு உண்டாகிறதோ அங்கு மனச்சஞ்சலம் ஏற்பட்டுவிட ஆனந்தத்திற்குக் குறைவு உண்டாகிவிடும். இதுதான் நான் கண்டுபிடித்தது!' என்றாள் ஸீதை.

கிருஷ்ணன்:—ஸரிதான்! உண்மைதான்!! என்ன அற்புதத்தைக் கண்டுபிடித்தாய்!! வேறு யாரால் இது செய்யமுடியும்!!!' என்றார்.

'இந்த ஆனந்தம் விஷய ஸுகம்தான் என்று கூறிவிடலாகாதோ' என்று ஐயுற்றாள் யோசனையிலாழ்ந்த ஸாவித்ரி.

கிருஷ்ணன்:—இவை யிரண்டும், நீரும் நெருப்பும், இருளும் ஒளியும்போல இருப்பவை. முன்னது பூர்ண ஞானம்; பின்னது பூர்ண மூடத்தனம். ஒரு ஏழை நாள் முழுவதும் பிச்சை எடுத்துப்பார்த்தும் அவனுக்கு போதுமான அளவு கிடைக்கவில்லை. மிகுந்த துக்கத்துடன் வீடு நோக்கித் திரும்பிவிட்டான். வழியில் வெள்ளிபோல் மின்னியவஸ்து ஒன்றைக் கண்டான். உடனே மிக ஸந்தோஷப்பட்டுவிட்டு, மிகுந்த ஆவலுடன் அதைக் கையிலெடுத்தான். உடனே அது வெள்ளியல்ல, முத்துச் சிப்பி என்பதைக் கண்டான். அவனுக்குவந்த துக்கத்திற்கு அளவே இல்லை; தன் விதியை நொந்துகொண்டு முன்னிலும் அதிக துக்கத்துடன் வீடு சென்றான். மனிதன் நிலையும்

இதேமாதிரிதான். அவனுக்கு ஆனந்தத்தின்மேல் விருப்பம். ஒரு வஸ்துவிலிருந்து அதை சம்பாதிக்கலாம் என்ற நம்பிக் கைவந்துவிட அதன்மேல் ஆசை அவனுக்கு உண்டாகிவிடு கிறது. அது கிடைப்பதால் சற்று ஸந்தோஷமும் உண்டா கின்றது; பின்னர், தான்தேடும் ஆனந்தம் அதில் இல்லை என்ற உணர்ச்சி உண்டாக, தான் மோசம்போனதை எண் ணித்துக்கிக்கிறுன். உடனே வேறு வஸ்துவை பிடித்துப் பார்க்கிறுன், அங்கும் இம்மாதிரியாகவே ஓயாது வஸ்துக்களை விட்டுப் பிடித்தவண்ணமாகவே சஞ்சலத்தில் அகப்பட்டுக் கொண்டு தத்தளிக்கிறுன். ஆகையால் விஷயஸுகம் என்பது போலியானந்தம். அதாவது ஆனந்தம் கொடுக்க முடியாத வஸ்துவில் கிளிஞ்சலில் வெள்ளிபோல அது இருப்பதுபோ லக் காணப்படுவதே. அது மோசம் செய்யும், நிலையற்றது. ஒருபுறம் அதற்குக் குறையும், மறுபுறம் துக்கமும் காணப் படுகின்றன. ஆதலால் ஆனந்தத்தையும் ஸுகத்தையும் ஒன்றெனப் படாது. ஸுகம் மனதைச் சலிக்கும்படி செய்து விட்டு மாறிவிடும்; ஆனந்தமோ மாறுததாயும் மனதிற்கு அப்பாற்பட்டதாயும் உள்ளது. முன்னது மித்யாரூபம்' பின்னது ஸத்யமானது. முன்னது அக்ஞானத்தால் விளை வது, பின்னது ஞானத்தின் முடிவு. முன்னது மமகாரத் திலே உண்டாகி விருத்தியடைவது பின்னதோ ஸர்வபூத தயாரூபம், ஆங்காரத்தைச் சுட்டறுத்தலால் விருத்தியடை வது. முன்னது வெளிவஸ்துக்களிலிருந்து உண்டாகி அவைகளால் மாறுதல் அடையக்கூடியது; பின்னது வெளி வஸ்துக்கள், தேஹம், மனம் முதலியவற்றிற்கு அப்பாற் பட்டது. இவைகள் ஸம்பந்த லேசமே அதில் இல்லை. ஸாவித்ரீ! இவைகளைப்பற்றி ஒருக்காலும் குழப்பம் ஏற் படவே கூடாது.

'ஆ! ஹா! இந்த ரமணீயமான அந்திப் பொழுதை எவ்வளவு அழகாகக் கழித்தோம்! கிருஷ்ணு! நீர் எங்களுக்குச் செய்த உபதேசத்தின் பெருமையை என்னென்றுரைப்பேன்! ப்ரபஞ்சம் முழுவதும் அறிந்தோ அறியாமலோ ஆனந்தத்தைத் தேடித்திரிகிறது; ஆனால் பெரும்பாலும் வெளிவஸ்துக்களே ஆனந்தகாரம் என்று நாடி நிற்கின்றனர். அதனால் குறை, ஸோகம், துக்கம் இவைகளே உண்டாகின்றன. இம்மாதிரி வெளி வியாபாரத்தில் அழுந்தி இருக்கும் மனம் அதன் கடையைக் கட்டிவிட்டபின்பு தான் ஆனந்தம் வெளிப்படும் ஆனந்தம் பிரபஞ்சத்திற்கு அப்பாற்பட்டது: தேஹம், மனம், புத்தி,உணர்ச்சி, நீ நான் என்ற எண்ணங்கள் இவைகளை விட்டே நிற்பது. அது நிலேத்தது, மாருதிருப்பது, அகண்டமானது, சித்ரூபம், அன்பு ரூபம், ஸத்யமானது, நிராலம்ப மாயிருப்பது. அதுதான் அகண்டாத்மா; அழகு, தந்திரம், சிறப்பு, இனிமை இவைகள் வாய்ந்த என் கண்மணியான கிருஷ்ணு! நீயும் அதுவே!' என்று ஆனந்த பரவசையாகக் கூறினாள் ராதை.

'ஆஹா! பலே!! ஏது! ஏது!! நீங்கள் எல்லோரும் வேதாந்திகள். ப்ரஹ்மஞானிகளாகி விட்டாற்போல விருக்கிறதே! இனிமேல் உங்களைக் கட்டியாள என்னால் முடியாது! முடியாது!! இதோபோய்விடுகிறேன்' என்று வேணுகானம் தொடங்கித் தாண்டவ மாடிக்கொண்டு புறப்பட்டான் பால கிருஷ்ணன். எல்லாக் கோபிகளும் ஒருவர் தவருது அவர் பின்னே ஓடத்தலைப்படக் கன்றும் மெதுவாக நடக்கத்தரியாது வாலைத் தூக்கிக்கொண்டு துள்ளிக்குதித்துத் தாவிப் பாய்ந்து ஓடியது.

---

# 3. ராதையும் கிருஷ்ணனும்

(யோக்யமான கடவுள் தம் நடைக்குற்றதை ஒப்புக்கொள்வது)



'கிருஷ்ணன் மனதைத் தன்வசப்படுத்தி அவனை அடிமையாக்கி விட்டோம்' என்ற ஒரு எண்ணம் ஒருகால் ராதை மனதுள் புகுந்துவிட அவளுக்குக் கர்வம் வந்துவிட்டது. எந்த விஷயத்தையும் தவறவிடாது பார்வையையுடைய பகவான் இதை உணர்ந்துவிட, இவளை எப்படியாவது கேலிபண்ணிவிடவேண்டும் என்று எண்ணிவிட்டார். ஒரு நாள் இருவரும் ஏகாந்தமாக விருக்கையில் ராதை உள் எண்ணத்தை முற்றிலும் வெளிப்படுத்தக் கருதி திருட்டுக் கிருஷ்ணன் கொஞ்சநாழிகை கடகடவென்று நகைத்து விட்டு மௌனமானார். இதைக்கண்ட ராதை 'என்ன விசேஷம்?' என்று வினவினள். 'பவளவாய் உடைய ராதா! ஒன்றும் இல்லை! ஒரு விசேஷமும் இல்லை!! அநேகம் ஜீவ ராசிகளோடு கூடிய இப்பிரபஞ்ச முழுவதும் என் ஆளுகைக் குட்பட்டிருக்கிற விதத்தால் எனக்குவந்த சிறப்பை எண்ணினேன். சிரிப்புவந்தது! வேறொன்றுமில்லை' என்று மறுமொழி கூறினார் பகவான். கொஞ்ச நாழிகையாயிற்று, ராதை திடீரென்று குலுங்கநகைத்துவிட்டு ஓய்ந்தாள். ஒழுங்குபடி கிருஷ்ணன் 'காரணம் என்ன?' என்று இப்பொழுது கேட்டுவிட்டார். கூத்தில் கோமாளிபோலத் தொடங்கி விட்டாள் ராதை! 'ஒரு விசேஷமும் இல்லை. நீ ப்ரபஞ்சத்தை அடக்கி யாளுபவனாகவிருந்தும், என்னுள் அடங்கி

விட்டாயே ! இந்த எண்ணம் தான் என்னை நகைக்கச் செய்தது!' என்று கூறிவிட்டாள் ராதை. 'உனக்கு அடிமைப் படாதவர்களும் உண்டோ? உன் அத்புத அழகில் ஈடு படாது யார்தான் இருப்பார்கள்!! தாமரைப் பூப்போன்ற உன் கண்களில் இருந்து வரும் கடாக்ஷம் மூன்று உலகையும் அடிமைப் படுத்தாதிருக்குமா ? ' என்று வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டு மலர்ந்த முகத்துடன் கூறினார் கோபி காலோலனை பரமாத்மா: பின்னர் அவளைக் கட்டி அணைத் துக்கொண்டு, பொதுவாகச் சில விஷயங்களைப்பற்றிப் பேசிவிட்டுப் போய்விட்டார்.

கொஞ்சநாள் கழிந்தபின் ஒருநாள் தன்னை அன்று மாலை யமுனை வெண்மணலில் வந்து ஸந்திக்கவேண்டும் என்ற ஸங்கதியைப் பகவானுக்கு ராதை தெரிவித்துவிட்டாள். தன்னைச் சிங்காரிப்பதிலும், வேறுவிதமாக அன்றுமாலை ஏற்படும் பகவத் ஸங்கத்திற்கு வேண்டியவைகளைத் தயார் செய்வதிலும் அன்று பகல் முழுவதும் கழிந்தது. 'இந்தப் புடவையைக் கட்டிக்கொள்ளுவோமா? அல்லது அதை எடுப்போமா ?' என்று ரொம்பநாழிகை ஸ்திரப்படாது மனம் சலித்து முடிவில் 'இதைக் கட்டிக்கொண்டால் தான் கிருஷ் ணன் சொக்கிவிடுவான்' என்று தீர்மானித்து ஒரு தகுந்த புடவை எடுத்துக் கட்டிக்கொண்டாள். இயற்கை அழகு பூர்ணமாக வாய்ந்த அம்மாதரசு நல்ல தோடுகள், மாலை கள், காப்புகள், முதலியவைகள் அணிந்துகொண்டு அப் பொழுது மலர்ந்து வாஸனை மிகுந்த புஷ்பங்களாலாகிய செண்டு ஒன்றை மிகுந்த மனோரம்யமாகக் கட்டி எடுத்து அதன் மத்தியில் நீலப் பூவொன்றும் அதன் அருகில் வெள்ளைப்பூவொன்றும் அமைத்து, தானும் கிருஷ்ணனும் கோபஸ்திரீகளால் சூழப்பட்டு நிற்பதைக் குறிப்பாகக்

காட்டும்படியாக அதைக்கட்டி முடித்தாள். கருத்து, சுருண்டு, மிருதுவாகவிருக்கும் தன் கூந்தலைவாரி 'அழகிய பக்ஷிக்கு ஏற்றவலை இது' என்று மதித்து ஒரு விசித்ரமாக அதைத்தூக்கி முடித்தாள். இம்மாதிரி பூரண அலங்காரம் செய்துகொண்டு, அழகிய செண்டைக் கையில் பிடித்துக் கொண்டு ஒரு நிலைக்கண்ணாடி முன்பு வந்து நின்றுவிட்டாள் அப்பெண்ணரசி. கண்ணாடி உயிரற்ற பொருளாயினும் அவள் அழகிய பிரதிபிம்பம் தாங்கியிருந்தபொழுது மிகுந்த கர்வப்பட்டுக் கொண்டிருந்ததுபோலக் காணப்பட்டது. அழகும் காதலும் நிறைந்த அப்ஸரஸ் போன்ற ராதை தெய்வ கன்னிகைபோல தகுந்த உயரம், அழகு மிகுந்த தனது தேகத்தைக் கண்ணாடி முன்பு முற்றிலும் நிறுத்தி உயர்ந்து பார்த்தாள். 'பலே! மயில்போல விளங்குகிறேம்! கிருஷ்ணன் நிச்சயம் என் வசம்தான்! நான் இப்படி அவனைப் பார்ப்பேன்!! அன்னம்போல நடப்பேன், குயில்போலப் பாடுவேன், கிளிபோலக் கொஞ்சிப் பேசுவேன், இந்தச் செண்டை அவன் முகத்திற்கு எதிரில் பிடித்து அவன் கைகளை என் உதடுகளில் படும்படி உயர்த்துவேன். அவன் என் வசம், வேறு யாரையும் கவனிக்கமாட்டான். அவனை வசம்பண்ணிவிட்டேன்! விட்டேன்!! யார் எனக்கு நிகர்?" என்று வாய்விட்டும் சொல்லிவிட்டாள் ராதை.

ஸூர்யாஸ்தமன மாகுந்தருணத்தில் அவள் ஒருவருக்கும் தெரியாமல் புஷ்பம், பழம், பலஹாரங்கள் முதலியவைகளை எடுத்துக்கொண்டு வீட்டு வேலைகளை லக்ஷ்யம்செய்யாது அழகு உருவெடுத்து நடப்பதுபோல வீட்டைவிட்டு நழுவி, ரஹஸ்யவழியால் தானும் தன் காதலனும் அநேகந்தரம் ஸந்தித்து அழகிய அநேக மாலைப்பொழுதுகள் போக்கிய மனோரம்யமான யமுனைக்கரை ரஹஸ்யவிடத்

திற்கு வந்து சேர்ந்துவிட்டாள். கம்பீரமான நதி, அழகிய வெண்மணல், பின்னுள்ள இருண்டசோலைகள், அவர்கள் வழக்கமாக உட்காரும் வெள்ளைப்பாறை, அவர்கள் மறைய விடங்கொடுத்த உயர்ந்த மரங்கள், அவர்கள் ஸாந் நித்யத்தில் மகிழும் மயில், மான், கோகிலம் முதலிய ஜந்துக்கள், காட்டுப்பூக்கள், ஸங்கீதம் பாடும் மூங்கிற் கொத்துக்கள், நாணற்புதர்கள், சிதறிக்கிடக்கும் பறைகள், அவைகளுக்கு இடையில் நுழைந்து, ஓடிக் குழந்தைகள் போல விளையாடி, யமுனையின் தீர்த்த ஸம்பத்தைச் சிறப்பிக்கும் ஊற்றுக் கண்கள் எல்லாம் அங்கு ரமணீயமாக அமைந்து கிடந்தன. ஆனால் இவைகளைவிட மிகுந்த அத்புதமும் அழகும் வாய்ந்த கிருஷ்ணனை மாத்திரம் அங்கு காணேம். அவர் அங்கு இல்லாமற்போக, நடை, அழகு, உத்ஸாஹம் முதலியவைகள் நிறைந்த ராதைக்கு மிகுந்த ஆச்சர்யமுண்டாகிவிட்டது. சீக்கிரம் வந்துவிடுவார் என்ற எண்ணத்தால் அதை அடக்கிக்கொண்டாள். 5, 10, 15 நிமிஷம், அரை மணி முறையே கழிந்தன. கிருஷ்ணன் வரவில்லை. செடிகளுக்கு இடையில் சலசலப்பு ஒன்று கேட்டதாக அவளுக்குத் தோற்றியது. கிருஷ்ணன் ஒருவேளை அங்கு ஒளிந்து கொண்டு விளையாட்டுக் காட்டுகிருரோ என்ற எண்ணம் உண்டாகிவிட்டது. உடனே 'கோவிந்தா! கோபாலா!! முராரி!! முகுந்தா!! கிருஷ்ணு!! ராதாரமணு!' என்று தழதழத்த குரலுடன் கூவி யழைத்தாள். அவள் காதல் நிறைந்த ஸ்வரம் சுற்றுமுள்ள வாயுவுள் அடங்கிவிட அது வீண் கூப்பாடாகிவிட்டது. ஸூர்யன் அஸ்தமித்தும் பகவானைக் காணவில்லை. வானம் இருண்டநீலவர்ண மாயிற்று. அதைவிட நீலமாயும் ஆயிரம்வானத்தைவிடச் சிறந்தவராயும் உள்ள பெருமான் இன்னும் வரக்காண

வில்லை. பக்ஷிகள் கூடுகளுள் அடைந்துவிட்டன. பசுக்கள் தொழுக்களில் புகுந்துவிட்டன, குடியானவர்கள் வீட்டிற்குச்சென்று மனைவிகளிடம் வார்த்தையாடத் தொடங்கிவிட்டனர். சோம்பித்திரியும் முராரி அவள் மிருதுவான வாஸனை மிகுந்த ஹிருதயமாகிய வீட்டைவிட்டு எங்கு அலைந்து கொண்டிருந்தாரோ?

அன்றுமாலை மிகுந்த அழகும் சுத்தமும் வாய்ந்ததாக விருந்தது. சுற்றியுள்ள எல்லாவற்றிலும் சாந்தமும் ஓய்வும் குடிகொண்டிருந்தன. கம்பீரமான யமுனை மெதுவாகச் சப்தமின்றி ஊர்ந்து சென்றது; பக்ஷிகள் பாட்டை நிறுத்தி விட்டன; மரங்கள்கூட அசைவற்று சலசலப்பின்றி நின்று விட்டன. மேலே ஆகாயமோ அலையற்ற கடல்போல ஒரே நீலமாகப் பரந்திருந்தது. ஸமாதியிலிருக்கும் மஹானைப் போல ப்ரபஞ்சமெல்லாம் மௌனம் ஸாதித்தது. வெளிச் சாந்தம், பாவம் ராதையின் மனச்சஞ்சலத்தை அதிகப் படுத்தியது. 'அவன் வரமாட்டானு! சீ! சீ!! அப்படியல்ல! நான் வரச்சொல்லியிருக்கையில் வராமலிருப்பானு? சந்திரனேடு ஒருவேளை வருவான்' என்று தேறினுள் ராதை. கொஞ்சநாழிகைக்கெல்லாம் சந்திரனும் கிளம்பிவிட்டான். பீதாம்பரதாரியான தாண்டவ கிருஷ்ணனை அழைத்துவராமல், தன் வெள்ளிய கிரணங்களை எங்கும் பரப்பி ராதையின் வேதனையைச் சந்திரன் அதிகப்படுத்தியது. கல்நெஞ்சனை சந்திரனை நிமிர்ந்துநோக்கி ஓடித்திரியும் காதலன்மேல் கோபங்கொண்டாள். 'இந்த அவமதிப்பை என்றும் மறவேன்! ஆ! இந்த நிலவொளி! இது எப்படிக் கொளுத்துகிறது! இனிமேல் அவனுக்கும் எனக்கும் என்ன இருக்கிறது? அவன் வரட்டும் சொல்லுகிறேன் வழி! வைது துறத்திவிடுகிறேன். தான் ஸுகமாக வேறொரு இடத்தி

விருந்துகொண்டு என்னை சந்திரன் சீதள ஒளி, காம பாணம் இவைகளில் அகப்பட்டுச் சீரழியும்படி விட்டுவிட்டானே! எனக்குக்கூட கொடுமை இருக்கிறது என்று இன்று காட்டிவிடுகிறேன். அவன் வந்து என்னைக் கடாக்ஷிக்க வேண்டும் என்று கெஞ்சுவான்; அவனை உதைத்துத்துறத்தி விடுகிறேன் பார்!' என்று சபதம் கூறிக்கொண்டாள் ராதை. கிருஷ்ணன் வராததால் கோபம் பயனற்றதாக முடிந்தது. வீட்டிற்குத் திரும்பிவிடலாமா என்று அடிக்கடி யோசித்தாள். அவ்வாறு செய்துவிட அவளுக்கு மனம் எழவில்லை. அவளால் இன்னது என்று கூற முடியவில்லை. ஏதோ ஒன்று அவளைப் போகவொட்டாமல் தடுத்துக்கொண்டிருந்தது. ஒரு வேளை கிருஷ்ணன்மேல் இருந்த காதலாக விருக்குமோ என்ற எண்ணம் வந்தால் 'நான்தான் என் காதலை விட்டுவிட்டேனே!" என்பாள் அவள். ஏன் அவள் அங்கேயே இருந்தாள்? வரவரக் கோபம் துக்கமாக மாறியது. தன்னையும் வாடத் தொடங்கிவிட்ட கையிலிருந்த பூச்செண்டையும் பார்த்தாள். அதுவும் தனது துக்கத்தைப் பார்த்துத் தானும் துக்கிக்கிறதோ என்று தோற்றியது. 'நான் எங்கே! அவர் எங்கே!! பெண்களுக்கு மன்மதன் போல விளங்கும் அவருக்கு நான் எம்மட்டு! அவரை வசப்படுத்திவிட்டோம் என்று எண்ணினேமே! அதை அவரிடம் கூடச் சொல்லி விட்டோமே!! இதுதான் மடத்தனம் யானை தன் தலையில் மண்ணை வாரிப் போட்டுக்கொண்டது போல நானே இந்த அனர்த்தத்திற்குக் காரணம்' என்று கூறி மனமழிந்து கதறத் தொடங்கிவிட்டாள் ராதை.

நிஜ அடக்கம், பச்சாத்தாபம் முதலியன அவள் மனதைக் கொள்ளைகொள்ள ஒரு பாறையின்மேல் உட்கார்ந்துகொண்டு, பரிசுத்தமான துக்கத்தை அவள் முகம்



ராதை கிருஷ்ணன் வரவை எதிர்பார்த்திருத்தல்.

குறிக்க 'கிருஷ்ணன் சீக்கிரம் வந்து சேரலாகாதா ஈச்வரா !' என்று பிரார்த்தித்துக்கொண்டும், அவர் வரும்வழியைக் கண்கொட்டாது பார்த்துக்கொண்டும் அசைவற்று இருந்து விட்டாள் ராதை. திடீரென்று கிருஷ்ணன் தாமரைக் கரங்கள் வாரிமுடித்த தன் தலையிற் படுவதுபோலவும், ஜிலு ஜிலுப்பான வேணுநாதம் தன் பின்னால் வெகு அருகாமை யில் கேட்பதுபோலவும் தோற்றியது. மின்னல்போல சரே லென்று திரும்பினாள் : நாதமும் கையும் அதே வேகத் துடன் திரும்பத் தொடங்கின: அவள் பம்பரம்போலச் சுற்றினாள் : அவைகளும் திரும்பி எப்பொழுதும் அவள் பின்புறமே இருந்தன : பகவான் கையை எட்டிப்பிடிக்கவும் முடியவில்லை. அவள் கூந்தல் மெதுவாகவும் பலமாகவும் சுண்டி இழுக்கப்பட்டது: கோபம் கொண்டவள் போல் நடித்து அந்தக் குற்றவாளியைப் பிடிக்கத் தன்னாலான மட்டும் அநேகந்தரம் பின்னே கையை நீட்டிப்பார்த்தாள் ராதை. ஒவ்வொருதரமும் கிருஷ்ணன் அவள் தேகத்தைப் பின்னே வளைத்துக்கொண்டு பின்னடைந்தார். அவள் திடீரென்று பின்னே திரும்பினாள். என்ன ஆச்சர்யம் ! அவள் காதலன் ஆகாயத்தில் கிளம்பிவிட்டார் !! மேலே அண்ணாந்து பார்க்கையில் அநேக கோபிகள் இடையில் அவர் விளங்குவதைக் கண்டாள் !! உடனே அவள் மனத் துள் அநேக எண்ணங்கள் புகுந்துவிட அது உருகியது. இக்காட்சி கொஞ்சநாழிகைதான் இருந்தது: பின்னர் எங்கு திரும்பியபோதிலும் அவளுக்கு கிருஷ்ணனாகவே தோன்றி யது ! மேல் கீழ், முன் பின், வலம் இடம், எங்கும் கிருஷ் ணனே !! வெகு இனிமையாகவிருந்தது. இதை பொருத் துக்கொண்டிருக்க ராதையால் முடியவில்லை. கீதையில் அர்ச்சுனன் கேட்டுக் கொண்டது போல, 'உன் பெரிய

ரூபத்தை நீக்கி ஸாதாரண உருவத்தைக் காட்டிவிடு. ஏ கிருஷ்ணு! ஏ கோவிந்தா!' ஏ ராதாரமணு! இந்த மாயா ரூபத்தை விட்டு நீர் இருக்குமிடத்தைக் காட்டி உமது கருணை மாருதிருக்கிறது என்று வாக்களியும். எனக்குப் பயமாயிருக்கிறது. உமது ரூபத்தைக்காட்டி என்னைத் தேற்றும். உமக்குத் தகுந்தவளா நான், ஒரு அற்பப் பெண். உம்மை வசப்படுத்தி அடிமையாக்கிவிட்டேன் என்று வீண் கர்வம் கொண்டேன். ஓ கோபாலா! என் மடத்தனத்தை மன்னித்துவிடும் உமது திரு உருவத்தைக் காட்டி என்னை ஆச்வாஸப்படுத்தும்' என்று கதறி வேண்டிக்கொண்டாள். உடனே 'ஸரிதான்' என்று அங்கீகரிப்பதுபோல வேணு நாதம் கேட்டது. மேலெல்லாம் ஒருவித பரபரப்பு உண்டா யிற்று: திடீரென்று தானே கிருஷ்ணனுகி விட்டதாக அவளுக்கு அப்பொழுது ஒரு அனுபவம் உண்டாயிற்று. ஆனந்தம் அகண்டானந்தம் அவளுக்கு உண்டாகிவிட்டது. அவள் ராதையல்ல கிருஷ்ணனே யாகிவிட்டாள். அவளே கிருஷ்ணன், கிருஷ்ணனே அவள். ஒருவித கலப்பற்ற நிஜானந்தம் பொங்கித் ததும்பியதால் பேச்சு அடங்கி விட்டது. தன்னையும் தன் கடமைகளையும், ஸுகதுக்கங் களையும், வெளிப்பிரபஞ்சம் எல்லாவற்றையும் ஒருங்கே மறந்துவிட்டாள். இவை எல்லாம் நீங்கிவிட அவளும் காதல னும் ஒன்றேயாகி விட்டனர். அவள் காலாதீதமாகி விட்ட தால் எவ்வளவு காலம் இவ்வாறிருந்தாள் என்பது அவளுக்கு விளங்கவில்லை. விழிக்குங்கால் காலைநேரமாக விருந்தது.

பூரணமான குற்றமின்மையும் கபடமின்மையுமே நன்ருக விளங்கும் முகத்துடன் கிருஷ்ணன் ராதை அருகில் உறங்கிக்கொண்டிருந்தார் அப்பொழுது. கூசாது அவள் அவரை எழுப்பி விட்டாள். அவர் தூங்கவில்லை என்பது

அவளுக்கு நன்றாகத்தெரியும். 'என்ன! இவ்வளவு சீக்கிரம் விடிந்துவிட்டதா?' என்று கேட்டுக்கொண்டே கண்களைக் கசக்கிக்கொண்டெழுந்தார் கிருஷ்ணன். ராதை அவர் கைகளைத் தன் கையில் பிடித்துப் பரபரப்புடன் அமுக்கிக் கொண்டு கூறலுற்றாள்.

ராதை:—இனிமேல் என்னைமோசம்செய்ய முடியாதே! உம்மைக் கண்டுகொண்டேன்!! விழித்துக் கொண்டிருக்கும் பொழுதே தூங்குவதுபோல பாசாங்குசெய்வதால் நீர் கபடி என்று ஒப்புக்கொள்ளும். ராப்பகலற்று ஒளிரும் சுத்த ஸச்சிதானந்தம் என்று நான் இப்பொழுது அனுபவித்திருக்கத் தூங்குவதாகவா பாசாங்கா செய்கிறீர்? நீர் கபடியல்லவா?

கிருஷ்ணன்:—ஆம், நான் கபடிதான். ஆனால் என்னைக் கபடி என்று உணருபவருக்கு மாத்திரம் கபடியல்லன். அவர்களுக்கு நான் நேர்மையுடன் வெளிப்படையாக விருப்பவன்.

ராதை:—பிரபஞ்சமாகிய பொய்யை நீர் கிளப்பி விட்டிருப்பதால் நீர் பொய்யர் அல்லவா?

கிருஷ்ணன்:—நான் பொய்யன்தான். இந்த ஸம்மதத்தில் நான் உண்மைகூறுவதால் நான் முழுப்பொய்யனல்லன். மேலும் என்னைத்தேடி வருபவர்களுக்கு நான் பொய்யனாக விருக்கமாட்டேன். பொய்யனைக் கண்டுவிட்டால் பொய்யாம் உலகம் மறைந்துவிடும்.

ராதை:—உம்மிடத்திலிருந்து நாம் வேறாயிருப்பதாக எங்களுக்குத் தோற்றும்படி செய்வதால் நீர் மோசக்காரர் அல்லவா?

கிருஷ்ணன்:—ஆம், நான் மோசக்காரன்தான். தாம் வேறு என்று எண்ணிக்கொண்டு மேலும் மோசம் போக

வேண்டும் என்று விரும்புபவர்களைத் தான் நான் மோசம் செய்வது.

ராதை:—கள்வன் என்று ஒப்புக்கொள்ளும். மனிதர்களை மாயையால் மயக்கி ஆத்ம ஸாக்ஷாத்கார ஆனந்தத்தை அவர்களிடமிருந்து திருடிவிடுகிறீர் அல்லவா?

கிருஷ்ணன்:—நான் கள்வன் மாத்திரமா! கள்வர் தலைவன் என்றல்லவோ வேதங்கள் என்னை அழைக்கின்றன. ஆத்மாவை அசிரத்தையாக விட்டுவிடுபவர்களிடம்தான் என் தொழில் செல்லும்.

ராதை.—ஜீவர்கள் துக்கத்தைக் கண்டுகளிப்பவராதலால் நீர் கொடியவர் என்று ஒத்துக்கொள்ளும். உமக்குச் சிரிப்பு, அவர்களுக்கு வயிற்றெரிச்சல்.

கிருஷ்ணன்:—என்னிடம் கொடுமையாக விருப்பவரிடம் நான் என் கொடுமையைக் காட்டுவேன். பாமரர்கள் ஆத்மாவாகிய என்னைக் கொன்றவர்கள். ஆனால் என் கொடுமையும் ஒருவித அன்புடன்தான் கலந்திருக்கும். துக்கத்திலும் ஒருவித சாந்தானந்தம் உண்டு. மேலும் நாளடைவில் எல்லோரையும் என்னிடம் சேர்த்துக் கொள்ளுகிறேன். ஒருவரையும் நிர்க்கதியாக விட்டுவிடுவதில்லை.

ராதை:—ஸமுத்ர மணலை எண்ணினாலும் எண்ணலாம், உமது ரஹஸ்ய காதலிகளுக்குக் கணக்கே இல்லை. ஆதலால் நீர் துர்மார்க்கன், ஜாரன் என்று ஒப்புக்கொள்ளும்.

கிருஷ்ணன்:—நான் பெரிய ஜாரன்தான். பிரபஞ்சம் எல்லாம் என் முறைக்கேடான பிள்ளைகள்: ஒவ்வொரு ஜீவனும் என்சோர நாயகிதான். அவர்களோடு பலவிதமான விளையாட்டுக்கள் விளையாடி, துதி, தொந்திரவு, ஸமாதானம் செய்தல் முதலியவைகளைச் செய்வேன். அவர்கள் தம்மை

அழகுபடுத்திக்கொள்ள வேண்டுமென்பதை முற்றிலும் மறந்து, என்னை நீ செய்வதுபோல நிஷ்காம்யமாகப் பக்தி செய்யும்வரை இவ்வாறு ஆட்டிவைத்து முடிவில் விழுங்கி விடுவேன்.

பகவான் இவ்வளவு நேராக ஒப்புக்கொண்டதைக் கண்டு ராதைக்கு வந்த ஸந்தோஷத்திற்கு அளவே இல்லை. 'ஓ பரம் பொருளே! நீ கபடி, பொய்யன், மோசக்காரன், கள்வன், கொடியவன், துன்மார்க்கன், ஜாரன் ஆகிய இவ்வாருக விருப்பதால் எனக்கு மிகுந்த ஸந்தோஷம். நீயே நான், நானே நீ' என்று கூவி ஆனந்தக்கூத்தாடினுள்.

வாசிப்போர்களே, இக்கதையைக் குற்றங்கூறப் புகும் முன் இதன் விஷயத்தை நன்கு கவனியுங்கள். கிருஷ்ணனை ஜயித்து விட்டதாகக் கர்வப்பட்டபொழுது ராதை அவ்வாறு செய்யவில்லை. தன் கர்வத்தை எண்ணி கரைந்துருகி அடங்கிய உடன் கிருஷ்ணன் அவளிடம் அகப்பட்டார், அவள் கிருஷ்ணனே யாகிவிட்டாள். உபநிஷத்தில் கூறுகிற படி, ப்ரஹ்மத்தை அறியமுடியாதென்று உணருபவனே ப்ரஹ்மத்தை உணர்ந்தவனுவான். அதை அறிந்து விட்டேன் என்பவன் அதை அறியவே இல்லை. அதாவது 'கண்டவர் விண்டதில்லை, விண்டவர் கண்டதில்லை' என்பதே.

ஆ! நம் பரதகண்டத்தில் இந்தக்கபடி, பொய்யன், மோசக்காரன், கள்வன், கொடியன், ஜாரன் ஆகிய இந்த ஜார சோர சிகாமணியிடம் நமக்கு எவ்வளவு உள்ளன்பு, பக்தி! இல்லை என்று எவராலாவது மறுக்கமுடியுமா? *

---

* இம்மூன்று லீலைகளும் ஸ்ரீமான் பீ. ஆர். ராஜம் அய்யர் அவர்கள் இயற்றிய வேதாந்த உல்லாஸத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை.

# அனுபந்தம் 5

## லீலாசுகர் சரித்திரம்

முன்னொரு காலத்தில் வில்வமங்களன் என்ற ஒரு பணக்காரச் சிறுவன் இருந்தான். அவன் சைவமார்க்கத்தைச் சேர்ந்து அதற்குரிய சிவதீக்ஷை முதலியவைகளைப் பெற்றிருந்தான். நல்ல குலத்தில் பிறந்தவன். இப்படி இருந்தும் இளமைமுதல் ஏராளமான செல்வத்திலும் வளர்ந்து வந்ததினாலும், எப்பொழுதும் முகஸ்துதி பண்ணுபவரால் சூழப்பட்டிருந்ததினாலும், இவன் குணம் வரவர மழுங்கிக்கொண்டே வர, இவனுக்கு யௌவனவயதில் வேசையர் நேசமும் வந்து சேர்ந்துவிட்டது. கேட்கவேண்டுமா! நல்ல பணக்காரனுக்குத் துஸ்ஸங்கமும், பெண்ணாசையும் வந்துவிட்டால், காற்றும் தீயும் கலந்துவிட்டாற்போல் தானாகும். ஆதலால் வில்வமங்களன் யௌவனகாலமெல்லாம் பரஸ்திரீகமனம், மதுபானம் முதலிய தீயவழிகளில் கழியத் தொடங்கியது.

இப்படி இருக்கையில் இவன் சிந்தாமணி என்ற ஒரு தாஸியைக் காணும்படி நேர்ந்தது. அவள் மிகுந்த அழகு பொருந்தியவளாகவும், யௌவன வயஸுடையவளாகவும், பாட்டு முதலிய ரஸவிஷயங்களில் மிகத் தேர்ச்சி அடைந்தவளாகவும், கூறிய புத்தி முதலிய சிறப்புவாய்ந்தவளாகவும் இருந்தாள். இவைகளைக் கண்டதும் வில்வமங்களனுக்கு அடங்காக் காதல் உண்டாகிவிட்டது. வெறும்வாயை மென்

றவன் அவல் கிடைத்தால் விடுவானு? வில்வமங்களன் சிந்தாமணி பாதங்களில் சரணமாக விழுந்து, அவள் வீட்டிலேயே பழியாகக் கிடந்துவிட்டான். இவன் திரவ்யம் எல்லாம் தடையின்றிச் சிந்தாமணிக்கு அர்ப்பிதம் செய்யப் பட்டன. வரவரத் தன் வீட்டிற்கும் போவதைக்கூட முற்றிலும் இவன் நிறுத்திவிட்டான். இவனுக்கு வயது முதிர்ந்த தந்தையர் இருவர் இருந்தனர். தாய் ஓயாது அழுது கண் வீங்கி பிள்ளையின் நிலையால் எற்பட்ட துக்கம் ஆருமல் கண்களை இழந்தாள். தகப்பனுரோ தம் பிள்ளையை மீட்க எவ்வளவோ உபாயங்கள் செய்தார். ஒன்றும் பயன்படாமற் போக மனம் சிதைந்து, முடிவில் மரணம் அடைந்தார்.

தகப்பனுர் ஈமக்கடன்களைச் செய்துமுடிக்க வில்வமங்களனை அழைக்க அநேகர் முயன்றனர். அவனுக்கோ சிந்தாமணியைத்தவிர வேறு உலகமே இருப்பதாகத் தோற்றுதாதலால், இவர்கள் முயற்சிகள் வீணுயின. அப்பொழுது வேறு ஒருவழியும் இல்லாதது கண்டு நேரே சிந்தாமணியிடமே சென்று விண்ணப்பம் செய்துகொண்டு முறையிட்டனர். என்ன! தாஸியானுல்தான் என்ன! இவ்வளவுபெயர்கள் சேர்ந்து சொல்லும்பொழுது மனம் இளகாமலிருக்குமா! மேலும் அவள் நுட்பபுத்தியுடையவள் அல்லவா? உடனே தன் காதலனைத் தகப்பன் வீடு அனுப்புவதாக வாக்களித்தாள். வில்வமங்களனிடம் வந்து ஸங்கதிகளைச் சொல்லித் தகப்பன் வீடு போகும்படி எவினுள். அவன் கேட்கவில்லை. 'இந்தப் பத்தாம் நாள் கடனை முடித்துவிட்டு நாளை இங்கே வந்துவிடலாம். இந்தக் கர்மத்தை விட்டுவிடக்கூடாது. போய்வா!' என்று அவள் எவ்வளவோ மன்முடினுள். காதற் கடலில் மூழ்கிக்கிடந்த அவன் செவியில், தன் காதலியின் அப்பிரிய மொழி ஏறவேயில்லை. உடனே அவளுக்குக்கோபம்

வர, அவள் அவனை அடித்துத் தன் வீட்டை விட்டுத் துரத்தி விட்டாள்.

பார்த்தான் வில்வமங்களன்! என்ன செய்வான்! வேறு கதியில்லை! தகப்பன் வீடுசென்று அன்று ஈமக்கடன்களை முடித்து விட்டு வந்தால்தான், தன் காதலி தன்னைச் சேர்த்துக்கொள்வாள் என்று நன்கு அறிந்தான். உடனே ஓடோடியும் தன் வீடுவந்து ஈமக்கடன்களைச் செய்யத்தொடங்கினன். வாய் மந்திரம் சொன்னபோதிலும், மனம் சிந்தாமணியிடமே ஸதா பாய்ந்துகொண்டிருந்தது. 'எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே' என்பதுபோல வில்வமங்களன் மனேநிலையும் இரண்டுபட்டிருந்தது. இந்தக் கர்மம் எப்பொழுது தொலையும் என்று கர்மத்தில் மனம் செல்ல, அதை வேகமாகவும் நடத்தினன்; ஒழிந்தால் சிந்தாமணியிடம் போய் ஆநந்திக்கலாமே என்ற எண்ணம் விடாது அவன் மனத்தில் உள்ளூற ஊறிக்கொண்டும் இருந்தது. என்ன வேகமாகக் கார்யங்களை நடத்தியும் மாலைப்பொழுது வரையில் கன்மங்கள் முடியவில்லை. முடிந்ததும், 'சட்டிசுட்டது கைவிட்டது' என்ற கதையாகச் சனி தொலைந்தது என்று வில்வமங்களன் அடங்காக் காதலால் தூண்டப்பட்டுச் சிந்தாமணி வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

அன்று மாலைப்பொழுதிலேயே இருள்வந்து மூடிக்கொண்டது. ஆகாயத்தில் கரிய நீருண்ட மேகங்கள் பந்தி பந்தியாய் ஸஞ்சரித்துக் கரிய மலைப்பாம்புகள் ஒன்றை ஒன்று விழுங்குவதுபோல ஒன்றனுள் ஒன்ருகப் பாய்ந்தோடிப்பரந்தன. மின்னல்கள் ஆகாயம் எங்கும் கொஞ்ச நாழிகைக்கு ஒருதரம் பளீர் பளீர் என்று வெட்டி மறைந்தன.

அன்று இடித்த இடிக்கோ கணக்கே இல்லை. கூடக் காற்றும் மழையும் சேர்ந்து விட்டது. அப்பு, தேஜஸ், வாயு ஆகிய மூன்று பூதங்களும் ஒன்றாகச்சேர்ந்து பேசிக்கொண்டு, பூமியை அழிக்க யத்தனித்துவிட்டனவோஎன்று தோற்றியது. இந்த அல்லோலகல்லோலத்தின் இடையில் வில்வமங்களன் பயித்தியம் பிடித்தவன்போலச் சிந்தாமணியை நினைத்துக்கொண்டு புறப்பட்டு விட்டான். அவன் உள்ளே இருந்த காதலும், பிரிவாற்றாமையால் ஏற்பட்ட கொடிய துக்கமும் அவன் உணர்ச்சியை மழுங்கும் படி செய்துவிட்டன. ஒரு விஷயத்தில் ஒருவன் மனம் ஊன்றிப் பாய்ந்து விட்டால், வேறு எதுவும் அவனுக்குத் தோற்றவே மாட்டாது. ஆதலால், வில்வமங்களனுக்குக் காற்றும் மழையும் கலந்து அடிப்பது தெரியவே இல்லை. வெறிபிடித்தவன்போல ஓடிவந்து ஓர் ஆற்றின் கரைசேர்ந்தான்.

இதற்குள் நன்றாக இருட்டிவிட்டது. அக்கரையில் தான் சிந்தாமணி வீடு. ஆற்றில் பெருவெள்ளம் கரை புரண்டு ஓடியது. இதை எப்படிக் கடந்துபோவது என்ற ஏக்கம் வில்வமங்களனுக்கு வந்துவிட்டது. எப்படியாவது போய்த்தான் தீரவேண்டும் என்ற த்ருடசித்தம் அவனை விட்டு அகலவில்லை. அவன் அதிர்ஷ்டம், எதிரில் ஏதோ தண்ணீரில் மிதந்து போவதைக் கண்டான். நல்ல காலம் என்று குதித்தான் தண்ணீரில். அதை மிகுந்த ஆவலுடன் பிடித்துக்கொண்டு நீந்தி வெகு சீக்கிரத்தில் ஆற்றைக் கடந்தான். அக்கரை சேர்ந்தான். உடனே, சிந்தாமணி வீட்டண்டையும் வந்துவிட்டான். இந்தக்கால் வீசிப் பொழியும் கனமழையில் யார்தான் வீட்டைத் திறந்து வைத்துக் கொண்டிருப்பார்கள்? சிந்தாமணிவீடு சாத்தியிருந்தது. சுற்றுமுள்ள சுவர்களோ வெகு உயரமாக இருந்தன! மறுபடி

யும் வில்வமங்களனுக்கு ஏக்கம் உண்டாகி விட்டது. ஆயினும் அவன் மன உறுதியோ மாறவில்லை. 'எப்படியாவது உள்ளே போய் விடவேண்டும்' என்று ஜபம் பண்ணிக்கொண்டு, சிந்தாமணி வீட்டைச் சுற்றிச் சுற்றிப் பிரதக்ஷணம் செய்தான். இவ்வாறு வரும்பொழுது சுவரிலிருந்து கயிறு ஒன்று தொங்கிக்கொண்டிருக்கக்கண்டான். கண்டதும் ஆனந்தக் கூத்தாடி அதைப் பிடித்துக்கொண்டு சுவரில் ஏறி முற்றத்தில் குதித்துச் சிந்தாமணி படுக்கை அறையுள் புகுந்தான். அங்கு அவள் உண்டு வெற்றிலை போட்டுக்கொண்டிருப்பதைக் கண்டு 'வந்துவிட்டேன்! நீ சொன்னபடி எல்லாம் செய்து விட்டு' என்று கூவிக்கொண்டே அவளை அணுகினன்.

இவன் கிட்டே வருங்காலத்தில் இவன் மேலே இருந்து, ஒரு துர்நாற்றம் வீசியதைக் கண்டு "இந்தக் காற்றுமழையில் எப்படி வந்தாய்? ஏன் உன்னிடம் இந்தத் துர்நாற்றம் உண்டாயிற்று?" என்று கேட்டாள். அப்பொழுதுதான் தன்மேலிருந்த துர்நாற்றம் அவனுக்குத் தெரியவந்தது. அந்த நாற்றத்தை அவனுல்கூட ஸஹிக்கமுடியவில்லை. 'என்ன காரணமோ அறியேன். உன்மீது இருந்த காதலினுல் ச்ராத்தம் முடிந்ததும் வீட்டைவிட்டுப் புறப்பட்டதுதான் தெரியும். ஆற்றங்கரைவந்து அதைக்கடந்து உன் வீட்டுச் சுவர் ஏறிக் குதித்து இங்குக் கடிதினில் வந்தேன். உன்மேலிருந்த காதலால்!' என்ருன் வில்வமங்களன். "எப்படி, இந்த உயர்ந்த சுவர்ஏறிக் குதித்தாய்? ஆற்றைக் கடந்தாய்?" என்று மிகுந்த ஆச்சர்யத்துடன் கேட்டாள் சிந்தாமணி. வந்தவழியை ஸாங்கோபாங்கமாய் எடுத்துரைத்தான் வில்வமங்களன். 'என் வீட்டுச்சுவரில் உனக்கு யார் கயிறுகட்டியிருந்தார்கள்? அப்படி ஒரு கயிறு இருந்ததாக ஞாபகம் எனக்கு இல்லையே! பார்ப்போம்!' என்று புறப்பட்டாள். இதற்குள் மழை சற்று

ஓய, வேலைக்காரன் விளக்கெடுத்து முன்னே செல்ல, சிந்தாமணியும் வில்வமங்களனும் வெளியேபோய் வீட்டைச் சுற்றிப்பார்த்தார்கள். அவன் தான் ஏறியவிடத்தைக் காட்டினான். அங்கு ஒரு கயிறு தொங்கிக்கொண்டிருந்தது. அதை உற்றுப்பார்க்கையில் அஃது ஒருகொடிய கிருஷ்ண ஸர்ப்பமாக விருந்தது. பதறிவிட்டாள் சிந்தாமணி! என்ன கார்யம் செய்தாய்! கணம் தப்பினால் மரணம் வந்திருக்குமே! ஏன் இப்படி உயிரை வெறுத்தாய்?' என்று நடுநடுங்கிக் கேட்டாள். ஆறுகடந்து வந்த வழியைப்பார்க்க இவர்கள் ஆற்றங்கரை போனார்கள். அங்கு ஒரு பிணம் ஒதுக்கப்பட்டிருந்தது. அது உருச்சிதைந்து அழுகிக்கிடந்தது. அதன் நாற்றம் வில்வமங்களன்மேல் இருந்த நாற்றம் போலிருந்தது. 'இந்தப் பிணத்தைப் பிடித்துக்கொண்டா வந்தாய்! இப்பொழுதுதான் உன் காதலின் பெருமை வெளியாகின்றது. என்னிடத்தில் இவ்வளவு காதலா உனக்கு! பிணம், பாம்பு, காற்று, மழை இவைகள் எல்லாம் உன் காதலின் முன் ஒரு பொருட்டாகத் தோற்றவில்லை. நானோ ஓர் அற்பவேசை! உன் முழுமனக்காதலை என்னால் எப்படித் தாங்கமுடியும்! அதைப்பெற எனக்கு யோக்யதை இல்லையே! இம்மாதிரியான மனப்பற்றுக்குத்தக்க கைம்மாறு என்னால் என்ன செய்யமுடியும்? இந்தக் காதலின் லவலேசத்தை பகவானிடம் வைத்திருந்தால் உனக்கு எவ்வளவு மேன்மை உண்டாயிருக்கும்! உன் முழுமனப்பற்றை வஹித்துத் தக்கபடி உன்னை சிறப்படையும்படி செய்ய அந்தப் பரம்பொருளுக்கே திறமையுண்டு!' என்று மிகுந்த பரபரப்புடன் மொழிந்தாள்.

இந்த வாக்கு வில்வமங்களன் மனதில் நன்றாகப் பதிந்தது. கொஞ்சநாழிகை அசையாது நிஸ்ஸப்தமாக நின்றான். மனம் மாறியது. 'சிந்தாமணி! நீ சொன்னது முற்றிலும்

உண்மை' என்று மிக உருக்கமாகக் கூறினுன். உடனே அங்கிருந்து ஓட ஆரம்பித்தான். சிந்தாமணி அவனைத் தடுக்க யத்தனித்தாள். முடியவில்லை. வில்வமங்களன் போயே போய்விட்டான். போனவன் சும்மாபோகாமல் ஸோமகிரி என்ற ஸத்குருவைக் கண்டான். அவர் கிருஷ்ண பக்தியை வில்வமங்களனுக்கு உபதேசித்தார். கிருஷ்ணன் லீலைகளில் அவன் ஈடுபட்டான்; மனம் உருகியது; சிற்றின்ப உணர்ச்சிகள் கழன்றன. இதனுல் இவனுக்கு லீலாசுகர் என்ற பெயர்வந்தது.

தமக்கு ஞானம் உண்டாகக் குருவாக இருந்தவர்களைப் பற்றி லீலாசுகர் பின்வருமாறு எடுத்துப் பாராட்டுகிறுர்:—

(1) சிந்தாமணி ஜயத்தோடு விளங்குகிறுள்; எனது குரு ஸோமகிரியும் ஜயத்தோடு விளங்குகிறுர் ; ஜயலக்ஷ்மி எவரது பதமாம் கல்பகத்தளிர்களின் நுனியில் விளையாட்டாகத் தானேபோய் அமர ஆசைகொள்வாளோ அப்பேர்ப்பட்டவரும், மயில் தோகையைத் தலையில் அணிந்தவருமான சிக்ஷாகுருவாம் ஸ்ரீ கிருஷ்ண பகவானும் ஜயத்தோடு விளங்குகிறுர் (இவர்களுக்கு ஜே! என்றவாறு.)

தாம் முன் சிவதீக்ஷை பெற்றவராய் இருந்தும், தம் மனம் கிருஷ்ணனிடமே ஈடுபட்டு நிற்கின்றது என்பதைப் பின்வருமாறு லீலாசுகர் வெளியிடுகிறுர்:—

(2) நாங்கள் சைவர்கள்; அதைக் கேட்கவேண்டியதே இல்லை; அதிலும் பஞ்சாக்ஷரியை அதிகமாக ஜபம் செய்கிறவர்கள். ஆகிலும் என் மனம், காசாம்பூவர்ணத்தை உடைய

---

* இங்கு இலக்கமிட்டிருப்பவைகள் எல்லாம் ஸம்ஸ்கிருத ச்லோகங்கள் மொழிபெயர்ப்பு. மூலச்லோகங்களை 8-வது அனுபந்தத்தில் காண்க.

வாயும், கோபஸ்திரீகள் குழந்தையாயும் உள்ள மந்தஹாஸ முகம்பொருந்திய கிருஷ்ணமூர்த்தியை ஸ்மரிக்கிறது.

கிருஷ்ண லீலைகளில் ஈடுபட்டு இவர் கிருஷ்ண கர்ணாம்ருதம் என்ற ஒரே நூல்தான் செய்திருக்கிறார். இந்த ஒரு நூலும் ஒப்புயர்வற்றது. இதில் சிலவிடங்களில் ஸாதாரணமான பழமொழிகளைப் பகவத்லீலைகளில் ஸம்பந்தப்படுத்தி அநேக ச்லோகங்கள் எழுதியிருக்கிறார். அவைகளுள் 'பூனை கண்மூடினால் உலகம் அஸ்தமித்துவிடுமா?' என்னும் பழமொழியைத் தழுவி, பகவான் கண்மூடினால் உலகம் அஸ்தமிக்கும், என்னும் கருத்தைக் குறிப்பாகப் பின்வருவதில் வெகு அழகாக லீலாசுகர் காட்டுகிறார்.

(3) அம்மா! என்ன யதுநாதா? அந்த பாத்திரத்தைக் கொடு. எதற்காக? பால் குடிக்க. இப்பொழுது பால் கிடையாது. பின்னை எப்பொழுது கிடைக்கும்? இரவில். அது எப்பொழுதுவரும்? இருள் வந்துமூடிக்கொண்டால். கிருஷ்ணன் உடனே தன் இரு கண்களையும் மூடிக்கொண்டு, இருள் மூடிவிட்டது பால் கொடு! பால் கொடு! என்று மன்றாடினார். இத்தகைய கிருஷ்ணன் நம்மைக் காப்பாற்றட்டும்.

'ஏனடா தென்னைமரத்தில் ஏறுகிறாய்? புல்லுப்பறிக்க ஏறுகிறேன். அங்கே ஏதடா புல்? அதுதான் இறங்குகிறேன்' என்று தோட்டக்காரனைக்கண்டு தென்னைமரத்திலிருந்து இறங்கும் திருடன் கூறியதாக ஸாதாரண கதை ஒன்று உண்டு. அதைப் பகவான்மேல் ஏற்றிச் சிறுபிள்ளையாக இருக்கையில் அதிக புத்தி சாதுர்யம் காட்டிய பகவானைப் பின்வருமாறு புகழ்ந்துபேசுகிறார் :

(4) நீ யார் குழந்தாய்? பலராமர் தம்பி. உனக்கு இங்கே என்ன வேலை? இது என் வீடென்று எண்ணினேன்.

எதற்காக வெண்ணெய்ப்பாத்திரத்தில் 'கையிட்டாய்.? கோபித்துக்கொள்ளாதே அம்மா! காணுமல்போன கன்றைத் தேடுகிறேன், என்று இம்மாதிரி தயங்காது கோபிகளுக்கு விடை அளித்த கிருஷ்ணன் நம்மைக் காப்பாற்றட்டும்.

விடர்கள் தமது ஸ்திரீகளைப்பற்றி ஏங்கி 'அவர்கள் ஆபரணமாகவிருக்கமாட்டோமா அவர்கள் கழுத்தைத் தொட்டுக்கொண்டிருக்க' என்று கூறித் தமது விரகதாபத்தைக் காட்டுவது வழக்கம். அம்மாதிரி விசேஷ பக்தியைப் பகவானிடம் செலுத்தி, லீலாசுகர் பகவான் வேணுகான அவஸரத்தைப் பின்வருமாறு எண்ணி ஈடுபடுகிருர்.

(5) ஆ! யமுனைக்கரையில் ஐந்மாந்தரத்திலாவது அந்த மங்களாகரமான புல்லாங்குழலாகக் கிடைக்குமா? என்றைக்கு வருமோ அந்நிலை அந்தப் புல்லாங்குழலின் நிலை! எவ்வளவு சிறந்ததாயும் எல்லோராலும் விரும்பத்தக்கதாயும் இருக்கிறது. பகவானது உதடுகளாகிய மணிகளுக்கு எவ்வளவு அருகாமையில் நிலைபெற்றிருக்கிறது!

பகவான் மண்தின்று விச்வரூபம் காட்டிய லீலையை இவர் பின்வருமாறு எடுத்து விவரிக்கிருர் :

(6) 'கிருஷ்ணன் விளையாடிக்கொண்டிருக்கையில் ஏராளமாக மண் தின்ருன் அம்மா!' என்ருர் பலராமர். 'இது உண்மையா?' என்று கேட்டாள் தாய். 'இது யார் சொன்னது?' 'முஸலாயுதத்தை உடையவர்.' 'அது முழுப்பொய். என் வாயைப் பார், அம்மா!' என்று கிருஷ்ணன் திறந்தவாயுள் (மண்ணைக்காண யத்தனித்த) தாய்

அண்டங்களை எல்லாம் கண்டு ஆச்சர்யபரவசளாயினள். இப்படிச்செய்த பகவான் நம்மைக் காக்கட்டும்.

பகவான் வேணுகானச்சிறப்பை இவர் பின்வருமாறு எடுத்து விஸ்தரித்து ஆனந்தபரவசராகிறார்:

(7) ஆ! அந்தப் பாலகன் ஊதும் வேணுநாதச் சிறப்பை என்னென்று எடுத்துரைப்பேன்! அது உலகங்களை உணர்விழக்கும்படி செய்கின்றது; வேதப்பொருள்களை விள்ளுகின்றது. அதைக்கேட்டு மரங்கள் ஸந்தோஷிக்கின்றன; மலைகள் உருகுகின்றன; மான், பசுக்கள் முதலிய மிருகங்கள் ஆனந்தபரவசமாகின்றன. அது முனிகள் மனதைக் குவிக்கின்றது; ஸப்த ஸ்வரங்களையும் பேசுகின்றது; ஓங்காரப்பொருளையும் விளக்குகின்றது.

பகவான் லீலைகன் இவ்வாறிருப்பதால் கிருஷ்ணனே வேதாஹஸ்யம் என்பதைப் பின்வருமாறு வற்புறுத்துகிறார்:

(8) சாஸ்திரங்களாகிற காட்டில் அலைந்து திரிந்து முயற்சி வீணாகித்தவிக்கும் ஜனங்களே! கோபிகைகள் குடிசையில் உரலில் கட்டுப்பட்டிருக்கும் இடத்தில் உபநிஷத் அர்த்தத்தை (கிருஷ்ணனைத்) தேடுங்கள்.

இவ்வாறு சுலோகங்களாலாகிய கிருஷ்ண கர்ணாமிருதத்தைச் செய்து பகவத்லீலைகளில் ஈடுபட்டு மஹாஞானிகள் அடையும்படியான ஞான நிஷ்டை நிலையையும் முடிவில் லீலாசுகர் அடைந்தார். அந்த ஸமயத்தில் அவர் மனம் இருந்த நிலையைப் பின்வருமாறு தாமே ஆனந்தபரவசமாக எடுத்து உரைக்கிறார்:

(9) ஏ! ஸந்த்யாவந்தனமே! உனக்கு மங்களம் உண்டாகட்டும். ஏ! ஸ்நானமே உனக்கு வந்தனம். தேவதைகாள்! பிதிர்க்களே! தர்ப்பணம் பண்ணும் முறையில் பழகச் சக்தியில்லை. பொறுத்துக்கொள்ள வேண்டும். எங்கேயாவது உட்கார்ந்துகொண்டு யாதவகுலதிலகராயும், கம்ஸனைக் கொன்றவராயும் உள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவானை எண்ணி எண்ணிப் பாபத்தினின்றும் நீங்குவேன்! இதுவே போதும், மற்றவையாலாகவேண்டிய தென்ன?

இத்தகைய மஹான் முடிவில் ப்ரம்மஸாக்ஷாத்காரம் பெற்றூர் என்று கூறவும் வேண்டுமோ?

ஓம் தத்ஸத்.

---

# அநுபந்தம் 6

## * மூர்த்திகள் ஸமரஸ ஸாரம்

(1) மூர்த்தித்வேஷச் சண்டை முக்கியமாக 'அரனதிகன் உலகளந்த அரியதிகன்' என்று உண்டாகி வளருகின்றது.

(2) சிவன் பரதெய்வம் என்று சைவரும், விஷ்ணுவே பரதெய்வமென்று வைஷ்ணவரும் கூறுவர்.

1. சொல்லினும் சொல்லின் முடிவிலும் வேதச்சுருதியிலு
மல்லிலும் மாசற்ற வாகாயம் தன்னிலும் மாய்ந்துவிட்டோ
ரில்லிலும் அன்பரிடத்திலும் ஈசனிருக்குமிடம்
கல்லிலும் செம்பிலுமோ இருப்பான் எங்கள் கண்ணுதலே.

—பட்டினத்துப்பிள்ளையார்.

2. தேருங்கால் தேவ னொருவனே யென்றுரைப்பர்
ஆருமறியா ரவன் பெருமை—ஒரும்
பொருள் முடிவு மித்தனையே—எத்தவம் செய்தார்க்கும்
அருள்முடிவ தாழியான் பால்.

—திருமழிசை யாழ்வார்.

---

* முதற்பாகம் 5-ம் அநுபந்தமாகிய திரிமூர்த்தி ஸமரஸம் என்பதில் கூறப்பட்டிருக்கும் விஷயங்களை இங்கு சுருக்கிக் கூறப்பட்டிருக்கிறது. அங்குள்ள ஆதார மேற்கோள்களோடு சில புதிய மேற்கோள்களும் இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

(3) சிவன் மும்மூர்த்திகளுள் ஒருவர். ஆதலால் விஷ்ணுவுள் அடக்கம் என்று வைஷ்ணவரும், விஷ்ணு இவ்வாறுதலால் சிவனுள் அடக்கம் என்று சைவரும் கூறுவர்.

3. பெண்ணுலாம் சடையினனும் பிரமனும் உன்னைக் காண்பான்
எண்ணிலா ஊழியூழித் தவஞ்செய்தார் வெள்கி நிற்ப.
—தொண்டரடிப்பொடி யாழ்வார்.

4. நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்.
—திருமழிசை யாழ்வார்.

5. காரொளிய திருமேனிச் செங்கண்மாலும்
கடிக்கமலத் திருந்தயனும் காணவண்ணம்.
சீரொளிய தழற்பிழம்பாய் நின்றதொல்லைத் திகழொளியை.
—அப்பர்ஸ்வாமிகள்.

6. நிலையியற் பொருளும் இயங்கியற் பொருளும்
நிலைபெறத் தொழிற்படுத்துடைய
தலைவனங்களே பனிவரைப் பிராட்டி தன்னையும்
நின்னையு மிடப் பால்
மலரணைப்புத்தேள் தன்னையும் எனையும் வலப்புடைக்
கால ருத்தி ரனைக்
கலைமகள் தனையும் உளத்திடை தந்தான்
காத்துயிர்த் தழிப்பது கருதி.
—காஞ்சிபுராணம்.

(4) பரம்பொருளுக்கும் மூர்த்திகளுக்கும் உள்ள ஸம்பந்தத்தில் சிவனிடத்தே தான் பரம்பொருள் ஸாந்நித்யம் அதிகம் என்று சைவரும், விஷ்ணுவினிடம் அது அதிகம் என்று வைஷ்ணவரும் கூறுவர்.

7. அங்கமலத் தயனொடு மாலாகி மற்று
மதற்கப்பா லொன்றாகி யறிய வொண்ணச்
செங்கனகத் தனிக்குன்றைச் சிவனை.

—அப்பர்ஸ்வாமிகள்.

8. யானும் தானா யொழிந்தானை யாதும் யெவர்க்கும் முன்னோனை
தானும் சிவனும் பிரமனு மாகிப் பணைத்தனி முதலை.

—நம்மாழ்வார்.

இவைகளால்தான் மூர்த்திபேதம் ஏற்பட்டுத் திடப்படு கின்றது.

(5) பக்தி பரவசத்தால் ஈடுபடுங்கால் விஷ்ணுசிவர் கள் மும்மூர்த்திகளுக்கு அப்பாற்பட்டவர் என்று வைஷ்ணவ சைவர்கள் மதிக்கின்றனர்.

9. தானோ ருருவே தனிவித்தாய் தன்னில் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும் மற்றும் மற்றும் முற்றுமாய்
தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுள் கண்வளரும்
வானோர் பெருமான் மாமாயன் வைகுந்தனெம் பெருமானே.

—நம்மாழ்வார்.

10. மேவரு ஞான னந்தவெள்ளமாய் விதித்தோனாதி
மூவரு மாகியந்த மூவர்க்கும் முதல்வனாகி
யாவரும் யாவுமாகி யிறைஞ்சுவா ரிறைஞ்சப்படுபல்
தேவரு மாகிநின்ற செங்கண்மா லெங்கள்கோவே.

—வில்லிபுத்தூர் ஆழ்வார்.

11. ஆக்குமா றயனுமுத லாக்கிய வுலகம்
காக்குமா றுசெங்கண் ணிறைக்கருணையங் கடலாம்
வீக்குமாற ரனுமவை வீந்தநாள் மீளப்
பூக்குமா முதலெவ னவன் பொன்னடிபோற்றி.

—வில்லிபுத்தூர் ஆழ்வார்.

12. சிவனாகித் திசைமுகனாய்த் திருமாலாகிச்
செழுஞ்சுடராய்த் தீயாகி நீருமாகிப்
*    *    *    *

தவனாய தலையாலங்காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கினேனே.

—அப்பர்ஸ்வாமிகள்.

13. உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட் டுடையா ரவர்
தலைவ ரன்னவர்க்கே சரண் நாங்களே.

—கம்பர்.

14. ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவாம் அயனாய் மாலாய்
ஆன்றவீ சனுமாய்த் தானே யநந்த மூர்த்தியுமாய் நிற்கும்
மூன்றமுத் தனுமாய் இன்பப் புணரியா தவனாய் நாளும்
தோன்றிய விமலபோத சொரூபத்தைப் பணிகின்றேனே.

— தாண்டவராய ஸ்வாமிகள்.

(6) எல்லாத் தெய்வமும் சிவன்ரூபம் என்று சைவர்களும் அவ்வாறிருப்பது விஷ்ணு என்று வைஷ்ணவரும் கூறுவர்.

15. யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்.

—சிவஞானசித்தியார்.

16. ஞானமாய் ஒன்றாய் நின்ற என்னையே நானு வாகப்
போனதீ வினையின் மாந்தர் வேள்வியால் பூஜித் தத்தால்
வானமா முலக மேறி வாழ்ந்துமண் ணிடையே வீழ்ந்திட்
டீனமா மாசையாலேயிறப்பது பிறப்பதாவார்.

—பகவத் கீதை.

(7) இருதிறத்திலும் பெரியவர்கள் மற்றையவர் பரம் பொருள் விஷயத்தைக் கூறுங்கால் அவர்கள்போலவே பர வசமாகக் கூறுவர்.

17. ஓரேனம் தனைத்தேட ஒளித்தருளும் இருபாதத்தொருவனந்தப்
பேரேனம் தனைத்தேடி கணங்களுடன் புறப்பட்டான். * *
—வில்லிபுத்தூர் ஆழ்வார்.

18. காரகார காரகார காவலூழி காவலன்
போரபோர போரபோர போரில்நின்ற புண்ணியன்
மாரமார மாரமார மரங்களேழும் எய்தஸ்ரீ
ராமராம ராமராம நாமமென்னும் நாமமே.
—சிவவாக்கியர்.

(8) சிவவிஷ்ணுக்களை ஒன்றாக எண்ணியே ஆராதிக்க வேண்டு மென்பர் இருதிறத்தாரும்.

19. * * * * உயிர்காள்
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியயனர னென்னுமிவரை
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின் மனப்பட்ட
[தொன்றே.
—நம்மாழ்வார்.

20. ஒன்றெனப் பலவெனி வறிவரும் வடிவினுள்
நன்றெழில் நாரணன் நான்முகனர னெனுமிவரை
ஒன்றநும் மனத்துவைத் துள்ளிநும் இருபசையறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடைநாளே-
—நம்மாழ்வார்.

21. தங்கமொன்று ரூபம்வேறு தன்மையான வாறுபோல்
செங்கண்மாலு மீசனும் சிறந்திருந்த தம்முளே
விங்களங்கள் பேசுவார் விளங்குகின்ற மாந்தரே
எங்குமாகி நின்றநாமம் நாமமிந்த நாமமே.
சிவவாக்கியர்.

(9) சிவவிஷ்ணுக்களுள் பேதமே இல்லையாயினும் ஆராதனா விஷயத்தில் அவனவனுக்கு இஷ்டமான மூர்த்தியைப் பரதெய்வமாகக் கருதி மதத்வேஷமின்றி ஆராதிக்கலாம் என்பர் இருதிறத்தாரும்.

22. சிவனாகித் திசைமுகனாய்த் திருமாலாகிச்
செழுஞ்சுடராய்த் தீயாகி நீருமாகிப்
புவனாகிப் புவனங்க ளனைத்துமாகி
பொன்னாகி மணியாகி முத்துமாகிப்
பவனாகிப் பவனங்க ளனைத்துமாகிப்
பசுவேறித் திரிவனோர் பவனாய்நின்ற
தவனாய தலையாலங் காடன்றன்னைச்
சாராதே சாலநாள் போக்கினேனே.

—அப்பர்ஸ்வாமிகள்.

23. ஜகத் அதீச்வரனாகிய ஜனார்த்தனனாலும் ஸரி (விஷ்ணு) ஜகத் முடிவை உண்டாக்கு மஹேச்வரனாலும் ஸரி (சிவன்), இவர்களுக்குள் வஸ்து பேதம் என்பது என்க்கு இல்லவே இல்லை; ஆயினும் என்பக்தி பிறைசூடியான பெருமானிடமே பாய்ந்தோடுகிறது.

அப்பைய தீக்ஷிதர்.

24. நாங்கள் சைவர்கள், அதைக் கேட்கவேண்டியதே இல்லை, அதிலும் பஞ்சாக்ஷரீயை அதிகமாக ஜபம் செய்கிறவர்கள். ஆகிலும் என்மனம் காசாம்பூ நிறத்தராயும், கோபஸ்திரீகள் குழந்தையாயும் உள்ள மந்தஹாஸமுகம் உடைய கிருஷ்ணமூர்த்தியை ஸ்மரிக்கிறது.

லீலாசுகர்.

25. நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்க ளிரண்டாய்ச் சிவனாய் அயனாய்
கூரா ராழி வெண்சங் கேந்திக் கொடியேன்பால்
வாராய் ஒருநாள் மண்ணும் விண்ணும் தேக்கவே.

—நம்மாழ்வார்.

26. முனியே நான்முகனே முக்கண் ணப்பா என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண் கரு மாணிக்கமே யென்கள்வா
தனியே னாருயிரே யென் தலைமிசையாய் வந்திட்டு [யே
இனிநான் போகலொட்டேன் ஒன்றும் மாயம்செய்யேலென்னை
—நம்மாழ்வார்.

(10) ஒரு கடவுளையும் தாழ்மையாகக் கருதுவதற்கு இடமே இல்லை, எல்லாம் பரம்பொருள் ரூபமே என்பர் இருதிறத்தாரும்.

27. யாவையும் யவருந்தானாய் யவரவர் ஸமயம் தோறும்
தோய்விலன் புலனைந்துக்கும் சொலப்படா னுணர்வின் மூர்த்தி
ஆவிசே ருயிரினுள்ளான் யாதுமோர் பற்றிலாத
பாவனை யதனைக்கூடில் அவனையும் கூடலாமே.
—நம்மாழ்வார்.

28. ஸமய கோடிக ளெல்லாம் தன்தெய்வ மென்தெய்வம்
என்று எங்கும் தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது.
—தாயுமானவர்.

(11) மூர்த்திகளுள் பேதம் கற்பித்து த்வேஷம் பாராட்டுவோர் மஹா பாபிகளாகிவிடுவர் என்று கூறுவர் பெரியோர்.

[லோர்க்குப்
29. அரனதிகன் உலகளந்த அரியதிகன் என்றுரைக்கும் அறிவி
பரகதி சென்றடைய வரிய பரிசேபோல்.
—கம்பர்.

30. * * பலதெய்வம் பழித்துரைக்கும் பாதகரும் பரந்துதங்கள்
வாய்வழியே புழுச்சொரிய மாநரகக் கும்பியிடை மறுகக்கண்டான்
—ஒட்டக்கூத்தர்.

31. நாழியப்பு நாழியுப்பு நாழியான வாறுபோல்
ஆழியோனு மீசனு மமர்ந்துவாழ்ந் திருந்திடம்
எருதிலேறு மீசனும் இயங்குசக்ர தரனையும்
வேறுகூறு பேசுவோர் வீழ்வர் வீணரகிலே.

—சிவவாக்கியர்.

32. தில்லைநாயக னவன் திருவரங்கனும் மவன்
எல்லையான புவனமூன்றும் ஏகமுக்தி யானவன்
பல்லுநாவு முள்ளபேர் பகுந்துகூறி மகிழுவார்
வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து மாய்வரே.

—சிவவாக்கியர்.

(12) முக்தியாகிய முடிவான நிலையைப்பற்றிக் கூறுங்கால் இருதிறத்தாரும் பொதுப்படையாகவே கூறுகின்றனர்.

33. நின்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லா மீர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும் பாழ்உலப் பிலதனை உணர்ந் [துணர்ந்து
சென்றாங் கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே அப்போதே வீடதுவே வீடுவீடாமே.

—நம்மாழ்வார்.

34. தானான தன்மயமே யல்லால் ஒன்றைத்
தலைஎடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலும் கற்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றி
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவும் நழுவாமல் நழுவி நிற்கும்
ஆனாலும் இதன்பெருமை எவர்க்கார் சொல்வார்
அதுவானால் அதுவாவார் அதுவே சொல்லும்.

—தாயுமானவர்.

(13) முடிவு :—

35. 'சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை — உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்'

என்று கூறிய ஔவையார்,

'திருமாலுக் கடிமைசெய்'

எனக்கூறியுள்ள இதன் கருத்தையும் 'தெய்வ மிகழேல்' என்று கூறியுள்ளதையும் மறவாது மதத்வேஷத்தை நீக்கி நாம் நமது இஷ்டதேவதையை ஏகாக்ரமனதுடன் வழிப்பட்டுவந்து பரமபதம் அடைய முயலுவோமாக.

---

# அநுபந்தம் 7

## கோகுலாஷ்டமி அல்லது கிருஷ்ணஜயந்தி

இந்த நோன்பு ஒவ்வொரு வருஷத்திலும் ஆவணி மாதம் கிருஷ்ணபக்ஷ அஷ்டமி திதி யன்று வருவது. இந்த நோன்பின் காலத்தைக் குறிப்பதற்கு 'அவிட்டம் கழித்த எட்டாம்நாள்' என்ற வசனமும் வழங்கிவருகின்றது. அதாவது ஆவணி அவிட்டம் என்று பிராம்மணர்களுள் சிறப்பாகக் கொண்டாடப்படும் வேதாரம்ப ஹேதுவான நோன்பு ஆவணிமாதம் பௌர்ணமியில் ஸாதாரணமாக வருவது வழக்கம். அதுவரும் நாளுக்கு, எட்டுநாள் பின்னர் இந்த நோன்புவரும் என்பது முற்கூறியுள்ள வசனத்திற்குப் பொருள். இது வைஷ்ணவருள் ஓர் நாளிலும் மற்றைய பிராம்மணர்களால் இதற்கு முந்தினநாளிலும் ஸாதாரணமாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. வைஷ்ணவர்களுக்கு ரோஹிணீ நக்ஷத்திரம் பிரதானமாதலாலும், மற்றையவர்களுக்கு அஷ்டமீ திதி பிரதானமாகையாலும் இந்த நோன்பு இவ்வாறு இரண்டுபட்டு வருகின்றது.

இந்த நோன்பு ஸாதாரணமாக நம்முள் எவ்வாறு கொண்டாடப்பட்டு வருகின்றது என்பதை விவரிப்போம். இந்த நோன்பன்று அதிகாலையில் வீட்டிலிருப்போர் எல்லோரும் ஸ்நானம் முதலியவைகள் செய்துவிட்டு தமது நித்ய

கர்மங்களை முடித்துக்கொண்டு அவரவர்கள் அன்று ஸாயங் காலம் நடந்தேறவேண்டிய கிருஷ்ணன் பூஜைக்கு வேண் டிய ஸஹாயவிஷயங்களைத் தம்மால் கூடியவரையில் தயார் செய்வார்கள். வீட்டிலிருக்கும் சிறுவர்கள் ஊரிலுள்ள தோட்டங்களில் எல்லாம் அலைந்து பகவத்பூஜைக்கு வேண் டிய பத்திர புஷ்பாதிகளைச் சேகரித்துவரும் கைங்கரியத்தில் இறங்கிவிடுவார்கள். வீட்டில் உள்ள பெண்டுகள் எல்லோ ரும் அவர்கள் நிலைக்குத் தகுந்தபடி பகவான் நிவேதனத் திற்கு வேண்டிய பக்ஷணம் முதலியவைகள் செய்வதில் தமது காலத்தைக் கழிப்பார்கள். வயதில் முதிர்ந்தவர்கள் பாகவதம் முதலிய திவ்யகதைகளை வாசித்தல், கிருஷ்ண பர மாத்மா முதலிய பெரியோர்களால் செய்யப்பட்டுள்ள அரிய நூல்கள் முதலியவற்றை வாசித்தல் ஆகிய ஸத்காலக்ஷே பங்களைச் செய்துவருவார்கள். அன்று ஸாயங்காலம் பூஜை நடக்கும் வரையில் பட்டினி இருக்க சக்தியுடையவர்கள் சுத்தப்பட்டினியாயும், குழந்தை முதலானவர்கள் தவிர மற்றையோர் சிற்றுண்டி உட்கொண்டும் இருப்பார்கள். ஸாயங்கால ஸமயம் வந்ததும், வீட்டில் பெரியவராக இருப்ப வர் ஸ்நாநம் முதலியனசெய்து தயாராக இருக்கும் பூஜா திரவ்யங்கள் முதலியவைகளைக்கொண்டு கிருஷ்ணன் பூஜை செய்யத்தொடங்கி நிவேதனம் முதலியவைகள் செய்து முடிப்பார். பகவத் பிரஸாதத்தை வீட்டில் உள்ளோர் எல் லோரும் உட்கொண்ட பின்னர் பாகவதத்தில் கிருஷ்ண ஜனனம் வாசித்தல் இதுபோன்ற வேறு சில ஸத்காலக்ஷே பாதிகளைச் செய்துகொண்டே அன்றிரவு சந்திரோதயம் ஆகுமவரை விழித்திருப்பார்கள். சந்திரோதயம் ஆனதும் கிருஷ்ண பரமாத்மாவுக்குக் கற்பூர ஹாரத்தி முதலியன செய்துவிட்டு எல்லோரும் தூங்கத் தொடங்குவர். மாத்வ

பிராம்மணர்களுள் மாத்திரம் அன்றிரவு ஏகாதசியைப் போலப் பட்டினியாகவே இருந்துவிட்டு மறுநாள் காலையில் துவாதசி யன்று செய்வதுபோலப் பாரணைசெய்வது வழக்கமாக இருக்கிறது.

விஷ்ணு ஆலயங்களில் கிருஷ்ணஜயந்தி யன்றைய தினம் பகவானுக்கு விசேஷமாக அபிஷேகம் பூஜை முதலியன முடிந்தபின்னர், அன்று ஸாயங்காலம், ஸ்வாமி வீதி சுற்றிவரப் புறப்படும். கிருஷ்ணபரமாத்மா காளிங்க ஸர்ப்பத்தின்மீது நர்த்தனம் செய்வதுபோன்ற அலங்காரம் அன்று ஸ்வாமிக்குச் செய்திருக்கும். கிருஷ்ண பரமாத்மாவின் லீலைக்குள் இதுவே மிகுந்த அற்புதமானதாயும், சிறந்த உட்கருத்துக்கள் அமைந்ததாயும் உள்ள லீலை. ஆதலால் எங்கும், இந்த அலங்காரமே பொதுவாகக் காணப்படும், உட்பொருள் முதலியவற்றை இந்த வியாஸத்தின் முடிவில் விவரிப்போம். பகவான் புறப்பட்டு வெளிவந்ததும் ஸந்நிதியில் சறுக்குமரம் ஒன்று நாட்டியிருக்கும். அதன் நுனியில் ஓர் முடிப்பில் கொஞ்சம் காசுவைத்து முடிந்திருக்கும். பகவானுடன் கோகுலத்தில் விளையாடியவர்கள் யாதவர்களாதலால் அந்தக் குலத்திற்கு ஈடாக இக்காலத்திலிருக்கும் இடையர் குலத்தோர் இச்சறுக்குமரத்தில் ஏறி, மேல் இருக்கும் காசை எடுக்கமுயலுவர். அப்பொழுது அவர்கள் அருகில் உயர்ந்த ஸ்தானத்தில் மஞ்சள் நீர் முதலியவைகளோடு தயாராக இருப்பவர் சிலர் ஜலத்தை ஓயாது அவர்கள்மேல் அடித்துக்கொண்டேயிருப்பார்கள். இவைகளை எல்லாம் கவனியாது, சாண் ஏறினல் முழம்சறுக்கும்! சறுக்குமரத்தின் கஷ்டத்தையும் கவனியாது, 'பகவான் கோகுலத்தில் தமது குலத்தவருடன் செய்தலீலைகளுள் ஒன்றைத் தாமும் பகவான்மேல் கருத்துவைத்து எந்தக் கஷ்டத்தை

யும் கவனியாது நடத்தவேண்டு' மென்ற ஆவலுடன் இடையன் ஒருவன் மிகுந்த கஷ்டத்தின்மேல் கம்பத்தின் உச்சி போய் அங்கிருக்கும் முடிப்பை எடுத்துவருவான். முடிவில் அவன் கம்பத்தின் அடியில் வந்து எதிரிலிருக்கும் பரமாத்மாவை நோக்கி மனதாரச் செய்யும் வழிபாட்டை நோக்குங்கால் 'மோக்ஷமார்க்கத்தில் சாண் ஏற முழம் இழுக்கும்படியான உலக வாழ்விலிருந்துகொண்டு உறுதியுடன் மோக்ஷமார்க்கத்தில் நிலைபெற்று ஆத்மலாபத்தை அடைவது மிகக் கஷ்டம்! அதை அடைவதே நமது வாழ்க்கைப்பலன்' என்ற எண்ணம் உற்றுநோக்குவோர் எவர் மனதில்தான் உதியாது? இது போலவே வீதியில் உரிகள் கட்டப்பட்டிருக்கும். அவைகளைக் கப்பிகள் மூலமாக மேலும் கீழுமாக இழுக்கும்படி வைத்திருக்கும். இடையர்களுள் ஒருவன் இந்த உரியைத் தன் கையிலிருக்கும் தடியால் அடிக்க முயலுவான். அந்த ஸமயத்தில் உரி அவன் தடிக்கு எட்டாதபடி வேறொருவன் இழுத்துவிடுவான். அருகாமையிலிருந்து கொண்டு சிலர் உரியடிப்பவன் மீது தண்ணீரை அவன் முகத்தில் படும்படி அடித்துக்கொண்டிருப்பார்கள். இந்தத் தடைகளைக் கவனியாது அவன் உரியை அடித்ததும் ஸ்வாமி வீதிவழியாக வந்து எல்லோருக்கும் காட்சி கொடுத்துக் கொண்டே வரும். ஆங்காங்கு ஏற்படுத்தப்பட்டிருக்கும் உரிகளின் அருகாமையில், உரி அடிபடும் வரையில் நின்று, பின்னர் ஸ்வாமி அப்பால் போகும். இம்மாதிரி சிறந்த உட்கருத்துக்கள் உள்ளடங்கிய உத்ஸவம் ஒன்று கிருஷ்ண ஜயந்தி யன்று நடந்துவருகின்றது.

இந்த நோன்பிற்குக் காரணமாக இருக்கும் புராண கதையை எடுத்து விவரிப்போம். கம்ஸஜராஸந்த ரூபமாக அஸுரர்கள் எல்லோரும் ஜன்மமெடுத்து அநீதியிலேயே

ஸ்தா முயற்சியுடையவர்களாகி பூமிக்குப் பெரும்பாரமாக இருந்தகாலத்தில், பூமிதேவி காமதேனு உருக்கொண்டு பிரம்மதேவரிடம் சென்று தனது கஷ்டத்தைக் கூறி முறையிட்டுக்கொண்டாள். அப்பொழுது பிரம்மதேவர் ஸகல தேவதைகளாலும் சூழப்பட்டுப் பூமிதேவியோடு பரம்பொருள் யோக நித்திரைசெய்யும் திருப்பாற்கடலடைந்து துதிக்க, அவர் ஸகல தேவதைகளையும் பூமியில் ஜன்மங்கள் எடுக்கும்படி உத்தரவுசெய்து தர்மம் கூடியசீக்கிரத்தில் வஸுதேவருக்குப் பிள்ளையாகப் பிறந்து தேவதைகளுக்கு ஹிதம் செய்வதாக ஒப்புக்கொண்டார்.

இப்படி இருக்கையில், ஸூரராஜா வம்சத்தில் பிறந்த வஸுதேவர் மதுரைதேசத்து அரசனாகிய உக்கிரஸேனராஜன் பெண்ணாகிய தேவகி தேவியைக் கலியாணம்செய்துகொண்டு, மறுநாள் அவளைத் தமது தகப்பன் வீட்டிற்கு அழைத்துப்போக யத்தனித்தார். அப்பொழுது தேவகீ தேவி தகப்பன் தனது வாஞ்சையால் தன் பெண்ணுக்கு அநேகவித ஸ்திரீதனங்கள் கொடுத்தான். அப்பொழுது ஊருக்குப்போக வஸுதேவரும் தேவகியும் தேர்மேல் வந்து ஏறினார்கள். தேவகீதேவியைத் திருப்திசெய்வதற்காக அவள் தமயன் கம்ஸன் தேர் ஓட்டவந்து ஏறிக்கொண்டான். இவன் உத்ஸாஹமாகத் தேர் ஓட்டிச் செல்லும்பொழுது ஆகாயத்தில் அவன் முன்பாக ' அடே மடையா! இந்தஸ்திரீயின் எட்டாவது குழந்தை உனக்கு யமன் ' என்று ஓர் அசரீரிவாக்கு உண்டாயிற்று. இயற்கையாகவே கொடியவனான கம்ஸனுக்குகோபம் உண்டாகத் தனது பட்டாக்கத்தியை உருவிக்கொண்டு தேவகீதேவியை ஒரே வீச்சாய் வீசிவிடவேண்டும் என்று எண்ணிக்கொண்டு அவள்தலைமயிரைப் பிடித்துவிட்டான். வஸுதேவர் தர்மவழியில்

அவனை ஸமாதானம் செய்யப் பார்த்தார். முடியாமல்போக வஸுதேவர் தனக்குப் பிறக்கும் பிள்ளைகள் எல்லாம் கம்ஸன் வசம் ஒப்புவிப்பதாக ஒப்புக்கொண்டார். கம்ஸன் கொலைத்தொழிலை நிறுத்திவிட்டான்.

தனக்குப் பிறக்கும் பிள்ளைகளை முறையே வஸுதேவர் கம்ஸனுக்குத் தவருது கொடுத்துவந்தார். வஸுதேவரது நடத்தைக்கு மெச்சி கம்ஸன், குழந்தைகளை வஸுதேவ ரிடமே கொடுத்துவிட்டான். இம்மாதிரி நல்லபுத்தி அவ னுக்கு வந்தது மிகவும் அபூர்வம். இவன் சீக்கிரம் இறந்தால் அல்லவா உலகத்திற்கு க்ஷேமம். இவன் இவ்வாறு சற்று நல் லவனுகிவிட்டானும் இவனுக்குக் கடவுள் தண்டனை எப்படி வரும்? இதை ஸரிப்படுத்திக் கம்ஸனை மிகக் கொடியவனுக்கு வதற்கும், வஸுதேவருக்குப் பிள்ளைகளாகப் பிறந்திருக்கும் தேவதைகளைச் சீக்கிரத்தில் விடுவிப்பதற்கும் நாரதர் அங்கு வந்துவிட்டார். உலகத்தில் கொடியவர்களை வேரறுக்க தேவதைகளும் மஹாவிஷ்ணுவும் செய்திருக்கும் ஏற் பாட்டை அவனுக்குக்கூற கம்ஸனுக்குப் பயம் அதிகரித்து விட்டது. வஸுதேவரையும் தேவகியையும், ஆருவது குழந்தை பிறந்ததும் அவ்ன் சிறையில் இட்டான். ஆறு குழந்தைகளையும் வாங்கி அவன் இரக்கமின்றிக் கொலையும் செய்துவிட்டான்.

தேவகி ஏழாவது கர்ப்பமாளுள். அப்போது மஹா விஷ்ணு தமது யோகமாயையை அழைத்து 'வஸுதேவரது பத்னிகள் கம்ஸனுக்குப் பயந்து நந்தகோபரது ராஜ்யத்தில் ஒளிந்துகொண்டிருக்கிருர்கள். அவர்களுள் ரோஹிணிதேவி வயிற்றில இந்த ஏழாம்குழந்தையை வைத்துவிடு. நான் பின்னர் தேவகீவயிற்றில் பிறக்கிறேன். நீ நந்தகோபரது மனைவியாகிய யசோதைவயிற்றில் பெண்ணுகப் பிறந்துவிடு"

என்று ஆஞ்ஞாபித்தார். எல்லாம் இவ்வாறேயாக, தேவகீ கர்ப்பம் நஷ்டமாய்விட்டது. இதன் பின்பு வஸுதேவரிடம் பகவான் புகுந்துகொண்டு காலக்கிரமத்தில் தேவகியினிடம் பிரவேசித்தார். தேவகீ எட்டாம் தரம் கர்ப்பந்தரித்தாள். ஏழாம் கர்ப்பம் மாயமாக மறைந்துபோய்விட்டதையும், தேவகீ எட்டாந்தரம் கர்ப்பந்தரித்து விளங்குவதையும் கேட்ட கம்ஸனுக்கு ஏதோ இவைகளில் சூது இருக்கிறது என்று தோன்ற பயம் அதிகரித்துவிட்டது. அநேகரைக் காவலாக ஏற்படுத்தினன். எங்கே ஏழாவது கர்ப்பம்போல இதுவும் மாயமாக மறைந்து கொஞ்சநாளில் தனக்கு யமனுக வந்துவிடுமோ என்ற பயத்தால் குழந்தை பிறந்ததும் தனக்குத் தெரிவிக்கும்படி கடுமையான கட்டளையிட்டிருந்தான். பகவானைத் தன்னிடம்' தாங்கிநிற்கும் தேவகீதேவியைக் கண்டதும் அவனுக்கு அவளைக்கொல்ல மனம்வரவில்லை. பகவானது ஜனனத்தை மிகுந்த பரபரப்புடன் கம்ஸன் எதிர்பார்த்திருந்தான். தேவதைகள் எல்லோரும் பகவானைத் துதித்து அவர் அவதாரத்தை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர்.

அஷ்டமி இரவு சந்திரோதயகாலம்: நிசி 12-மணி ஸுமார் இருக்கும். கம்ஸன் மிகுந்த பயத்துடன் தன்னைச் சுற்றிப் பகவான் காணப்படுவதாக எண்ணிஎண்ணி வெருண்டு அடிக்கடி விழித்துப் பார்த்துக்கொண்டு சற்றுக் கண் அயர்ந்தான். கண்கொட்டாது காவலாக இருந்த சிறைச்சாலை வாயிற் காப்போர், எல்லோரும் களைப்பால் சற்றுக் கண் அயர்ந்தார்.

இப்படி இருக்கையில் சந்திரன் உதயமானுன். அத்துடன் சிறைச்சாலையில் பகவானும் வெளிவந்தார். ஸாதாரணக் குழந்தைகள்போலா? சதுர் புஜத்தோடு தமக்கு ஸாதாரணமாக உள்ள திவ்ய மங்களரூபத்துடன் வஸுதேவர்

தேவகீ இருக்கும் இடம் தோன்றினார். இருவரும் வாயாரப் பகவானைத் துதித்து ஆலிங்கனம் செய்துகொண்டனர். உடனே அவர்கள் காலில் இட்டிருந்த விலங்குகள் யாவும் சிதறிப்போயின. காலதாமதம் செய்யாது பகவான் அவர்களை நோக்கி 'நான் சீக்கிரத்தில் குழந்தையாகி விடுவேன். என்னை எடுத்துச் சென்று, யமுனையாறு கடந்து அக்கரையிலிருக்கும் நந்தகோப கிரஹத்தில் சென்று, பிரஸவித்திருக்கும் யசோதை யருகில் விட்டுவிட்டு அங்கிருக்கும் பெண் சிசுவை இங்கு எடுத்துவந்துவிடுங்கள். நீங்கள் செய்யும் காரியம் ஒருவருக்கும் தெரியாதிருக்கும். கதவு, ஆறு முதலியன தாமே உமக்கு அனுகூலமாக இருக்கும்' என்று சொல்லிக் குழந்தையானார்.

வஸுதேவர் தேவகியைத் தேற்றிவிட்டு காலதாமதம் செய்யாது கதவைத் தொட்டார். கதவு திறந்தது. வெளியே வந்தார். காவலாளர்கள் முதலியோர் உறங்குவதைக் கண்டார். பகவனது திருவிளையாடலைக் கண்டு வியந்தார். அப்பொழுது மழைத்தூற்றல் விழுந்துகொண்டிருந்தன. யமுனை வந்து அங்கு ஏற்பட்ட வழிமூலமாக நந்தகோபர் வீடுசென்று, எல்லோரும் தூங்கிக்கொண்டிருந்ததால் ஒருவருக்கும் தெரியாது தமது குழந்தையை விட்டுவிட்டு யோகமாயையை எடுத்துக்கொண்டு தமது சிறைச்சாலை வந்தார். கதவுகள் சாத்தியவுடன் முன்போலப் பூட்டிக்கொண்டன. விலங்குகள் காலில் வைக்கப்பட்டஉடன் முன்போல் சேர்ந்துகொண்டன. அந்த ஸமயத்தில் நிச்சப்தமான இரவில் ஓர் கழுதை கத்தியதாம், பெண்சிசுவும் கத்தியதாம். திடுக்கிட்டு எல்லோரும் எழுந்து, தேவகீ தேவிக்குப் பெண்பிறந்த விஷயத்தைக் கம்ஸனுக்குத் தெரிவித்தனர். பின்பு கம்ஸன்செய்த விஷயங்களை நாம் இங்கு விவரிக்கவேண்டியது அனாவசியம்.

இவ்வாறு தோன்றிய பரமாத்மா தமது வாழ்நாள் முழுவதையும், வாழ்க்கையின் நோக்கம் ஸம்ஸாரத்திலிருந்து மனிதன் விடுபடும் விதம், உலகவிஷயங்களின் ஸ்வரூபம் ஆகிய இவைகளையே அநேகவிதமாக ஓயாது நம்போலிய ருக்கு நேராகவும் தமது நடத்தைகள் மூலமாகவும் போதித்துக்கொண்டேயிருந்தார். இவரை உள்ளபடி உணர்வது மிகக்கஷ்டம். இவர் செய்துள்ள லீலைமுதலியவைகள் அநேகவிதமாகவும் அநேக விரோத அம்சங்களை உடையன போலவும் மேலெழுந்தவாரியாகப் பார்ப்போருக்குத் தோன்றும். உற்று:நோக்குவோருக்கு மாத்திரமே இவர் முற்கூறிய அரிய விஷயங்களைத் தமது வாழ்க்கையில் காட்டுவது நன்கு விளங்கும். ஒரு மஹான் கிருஷ்ணபரமாத்மாவின் வைபவங்களைப் பின்வருமாறு எடுத்துக்கூறியுள்ளார். 'பிரபஞ்சமாகிய நாடகத்தில் இருக்கும் வெளிப்படையான விரோதாம்சங்கள் தோஷங்கள் முதலியவற்றையும் விடாது நடித்து யாரும் மறவாத வண்ணம்காட்டி, அவைகளின் பின் தாமே கபடநாடக ஸூத்ரதாரியாக விருப்பதை வெளிப்படுத்தியவராயும், தாமே தஸ்கராணும் பதியாக (கள்வர் தலைவஞக) இருப்பவராயும், பிரேமை கருணை முதலியவைகளுக்கு நிலயமாக விருந்தபோதிலும் தாமே ஸகல விரோதம் சண்டை, முதலியவைகளுக்கு இவ்வாறு காரணமாக இருப்பது என்பதை வெளியிடுபவராயும், ஸகல வேதாந்தங்களையும் வெளிப்படுத்தும் திறனுடையவராயும், ஸகலஸ்திரீகளும் மிகுந்த ஆனந்தத்துடன் கூறத்தக்கதாய் உள்ள பால்யலீலைகளை உடைய அற்புதக்குழந்தையாயும், உபநிஷத்துக்கள் வெளியிடும் அற்புதவிஷயங்களைவிட அத்யத்புத விஷயங்களைத் தெரிவிக்கும் சேஷ்டைகளைக் கோபிகள், ராதை முதலியவர்களோடு செய்த அற்புத புருஷனுயும், உலகத்தையே நிலை

நிறுத்தும்படியான சட்டங்களை வெளிப்படுத்திய அமைச்சராயும், ஸந்நிதான மாத்திரத்தில் எல்லா விஷயங்களையும் நியாயப்படி நடக்கும்படி செய்யும் அற்புத வீரராயும், உலகத்தில் உள்ள ஸகலவேதங்களது ஸாரத்தையும் சுருக்கமாகக் கொஞ்ச நாழிகையில் எடுத்துரைத்த பரம குருவாகியும், 60,000 ஸ்திரீகளோடு கூடியிருக்கும் நித்ய பிரம்மசாரியாயும், நாரதரை ஒரு நொடிப்பொழுதில் மாயையில் கட்டுப்பட்டுத் தவிக்கும்படி செய்த தந்திரமான ஸ்நேஹிதராயும், ஸதா வேணுகானம், நடனம், விளையாட்டு ஆகிய இவைகளை நிச்சிந்தையாகச் செய்துகொண்டிருக்கும் கோபாலனும் கற்பனாரஸம், ஸம்பவ விசித்திரங்கள், ஆழ்ந்த உட்கருத்துக்கள் ஆகிய இவைகள் விஷயத்தில் தனக்குத் தானே நிகர் என்று சொல்லும்படியான திவ்ய சரித்திரத்தை உடையவராயும், பூரணாவதாரமாயும் உள்ள கிருஷ்ண பரமாத்மாவைக் கடவுளெனக் கருதித் துதிக்காது இருப்பவரும் உண்டோ!' என்று வியந்து கூறியுள்ளார்.

இவ்வளவு சிறப்புடைய பகவத்கதையைக் கேட்டால் நமது மனதிற்கு என்ன தோற்றும்?

'பெரியவர் சரிதை நம்மைப் பெரியவ ராக்கி நாமே
அரியவாழ் நாளாம் பாலை வனத்திடை யலைவோ ருக்குத்
துரிசற வழியைக் காட்டும் சுவடுறச் செய்யும் வண்மை
மருவலாம் என்னும் எண்ணை மனங்கொளச் செய்யுமன்றே'
என்றார் ஓர் ஆங்கிலக் கவி.

இது மனிதரது சரித்திரத்தைப் பற்றிச்சொன்னது. இதை கிருஷ்ணபரமாத்மாவின் சரித்திரத்தோடு சேர்த்தால் பொருந்தாது. கிருஷ்ண பரமாத்மாவைப்போல நடக்க முயன்றோமாகில், நம்மால் ஒன்றும் செய்யமுடியாது என்ப

தோடுங்கூட நாம் வீணுகக் கெட்டுப்போய் ஒரு விஷயத்திற்கும் பயன்படாமல் போய்விடுவோம். ஆகவே இவரது சரித்திரத்தை நோக்கில் முன்னர் கூறியுள்ள மஹான் சொல்லுவதுபோல், உலக விஷயங்களில் விருப்பு வெறுப்பு முதலியவைகள் இன்றிப் பகவானது லீலா விபூதிகளில் ஈடுபட்டுப் பிரபஞ்சத்தையே மறந்து கொஞ்சகாலம் நிற்கும் படியான சக்தியை இவரது சரித்திரம் கொடுக்கின்றது என்பது தெரியவரும். இதுவே கிருஷ்ண பரமாத்மாவைப் போன்ற அவதார சரித்திரங்களால் நமக்கு ஏற்படும் நன்மை: இவைகள் ஸாதாரண பெரியோர்களது சரித்திரத்தைப்போல முற்றிலும் நாம் பின்பற்றக்கூடும் சரித்திரங்கள் அல்ல என்பதை அறிந்து இச்சரித்திரங்களைக் கண்டு வியந்து கடவுளது அவதாரதினங்களைக் கொண்டாடுவோமாகில் நாம் மேன்மை அடைவோம் என்பதற்கு ஐயமில்லை.

இனிமேல் கிருஷ்ணஜயந்தி விஷயமாக உள்ள புராண கதையில் அடங்கி இருக்கும் உட்கருத்துகளை எடுத்துக்காட்டுவோம். எப்பொழுதும் நிஷ்டை பழகிக்கொண்டு ஸதா பரம்பொருளோடு வாஸம்செய்யும் மனம் உடைய ஞானிக்கு இது வரையிலும் கூறியவை திருப்திகரமாக இருக்கமாட்டா, அவனுக்கு எல்லாவிஷயத்தையும் ஆத்மபரமாக ஸமங்வயப்படுத்திக்கொள்ளவேண்டிய ஆவலே இருக்கும். ஆகவே அவன் உக்ரஸேனனைக் கோபாதிவிருத்திகளுக்கு அதிபதி என்றும், கம்ஸனை ஜீவ அகங்காரமென்றும், அவன் தங்கை தேவகியை புத்தி என்றும், அவள் ஏழுபிள்ளைகளைச் சுத்தபுத்தி விருத்திகள் என்றும், கம்ஸன் அப்பிள்ளைகளைக் கொல்லுவதை அகங்காரம் சுத்தபுத்தி விருத்திகளை அடக்கிவிடுவது என்றும், கிருஷ்ண பரமாத்மாவை ஞானம் என்றும், பரமாத்மா உண்டானதும் விலங்கு தரித்துப்போனது, சிறைச்சாலைக்

கதவுகள் திறந்தது ஆகிய இவைகளை ஞானனுபவத்தால் பாசம் கழன்றுபோவது என்றும் கொண்டு கிருஷ்ணஜயந்தியன்று அவனும் ஆனந்திப்பான். இப்பொருள்கொண்டு ஆனந்திக்கும் ஞானிக்குக் கண்டவிடமெல்லாம் ஸதா பகவான் இருப்பதாகவும அஞ்ஞானிகளாகிய நம்மிடம் சிற்சில ஸமயங்களில் கிருஷ்ணன் தோன்றுவதாகவும் காணப்படும். உதாரணமாக, ஏதாவது ஓர் வீட்டில் துக்கம் இருப்பதையும் அங்கு யாராவது ஒருவர் வந்து நல்ல விஷயங்களைக் கூறித் தேற்ற வீட்டோர் தேறி இருப்பதையும் கண்டவுடன் அங்கு பாலகிருஷ்ணன் பிறந்ததாக எண்ணி அவன் மகிழுவான்.

இந்த நோன்பன்றையதினம் கிருஷ்ணன் பிறந்த நாழிகைவரையில் விழித்திருப்பதின் கருத்து என்னவெனில், கம்ஸன் அவன் காவலாளர்கள் முதலியோர் ஸமயத்தில் தூங்கியதால் பகவத் தர்சனம் இழந்தார்கள். அதுபோல நாமும் தூங்கி ஏமாறாது விழித்து இருக்கவேண்டும் என்பதே. ஞானியோ இதைத் துரிய ஜாக்கிரதை (அதாவது நிஷ்டையில் ஞாபகத்துடன் பகவானை மறவாதிருத்தல்) எனக்கொண்டு, பகவானை மறந்தால் ஏமாந்து விஷயத்தில் சிக்கிக் கொள்ளவேண்டியதுதான் என்று கொண்டு இந் நோன்பில் விழித்திருக்கவேண்டும் என்று நன்றாக நமது பெரியோர்கள் ஏற்படுத்தினார்கள் என்று மஹான்களை மெச்சிக்கொள்வான்.

மேலும் கிருஷ்ணன் லீலைகள் ஒவ்வொன்றிலும் இம் மாதிரி உட்கருத்துக்கள் அமைந்துகிடப்பதை, ஊகித்து அறிவோர் காணலாம். உதாரணமாக, கிருஷ்ணஜயந்தியன்று விஷ்ணுகோயில் அலங்காரமாகிய காளிங்க மர்த்த

னத்தை எடுத்துக்கொள்ளுவோம். காளிங்கனை ஐந்துதலை நாகம்மாகக் காட்டியிருக்கும். இதை பஞ்சேந்திரியமாகவும், இது இருக்கும் மடுவை விஷயமாகவும், கிருஷ்ண பரமாத்மாவை ஞானமாகவும், முதலில் பரமாத்மா மடுவில் விழுந்து கலக்குவது ஞானம் முதலிய விஷயத்தில் சிக்கிக்கொள்வதாகவும், பின்னர் பாம்பால் சுற்றப்படுவது, விஷயத்தில் அலையும் இந்திரியங்களால் ஞானம் பிடிபடுவதாகவும், பின்னர் பகவான் பாம்பின்மேல் ஏறி நர்த்தனம் செய்வது, ஞானம் ஓங்கி இந்திரியங்களை அடக்குவதாகவும், பாம்பு விஷம் கக்குவது விஷயானுபவம் செய்யும் சக்தியை இந்திரியங்கள் இழக்கும்படி செய்வதாகவும், காளிங்கனைக் கொல்லாது மடுவைவிட்டு ஓட்டிவிடுவது விஷயங்களிலிருந்து இந்திரியங்களைப் பிரிப்பதாகவும், பின்பு காளிங்கனை விஷயவிருத்தியற்று ஸத்விருத்தியோடு கூடி இருக்கும் இந்திரியங்களாகவும் கொண்டு மெய்மறந்து நிற்கலாம். கிருஷ்ணஜயந்தியன்று வரும் பகவானைக்கண்டு, இந்தமாதிரி ஒரு மஹான் காளிங்கமர்த்தனத்தின் உட்கருத்தைக் கூறுங்கால் 'விஷம் விஷமல்ல, விஷயமே விஷம். ஸம்ஸாரம் விஷ விருக்ஷம். ஏனெனில், விஷம் ஒரு தேகத்தைக்கொல்லும், விஷயமோ அநேக ஜன்மங்களை வ்யர்த்தமாக்கும், மேலும், விஷம் முற்றிய கொடிய பாம்பினிடம்தான் மாணிக்கம் இருக்கும், அதுபோல விஷயம் முற்றினுல்தான் அதன்பேரில் அருவருப்பு உண்டாக விஷயத்யாக இச்சை உண்டாகும் என்று மனனம்' செய்திருக்கிருர்.

இதுகாறும் கூறிவந்த ஞானநிலைதான் ஸகல நோன்புகளின் முடிவும். இப்படி இருப்பினும் இதை வெளிப்படையாகச் சொன்னுலும் நம்போன்ற பாமரர்களுக்கு எளிதில் விளங்காது. ஒருவேளை அவை பாபமான எண்ணங்கள்

என்று தோற்றினும் தோற்றும். ஆதலால் நம்பெரியோர் இந்த நோன்பை பாகவதக்கதையை ஒட்டி ஏற்படுத்தி நமக்கு முதலில் சுத்த மனதும் பக்தியும் உண்டாகும்படி தகுந்த ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர். இந்த நோக்கத்தை நன்கு உணர்ந்து இவ்விருதாதிகளை வீண்காலம் போக்கல் எனக் கருதாது இந்தக்காலங்களில் கூடியவரையில் ஸாதாரண வ்யவஹாரங்களிலிருந்து ஒதுங்கி ஸத்காலக்ஷேபாதிகளில் காலத்தை நாம் போக்கிவருவோமாயின், முன் எடுத்துக் காட்டியுள்ள ஞானியின் ஆனந்த நிலை நமக்கும் முடிவில் கைகூடும் என்பதற்கு என்ன ஸந்தேகம்!

ஓம் தத்ஸத்.

---

# அனுபந்தம் 8

## ஸம்ஸ்கிருத ச்லோகங்கள்.

### I एकश्लोकिभागवतम् ॥

आदौ देवकिदेविगर्भजननं गोपीगृहेवर्धनं
मायापूतनजीवितापहरणं गोवर्धनोद्धारणम् ।
कंसच्छेदन कौरवादिहननं कुन्तीसुतापालनं
एवं भागवतं पुराणकथितं श्रीकृष्णलीलामृतम् ॥

ஆதௌ தேவகிதேவிகர்ப்பஜனனம்
கோபீக்ருஹேவர்த்தனம்
மாயாபூதன ஜீவிதாபஹரணம்
கோவர்த்தனோத்தாரணம்
கம்ஸச்சேதன கௌரவாதிஹனனம்
குந்தீஸுதாபாலனம்
ஏவம் பாகவதம் புராணகதிதம்
ஸ்ரீக்ருஷ்ண லீலாம்ருதம்.

## பாகவதத் தனிப்பாட்டு.

மஞ்சனையான் தேவகிபால் தோன்றியதும்,
ஆயரில்லில் வளர்ந்த வாறும்
வஞ்சனையார் பூதனை தன் உயிர்கவர்வும்
மலைகுடையா வஹித்த வாறும்
கஞ்சனையா ருயிர்கொள்வும் கவுரவரைக்
கொல்விப்பும் கருதும் ஐவர்
எஞ்சலையா தாண்டதுமால் விளையாட்டாம்
பாகவதம் என்பர் மாதோ.

## II லீலாசுகர் சரித்திரம்.

குருஸ்துதி.

चिन्तामणिर्जयति सोमगिरिर्गुरुर्मे
शिक्षागुरुश्च भगवान्शिखिपिंछमौलिः ।
यत्पादकल्पतरुपल्लवशेखरेषु
लीलास्वयंवररसं लभतेजयश्रीः ॥

அனுபந்தம். 5. (1)

மனோதர்மம்.

शैवावयंनखलुतत्वविचारणीयं
पञ्चाक्षरीजपपरानितरांतथापि ।
चेतोमदीयमतसीकुसुमावभासं
स्मेराननंस्मरतिगोपवधूकिशोरम् ॥

அனுபந்தம். 5. (2)
அனுபந்தம். 6—(24)

முக்திநிலை.

सन्ध्यावन्दनभद्रमस्तुभवतेभोः स्नानतुभ्यंनमः
भोदेवाः पितरश्चतर्पणविधौनाहंक्षमः क्षम्यताम् ।
यत्रक्कापिनिषीद्ययादवकुलोत्तंसस्यकंसद्विषः
स्मारंस्मारमघंहरामितदलं मन्येकिमन्येनमे ॥

அனுபந்தம். 5. (9)

## III கிருஷ்ணகர்ணாமிருதத் திரட்டு.

मातः! किं· यदुनाथ? देहिचषकं· किंतेन पातुंपयः
तन्नास्त्यद्यकदास्तिवानिशिनिशाकावान्धकारोदये ।
आमील्याक्षियुगंनिशाप्युपगतादेहीतिमातुर्मुहुः
वक्षोजांशुककर्षणोद्यतकरः कृष्णः सपुष्णातुनः ॥

அனுபந்தம். 5. (3)

कस्त्वं बालबलानुजः किमिहतेमन्मन्दिराशंकया
युक्तंतन्नवनीतपात्रविवरेहस्तं किमर्थंन्यसेः ।

मातः कञ्चनवत्सकंमृगयितुं मागाविषादंक्षणात्
इत्येवंवरवल्लवीप्रतिवचः कृष्णस्यपुष्णातुनः ॥

அனுபந்தம். 5. (4)

अपिजनुषिपरस्मिन् आत्तपुण्योभवेयं
तटभुवियमुनायाः तादृशोवंशनालः ।
अनुभवतियएषः श्रीमदाभीरसूनोः
अधरमणिसमीपन्यासधन्यामवस्थाम् ॥

அனுபந்தம். 5. (5)

कृष्णेनांबगतेनरंतुमधुनामृद्भक्षितास्वेच्छया
तथ्यंकृष्णकएवमाहमुसलीमिथ्यांबपश्याननम् ।
व्यादेहीतिविदारितेशिशुमुखेदृष्ट्वासमस्तंजगत्
मातायस्यजगामविस्मयपदंपायात् सनः केशवः ॥

அனுபந்தம். 5. (6)

लोकानुन्मदयन् श्रुतीर्मुखरयन् क्षोणीरुहान्हर्षयन्
शैलान्विद्रवयन् मृगान्विवशयन् गोबृन्दमानन्दयन् ।
गोपान्सम्भ्रमयन् मुनीन्मुकुलयन् सप्तस्वरान् जृंभयन्
ओंकारार्थमुदीरयन् विजयतेवंशीनिनादः शिशोः ॥

அனுபந்தம். 5. (7)

वरमिदमुपदेशमाद्रियध्वं
निगमवनेषुनितान्तचारखिन्नाः ।
विचिनुतभवनेषुवल्लवीनां
उपनिषदर्थमुलूखलेनिबद्धम् ॥

அனுபந்தம். 5. (8)

## IV மூர்த்தி ஸமரஸம்

जनार्दनेवा जगतामधीश्वरे
महेश्वरेवा जगदन्तकारिणि ।
नवस्तुभेदप्रतिपत्तिरस्तिमे
तथापि भक्तिः तरुणेन्दुशेखरे ॥

அனுபந்தம் 5—(23)

Printed by V. Ramaswamy Sastrulu & Sons, at the 'Vavilla' Press, Madras.

# தமிழ் நூல்கள்

### சதகங்கள் (குறிப்புரையுடன்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குமரேச சதகம் | ... | ... | 0 | 5 | 0 |
| கோவிந்த சதகம் | ... | ... | 0 | 2 | 0 |
| அறப்பளீசுர சதகம் | ... | ... | 0 | 5 | 0 |
| திருவேங்கட சதகம் | ... | ... | 0 | 5 | 0 |
| தண்டலையார் சதகம் | ... | ... | 0 | 3 | 0 |

### பாராயண நூல்கள் (குறிப்புரையுடன்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கந்தர் கலிவெண்பா | ... | ... | 0 | 1 | 6 |
| சரஸ்வதி அந்தா | ... | ... | 0 | 1 | 6 |
| அபிராமி அந்தாதி | ... | ... | 0 | 1 | 6 |
| கந்தரனுபூதி | ... | ... | 0 | 1 | 6 |
| திருமுருகாற்றுப்படை | ... | ... | 0 | 2 | 0 |
| நால்வர்நான்மணிமாலை | ... | ... | 0 | 1 | 6 |
| விநாயகர் அகவல் | ... | ... | 0 | 1 | 0 |
| இலக்குமி தோத்திரம் | ... | ... | 0 | 1 | 0 |
| ஆனந்தலகரி | ... | ... | 0 | 1 | 6 |
| சௌந்தரியலகரி | ... | ... | 0 | 1 | 6 |

### நீதிநூல்கள் (குறிப்புரையுடன்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திருக்குறள் | ... | .... | 0 | 8 | 0 |
| நாலடியார் | ... | ... | 0 | 6 | 0 |
| நீதிநெறிவிளக்கம் | ... | ... | 0 | 1 | 0 |
| ஆசாரக்கோவை | .... | ... | 0 | 2 | 6 |

### நீதிநூல்கள் (பதவுரையுடன்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வாக்குண்டாம் | .... | ... | 0 | 1 | 0 |
| கொன்றைவேந்தன் | ... | ... | 0 | 1 | 6 |
| வெற்றிவேற்கை | ... | ... | 0 | 1 | 6 |

| | | | |
|---|---|---|---|
| நல்வழி ... ... ... | 0 | 1 | 6 |
| நன்னெறி ... ... | 0 | 1 | 6 |
| விநோதரசமஞ்சரி ... ... | 0 | 8 | 0 |
| பரமார்த்த குரு கதை ... ... | 0 | 4 | 0 |
| சாவித்திரி சரித்திரம் ... ... | 0 | 6 | 0 |
| பஞ்சதந்திரம் ... ... | 0 | 8 | 0 |

(வரகவி திரு. அ. சுப்ரமண்ய பாரதியார் இயற்றியது.)

| | | | |
|---|---|---|---|
| இராமாயண இரகசியம் ... ... | 0 | 12 | 0 |
| ஸ்ரீராமச்சந்திரன்—நல்ல பிள்ளை ... | 0 | 2 | 6 |
| பரதன்—நல்ல தம்பி ... .... | 0 | 3 | 0 |
| ஸீதாதேவி—நல்ல மனைவி ... | 0 | 4 | 0 |
| குகன்—சிறந்த நண்பன் ... | 0 | 2 | 6 |
| மாருதி—நல்ல அடிமை ... | 0 | 2 | 6 |
| விபீஷணன்—சிறந்த பக்தன் ... | 0 | 1 | 6 |
| சகுந்தலா .... | 0 | 2 | 0 |
| யயாதி .... | 0 | 5 | 0 |
| நளச்சக்கரவர்த்தி ... | 0 | 4 | 0 |
| துளசிதாசர் ... | 0 | 5 | 0 |

நாவல்கள்.

| | | | |
|---|---|---|---|
| இராஜரிஷி (மொழி பெயர்ப்பு) ... | 1 | 4 | 0 |
| ராவெங்கார் ... ... | 1 | 9 | 0 |
| மகாதேவன், ஒரு இனிய நாவல் ... | 0 | 10 | 0 |
| ஹநுமப்ரபாவம் ... ... | 0 | 3 | 0 |
| ராமநாதன் ... ... | 0 | 2 | 0 |
| பாரதவசனம் ஆதிபர்வம் ... | 3 | 8 | 0 |
| ஷை ஸபாபர்வம், ஆரண்ய பர்வம், விராடபர்வம் ஆகிய மூன்று பர்வங்களும் அடங்கியது. ... | 5 | 0 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| பாலவிநோதினி 9, 10, 11, வால்யூம்கள் கிடைக்கும். ஒவ்வொரு வால்யூமும் விலை ரூ. | .... | 2 | 0 | 0 |
| கந்தனூர் (ஓர் இனிய தமிழ் நாடகம்) | ... | 0 | 10 | 0 |

## தமிழ் சட்டம்.

இந்தியன் பினல் கோட் என்கிற இந்தியா தேசத்து சிக்ஷை ஆக்ட். (1860-ம் வருஷத்து 45-வது ஆக்ட்)
விலை ரூபா ... ... ... 2—8—0

இது 1927-ம்வருஷ வரையில் திருத்தப்பட்டு லா ரிபோர்ட்களாகிய மதராஸ், பம்பாய், கல்கத்தா, அலஹாபாத், வீக்லீ ரிபோர்ட்ஸ் முதலிய சகல லா ரிபோர்ட்ஸ்களும், வியர்ஸ் (Wiers) கிரிமினல் ரூலிங்கஸ்களும், விலக்கு விவரணங்களும, நோட்ஸ் (Notes) முதலிய விவரமான அர்த்தங்களுடன் பிரிவுகளின் அடியில் சேர்த்து, ரத்தான பாகங்களையும் திருத்தப்பட்ட பாகங்களையும் குறித்த சூசிகை (அட்டவணை) யுடன் அச்சிட்டிருக்கிறது. இது சகல ஜனங்களுக்கும் ஷை குற்ற விவரங்களை அறிய மிகவும் உபயோகமுள்ளது.

கிராம முன்சீப் மணியகாரர் ஸ்பேஷல் டெஸ்ட் பரீக்ஷை வினாவிடை:—புதிய பதிப்பு 1927வருஷ வரையில் ஷை உத்தியோகஸ்தர்களை பரீக்ஷித்த சிலவில், கிருமினல் ரிவினியூ, முதலிய கேள்விகளை இரண்டு பாகங்களாகப் பிரித்து முதல் பாகத்தில் ஷை உத்தியோகஸ்தர்களின் அதிகாரங்களையும் அலுவல்களையும், இரண்டாம் பாகத்தில் சுகாதாரமும், இவ்விரண்டும் ஒன்றாகச் சேர்த்து ஷை விடைகளுக்கு ஆதாரமாக ஸ்டான்டிங் ஆர்டர் போர்ட் புரொசீடிங்க்ஸ்

ஹைகோர்ட் கவர்ன்மெண்ட் உத்தரவுகள் முதலிய இதரமான ஆக்ட்களும் லா ரிபோர்டுகளும் சேர்த்து அச்சிட்டிருக்கிறது. இது பரீக்ஷைக்கு ரொம்ப உபயோகமுள்ளது. இதில் கண்ட கேள்விகளே அனேகமாக வரக்கூடும்; காபிகள் கொஞ்சமாக அச்சிடுகிறபடியால் தேவையான காபிகளுக்கு உடனே எழுதிக் கொள்ளவும். விலை ரூ. 2 0 0

## வ. உ. சிதம்பரம் பிள்ளை நூல்

**மணம்போல வாழ்வு**—இஃது இம்மை இன்பத்தையும் மறுமையின்பத்தையும் அடைவதற்குரிய நெறிகளை மிகத் தெளிவாகக் கூறுகின்ற ஓர் அரிய நூல். இப்பதிப்பு நன்கு சீர்திருத்தப்பெற்றும் ஜேம்ஸ் ஆலன் சரித்திரம் சேர்க்கப்பெற்றுமுள்ளது.

இதன் விலை அணா 8.

**அகமே புறம்**—இஃது இகத்திலும் பரத்திலும் மேலான நிலைகளை அடைவதற்குரிய மார்க்கங்களை வரிசைப்படுத்தி மிக இனிமையாகக் கூறுவது. இப்பதிப்பு நன்கு அழகுபடுத்தப் பெற்றும், ஜேம்ஸ் ஆலன் சரித்திரம் சேர்க்கப்பெற்றுமுள்ளது.

இதன் விலை அணா 8.

**வலிமைக்கு மார்க்கம்**—இது மிக எளிய நிலைமையை எய்தியுள்ளோர் மிக வலிய நிலைமையை எய்துதற்குரிய வழிகளை யாவரும் எளிதில் கைக்கொள்ளத் தக்கவாறு தெளிவாகவும் விரிவாகவும் இனிய தமிழ் நடையில் எழுதப்பெற்றது.

இதன் விலை அணா 0 12 0

**மெய்யறிவு**—இஃது அறம், பொருள், இன்பம். வீடு என்னும் நான்கையும், அவற்றை அடையும் வழி

களையும் பல உவமானங்களோடு மிக்ச் சுருக்கமாகவும் மிக விளக்கமாகவும் கூறுவது; பலதேசத்து நீதிநூல்களின் சாரம் எனத்தக்கது.

இதன் விலை அணா 0 12 0

மெய்யறம்—இது திருவள்ளுவர் திருக்குறளுக்கு வழிநூல்; மாணவவியல், இல்வாழ்வியல், அரசியல் அந்தணவியல், மெய்யியல் என்னும் ஐந்து இயல்களால் புருஷார்த்தம் நான்கையும் தற்கால இயல்புக்குத் தக்க வேறுபாடுகளோடு கூறுவது.

இதன் விலை அணா 0 8 0

வள்ளியம்மை சரித்திரம்—அரும்பதவுரையுடன் இஃது எனது முதல்மனைவியின் சரித்திரம்; ஸ்திரீ புருஷர்கள் தத்தம் வாழ்க்கைத்துணையாரிடத்தும் உற்றாரிடத்தும் மற்றாரிடத்தும் அநுசரிக்கவேண்டிய முறைகளை யெல்லாம் நன்கு அறிவதற்கு ஒரு வாயிலாகும். இதன் விலை அணா 0 8 0

இன்னிலை—மூலமும் உரையும். இது பதினென் கீழ்க்கணக்கில் ஒன்று; பொய்கையாழ்வாரால் இயற்றப்பெற்றது; அறப்பால், பொருட்பால், இன்பப்பால், வீட்டுப்பால் என்னும் நான்கு பகுதிகளையுடையது, பல உரையாசிரியர்களால் எடுத்தாளப்பெற்றது.

இதன் விலை அணா 0 12 0

தொல்காப்பியம்—இளம்பூரணம். இவ்வுரை தொல்காப்பியவுரைகள் ஐந்துனுள்ளும் முதலாவது; ஆசிரியர் கருத்துக்களை அழகுற விளக்குவது. இவ்வுரையாசிரியர் "இளம்பூரண அடிகள்" என்றும் "உரையாசிரியர்" என்றும் சிறப்பித்துக் கூறப்பெற்றவர்.

எழுத்ததிகாரம் ரூபா 1 8 0

பொருளதிகாரம்-அகத்திணையியல்
புறத்திணையியல் ரூபா 1 0 0

# மிகவும் அருமையான புத்தகங்கள்

## ராமாயண வினவிடை.

இதில் ராமாயண கதையின் ஏழுகாண்ட ஸாரமும் சந்தேக முண்டாகக் கூடிய நிலைமைகளுள்ள விடத்து ஆக்ஷேப ஸமாதானங்களுடன் தீர்ந்த விசாரமும், நீதிகள் போதிக்கக்கூடிய விடத்துப் படிப்பினைகளும் காட்டி இயற்றப்பட்ட ஓர் இனிய நூல். சிறுவர் சிறுமிகளும் அறியுமாறு எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டிருப்பதுமன்றி, பெரியோரது மனதையும் களிப்பிக்குமாறு, அத்யாத்ம ராமாயணத்திலும், ஆனந்த ராமாயணத்திலும், கண்ட உட்பொருளும், அநுபந்தமாக இப்புத்தகத்திற்குச் சேர்க்கப்பட்டுள்ளது. தமிழில் கம்பனெழுதிய கதைக்கும், வடமொழியில்வால்மீகி எழுதிய கதைக்குமுள்ள வேறுபாடுகள் மற்றோர் அநுபந்தமாக அமைக்கப்பட்டிருக்கிறது. இப்புத்தகம் பல பாடசாலைகளில் பாடபுத்தகமாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. யாவராலும் நன்கு மதிக்கப்படுகிறது. நமது புத்தகத்திற்கென்றே இதுவரையிலும் கண்டிராத புதிய சித்திரபடங்களுடன் ஒவ்வொரு காண்டமும் விளக்கப்பட்டிருக்கிறது. இது ம-ா-ா-ஸ்ரீ ஆ. ஸி. கஸ்தூரிரங்க ஐயர், பீ.ஏ., எல்.டி., அவர்களால் இயற்றப்பட்டது. இப்பதிப்பில் சேர்ந்திருக்கும் படங்கள்:—1. ஸ்ரீராமர் பட்டாபிஷேகம், 2. வால்மீகி ரிஷி வேடனைச்சபிக்க, ராமாயணம் பிறந்தது. 3. ஸீதா கல்யாணம். 4. குஹன், ராமர் முதலியோருக்கு ஓடம் விடுதல். 6. சபரி ராமருக்குப் பழங்கொடுத்துப் பரம பதம் பெற்றது. 6. ராமரும் ஸுக்ரீவனும் அக்னி சாக்ஷியாக ஸ்நேகம் செய்துகொள்வது. 7. ஹநுமார் பக்தி ப்ரபாவத்தால் கடலைத் தாண்டுதல். 8. ஹநுமார் பக்தி பரவசத்தால் சஞ்சீவி பர்வதம் கொண்டுவருதல்.

9. ஸீதை அசுவமேத மஹாமண்டபத்தில் தனது கற்பை நிலைநிறுத்த பூப்பிரவேசம் செய்தல். இப்புத்தகத்தின் விலையும் குறைத்தே வைத்திருக்கிறது. இது துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப் பெற்றது.

விலை ரூபா 1—8—0

## மஹாபாரத வினவிடை (1-ம் பாகம்)

**ஆதி, ஸபா, ஆரண்ய, விராட, உத்யோக, பர்வங்களடங்கியது.**

வேதவியாசர் எழுதிய இதிகாசத்தின் முதலைந்து பருவங்களின் விஷயங்களை வினவிடை ரூபமாக அமைக்கப்பட்டது. யக்ஷப்பிரச்னம் முதலிய உயர்ந்த விஷயங்கள் அடங்கியது. கதை சுலபமான எளிய தமிழ் நடையில் யாவராலும் அறியும் வண்ணம் எழுதப்பட்டுள்ளது. கௌரவ பாண்டவர் யுத்த ஸந்நத்தமாகும் வரையுள்ள கதை முழுவதும் இதனுள் எழுதப்பட்டு, பல பாடசாலைகளில் பாடபுத்தகமாக ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பொய்யாசனமிட்ட படம் இதற்குத் தலைப்பில் சேர்க்கப்பட்டதன்றித் தமிழ்ப் பாரதத்திற்கும் வியாஸ பாரதத்திற்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை அனுபந்தமாகக் கூட்டப்பட்டிருக்கிறது. மிகவும் அழகிய 6 சிறந்த படங்களுடன் கூடியது.

(புதிய பதிப்பு அச்சில்) விலை ரூபா 1—0—0

## மஹாபாரத வினவிடை (2-ம் பாகம்)

பீஷ்ம, துரோண, கர்ண, சல்லிய, ஸௌப்திக, ஸ்திரீ, பர்வங்களடங்கியது.

இதில் யுத்தத்திற்காரம்பமானது முதல் யுத்த முடிவு வரையிலுள்ள கதை அடங்கியுள்ளது. முதலில் ஸ்ரீ. வாஸுதேவன் அர்ஜுனனுக்கு உபதேசித்த

கீதாசாஸ்திரம் விளக்கமாக சந்தேகமற எழுதப்பட்டிருக்கிறது. தமிழ்ப் பாரதத்திற்கும் வடமொழி கிரந்தத்திற்குமுள்ள வேறுபாடுகள் அனுபந்தமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. விலை ரூபா 1—0—0

## மஹாபாரத வினவிடை (3-ம் பாகம்)

இதில் சாந்தி, அநுஸான அஸ்வமேத, ஆஸ்ரம, வாஸிக, மௌஸல, மஹாபிரஸ்தான, ஸ்வர்க்காரோஹண, பர்வங்களடங்கி யுள்ளன. இராஜ தர்மம், ஆபத் தர்மம், மோக்ஷதர்மம் என்னும் மூவகைத் தர்மங்கள் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. ஸ்ரீ. கிருஷ்ணபகவானால் அர்ஜுனனுக்குக் கூறப்பட்டதும், பகவத் கீதையின் சாரமாயுள்ளதும், 36 அத்தியாயங்களை யுடையதும் இரண்டு பிராம்மணர் ஸம்வாதம், பிராமணஸ்திரீ, புருஷ் ஸம்வாதம், குருசிஷ்ய ஸம்வாதம் என்னும் மூன்று ஸம்வாதமாக உள்ளதுமான அநுகீதையை அனைவருமறியஇனிய நடையில் எழுதப்பட்டுள்ளது. இந்நூலுக்கு அனுபந்தமாக நூற் கருத்துகளும் உள்ளுரைகளும சேர்க்கப்பட்டுள்ளது. விலை ரூபா 1—0—0

## ஸ்ரீமத் பாகவத வினவிடை ரூ. 2.

## கிரிஸெல்டா

இப்புத்தகம் பெண்பாலர் அவசியம் வாசிக்க வேண்டிய புத்தகங்களி லொன்று. இப்புத்தகத்தில் ஒரு பெண் தன் கணவனிடம் நடந்து கொண்டவிதம், சிலாகிக்கத்தக்க மாதிரியை விளக்கிக் காட்டி யிருக்கிறது. படிக்கப் படிக்க உத்ஸாகத்தைக் கொடுக்கக் கூடியது. விலை அணு 4.

## ஜகஜ்ஜோதி

இது மொகலாய சக்கிரவர்த்திகளுக்குள் ஒருவரான ஜிஹாங்கீர் என்பவருக்குப் பிரிய நாயகியந்தருாயி

நூர்ஜஹான் என்னும் ஸ்திரீயின் சாமார்த்தியத்தையும் ஸாகஸ செய்கைகளைப்பற்றியும் கூறுவது. அனைவரும் தனக்கு அடங்கி நடக்கவேண்டு மென்று அவள் செய்த முயர்ச்சி எல்லாம் அவளுடைய பேதமைக்குணத்தை வெளிப்படுத்துகின்றன. அவள் தனது முதல் புருஷ னிடத்தில் அத்தியந்த அன்புபாராட்டி வந்ததையும் அவன் இறந்தவுடன் ஜிஹாங்கீரினுடைய சதியோசனை யினாலேயே தனது கணவன் இறந்தானென்று அவள் அறிந்திருந்தும் ஜிஹாங்கீர் வார்த்தைக்குடன்பட்டு அவனை மணந்ததையும், பின்னர் அவள் செய்த அட்ட காசத்தையும் இறுதி காலத்தில் அவள் செய்த த்யான காலக்ஷேபத்தையும் நன்கு எழுதப்பட்டது. இன்னும் தெய்வபக்தி, குருபக்தி, தாய் தந்தையர் வழிபாடு, மாதர் ஆடவர் ஒழுக்கம், விருந்தோம்பல், நட்பின்குணம், அறிவின் மேன்மை, கலகக்கேடு, யஜமான் விசுவாசம், நல்லதிகாரிகளின் இயல்பு, பொறுமைக்கேடு, துன்பந் துடைக்கும்வழி, வீரத்தன்மை, முயற்சியின்மேன்மை, சாந்தகுணச்சிறப்பு முதலிய அரிய விஷயங்களும் ஆங் காங்கு விரவிக் கிடைக்கும்.

விலை அணா 0—8—0

## பீமலா அல்லது திவான் மகள்

ஆர். பி. குழந்தைசாமிப் பிள்ளை, பி. ஏ., எல். டி. அவர்கள் இயற்றியது.

இஃது வெகு இன்பமான எளியநடையில் எழு தியுள்ள தமிழ்நாவல். வாசிப்பவர் மனங்களிக்கச் செய் யும்படியானதும், புத்தி புகட்டும்படியானதுமா யிருக் கிறது. பல வேலைகளால் அயர்ச்சி யடைந்தவர்க்கு 'பீமலா அவ்வயர்ச்சியைப் போக்கி மகிழ்ச்சியை ஆக்கு மென்பதில் ஐயமில்லை. மகாசீதையின் தோன்பும்

சதிசந்திரனின் சதியோசனைகளும், பீமலா என்னும் திவான்மகளின் அதிசய நற்குணங்களும், தோடர்மாலின் நீதி முறைமையும் வெகு அலங்காரமாய் எடுத்து எழுதப் பெற்றிருக்கின்றன. பீமலா தன் தந்தையை ரக்ஷிப்பதும், வேஷம் மாறி தன் சிநேகிதன் தப்பியோட வழி செய்வதும் வாசிக்க வாசிக்க மனத்தைக் கவரும். சாரலாவின் கலியாண வைபவமும் தங்க மோதிரத்தின் பெருமையையும் படித்தறிந்தால் தான் தெரியும். இது வங்காளி பாஷையில் கனந்தங்கிய ரோமேச் சந்திர தத்தர் இயற்றிய நவீனத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு. மிகவும் அருமையான காகிதத்தில் அச்சிடப் பட்டிருக்கிறது. விலை அணா 0—8—0

## சற்குண சந்திரன்

இஃது ஒரு தமிழ்க் கதை. ஆரம்பத்தில் கதாநாயகன் படும் துயர்களும், பிறகு பரமஹம்ஸராகிய பரமானந்தர் அருளால் ஒரு பொற்கொடியை மனைவியாகப் பெற்று தனது தேசநன்மையின் பொருட்டு அப்பெண்மணியையும் பிரிந்து சற்குருநாதரைத் தேடிச்செல்லுகையில் கழுவேற்றப்படுதலும், அம்பிகை அருளால் அவன் ரக்ஷிக்கப்படுவதும், பிறகு சற்குண சந்திரனை நாதனு யடைந்த அம்புஜாக்ஷியை பாவி நாகபூஷணன் ஆகாய விமானத்தில் களவுகொண்டேகிய பின்னர், ஓர் அற்புத யுக்தியால் அப்பாதகனை நட்டாற்றில் விட்டு விமானத்தைப் பற்றிக்கொண்டு நடுநிசியில் கங்காதீரத்தில் தன்னந்தனியனாய்த் நின்றாற்றி நதியில் வீழ்ந்து பிராணனைவிடத் துணிந்திருந்த தன் ஆருயிர் நாதனைத் தற்கொலை புரிய வொட்டாது தடுக்க அப்பெண்ணரசி அவ்விடம் சேர்தலும், கிளியெனமிழற்றும் தன்னமிருத மொழிகளால் அவன் செயலைநிறுத்தி அவன் நாடு நகர் காடு மலை வனாந்தரங் களிலெல்லாம் தேடித்திரிந்

தும் காணக்கிடையாத ஒரு வஸ்துவைத் தான் கண்டதாக அதின் மகிமையினால் அவன் முன்னிழந்த தந்தை தாய் ராஜ்யம் முதலிய ஆதிஸர்வ ஸம்பத்துகளை மீண்டும் அடைதலும் படிக்கப் படிக்க பேரானந்தம் கொடுக்கும். நற்குல மாதர் போற்றுந் தெய்வம் அவர் தம் கணவரே. சற்குணம் புதல்வர் தொழுந் தெய்வம் அவருடைய தந்தை தாய். அறநெறி பற்றி யொழுகுபவர்க்குத் தெய்வம் குருவடிகளே. மற்றனையோர்க்கும் தெய்வம் அரசாளும் வேந்தனே என்னும் இவ்வுண்மைகள் இதைப் படிப்போர்க்கு நன்ருய் விளங்கும்.

விலை அணு 10

## LESSONS FROM GEOLOGY

IN TAMIL

BY MR. M. R. SUBRAHMANYAM, B. A.

## பூதத்வ போதினி

நாமிருக்கும் பூமியின் தத்துவங்களை அறியாதிருப்பது பெரும் பேதமை யன்ருே? பூமியின் தத்துவங்களைச் சரியாக அறியவேண்டுமாயின் மிஸ்டர். சுப்பிரமணிய ஐயரவர்களால் இனிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டு 30 பட்டங்களால் நன்ருக விளக்கப்பட்டிருக்கும் பூதத்வ போதினி என்னும் நூலினை வாங்கி வாசித்தறியவும். இதில் அருமையான விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. இப்புத்தகம் எலிமெண்டரி ஸ்கூல் மாணுக்கர்களுக்கும் உபாத்தியாயர்களுக்கும், உபயோகப்படும்படி எழுதப்பட்டிருக்கிறது.

விலை அணு 8.

## இராஜசேகரன்

இதில் "கடன்படா வாழ்வே ஆனந்த வாழ்வு" என்னும் கொள்கையின்படி ஒழுகுகின்றவர்களுக்கு

ஏற்படும் லாபகரமும், கதாநாயகன் துஷ்டர்களது சேர்க்கையினுல் செய்யும் அநீதங்களும், தன்னிஷ்டப் படி ஒரு டாம்பீக மாதை மணம் செய்துக் கொண்டு, அம்மாதால் மிதமிஞ்சின செலவு செய்து வறுமை யடைந்து செய்யத்தகாததைச் செய்தலும், அதனுல் சிறைவாச மடைவதும் நன்கு விளக்குகின்றது.

விலை அணு 2.

## சங்கநிதி அல்லது செல்வராஜன்

இப்பூவுலகின் கண் திரண்ட செல்வத்தையுடைய சீமான்களில் செல்வத்தாலாய நற்பயனைப் பெறும் புண்ணியசீலர் மிகச்சிலரே. செல்வத்தால் பெரும் பாலும் எல்லா அரிய காரியங்களும் நிறைவேறு கின்றன.

திரண்ட செல்வத்தையுடைய ஒருவன் சர்ச்சரர் களுக்குச் சகாயமும் துர்ச்சனர்களுக்குத் தகுந்த தண் டனையும் செய்யக்கூடு மென்பதும், எவ்வித பிரதி பலனையும் எதிர்பாராமல் பிறருக்கு அறிய உபகாரங் களைச் செய்யலாமென்பதும், தனக்குத் தீங்கிழைத்த வர்களுக்குப் பதில் தீங்கு செய்யத் தனக்கு சக்தி இருந்தும் அவர்களை மன்னித்துக் கருணை காட்டுவதே சிறந்த குணமென்பதும், அதிலும் தனக்குத் தீங்கி ழைத்தவர்களுக்கு உபகாரமே செய்தல் மகா உத்தம குண மென்பதும் இக்கதையால் நிரூபிக்கப்படுகிறது.

மேலும் துஷ்டனுகிய ஒருவன் எவ்வளவு யுக்திச் சாமர்த்தியம், செல்வம், பாவம் முதலியவைகளை யுடையவனேனும், முடிவில் எப்படியாவது பிடிக்கப் பட்டு அபகீர்த்தியும், தண்டனையும் அடைவானென் பதும், கற்புடைய உத்தம ஸ்திரீகளுக்கு எத்தகைய ஆபத்துகள் வரினும் தங்கள் நெறியினின்று பிசகமாட்

டார்களென்பதும், அவர்களுக்குக் கடவுள் எவ்வாறேனும், உதவி புரிவார் என்பதும் இன்னும் பல அரிய நீதிகளும் இதிற் காணலாம்.

இக்கதை வாசிப்பவர்களுக்கு மிக்க ஆச்சரியத்தையும் ஒருவித சந்தோஷத்தையும் தருவதோடு மனதிலுள்ள எவ்வகைப்பட்ட துயரத்தையும் நீக்கி அறிவிற்கு உணர்வைத் தரும்.

விலை ரூபா 1—0—0

## நளோபாக்யானம்

பண்டித நடேச சாஸ்திரியார் இயற்றியது.

இது ஓர் சிறந்த நீதிநூல். நளமஹாராஜன் கதையைக் கூறுவது. சூதாடலால் வரும் கேட்டை அறிவிப்பது. தமயந்தியின் மனோதிடத்தை தெரிவிப்பது. புத்திரர்மாட்டுள்ள அன்பை அறிவிப்பது. இவை முதலிய சிறந்த விஷயங்களைக் கொண்டதும் பாரதக்கதையின் பகுதியாயுள்ளதுமான இக்கதை இனிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டு உயர்ந்த கடிதத்தில் முத்திரிக்கப்பட்டும் நான்கு சித்திரப் படங்களுடன் பயிண்டு செய்யப்பட்டுள்ளது.

விலை ரூபா 0—12—0

## தமிழ்ப் பஞ்சதந்திரம்

மஹாவித்வான் தாண்டவராய முதலியார் இயற்றிய

அற்புத வசனம்

சிறுவர் பயில வசன நடையின் ஒழுங்கை யாவரும் எளிதில் அறிய, முதலியார் அவர்கள் இயற்றிய இந்தப் பஞ்சதந்திர வசனம் விஷயத்திற்கேற்றவாறு பகுக்கப்பட்டிருப்பதன்றி, கதையின் பெயரும், படிப்பினையும், பார்த்ததும் தெரியும்படியாகத் தடித்த எழுத்தில் அச்சிடப்பெற்றுள்ளது. புதையல் புதைய

லாகக் கதையிடையே பொதிந்து கிடக்கும் பழமொழி களும் அவ்வாறே அமைக்கப்பட்டுள்ளன. கதைகளின் சந்தர்ப்பமும், ஸாராம்சமும் அவற்றின் போக்கும் தெரியும்படியான அட்டவணையும் இருப்பதுடன் மூன்று அனுபந்தங்களும் உள்ளன. அவையாவன:— 1. பெயர் விளக்கம், 2. கதைக்குறிப்புகள், 3. அரும்பத விளக்கம்.

முதல் நான்கு தந்திரங்களும், ஸர்வகலா சங்கத் தின் பிரேரேபணைப் பிரகாரம் பதிக்கப்பட்டு, ஐந்தா வது தந்திரம் இயற்றமிழ் வழியில் அச்சிடப்பட்டுள் ளது. சிறுவர்கள், சிறுமிகள் யாவரும் எளிதில் அறியும்படியாக எவை எவை வேண்டுமோ, அவை யெல்லாம் அமைக்கப்பெற்றிருக்கின்றன.

விலை அணு 8.

## பிரபாவதி

இது வங்காளி பாஷையில் கனந்தங்கிய நரேந்திர நாதர்பட்டர்ஜீ அவர்கள் இயற்றிய நவீனத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு. கஷ்டம் கூலி தரும், முயற்சி திரு வினையாக்கும். நெடுங்காலங் கடந்த பின் நடக்கும் மணத்தினால் வரும் சுகம் முதலியவைகளைப்பற்றிய இனிய செந்தமிழ் நவீனம் ஸரஸமாக எவரையும் எடுத்தபின் கீழ்வைக்க முடியாமல் படிக்கும்படி செய் யும் திறமை யுள்ளது. விலை அணு 4.

## ஸ்திரீ ரத்னம்

வீரம், கற்பு, நெஞ்சுறுதி தன்னல மறுப்பு, தேசாபி மானம் இவைகளை நன்கு விளக்கி லார்டு லிட்டன் என்னும் பிரசித்த ஆங்கில நவீன கதாசிரியர், காவிய ரசம் தோய்ந்த இனிய நடையில் எழுதிய நாவலின் தமிழ் மொழிபெயர்ப்பு. இதன் நடை எளிமையும் இனிமையும் ஒருங்கே அமையப்பெற்று பக்கந்தோறும்

படிப்பவர்களுக்கு மட்டற்ற இன்பத்தை அளிக்கும் தன்மையது. இதுவரையில் இத்தகைய கதை தமிழில் பிரசுரமானதில்லை யென்று கூறுவது மிகையாகாது.

310 பக்கங்கள் விலை ரூபா 1—4—0

## கமலலோசனி

இது ஓர் துப்பறியும் நவீனம். குறவர் கூட்டத்தாரது விசித்திர நடைகள் முதலிய அறிய விஷயங்களைக் காட்டுவதுடன் மன அமைப்பின் ஒருங்கையும் எடுத்துக் காட்டுகிறது. தன் தாயைக் கொன்ற பழிக்கு பழி வாங்கவேண்டுமென்று தனது இரையை அடைய தகுந்த ஏற்பாடுகள் செய்து யாவருமறியாதபடி கமலலோசனி நடந்தது; நடந்தபடி அறிய அவள் செய்த காரியங்கள் முதலியன— கமலலோசனியின் அறிவையும் ஊக்கத்தையுங் குறிக்கும். மலைச் சார்பில் அவள் தன் காதலனைச் சந்தித்தல், நள்ளிரவில் உயிருடன் குற்றஞ் செய்த துற்குணனைப் புதைத்தல்; மலைக் குறவர் ஒருவரை ஒருவர் சுட்டுக் கொள்ளச் செய்தல், வஞ்சனைக்கார மிட்டாதாரன் வாயில் விஷங் கொள்ளல்—இவை முதலாகிய செயல்கள் அவளிடம் அன்படையாதிருக்க யாரையும் செய்யா. தன்னைக் காத்த மிட்டாதாரனுக்குத் தன்னுயிரையுங் கொடுக்கத் தயாராய் உண்மைக்குழைத்த மஸ்தான் மௌல்வி, தன்னெஞ்சுகள் தீவிரமாக குண்டை ஏற்றி வானுலகடைவதும், குற்றஞ் செய்த நெஞ்சு குறு குறுக்க தீயனவே செய்து விஷத்தை யுண்டு மிட்டாதாரன் மாண்டதும், போலி வேஷங்கொண்ட குமாரசாமி இடைவிடாத தன் காதலியுடன் கடலில் சாதலும் இவை அவ்வவர்க்குகந்த விதியைக் குறிப்பதுடன் நன்னெறியின்பால் ஒழுகச் செய்யும் என்பதற்குச் சந்தேகமில்லை.

விலை ரூபா 1.

## தமிழ் புலவர் வரலாறு

தமிழ்ப் புலவர்களில் சிறந்தோங்கும் புலவர்களுட் சிலரான ஒட்டக்கூத்தர், இரட்டையர், படிக்காசுப் புலவர்களின் சரிதையும் அவர்களது வாழ்க்கை அனுபவங்களும் சேர்ந்த இப்புத்தகத்தைத் தமிழர்கள், இப் புலவர் பெருமான்களைப்பற்றிச் சில அறியவேண்டுமென்னும் நோக்கத்துடனே வெளியிட்டிருக்கிறோம். இப்புத்தக நடை பெண்மக்களும் ஆண்மக்களும், எளிதில் படித்து அறியும்படியான எளிய இனிய நடையில் எழுதப் பெற்றிருக்கிறது. இதனைத் தமிழர் அனைவரும் ஆதரிக்கவேண்டுவது அவசியம்.

இப்புத்தகம் உயர்ந்த காகிதத்தில் அச்சிடப்பட்டுள்ளது. பார்வைக்கும் அழகாக அமையப்பெற்றுள்ளது. இதன் விலை அணா எட்டே.

## வால்மீகி ராமாயண வசனம்.

வால்மீகி ராமாயணத்தை ஸம்ஸ்கிருதத்திலிருந்து சரியாகத் தமிழில் மொழிபெயர்த்து அச்சிடப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்கிருத ஸ்லோகங்கள் சங்க்யையை இன்ன சுலோகங்களின் மொழிபெயர்ப்பென்று அறிய பாராக்கள் இலக்கம் கண்டிருக்கிறது.

| | | | | |
|---|---|---|---|---|
| பாலகாண்டம் | ... | 1 | 0 | 0 |
| அயோத்தியா காண்டம் | ... | 2 | 4 | 0 |
| யுத்த காண்டம் | ... | 3 | 0 | 0 |

மற்ற காண்டங்கள் அச்சிலிருக்கிறது. சீக்கிரத்தில் வெளிவரும்.

இன்னும் எங்களிடம் அநேக தமிழ் புத்தகங்கள் கிடைக்கும். விலை ஜாப்தாவுக்கு எழுதவும்.

V. RAMASWAMY SASTRULU & SONS,

*292, Esplanade, Madras.*